# பதஞ்சலி யோகம்

## ஒரு விஞ்ஞான விளக்கம்

**பாகம் - 8**

ஓஷோ

தமிழில் :
சி. எஸ். தேவநாதன்




**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

PATHANJALIYOGAM : ORU VIGYANA VILAKKAM - 8 (Tamil)



Originally published in English under the title:
**THE ALPHA AND THE OMEGA, VOLUME - 8**



| | | |
|---|---|---|
| Translated by | : | **C. S. Devanathan** |
| Coordination by | : | **Dhyan Sanjay** |
| Publishing Editor | : | **S. Chockalingam** |
| First Edition | : | 2007 |
| Second Edition | : | 2012 |
| Third Edition | : | 2019 |
| Pages | : | **368** |
| Price | : | **Rs. 350/-** |
| ISBN | : | 81-8345-057-1 |
| Printed a | : | Sree Durga Printers, Chennai |

Published by :
**KAVITHA PUBLICATION**

8, Masilamani Street, Pandy Bazaar,
T. Nagar, Chennai - 600 017
Ph: 044-4216 1657 What'sapp : +91-7402222787
e-mail: kavitha_publication@yahoo.com
Website : www.kavithapublication.in

# முகவுரை

பகவான் ஸ்ரீ ஒரு குடிகாரரைப் போல் மயக்கத்தில் இருப்பவர்.

பதஞ்சலி ஒரு நீதிபதியைப் போல் ஆழ்ந்து எண்ணமிட்டபடி இருப்பவர். பதஞ்சலி அறிவிற்கு ஏற்புடையவர், முற்றிலும் அறிவியல் சார்ந்தவர். பகவான் ஸ்ரீயோ பகுத்தறிவுக்குப் புறம்பான ஆளுருவாக்கம். அவர் தன்னளவில் ஒரு கவிஞர், நடனமாடுகிறவர், இன்பியல் நாடக நடிகர்.

பதஞ்சலி முயற்சிகளில் முழுமையாய் கவனம் செலுத்துகிறவர், திகைக்க வைக்கும் அளவிற்கு எண்ண்ங்களைப் பலவகையாய் பாகுபடுத்துகிறவர். அவர் முழுமையாய் ஊடுருவுகிறவர். அவருடைய வகைப்பாட்டு முறை நுட்பமானது.

பகவான் ஸ்ரீயோ கட்டுக்கடங்காத மனிதர், சமுதாய விடுதலைக்காக அதிகார அமைப்பைத் தூக்கியெறியத் தயங்காதவர். அறிவுக்கு ஏற்புடைமையற்ற மேதை. பதஞ்சலி இறுதியான மெய்ப் பொருளைச் சோதித்தறியும் வேளையில் பகவானோ முழுமையான பொய்யரா்க இருப்பதில் மகிழ்ச்சி காண்பவர்.

ஆக, ஒரு பெரிய கேள்வி எழுகிறது. எக்காலத்திலும் மிகச்சிறந்த விஞ்ஞானியாய் கருதப்படும் ஒருவருக்கும், பெரிய வம்பளப்புக்கார ரான ஒருவருக்கும் இடையில் பொதுவாக என்ன விஷயம் இருக்க முடியும்?

அவர்களுக்கிடையில் பொதுவாக இருக்கக்கூடிய விஷயம் - அவர்கள் இருவருமே தங்கள் மீது யாரும், எந்த முத்திரையும் குத்த முடியாதபடிக்கு மனித சாத்தியங்களின் எல்லைக்காப்பால் இருக்கிறார்கள் என்பதுதான். வார்த்தைகளும், குறியீடுகளும், மாயைகளும் தொட முடியாத தூரத்துக்கு அவர்கள் போய்விட்டார்கள். வெகு நேர்த்தியான ஒன்றில் அவர்கள் மறைந்து விட்டிருக்கிறார்கள். இதில் வியப்புக்குரியது என்னவெனில் அவர்கள் தொலைவில்

இருந்தாலும், இங்கேயும் இருக்கிறார்கள் என்பதுதான். தாங்கள் ஆடும் ஆட்டத்தை அவர்கள் சரியாகவே ஆடுகிறார்கள். தங்களுடைய இரக்க உணர்வின் காரணமாக நம்மையும் உயரத்துக்குக் கொண்டு செல்ல விரும்புகிறார்கள்.

பதஞ்சலி ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பிருந்தவர். பகவான் ரஜ்னீஷோ நடப்பில் இருந்து கொண்டிருக்கிற குரு. இந்தத் தொடரில் காலத்தை வென்று ஜீவித்துக் கொண்டிருக்கும் பதஞ்சலி சூத்திரங்களின் சாரத்தை பகவான் நமக்கு வெளிப்படுத்துகிறார். பதஞ்சலியின் சாரத்தை, இயற்கைத் தன்மைக்குப் புத்துயிரூட்டி வெளிப்படுத்துகையில் அவருடைய சொந்த மெய்யறிவும் பிரகாசிக்கிறது. நம்முடைய சுடரொளி வீசும் ஆன்மாக்களும் மாயையில் இருந்து நம்மை வெளிவரும்படி வற்புறுத்துகின்றன. பதஞ்சலி ஓர் இரசவாதி. உண்மையான இரவாதிக்கு அடிப்படை உலோகங்களைத் தங்கமாக்குவது, ஒரு கட்டடத்தின் முகப்பு மாதிரி. அவர் அதைவிடவும் அதிக மதிப்புள்ள ஒன்றிலேயே அக்கறை காட்டுவார். இரசவாதிக்கு ஒரு மேலுறை தேவைப்படுகிறது. காரணம், அவருடைய வேலையில் பெருமளவு தவறாகப் பயன்பட்டு விடுவதுண்டு, குறுகிய மனப்பான்மை உடையவர்களால் அந்த இரசவாதியேகூட வேதனைக்குள்ளாக்கப்படலாம்.

பதஞ்சலி என்கிற இரசவாதி, தன்னுடைய செய்தியை வல்வினைக்காரர்கள் தவறாகப் பயன்படுத்தினால், அந்தப் பாதையில் இருந்தே அவர்கள் தூக்கியெறியப்படும் விதமாய், அதனை அவர் வடிவமைத்திருக்கிறார். நேர்மையானவர்கள் மட்டுமே அதன் திறவுகோலைக் கண்டுகொள்ள முடியும்.

பகவான் ஸ்ரீ நவீனயுக இரசவாதி. அவர் தவறான வழியைக் காட்டுவதற்கில்லை. அவர் முன்பே சிகரத்தில் இருப்பவர். சூன்யக்காரரோ, சோம்பித் திரியும் பயணியோ யாரும் அவரைத் தவறாகப் பயன்படுத்த முடியாது.

இது தொடர்பாய் பகவானுடைய குட்டிக்கதை ஒன்று.

வழியோடு போய்க்கொண்டிருந்த பைத்தியக்காரன் ஒருவன் ஒரு கடை உரிமையாளரிடம் கேட்டான், 'நாள் முழுக்க நீர் இங்கே உட்கார்ந்திருக்கக் காரணம் என்ன?' என்று.

'இலாபம் பார்க்கத்தான்.'

'இலாபம்னா என்ன?' பைத்தியக்காரன் கேட்டான்.

'அது ஒன்றை இரண்டாக்குவது' என்றார் வியாபாரி.

'இது ஒண்ணும் இலாபமாகாது. நீ இரண்டை ஒன்றாக்கினாத்தான் இலாபம்' என்றான் அந்தப் பைத்தியக்காரன்.

பகவான் ஒரு பைத்தியக்காரர்தான். அவருடைய பார்வை குறுக்குவெட்டில் நமக்கு எதிராகவே தெரியும். ஆசையின் மாயையில் இரட்டைத்தன்மை என்கிற வலையில் அகப்பட்டுக் கொண்டிருக்கிற வர்கள் நாம். நம்முடைய அகந்தை எதையும் பிரித்துப் பார்க்கவும், விலக்கவும், ஒதுக்கி வைக்கவுமே விரும்பும். வெகு நுட்பமான ஆயிரம் வழிகளில் நாம் அதிகாரம் பெற விழைகிறோம். மற்றவர் களையும், இயற்கையையும், பிரபஞ்சச் செயல் முறையையும் கட்டுப்படுத்த முற்படுகிறோம். ஞானம் பெற்றவர்கள் அதற்குமப்பால் செல்கிறார்கள். ஒற்றுமையை அறிகிறார்கள். சகலமும் இணக்கமா யிருப்பதைக் காண்கிறார்கள். நாம் செய்ய வேண்டியதெல்லாம் சரியாக நூற்று எண்பது டிகிரியில் திரும்புவதுதான். பள்ளத்தாக்கைக் குனிந்து பார்ப்பதை விட்டுவிடுங்கள், உயர்ந்த சிகரத்தை ஏறிட்டுப் பாருங்கள்.

பகவான் ஸ்ரீ ஒரு வெளிப்படையான இரகசியம். தங்களை அறிவதில் உண்மையான விருப்பமுடைய எவருக்கும் அது கிடைக்கக் கூடியதுதான். ஆயினும் ரொம்பப் பேருக்கு அது மறைக்கப் பட்டதாகவே இருக்கும்.

பதஞ்சலியின் சாரத்துக்குப் புத்துயிரூட்டுவதன் மூலம் இந்நூலில் பகவான் தம்மைக் கிடைக்கக்கூடியவராக்குகிறார். சுயத்தைத் திறப்பதற் கானத் திறவுகோல்களை பதஞ்சலி சூத்திரங்கள் உள்ளடக்கியிருக் கின்றன. தம்மைக் கிடைக்கக் கூடியவராக்கியதன் மூலம், பதஞ்சலியின் திறவுகோல்களை பகவான் மீண்டும் கிடைக்கச் செய்திருக்கிறார். காலத்தால் பிடித்த துருவை நீக்கி, அந்தத் திறவுகோல்களை நவீன வடிவில் நமக்கு வழங்குகிறார்.

பகவான் தெரிவிப்பதாவது:

முக்கியமான திறவுகோல்களை (சாதனங்கள்)ப் பகிர்ந்து கொள்ள முடியுமேயன்றி அவற்றைப் பற்றிப் பேச முடியாது. இந்தச் சூத்திரங் களையெல்லாம் பதஞ்சலி எழுதினார் என்பதால், முக்கியமான திறவுகோல்களை அவர் உங்களுடன் பகிர்ந்து கொள்ள முடிகிறது. ஆனால், அவற்றைச் சூத்திரங்களின் அளவில் சுருக்க முடியாது. இந்தச் சூத்திரங்கள் வெறும் அறிமுகம்தான், உண்மையான விஷயத்துக்கு ஒரு முகவுரைதான்.

பதஞ்சலி யோக சூத்திரங்கள் பற்றிய இந்த உரைகள் கவனியாது விடப்பட்ட தாகத்தை - பெரு விருப்பத்தை உங்கள் உணர்வின் கவனத்துக்குக் கொண்டு வருபவை. இதுவே உண்மையான பணியாகாது. இது வெறும் அறிமுகவுரைதான். உண்மையான பணி, அந்தத் தாகத்தை நீங்கள் இனம் கண்டு ஏற்றுக் கொள்கிறபோதுதான் தொடங்குகிறது. நீங்கள் மாறுவதற்கு, மாற்றம் செய்வதற்குத் தயாராக இருக்கிறீர்கள். இந்தக் கடுமையான பயணத்தைத் துணிவுடன் மேற்கொள்ளவும், அறிந்திராத மற்றும் அறிதற்கு இயலாத ஒன்றினுள் பயணிக்கவும் நீங்கள் தயாராயிருந்தால் அந்தப்பணி உண்மையி லேயே தொடங்கி விடும்.

உண்மையான செலுத்துகை (transmission)க்குரிய திறவு கோல்களை வைத்திருப்பவரை நம்மிடையே பெற்றிருக்கிற நாம் பாக்கியவான்கள். இதனைப் படிக்கிறபோது குருவிடம் இருந்து பரவும் நறுமணச் சுவையை ஏற்கும் இசைவுடையவராகி விடுங்கள். உங்களுடைய வேட்கை மேலெழ இடமளியுங்கள். உங்கள் பசியை ஒப்புக்கொண்டு விருந்துக்கு வாருங்கள். அவர் கையில் திறவு கோலுடன் காத்திருக்கிறார். அவர் வெளிப்படையான இரகசியம்.

- ஸ்வாமி ப்ரேம் ராகேஷ்

## உள்ளடக்கம்

பக்கம்

## விபூதி பாதம் (தொடர்ச்சி)

***சூத்திரம் – 23 'ஸோபக்ரமம் நிருபக்ரமம் ச கர்ம
தத் ஸம்யமா தபராந்த
ஞான மரிஷ்டேப் யோவா'***

விரைவில் பலனளிப்பது, தாமதமாய் பலனளிப்பது என கர்மம் இரண்டு வகைப்படும். இவற்றின் மீது சம்யமம் செய்வதாலும், சகுனங்கள் மூலமும் யோகிகள் தங்கள் உடலில் இருந்து உயிர் பிரியும் நேரத்தை மிகச் சரியாக அறிகின்றனர்.

***சூத்திரம் – 24 'மைத்ரியாதி ஷுபலானி'***

நட்பு கருணை முதலிய குணங்களின் மீது சம்யமம் செய்தால் யோகி அவற்றில் சிறந்தோங்குவான்.

***சூத்திரம் – 25 'பலேஷு ஹஸ்தி பலாதீனி'***

யானை முதலிய விலங்குகளின் வலிமை மீது சம்யமம் செய்தால் யோகி அவற்றின் வலிமையைப் பெறுகிறான்.

***சூத்திரம் – 26 'ப்ரவ்ருத்யா லோகன்யாஸாத் ஸூக்ஷ்ம
வியவஹித விப்ரக்ருஷ்ட ஞானம்'***

சோதியின் மீது சம்யமம் செய்வதால் சூட்சுமமானவை, மறைந்திருப்பவை மற்றும் தூரத்தில் இருப்பவை பற்றிய அறிவு உண்டாகும்.

***சூத்திரம் – 27 'புவனக் ஞானம் சூர்யே சம்யமாத்'***

சூரியன் மீது சம்யமம் செய்வதால் உலகத்தைப் பற்றிய அறிவு உண்டாகிறது.

அருமையான கதையொன்றை நான் கேட்டிருக்கிறேன். முன்பொரு காலத்தில் புகழ்பெற்ற சிற்பி ஒருவன் இருந்தான். அவன் ஓவியத்திலும் சிறந்த கலைஞன். அவன் ஒரு மனிதனின் சிலையைச் செய்தான் என்றால் அது மனிதனா சிலையா என்று சொல்வது கடினம், அந்த அளவிற்கு அவனுடைய கலைத்திறன் முழுமையாக இருக்கும். அது உயிரோடிருக்கிற மாதிரி அத்தனை உயிர்த்துடிப்போடும், ஒன்று போலவும் இருந்தது. அவனிடம் ஒரு சோதிடன் சொன்னான். அவனுடைய சாவு நெருங்கிக் கொண்டிருக்கிறது, அவன் சீக்கிரமே செத்துப்போவான் என்று. அவன் உண்மையில் ரொம்பவே அச்சமும் நடுக்கமும் கொண்டு விட்டான். தன்னுடைய மரணத்தைத் தவிர்க்க விரும்புகிற ஒவ்வொரு மனிதனைப்போலவே அவனும் தவிர்க்க விரும்பினான். அவன் அதைப்பற்றிச் சிந்தித்து, ஆழ்ந்து சிந்தித்து ஒரு துப்பு கண்டுபிடித்தான். அதன்படி தன்னைப்போல் பதினொரு சிலைகளைச் செய்தான். மரணதேவன் அவன் வீட்டுக் கதவைத்தட்டி, உள்ளே பிரவேசித்தபோது, தன்னைப் போல் இருக்கும் அந்தப் பதினொரு சிலைகளோடு தானும் ஒரு சிலையாய் நின்று கொண்டான். அவன் தன்னுடைய மூச்சை விடாமல் நிறுத்தி வைத்தான்.

மரணதேவன் குழப்பமுற்றான். தன்னுடைய கண்களையே அவனால் நம்பமுடியவில்லை. அதற்கு முன் ஒருபோதும் அப்படி நடந்ததில்லை. அது மிகவும் இயற்கைக்கு மாறானதாய் இருந்தது. கடவுள் ஒரேமாதிரி இரண்டு பேரைப் படைத்ததாய் ஒருபோதும் கேள்விப்பட்டதில்லை. அவன் எப்போதும் இணையற்றதையே படைக்கிறவன். அவன் எந்தவொரு நடைமுறை ஒழுங்கிலும் நம்பிக்கை வைத்ததில்லை. அவன் ஒருங்கிணைப்புப் பிரிவு (assembly line) போன்றவனல்லன். அவன் நகல்களுக்கு முற்றிலும் எதிரானவன். அதன் அசலானவற்றை மட்டுமே படைக்கிறவன். என்ன ஆயிற்று. ஒரே மாதிரி பன்னிரண்டு பேர் இருக்கிறார்களே? தற்போது இவர்களில் யாரைக் கொண்டு செல்வது? ஒரேயொரு நபரைத்தான் கொண்டு செல்ல வேண்டும். மரணத்தால், மரண தேவனால் தீர்மானிக்க

முடியவில்லை. அவன் குழப்பமும், கவலையும், கலவரமும் கொண்டவனாய் திரும்பிப் போனான். அவன் கடவுளிடம் சென்று, 'தாங்கள் என்ன செய்தீர்கள்? ஒரே மாதிரி பன்னிரண்டு பேர் இருக்கிறார்களே, நான் கொண்டுவர வேண்டியது ஒருவனை அல்லவா? நான் எப்படித் தேர்ந்து கொள்வது?' என்று கேட்டான்.

கடவுள் சிரித்தார். அவனை அருகில் அழைத்து, உண்மை யற்றதில் இருந்து உண்மையானதை எப்படிக் கண்டுபிடிப்பது என்பதை அதற்கான சூத்திரத்தை அவனுடைய காதில் சொன்னார். ஒரு மந்திரத்தை அவனுக்கு வழங்கியதுடன், 'இப்போதே போ, அந்த ஓவியன் தன்னை சிலைகளுக்கு நடுவே ஒளித்துக் கொண்டிருக்கும் அறையில் சென்று அதை (மந்திரம்) வாய்விட்டுச் சொல்' என்று அவனிடம் தெரிவித்தார்.

'அது எப்படிப் பலனளிக்கும்?' மரணதேவன் கேட்டான்.

கடவுள் சொன்னார், 'கவலைப்படாதே, சீக்கிரம் போய் முயற்சி செய்' என்று.

அவன் அதைச் செய்ய வேண்டும் என்று கடவுள் சொல்கிறார். ஆனால், அது எந்த அளவு பலனளிக்கும் என்று அவனால் நம்ப முடியவில்லை. ஆனாலும் அவன் சென்றான். அவன் அறைக்குள் நுழைந்து, சுற்றிவரப் பார்த்தான். யாரையும் குறிப்பாக நோக்கிப் பேசாமல், அவன் சொன்னான். 'ஐயா, ஒன்றைத் தவிர எல்லாமும் கச்சிதமாய் இருக்கிறது. நீர் மிக நன்றாகவே செய்திருக்கிறீர். ஆனால் முக்கியமான ஒன்றைத் தவற விட்டு விட்டீர். அது பெரிய தவறாகி விட்டது' என்று.

அந்த மனிதன் (கலைஞன்) தான் மறைந்திருப்பதை முற்றிலும் மறந்து விட்டான். அவன் துள்ளிக் குதித்துக் கேட்டான் 'என்ன தவறு?' என்று.

மரணதேவன் சிரித்தபடி சொன்னான். 'நீர் அகப்பட்டுக் கொண்டீர். உம்மை மறக்க உம்மால் முடியவில்லை பார்த்தீரா. இதுதான்... இந்த ஒன்றுதான் தவறு. வாரும், என்னோடு வாரும்' என்று.

மரணம் 'நான் என்கிற அகந்தை' பற்றியது. அகந்தை இருக்கு மானால் மரணமும் இருக்கிறது. அகந்தை மறைகிற கணத்தில் மரணமும் மறைந்து விடுகிறது. ஞாபகம் இருக்கட்டும், நீங்கள் இறக்கப்போவதில்லை. ஆனால், இருக்கிறோம் என்று நினைத்தால் இறந்து விடுவீர்கள். அழியப்போவது பொய்யாக இருக்கும் இந்த

அகந்தைதான். ஆனால் உங்களை இருப்புணர்வற்றவராய், அகந்தையற்றவராய் நீங்கள் எண்ணிக் கொள்கிறபோது அங்கே மரணம் இருப்பதில்லை – அதற்கு முன்பே நீங்கள் மரணமற்றவராகி விடுகிறீர்கள். நீங்கள் தொடர்ந்து மரணமற்றவராகவே இருக்கிறீர்கள். அந்த உண்மையைத் தற்போது கண்டு கொண்டீர்கள்.

தன்னை இருப்புணர்வின்மை (nonbling)யில் ஒளித்துக் கொள்ள முடியாமல் அந்தக் கலைஞன் அகப்பட்டுக் கொண்டான்.

புத்தர் தம்முடைய தம்மபதத்தில் (Dhammapada) சொல்கிறார், 'மரணத்தை உங்களால் பார்க்க முடிகிறபோது, மரணத்தால் உங்களைப் பார்க்க முடியாது' என்று. அப்போது சிலைகளைச் செய்தாக வேண்டிய அவசியம் இருக்காது. அது பயன்படப் போவதில்லை. அடியாழாத்தில் நீங்கள் ஒரு சிலையை உடைத்து நொறுக்கினால் போதும், கூடுதலாய் பதினொன்றைச் செய்ய வேண்டியதில்லை. அகந்தை என்கிற படிமத்தை நீங்கள் அழிக்க வேண்டும். அதிக அளவில் சிலைகளையோ, படிமங்களையோ (images) உருவாக்க வேண்டிய அவசியமில்லை. மதம் ஒருவகையில் கேடு செய்வதா யிருக்கிறது. ஒருவகையில் எதிர்மாறாக இருக்கிறது. அது உங்களை இல்லாமல் செய்து விடுகிறது. ஒட்டுமொத்தமாய் ஒரேயடியாய் நிர்மூலமாக்கி விடுகிறது.

ஏதோ நிறைவான ஒன்றை அடைவோம் என்றுதான் சில கருத்துகளோடு என்னிடம் நீங்கள் வருகிறீர்கள், உங்களை (உங்கள் அகந்தையை) முழுமையாய் அழிப்பதற்காகவே நான் இங்கிருக் கிறேன். உங்களுக்கென்று உங்களுடைய கருத்துகள், எனக்கென்று என்னுடையவை. நீங்கள் நிரப்பப்பட வேண்டுமென்று விரும்புவீர்கள். உங்களுடைய அகந்தையால் நிரம்பிவிட வேண்டும் என்று. நீங்கள் அகந்தையை விடவேண்டும். அது கரைந்து, மறைந்துவிட வேண்டும் என்று நானும் விரும்புவேன். காரணம் அப்போது மட்டுமே அது நிறைவேற்றப்பட்டதாயிருக்கும். அகந்தை வெறுமையைத்தான் அறியும், அது எப்போதுமே நிறைவடையாமல் இருப்பது. அதன் சுபாவத்தில், உள்ளார்ந்த இயல்பில் அது நிறைவடைய முடியாததாய் இருக்கிறது. நீங்கள் இல்லை என்கிற நிலையில் அது நிறைவடைகிறது. வேண்டுமானால் அதைக் கடவுள் என்று அழையுங்கள். அல்லது பதஞ்சலி விரும்புகிற மாதிரி 'சமாதி' என்று பெயரிட்டு அழையுங்கள் – அது முடிவான ஒன்றை முயற்சி செய்து அடைவது. ஆனால் நீங்கள் இல்லையென்றாகிற நிலையில்தான் அது அடையப்படுகிறது.

பதஞ்சலியின் இந்தச் சூத்திரங்கள் எப்படி மறைப்பது, எப்படி இறப்பது, இயல்பான தற்கொலையை எப்படிச் செய்வது என்பது பற்றிய அறிவியல்பூர்வமான முறைகள் ஆகும். நாம் அதை இயல்பானது என்று சொல்வதற்குக் காரணம், உங்கள் உடம்பை நீங்கள் கொல்வீர்களாயின் அது தற்கொலையின் மாயத்தோற்றமாயிருக்கும் (unreal) என்பதால்தான். உங்கள் சுயத்தைக் கொன்று போடுங்கள். அதுவே நம்பத்தக்க தற்கொலையாய் இருக்கும்.

நீங்கள் இறந்தால் உங்களுடைய சாசுவதமான வாழ்க்கையை நீங்கள் அடைகிறீர்கள். முரண்பாடு போலத் தோன்றினாலும் அதுதான் உண்மை. நீங்கள் உயிரைப் பற்றிக் கொண்டால் ஆயிரத்தியொரு முறை இறப்பீர்கள். நீங்கள் தொடர்ந்து பிறந்து பிறந்து, மறுபடியும் மறுபடியும் இறந்து கொண்டிருப்பீர்கள். அது ஒரு சக்கரம் மாதிரி. நீங்கள் அதைப் பற்றினால் சக்கரத்தோடு நீங்களும் சுற்ற வேண்டியது தான்.

பிறப்பு, இறப்பு என்கிற சக்கரத்தை விட்டுவிடுங்கள். எப்படி அதை விட்டுக் கீழிறங்குவது? அது சாத்தியமற்றதாய் தெரிவதற்குக் காரணம், நீங்கள் ஒருபோதும் உங்களை உயிரற்ற ஒன்றாய் எண்ணியதில்லை. யாருமற்ற வெற்றிடமாய் நீங்கள் ஒருபோதும் உங்களை எண்ணியதில்லை.

இவைதாம் சூத்திரங்கள். ஒவ்வொரு சூத்திரமும் ஆழ்ந்து புரிந்து கொள்ளப்படவேண்டியவை. சூத்திரம் என்பது சுருங்கக் கூறுவது. அது விருட்சத்தை உள்ளடக்கிய விதையைப் போன்றது. உங்கள் இதயத்தின் அடியாழத்தில் நீங்கள் அதை ஏற்றுக்கொள்ள வேண்டும். உங்கள் இதயம் அதை ஏற்கிற நிலமாக வேண்டும். அந்நிலையில் அது முளைக்கும், அர்த்தமுடையதாயிருக்கும்.

என்னால் உங்களை ஏற்கிறவராக மட்டுமே செய்ய முடியும். அவ்விதமாய் உங்களுக்குள் மிகச் சரியான இடத்தில் அந்த விதை விழும். அவ்விதமாய் அந்த விதை உங்கள் இருப்புணர்வற்ற தன்மையில் இருளுக்குள் நுழையும். உங்கள் இருப்புணர்வின்மையில் இருளில் அது உயிர்பெறத் தொடங்கும். சூத்திரம் என்பது விதையாகும். அறிவார்ந்த விதத்தில் அதைப் புரிந்துகொள்வது எளிது. உளதாய் இருக்கும் வகையில் அதன் பொருளை அறிவது கடினம். ஆனால், பதஞ்சலி அதையே விரும்புவார், நானும் அதைத்தான் விரும்புவேன்.

ஆக, வெறும் அறிவு சார்ந்தவர்களாகவே இருந்து விடாதீர்கள். என்னுடன் ஒத்துணர்வுடையவர்களாய், இசைவிணக்கத்தோடு இருங்கள். நான் சொல்வதை வெறுமனே கேட்டபடி இருக்காதீர்கள். என்னோடு இருங்கள். இங்கே தற்போது எனது முன்னிலையில் உங்களை இருக்கச் செய்யுங்கள். காரணம் எனக்கு மரணம் சம்பவித்திருக்கிறது. அது தொற்றிப் பரவக்கூடியது. நீங்கள் எனக்கு அருகில் வந்துவிட்டால், ஒரு கணமேனும் என்னோடு இசைவாகி விட்டால், மரணத்தின் கணநேரக் காட்சி உங்களுக்குக் கிடைக்கும்.

புத்தர் மிகச் சரியாகவே சொன்னார். 'உங்களால் மரணத்தைக் காணக் கூடுமெனில், மரணத்துக்கு உங்களைக் காண்பது இயலாததாகி விடும். காரணம், மரணத்தைக் காண்கிற கணத்திலேயே நீங்கள் அதைக் கடந்து விடுகிறீர்கள். பின்பு உங்களுக்கு மரணம் என்பதில்லை.

முதல் சூத்திரம்:

> ***சஞ்சிதம், பிராரத்தம் என்கிற இரண்டு வகை கன்மங்களின் பேரில் சமநிலையைச் செயற்படுத்துவதன் மூலம் அல்லது நிகழப்போவது குறித்த அறிகுறிகள் மூலம் மரணம் நேரப்போவதை முன்கூட்டியே உரைக்க முடியும்.'***

மரணம் சம்பவிக்கிற காலம் குறித்து ஏன் கவலைப்படுவது? அதனால் என்ன பயன்? அதன் முக்கியக் கருத்து என்ன? மேற்கத்திய உளவியல் நிபுணர்களிடம் நீங்கள் கேட்டால் அதனை இயற்கைக்கு மாறான நோய்த்தாக்கம் (abnormal morbidity) என்பார்கள். மரணம் பற்றிய கவலை எதற்கு? விடுங்கள். குறைந்தபட்சம் உங்களுக்கு மட்டுமேனும் மரணம் வராது என்று நம்புங்கள். அது எப்போதுமே மற்றவர்களுக்கு நிகழ்ந்தபடிதான் இருக்கிறது. மனிதர்கள் இறப்பதை நீங்கள் பார்க்கிறீர்கள். ஆனால் ஒருபோதும் உங்கள் இறப்பை நீங்கள் பார்ப்பதற்கில்லை. அப்படியிருக்க ஏன் அச்சப்படுவது? நீங்கள் விதிவிலக்காய் இருந்தாலும் இருக்கலாம். ஆனால் யாருக்கும் விதி விலக்கு அளிக்கப்படவில்லை. உங்கள் பிறப்பின் போதே இறப்பும் நிகழ்ந்து விட்டது. எனவே, நீங்கள் அதைத் தவிர்ப்பதற்கில்லை.

தற்போது பிறப்பு உங்கள் சக்திக்கு அற்பாற்பட்டதாய் இருக்கிறது. அதுகுறித்து நீங்கள் எதுவும் செய்வதற்கில்லை. அது முன்பே நேரிட்டு விட்டது. அது முன்பே செய்து முடிக்கப்பட்டது. அதை நீங்கள்

---

* *சஞ்சிதம் - முற்பிறவிகளில் செய்து இன்னும் அனுபவிக்காமல் நிற்கும் வினை. பிரார்த்தம் - அனுபவிக்கும் ஊழ்வினை.*

தலைகீழாய் மாற்றுவதற்கில்லை. மரணமோ இன்னும் நிகழவில்லை, அதுகுறித்து நீங்கள் ஏதேனும் செய்வதற்கு சாத்தியம் இருக்கிறது.

ஒட்டுமொத்த கிழக்கத்திய சமயங்களும் மரணம் பற்றிய தொலைநோக்கினைக் கொண்டவைதாம். காரணம் அதன் நிகழ்த்தும் தன்மை. நீங்கள் அதனை முன்கூட்டியே தெரிந்து கொண்டுவிட்டால் அது பெருமளவில் அச்சமூட்டக்கூடிய நிகழ்வாகி விடும். வெளியேறுவதற்குப் பல வழிகள். உங்களுக்கேயுரிய வழியில் நீங்கள் இறக்க முடியும். அப்போது உங்கள் ஒப்புதலோடு உங்களுடைய மரணம் நிகழக்கூடும். அந்நிலையில் நீங்கள் மீண்டும் பிறவாதிருக்க வகை செய்துகொள்ள முடியும். அதன் முழுமையான பொருளே அதுதான். அது நோய்த்தாக்கமாயிராது. முறறிலும் அறிவியல் சார்ந்ததாகவே இருக்கும். எல்லாருமே இறக்க வேண்டியவர்கள்தாம் என்கிறபோது மரணத்தைப் பற்றிச் சிந்திக்காமல் இருப்பதும், கவனத்தை ஒருமுகப்படுத்தாமல் இருப்பதும், அதைப் புரிந்து கொள்ளாமல் இருப்பதும் சுத்த முட்டாள்தனம்.

பதஞ்சலி சொல்கிறார், 'மரணம் நேரிடக்கூடிய நாள், மணி, நிமிடம், நொடி இவற்றை முன்கூட்டியே துல்லியமாய் அறிந்து கொள்ள முடியும்' என்று. மரணம் எப்போது வரப்போகிறது என்பதை மிகச்சரியாக அறிந்து கொண்டு விட்டால் நீங்கள் அதை எதிர் கொள்வதற்கான முன்னடைவுடன் இருக்கமுடியும். ஒரு முக்கிய விருந்தாளியைப் போல் வரவேற்கப்பட வேண்டியது மரணம். அதுவொன்றும் விரோதியல்ல. அது உண்மையிலேயே கடவுளால் வழங்கப்படும் நற்கொடை. அது நீங்கள் கடந்து செல்வதற்கான சிறந்த வாய்ப்பு. அது ஓர் ஊடுருவலாய் அமையக்கூடும். நீங்கள் கவனத்தோடும், உணர்வோடும், தெரிநிலையோடும் இறப்பீர்களெனில் மீண்டும் பிறக்க வேண்டியிராது. அவ்வாறின்றி அதை நழுவ விட்டால் மீண்டும் பிறக்கும்படியாகும். நீங்கள் அதைத் தொடர்ந்து நழுவ விட்டால், மரணம் கற்பிக்கும் பாடத்தை அறியாவிட்டால், தொடர்ந்து பிறவியெடுக்க நேரிடும்.

இப்படியும் சொல்லலாம், ஒட்டுமொத்த வாழ்க்கையும் மரணத்தைக் கற்றுணர்வதன்றி வேறில்லை என்று. வாழ்க்கை மரணத்துக்கான ஆயத்தநிலையன்றி வேறேயென்ன. அதனால் தானோ என்னவோ மரணம் கடைசி எல்லையாய் இருக்கிறது. அது படிப்படியாய் உயரும் இசையொலி (crescendo), கோபுரத்தின் முகடு, உச்சநிலை, சிகரம்.

ஆழ்ந்த உடலுறவில் ஓர் உச்சகட்டம், பரவசநிலை அடையப் படுவதை சமகாலத்திய உளவியல் நிபுணர்கள், குறிப்பாக மேற்கத்திய வர்கள் தெரிந்திருக்கிறார்கள். அது தேவையை நிறைவேற்றுகிற, மகிழ்ச்சியூட்டுகிற, மெய்ம்மறக்கும் நிலை. நீங்கள் தூய்மைப்படுத்தப் படுகிறீர்கள். நீங்கள் அதிலிருந்து எல்லா மாசுகளும் துடைக்கப்பட்ட வராய் வனப்பும், புத்துணர்ச்சியும் கொண்டவராய் வெளிப்படுகிறீர்கள். வழக்கத்தைவிட அதிகமாய் ஷவரில் (shower) நின்று குளித்தது போலாகி விடுகிறீர்கள். ஆனால் உடலுறவு சிறிய அளவிலான மரணம் போன்றது என்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை. மரணத்துடன் அதை ஒப்பிடுவதற்கில்லை. மரணம் பெரிய அளவில் பரவசத்தைத் தருவதாகும்.

மனிதர்கள் உணர்வற்றுப் போகுமளவிற்கு அந்த மரணம் அத்தனை கடுமையானது எனலாம். அவர்களால் அதை எதிர்கொள்ள முடியாது. மரணம் வருகிற கணத்தில் நீங்கள் அச்சமும் பதற்றமும் கொண்டு விடுவீர்கள். அதைத் தவிர்க்கவே மனிதர்கள் உணர்விழப்பது. அவர்கள் வாய்ப்பைத் தவற விட்டு விடுகிறார்கள்.

மரணத்தைப்பற்றி முன்கூட்டியே' அறிந்துகொள்வது ஒரு வழிமுறை. மரணம் வரும்போது நீங்கள் முழுமையான கவனத்தோடு, உணர்வோடு மரணத்துடன் செல்லவும், சரணாகதி அடையவும், மரணத்தைத் தழுவிக் கொள்ளவும் அது உங்களை ஆயத்தப்படுத்தி உதவும். மரணத்தைத் தெரிநிலையோடு நீங்கள் ஏற்றுக் கொண்டுவிட்டால் அதற்கு மேல் உங்களுக்குப் பிறவி என்பதே இல்லை - தேவையான படிப்பினையை நீங்கள் பெற்றுவிடுகிறீர்கள். இந்தப் பள்ளிக்கூடத்துக்கு மீண்டும் திரும்பி வருவதில்லை. வாழ்க்கை ஒரு பள்ளிக்கூடம் - அது மரணத்தை அறிந்து கொள்வதற்கான ஒழுங்குப்பாடு (discipline). அது நோய்த்தாக்குதல் அல்ல.

ஒட்டுமொத்த சமயமும் (religion) மரணத்திடம் அக்கறை கொண்டதுதான். மரணத்தின்பால் அக்கறை காட்டாத எந்த மதமும் மதமே அல்ல. அது எவ்வகையிலும் மதமாகாது. அது ஒரு சமூகவியலாகவோ, ஒழுக்க முறைமை (morality)யாகவோ, அரசியலாகவோ இருக்கக்கூடும், மதமாக இருப்பதற்கில்லை. மதம் இறவாப் பெருநிலை தேடல். ஆனால், அந்த இறவாப் பெருநிலை மரணம் என்கிற வாயிலின் மூலமாகவே சாத்தியமாகிறது.

முதல் சூத்திரம் சொல்கிறது, 'கர்மத்தின் இரண்டு வகைகளான சஞ்சிதம், பிராரப்தம் இவற்றின் பேரிலும், சகுனங்கள் (Omens),

அறிகுறிகள் (portents) இவற்றின் பேரிலும் சமநிலையைச் செயற்படுத்துவதன் மூலமும் மரணம் வரும் காலத்தை முன்கூட்டியே அறிய முடியும்' என்று.

கர்மம் மூன்று வகைப்பட்டது என்கிறது மேற்கத்திய ஆய்வு. நாம் அதைப்பற்றி அறிந்து கொள்வோம்.

முதலாவது சஞ்சிதம். சஞ்சிதம் என்றாலே முழுவதுமானது என்று பொருள் - சென்ற பிறவிகளில் செய்யப்பட்டு பலன் அனுபவிக்காமல் எஞ்சியிருக்கும் கர்மம் ஆகும். நீங்கள் எதைச் செய்திருந்தாலும் சூழ்நிலைகளின் பேரில் உங்கள் எதிர்வினை எப்படிப்பட்டதாயினும், நீங்கள் எப்படி எண்ணியிருந்தாலும், விரும்பியிருந்தாலும், செய்திருந்தாலும் அத்தனையும் - உங்கள் ஒட்டுமொத்த பிறவிகளின் செய்கைகள், சிந்தனைகள், உணர்வுகள் அத்தனையும் சேர்ந்தது சஞ்சிதம். சஞ்சிதம் என்கிற சொல்லுக்கு முழுவதும் என்பது பொருள் - உங்களால் ஈட்டப்பட்ட முழுவதும்.

இரண்டாம் வகை கர்மம் பிராரப்தம். இந்த இரண்டாம் வகை கர்மம் சஞ்சிதத்தில் ஒரு பகுதி - இந்தப் பிறவியில் நீங்கள் நிறைவேற்றித் தீர்க்க வேண்டியது. நீங்கள் பல பிறவிகள் எடுத்து வாழ்ந்தாயிற்று. பலவும் சேகரமாயிற்று. தற்போது அதில் ஒரு பகுதியை இந்தப் பிறவியில் அனுபவித்துக் கழிக்கிறீர்கள். இந்தப் பிறவி - வாழ்க்கை ஓர் எழுபது, எண்பது அல்லது நூறு ஆண்டுகளுக்குட்பட்டது என்பதால்தான் 'ஒரு பகுதி' என்றது. ஓர் ஆண்டுக்குள் அத்தனை ஊழ்வினைகளையும் உங்களால் அனுபவித்துத் தீர்க்க முடியாது. அந்தப் பகுதியே பிராரப்தம் ஆகும்.

அத்துடன் கிரியமம் (Kriyamam) என்று அறியப்படுகிற மூன்றாம் வகை கர்மம் ஒன்றும் உள்ளது. இது அன்றாட கர்மம். முதலாவது முழுதுமாய் ஈட்டப்பட்டது. அடுத்தது இப்பிறவிக்கான ஒரு சிறிய பகுதி. அதற்கடுத்தது, அதைவிடச் சிறியதான ஒரு பகுதி - இன்று அல்லது இந்தக் கணப்பொழுதுக்கானது. ஒவ்வொரு கணத்திலும் ஏதாவதொன்றைச் செய்வதற்கான அல்லது செய்யாமல் இருப்பதற்கான வாய்ப்பு இருக்கிறது. யாரோ ஒருவர் உங்களை மரியாதைக் குறைவாய் நடத்துகிறார், நீங்கள் சினமடைகிறீர்கள். நீங்கள் எதிர்வினை புரிகிறீர்கள். அல்லது விழிப்புணர்ச்சியோடு வெறுமனே கோபமின்றி கவனித்தபடி இருக்கிறீர்கள். நீங்கள் எதையுமே செய்யாமல் ஒரு சாட்சியாய் இருந்து விடுகிறீர்கள், எதிர்ச்செயல் புரிவதில்லை. நீங்கள்

அமைதியாய், உங்கள் ஆற்றல்களையும் உணர்ச்சிகளையும் ஒருங்கே திரட்டிக்கொண்டு மையத்தில் இருந்து கொள்கிறீர்கள். அந்நிலையில் உங்களை எதுவும் பாதிப்பதற்கில்லை.

நீங்கள் மற்றொன்றால் பாதிக்கப்பட்டு எதிர்ச்செயல் புரிவீர் களாயின் கிரியம கர்மம் சஞ்சித கர்மம் என்கிற தேக்கத்தின் அடியாழத் தில் சென்று வீழும். அந்நிலையில் நீங்கள் மேலும் வினைகளைச் சேர்த்துக்கொண்டு விடுவீர்கள். எதிர்வரும் பிறவிகளுக்கானதைச் சேர்த்துக் கொள்கிறீர்கள். எதிர்ச்செயல் புரியாமல் இருந்தால் அப்போது முந்தைய வினையொன்று முற்றுப் பெற்று விடும். நீங்கள் முந்தைய பிறவிகளில் ஏதேனும் ஒன்றில் அந்த ஆசாமியை இழிவுபடுத்தியிருப்பீர்கள். தற்போது அவன் உங்களை இழிவு படுத்துகிறான். கணக்கு நேராகி விட்டது. ஆம், கணக்குத் தீர்ந்தது. இதனை அறிந்து கொண்டவன் இந்தமட்டிலும் தீர்ந்ததே என்று மகிழ்ச்சி அடைவான். அவனுடைய விடுபட்ட உணர்வு சற்று கூடும்.

யாரோ ஒருவர் புத்தரை அவமதித்தார். புத்தர் அமைதியாய் இருந்து கொண்டு எதிராளியின் பழிப்புரையைக் கேட்டார். அதன்பிறகு சொன்னார், 'உமக்கு நன்றி' என்று. அந்த மனிதன் குழப்பமுற்றான், 'உமக்கென்ன பைத்தியமா, நான் உம்மை இழிவாகப் பேசித் துன்புறுத்துகிறேன், நீரானால் நன்றி சொல்லிக் கொண்டிருக்கிறீரே?' என்று கேட்டான். புத்தர் சொன்னார். 'சரிதான், நான் உமக்காகத்தான் இத்தனை நாளும் காத்துக் கொண்டிருந்தேன். முற்பிறவியில் உம்மை நான் அவமதித்திருக்கிறேன். அதனால்தான் காத்திருந்தது - நீர் வராமல் இருந்திருந்தால், என்னுடைய தளைகளில் இருந்து நான் முழுமையாய் விடுபட்டிருக்க முடியாது. தற்போது நீர்தான் கடைசி ஆள். உம்மோடு கணக்கு தீர்ந்தது. உம்முடைய வருகைக்கு நன்றி. இந்தப் பிறவியில் நீர் வராமல் இருந்திருந்தால் நான் உமக்காகக் காத்திருக்கும்படி ஆகியிருக்கும். நான் மேலும் சொல்ல வேண்டிய தில்லை. இதுவே போதுமானது. நான் மற்றொரு தளையை (தொடர்ச்சி) ஏற்படுத்திக் கொள்ள விரும்பவில்லை.

அந்நிலையில், கிரியமம் என்கிற அன்றாட கர்மம் தேக்கத்தில் வீழ்வதில்லை, கணக்கு கூடுவதில்லை. உண்மையில் அந்தத் தேக்கத் தின் அளவு முன்பிருந்ததைவிடக் குறைந்து விடுகிறது. பிராரப்தத்தின் விஷயத்திலும் அதுவேதான். நீங்கள் இப்பிறவியில் தொடர்ந்து எதிர்வினை புரிந்துகொண்டேயிருந்தால் உங்களுடைய ஊழ்வினைத்

தேக்கத்தின் அளவு அதிகரித்துக்கொண்டே போகும். நீங்கள் மீண்டும் மீண்டும் பிறவியெடுப்பீர்கள். இன்னும் தளைகளை ஏற்படுத்திக் கொள்வீர்கள். அடிமைத்தளை அகலுவதில்லை.

சுதந்திரம் பற்றிய கிழக்கத்திய கருத்தமைவைப் புரிந்துகொள்ள முயலுங்கள். மேற்கில் சுதந்திரம் என்பதற்கு அரசியல் சார்ந்த சுதந்திரம் என்றொரு *உட்பொருள் (connotation) உண்டு. இந்தியாவில் அரசியல் சுதந்திரம் பற்றி நாம் அவ்வளவாகக் கவலைப்படுவதில்லை. காரணம், ஆன்ம சுதந்திரம் இல்லாவிடில், வேறு எவ்வகை சுதந்திரமும் பெரிய அளவில் வேறுபாட்டை உண்டு பண்ணிவிடாது என்பதுதான். அப்படித்தானே நாம் சொல்லிக் கொண்டிருக்கிறோம். ஆன்மா சார்ந்த விதத்தில் தடையற்றிருக்க வேண்டும் என்பதுதான் அடிப்படை விஷயம்.

கர்மாக்களால் தோற்றுவிக்கப்பட்ட தளைகள் இவை. தெரிநிலை இல்லாது திடுதிப்பென நீங்கள் எதைச் செய்தாலும் அது கர்மாவாகி விடுகிறது. நீங்கள் தெரிநிலையற்று - தன்னுணர்வின்றிச் செய்கிற எதுவும் செயலாகாது. அது ஒரு செயலுக்கான எதிர்வினை (reaction) யாகவே இருக்கும். ஓர் எதிர்வினையை நீங்கள் முழுமையான விழிப்புணர்வுடன் செய்வதற்கில்லை. அப்படிச் செய்தால் அது வினை (action)யேயின்றி எதிர்வினை ஆகாது. அது எந்தவொரு தடயத்தை யும் விட்டுச் செல்வதில்லை. தன்னளவில் அது முழுமையாயிருக்கும், அறைகுறையாயிருக்காது. அது அரைகுறையாயிருக்குமாயின் என்றாவதொரு நாள் அதைப் பூர்த்தி செய்ய வேண்டியிருக்கும். ஆக, இப்பிறவியில் நீங்கள் விழிப்போடு இருந்தால் பிராரப்த கர்மம் மறைந்து விடும், உங்களுடைய தேக்கம் (reservoir) வெகுவாய் குறைந்து காலியாகி விடும். சில பிறவிகளிலேயே அது முற்றிலும் காலியாகி விடும்.

'கர்மாவின் இரண்டு வகைகளின் பேரில் சமநிலையைச் செயற்படுத்துவதன் மூலம்...' என்கிறது இந்தச் சூத்திரம். கிரியமம் என்பது பிராரப்த கர்மத்தின் ஒரு பகுதி என்பதால் சஞ்சிதம், பிராரப்தம் என்கிற இரண்டு வகைகளை மட்டுமே பதஞ்சலி குறிப்பிடுகிறார்.

சமநிலை (சம்யமா) என்பது என்ன? அது மனித உணர்வு நிலையின் மிகப்பெரிய கூட்டிணைவு. தாரணை, தியானம், சமாதி என்கிற மூன்றின் கூட்டிணைவு.

---

* *உட்பொருள் (connotation) - வெளிப்படையாய் தெரியும் பொருளன்றி உய்த்துணரக் கிடைக்கும் பொருள்.*

சாதாரணமாக உங்கள் மனம் ஒன்றில் இருந்து ஒன்றாய் எப்போதும் தாவியபடி இருக்கும். கணப்பொழுதும் ஒன்றுடன் நீங்கள் இசைவாயிருப்பதில்லை. எதிலும் பொருந்தியிராமல் தாவிக்கொண்டே இருப்பீர்கள். உங்கள் மனம் தொடர்ந்து இயங்கும். இடைவிடாது மாற்றம் நிகழ்ந்தபடி இருக்கும். இந்தக் கணம் ஒன்றிலும் அடுத்த கணத்தில் இன்னொன்றிலுமாய் மனம் குவிந்திருக்கும். அதற்கடுத்த கணத்தில் அதன் கவனம் வேறொன்றில் குவியும். இது மனதின் வழக்கமான நிலையாகும்.

இதன் முதலாவது செயல்நிலை தாரணை. தாரணை என்பது உங்கள் ஒட்டுமொத்த உணர்வுநிலையும் ஒன்றில் மட்டுமே ஒருமைப்பட்டிருப்பது. அந்த ஒன்று மறைந்து போய் விடுவதற்கு அது இடமளிப்பதில்லை. அந்த ஒன்றின்மீதே திரும்பத் திரும்ப உணர்வை நிலைக்கச் செய்வதால், தொடர் மாற்றத்தால் மனம் உணர்விழக்கும் நிலை இல்லை என்றாகிறது. ஒரு முழுமையை, படிக உருவாக்கத்தை (crystallization) நீங்கள் அடைகிறீர்கள். நீங்கள் புலனால் அறியும் பொருள்கள் (objects) பலவாக இருந்தால் உங்கள் கவனம் சிதறுண்டு போகும். பொருள்கள் - இலக்குகள் பலவானால் உங்கள் கருத்தும் வெவ்வேறாகி விடும். உங்களால் எதனுடனும் உடன்பாடு கொள்ள முடியாது.

எடுத்துக்காட்டாக, இன்று ஒரு பெண்ணை நீங்கள் நேசிப்பீர்கள், நாளை இன்னொரு பெண் மீதும் மூன்றாம் நாள் வேறொருத்தியிடமும் அந்த நேசம் திரும்பி விடும். அது உங்களுக்குள் ஒரு பகுப்பை (division) உண்டாக்கும். உங்களால் ஒற்றையாய் - தனிப்பட்ட ஒன்றாய் இருக்க முடியாது. நீங்கள் பலவாகி விடுவீர்கள். ஒரு கூட்டமாகி விடுவீர்கள். நீங்கள் ஒருவரிடம் வைக்கிற நேசம் காலகாலத்துக்கும் நீடித்திருக்கும் என்று கிழக்கத்திய சித்தாந்தம் அழுத்தமாய் கூறுகிறது. ஒரு பிறவியில் தம்பதியானவர்கள் பல பிறவிகளிலும் தொடர்ந்து தம்பதியாயிருப்பார்கள் என்பதற்கு கிழக்கில் சோதனை முடிபுகள் இருக்கின்றன. திரும்பத்திரும்ப அதே பெண்ணுடன், அதே ஆணுடன் என்கிற போது அதிலொரு முழுமை ஏற்பட்டுவிடுகிறது. மிதமிஞ்சிய மாற்றம் உங்கள் இருப்புணர்வை (being) படிப்படியாய் அரித்துத் தின்றுவிடும். உங்களைப் பிளவுண்டு போகச் செய்யும். அதனால் தானோ என்னவோ மேற்கில் உளச்சிதைவு (schizophrenia) சர்வ சாதாரணமாகி விட்டிருக்கிறது. இதில் ஆச்சரியப்பட எதுவுமில்லை. அது ஒன்றும் வினோதமானதல்ல, இயல்பானதே. எல்லாமும் மாறிக் கொண்டிருக்கிறது.

ஓர் ஆலிவுட் நடிகை பதினோராவது முறையாய் கல்யாணம் செய்து கொண்டதைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். தன் கல்யாணம் முடிந்து வீட்டுக்கு வந்தவள் புதிய அப்பாவைக் குழந்தைகளுக்கு அறிமுகப்படுத்தினாள். குழந்தைகள் ஒரு பதிவேட்டைக் கொண்டு வந்து அந்த அப்பாவிடம் சொல்லிற்றாம். 'தயவு செய்து இதில் கையெழுத்திடுங்கள். ஏன்னா நீங்க இன்னைக்கு இங்கே இருப்பீங்க, நாளைக்குப் போயிருவீங்க. எங்களுடைய அப்பாக்களின் கையொப்பங்களை நாங்க சேகரிச்சு வச்சுக்கறோம்' என்று.

நீங்கள் தொடர்ந்து வீடுகளை மாற்றுகிறீர்கள், ஒவ்வொன்றையும் மாற்றிக்கொண்டே போகிறீர்கள். அமெரிக்காவில் ஒரு நபரின் வேலைக்கான சராசரி கால அளவு மூன்று ஆண்டுகள். வேலையும் தொடர்ந்து மாற்றத்துக்குட்பட்டதுதான். ஓர் ஊரில் ஒருவர் தங்கியிருக்கிற வீடும் மூன்று ஆண்டுகளுக்குத்தான். திருமணமும் சராசரியாக மூன்று ஆண்டுகளே நீடித்திருக்கும். எப்படியோ மூன்று ஆண்டுகள் என்பது முக்கியத்துவம் உடையதாகிறது. நான்காம் ஆண்டும் ஒரே பெண்ணுடன் நீங்கள் இருந்துவிட்டால் எங்கே அவளுடனேயே நிரந்தரமாய் இருந்து விடுவோமோ என்கிற அச்சம் ஏற்பட்டுவிடும். நீங்கள் மூன்று ஆண்டுகளுக்கு மேலும் ஒரே வேலையைப் பார்த்துக் கொண்டிருந்தால் கடைசி வரைக்கும் அதேதான் என்கிற அச்சம் தோன்றலாம். எனவேதான் மக்கள் தொடர்ந்து போய்க் கொண்டேயிருப்பது. அவர்கள் கிட்டத்தட்ட நிலையான இடமின்றி அலைந்து திரிகிறவர்களாயிருக்கிறார்கள். அது உங்களுக்குள் பிளப்புண்டு போகச் செய்யும்.

கிழக்கிலானால் ஒருவனுடைய வேலை அவனுடைய வாழ்க்கையின் பிரிக்க முடியாத பகுதியாகி விடுகிறது. ஒரு பிராமணனுடைய வீட்டில் பிறந்தவன் பிராமணனாயிருக்கிறான். சக்கிலியனின் வீட்டில் பிறந்தவன் சக்கிலியனாயிருக்கிறான். மாற்றமேயில்லாத திருமணம், குடும்பம், வேலை, ஊர், பிறப்பும் இறப்பும் ஒரே ஊரில். லாவோட்சு நினைவு கூர்கிறார். 'அந்தக் காலத்து மக்கள் ஆற்றின் மறு கரைக்குக்கூட சென்றதில்லை என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.' மறு கரையில் நாய்களின் குரைப்பை அவர்கள் கேட்டதுண்டு. மறுகரையில் எழும் புகையைக் கொண்டு அங்கே மக்கள் சமைக்கிறார்கள். அங்கே ஓர் ஊர் இருக்கும்போல என்று அவர்கள் அனுமானித்துக் கொள்வார்கள். நாய்களின்

குரைப்பைக் கேட்டிருந்தாலும் அங்கே சென்று பார்ப்பது பற்றி அவர்கள் அலட்டிக் கொள்வதில்லை. அவர்கள் ஒரே இடத்தில் நிரந்தரமாய் இருப்பதுபற்றி எவ்வித முரண்பாடும் கொண்டதில்லை. அத்தனை இசைவிணக்கம் உடையவராய் இருந்திருக்கிறார்கள்.

இந்த நிலையான மாற்றம் உங்களுக்குள் ஏற்பட்டிருக்கும் அச்சக்கிளர்ச்சியை (feverishness)யே தெரிவிக்கிறது. உங்களால் எதிலும் நீடித்திருக்க முடியாது. அந்நிலையில் உங்களுடைய ஒட்டுமொத்த வாழ்க்கையும் தொடர் மாற்றத்துக்குள்ளாகும் – ஒரு மரம் திரும்பத்திரும்ப அகழ்ந்தெடுக்கப்பட்டுக் கொண்டேயிருந்தால் அது வேர்விடுவது எப்போது? தன் வேர்களை மண்ணின் அடியாழத்துக்கு அது அனுப்புவது என்பது ஒருபோதுமில்லை. பெயரளவுக்குத்தான் அந்த மரம் பிழைத்திருக்கும். அது புஷ்பிப்பதில்லை. காரணம் பூப்பதற்குமுன் அதனுடைய வேர்கள் ஓரிடத்தில் நிலைபெற்றிருக்க வேண்டும்.

ஆக, கவன ஒருமை என்பது உங்கள் கவனத்தை ஒரு பொருளின் மீது ஒருமுனைப்படுத்துவதும், அந்த ஒன்றிலேயே தொடர்ந்து கவனத்தை வைத்திருக்க முடிவதும் ஆகும். ஒரு ரோஜாவை நீங்கள் பார்க்கிறபோது தொடர்ந்து அதையே பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். திரும்பத்திரும்ப மனம் அங்குமிங்குமாய் திரிந்தலைகிறது. அதை நீங்கள் மீட்டெடுக்கிறீர்கள். முரட்டுத்தனமான ஒரு காளையை அடக்குகிறமாதிரி உங்கள் மனதையும் நீங்கள் அடக்கி வைக்க முயல்கிறீர்கள். அதை நீங்கள் திரும்பவும் ரோஜாவிடம் கொண்டு வருகிறீர்கள். அது திரும்பவும் போய்விடுகிறது. நீங்கள் திரும்பவும் அதை இழுத்துக்கொண்டு வருகிறீர்கள். உங்களால் ஒரு ரோஜாவைப்பற்றி முதல் முறையாய் தெரிந்து கொள்ள இயல்கிறது. அது வெறும் ரோஜா அல்ல. கடவுள் அதனுள் மலர்ந்திருக்கிறார். அதன் மலர்ச்சியில் அவர் உறைகிறார். அதன் நறுமணம் தெய்வத்தன்மை கொண்டது. அது வெறுமனேமே ஒரு பூவின் மணமல்ல. ஆனால் நீங்கள் ரொம்ப நேரத்துக்கு அதன் தொடர்பில் இருக்க முடிவதில்லை.

ஒரு மரத்தடியில் அமர்ந்திருக்கும் போது அதனுடன் இருங்கள். ஒரு சிநேகிதன் அல்லது சிநேகிதியுடன் இருக்கும்போது அவன் அல்லது அவளோடு இருங்கள். இல்லையேல் என்ன நடக்கும்? ஒரு பெண்ணுடன் நீங்கள் காதல் விளையாட்டில் ஈடுபட்டிருந்தாலும் உங்கள் கவனம் வேறெங்கோ சென்றிருக்கும். முற்றிலும் வேறான

உலகில் அது சஞ்சரித்துக் கொண்டிருக்கலாம். காதலுறவில்கூட உங்களுடைய கவனம் குவிந்திருப்பதில்லை. நீங்கள் வெகுவாய் தவறவிடுவீர்கள். ஒரு வாசல் திறக்கிறது. ஆனால் அதைக் கண்டுகொள்வதற்கு நீங்கள் அங்கே இருக்கவில்லை. அந்தக் கதவு மூடிக்கொண்டபின் நீங்கள் மறுபடியும் வருகிறீர்கள்.

இறைவனைக் கண்டுகொள்ள இலட்சோபலட்சம் தருணங்கள் ஒவ்வொரு கணத்திலும் இருந்தாலும் நீங்கள் அங்கே இருப்பதில்லை. அவர் வந்து உங்கள் வாசற்கதவுகளைத் தட்டுகிறார். ஆனால், நீங்கள் அங்கே இருப்பதில்லை. நீங்கள் ஒருபோதும் அங்கே காணப்பட வில்லை. நீங்கள் உலகெங்கும் சுற்றித் திரிகிறீர்கள். இந்த அலைச்சல் நிறுத்தப்பட வேண்டும். அதுவே தாரணையின் அர்த்தமாகும். சமநிலைக்கான மிகப்பெரிய கூட்டிணைவுக்கு நீங்கள் எடுக்கிற முதல் நடவடிக்கையே தாரணை.

இரண்டாம் நடவடிக்கை தியானம். தாரணையில் உங்கள் மனதை நீங்கள் ஒருமுகப்படுத்துகிறீர்கள். இதில் பொருள் (object) முக்கியம். நீங்கள் திரும்பத்திரும்ப அந்தப் பொருளை உங்களுடைய உணர்வு நிலைக்குக் கொண்டு வருகிறீர்கள். அதன் தடத்தை (track) நீங்கள் இழக்க வேண்டியதில்லை. ஒரு பொருள் அல்லது குறிக்கோள் தாரணையில் முக்கியத்துவம் பெறும். இரண்டாம் நடவடிக்கை தியானம். தியானத்தில் அதற்குமேலும் பொருளுக்கு முக்கியத்துவம் இருக்காது. அது இரண்டாம்பட்சமாகி விடும். தற்போது உணர்வின் ஓட்டத்துக்கே முக்கியத்துவம். அது அந்தப் பொருள் அல்லது குறிக்கோளின் மீது கொண்ட விழிப்புணர்வு. நீங்கள் தொடர்ந்து. இடைவெளியின்றி உணர்வைச் செலுத்திக் கொண்டேயிருந்தால் எந்தப்பொருளும் போதுமானதாகவே இருக்கும்.

நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? ஒரு பானையில் இருந்து தண்ணீரை இன்னொரு பானைக்கு மாற்றும்போது அதில் இடைவெளி கள் இருக்கும். அதேசமயம் எண்ணெயை ஒரு பாத்திரத்தில் இருந்து இன்னொரு பாத்திரத்தில் ஊற்றும்போது இடைவெளிகள் இருக்காது. எண்ணெய் தொடர்ச்சி உடையது. நீரோ தொடர்ச்சியற்று வீழ்வது. உங்களுடைய தன்னுணர்வு ஒரே பொருளின்மீது தொடர்ந்து வீழ்ந்தபடி இருக்க வேண்டும் என்பதையே தியானம் குறிக்கிறது. இல்லையேல் அது விலகிவிடும். அது தொடர்ச்சியாய் ஒளி கொடுக்காமல், விட்டுவிட்டு எரிவதாயிருக்கும். சிலசமயம் அது இருக்கும், மறையும். பிறகு மறுபடியும் இருக்கும், மறைந்து விடும்.

தியானத்தில் நீங்கள் அதைத் தொடர்ச்சியான ஒன்றாக்கி விடவேண்டும். முழுமையான தொடர்ச்சி இருக்க வேண்டும்.

உங்களுடைய தன்னுணர்வு தொடர்ச்சியாய் இருந்தால் நீங்கள் வலிமை மிக்கவராகி விடுவீர்கள். வாழ்க்கையென்றால் என்ன வென்பதை நீங்கள் முதல் முறையாய் உணர்வீர்கள். முதல் முறையாய் உங்கள் வாழ்க்கையில் இருந்த இக்கட்டுகள் மறைகின்றன. முதல் முறையாக நீங்கள் ஒன்றுடன் ஒன்றாய் சோந்து கொள்கிறீர்கள். இந்தச் சேர்க்கை தன்னுணர்வு பற்றியது. உங்கள் உணர்வு நீர்த்துளிகளைப் போல் தொடர்ச்சியற்றதாயின் நீங்கள் அங்கே இருப்பதில்லை. அந்த இடைவெளிகளே ஓர் இடர்ப்பாடாகி விடும். உங்கள் வாழ்க்கை தெளிவற்று மங்கலாகி விடும். அது வலிமையோ, வேகமோ, ஆற்றலோ கொண்டிருக்காது. உங்கள் உணர்வு ஆற்றின் நீரொழுக்குபோல் தொடர்ச்சியாயிருப்பின் நீங்கள் ஆற்றல்மிக்க அருவியாகி விடுவீர்கள்.

இதுவே சமநிலையின் இரண்டாம் நடவடிக்கை. இரண்டாம் பகுதி. மூன்றாவதும் முடிவானதுமான பகுதி சமாதி ஆகும். தாரணையில் பொருள் முக்கியம். இலட்சோபலட்சம் பொருள்களில் நீங்கள் ஒன்றை மட்டும் தேர்ந்தெடுப்பதால் அது முக்கியத்துவம் பெறுகிறது. தியானத்தில் தன்னுணர்வு முக்கியம். உங்கள் உணர்வை நீங்கள் தொடர்ந்து செலுத்த வேண்டியிருக்கும். சமாதியில் ஆதாரம் (subject) முக்கியம், பொருளை விட்டுவிட வேண்டும். இங்கே ஆதாரம் என்றது செயலை விளைவிக்கும் பிரஜை.

நீங்கள் பல பொருள்களைக் கைவிட்டீர்கள். பல பொருள்கள் (நோக்கங்கள்) இருப்பின் நீங்கள் பலராய் ஒரு கூட்டமாக ஆகிவிடுவீர் கள். உங்கள் இருத்தல் ஒருவருக்குள்ளேயே பல ஆத்மாக்கள் இருப்பது (polypsychic) போன்றது. ஒருமனமல்ல, பல மனங்கள் உங்களுக்குள். மக்கள் என்னிடம் வந்து சொல்வார்கள், 'நான் சந்நியாசியாக விரும்பறேன். ஆனால்...' என்று. அந்த 'ஆனால்' அவர்களுடைய இன்னொரு மனதை வெளிக்காட்டும். தாங்கள் ஒரேமாதிரி இருப்பதாய் எண்ணிக் கொண்டாலும் அந்த 'ஆனால்' அவர்களுக்கு இருக்கும் வேறொரு மனதை வெளிக்கொணரும். அவர்கள் ஒரே ஆளில்லை. அவர்கள் ஒன்றைச் செய்ய விரும்புவார்கள், அதே சமயம் அதைச் செய்ய வேண்டாமே என்றும் எண்ணிக் கொள்வார்கள் - இரண்டு மனங்கள். நீங்கள் கவனித்தால் தெரியும். உங்களுக்குள் பல மனங்கள் இருப்பதை - கிட்டத்தட்ட ஒரு சந்தைப்பேட்டை மாதிரி.

பல்வேறு நோக்கங்கள் இருக்குமெனில் அவற்றுக்குத் தொடர்புடையதாய் பல்வேறு மனங்களும் இருக்கவே செய்யும். ஒரேயொரு நோக்கம் மட்டுமே இருக்குமெனில் ஒருமுகப்பட்டதாய், மையம் கொண்டதாய், நிலைத்திருப்பதாய் வலுவான அடிப்படை யுடன் கூடிய ஒரு மனந்தான் இருக்கும். தற்போது இந்த ஒரு மனமும கைவிடப்பட வேண்டியதே. இல்லையேல் நீங்கள் அகந்தையில் இருக்க நேரிடும். பலவற்றை விட்டதுபோல் இந்த ஒன்றையும் விட்டு விடுங்கள். சமாதி நிலையில் இந்த ஒரு மனமும் விடப்பட்டு விடும். மனம் விடப்படுகிறபோது அந்த மனம் பற்றியிருந்த பொருளும் (கொண்ட நோக்கம்) விடப்படும். காரணம் அங்கே அது இருக்க முடியாது. அவை எப்போதும் ஒன்றாகவே இருப்பவை

தூய அண்டவெளி போன்று சமாதியில் தன்னுணர்வு மட்டுமே எஞ்சியிருக்கும்.

இம்மூன்றும் சேர்ந்து சமநிலை எனப்படும். சமநிலை என்பது மனித உணர்வின் கூட்டிணைப்பு.

தற்போது இந்த சூத்திரத்தை உங்களால் புரிந்து கொள்ள இயலும்: 'கர்மாவின் இரண்டு வகைகளின பேரிலும், சகுனம் நற்குறிகள் பேரிலும் சமநிலையைச் செயற்படுத்துவதன் மூலம் மரண காலத்தை முன்கூட்டியே துல்லியமாய் அறிய முடியும்.' தற்போது நீங்கள் கவன ஒருமையுடன் தியானித்து சமாதி நிலையில் பொருந்த முடியுமெனில், மரண காலத்தைத் துல்லியமாய் முன்கூட்டியே அறிந்து கொள்ளும் திறமையும் உங்களிடம் இருக்க முடியும்.

உணர்வின் கூட்டிணைவாய் உங்களுக்குள் இருக்கும் சமநிலை என்கிற பேராற்றலைக் கொண்டு சாவை நோக்கி நீங்கள் நகரும்போது நீங்கள் எப்போது சாகப் போகிறீர்கள் என்பதை உங்களால் உடனடியாய் தெரிந்து கொண்டுவிட முடியும்.

அது எப்படி நடக்கிறது? ஓர் இருட்டறையில் நீங்கள் நுழைகிற போது அங்கே என்ன இருக்கிறது என்பதை உங்களால் காண முடியாது. ஒரு விளக்குடன் நீங்கள் செல்லும்பட்சத்தில் அங்கே என்ன இருக்கிறது அல்லது என்ன இல்லை என்பதை உங்களால் கண்டு கொள்ள முடியும். கிட்டத்தட்ட உங்கள் வாழ்க்கை முழுவதிலும் நீங்கள் இருட்டிலேயே சென்று கொண்டிருக்கிறீர்கள். எனவேதான் இன்னும் பிராரப்த வினை எஞ்சியிருக்கிறது என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளவில்லை. நீங்கள் சமநிலை என்கிற ஒளி விளக்கோடு

சென்றால் எஞ்சியிருக்கும் பிராரப்தம் - இப்பிறவியில் அனுபவித்துத் தீர்க்க வேண்டியது - எவ்வளவு என்று தெரிந்து கொண்டு விடலாம். வீடு முழுதும் காலியாக இருப்பதை நீங்கள் காண்கிறீர்கள், ஒரு மூலையில் மட்டும் சில பொருள்கள் அவையும் சீக்கிரமே மறைந்து விடும். நீங்கள் எப்போது இறக்கப் போகிறீர்கள் என்பதைத் தற்போது உங்களால் கண்டுகொள்ள முடியும்.

ராமகிருஷ்ணரைப் பற்றிச் சொல்வார்கள். அவர் உணவில் விருப்பம் உடையவர் என்று, உண்மையிலேயே பெருவிருப்பம் உடையவர்தாம். அது உகந்ததல்ல. அவருடைய மனைவி சாரதாதேவியும்கூட அதுபற்றிய மன உளைச்சலில் இருந்தார். காரணம் அவர் எப்பேர்ப்பட்ட மகான், அவரிடம் உள்ள ஒரே குறை - அவருக்கு உணவில் அதிக விருப்பம் என்பதுதான். தமது சீடர்களுடன் ஸத்சங்கத்தில் ஈடுபட்டிருக்கும்போது இடையில், 'கொஞ்சம் பொறுங்கள், இதோ வந்துவிடுகிறேன்' என்று சொல்லிவிட்டு, அடுக்களையில் என்ன சாப்பாடு இருக்கிறது என்று பார்த்து வருமளவுக்கு விருப்பம் கொண்டவர் அவர். அங்கே சென்று, 'இன்றைக்கு என்ன சமையல்?' என்று கேட்டுத் தெரிந்து கொள்வார், அதன் பிறகு ஸத்ஸங்கத்தைத் தொடர்வார்.

அவருடைய நெருங்கிய சீடர்கள் இதுபற்றி வருத்தப்பட்டார்கள். 'பரமஹம்ஸரே, இது சரியாய் படவில்லை. தங்களைப்போல் நேர்த்தியான, குறையற்ற மனிதர் ஒருபோதும் இருந்ததில்லை. ஆனால் இந்த அற்ப சமாசாரம், தாங்கள் ஏன் அதைவிடக் கூடாது?' என்று அவர்கள் சொன்னார்கள். அவர் சிரித்துக் கொள்வாரே தவிர எதுவும் பேசமாட்டார்.

ஒருநாள் அவருடைய மனைவி சாரதா ரொம்பவே வலியுறுத்தினார். அப்போது அவர் சொல்வார். 'நீ இத்தனை தூரம் வற்புறுத்துவதால் சொல்கிறேன். என்னுடைய பிராரப்தம் தீர்ந்து விட்டது. இந்த உணவையும், நான் பற்றிக் கொள்ளாவிட்டால் போயே போய்விட்டிருப்பேன்' என்று. அவருடைய மனைவியால் அதை நம்ப முடியவில்லை. மனைவிமார்கள் தங்கள் கணவரை எளிதாய் நம்பி விடமாட்டார்கள் - அது பரமஹம்ஸரே என்றாலும் வேறாகி விடாது. அவர் தன்னை முட்டாளாக்கப் பார்க்கிறார் என்று மனைவி நினைத்திருக்க வேண்டும்; அல்லது அவர் அறிவுக்குப் பொருத்தமாய் ஏதோ சொல்ல முயல்கிறார் என்று நினைக்கவும் இடமுண்டு. அதனைப் புரிந்துகொண்டு ராமகிருஷ்ணர் கூறுவார், 'இதோ பார், நான்

சொல்வதை நீ நம்பவில்லை என்பது எனக்குத் தெரியும். ஆனால் அதை நீ அறிந்து கொள்வாய்.

நான் இறக்கப்போகிற நாளுக்கு மூன்று நாட்கள் முன்பாக நான் உணவை ஏற்றெடுத்தும் பாரேன். என்னுடைய சாப்பாட்டுத் தட்டை நீ எடுத்து வரும்போது என் பார்வை வேறுபக்கம் திரும்பியிருக்கும். அப்போது இன்னும் மூன்று நாட்களே நான் இங்கிருப்பேன் என்பதை நீ தெரிந்து கொள்ள முடியும்' என்று.

அதுவும் நம்பக்கூடியதாய் படவில்லை. அவர்கள் அதை மறந்து போனார்கள். தம்முடைய இறப்புக்கு மூன்று நாட்கள் முன்பாய் ராமகிருஷ்ணர் ஓய்வாக இருந்தபோது அவருடைய மனைவி அவருக்கு சாப்பாடு எடுத்து வந்தார். அவரோ வேறுபக்கம் பார்த்தபடி இருந்தார். மனைவிக்கு சட்டென்று ஞாபகம் வரவும் புரிந்து கொண்டார். அவருடைய கையில் இருந்து சாப்பாடு கீழே விழுந்தது. அழத் தொடங்கினார். ராமகிருஷ்ணர் சொன்னார். 'அழாதே. தற்போது என்னுடைய காரியம் முடிந்தது. நான் பற்றியிருக்கத் தேவையில்லை' என்று. அத்துடன் சரியாக மூன்றே நாட்களில் அவர் இறந்து போனார்.

அவர் மிகவும் இரக்கத்துடன் ஒரேயொரு தளையைக் கொண்டு தம்மைப் பிணைத்துக் கொள்ள முயன்றார். சிறைவாசம் முடிந்தது. சிறை மறைந்து போயிற்று. அவர் இரக்கத்தின் காரணமாகவே இக்கரையில் இன்னும் கொஞ்ச நாள் பற்றியிருக்க முயன்றார். தம்மைச் சுற்றியிருப்பவர்களுக்கு உதவ வேண்டும் என்பதற்காகவே அவர் முயன்றது. ஆனாலும் ஒரு பரமஹம்ஸரைப் புரிந்து கொள்வதென்பது அத்தனை எளிதல்ல. சித்தனாகி விட்ட ஒரு மனிதனை, சஞ்சித கர்மங்களை தீர்த்துவிட்ட ஒரு மனிதனைப் புரிந்து கொள்வது கடினந்தான். அவரிடம் எந்த ஈர்ப்பு விசையும் இருந்திருக்கவில்லை. அதனால்தான், ராமகிருஷ்ணர் ஒரு பாறையைப் பற்றிக்கொண்டு இவ்வுலகில் இருந்து புறப்படுவதில் காலம் தாழ்த்தியது.

நீங்கள் எச்சரிக்கை உணர்வோடு சமநிலையைப் பெற்றிருக்கும் பட்சத்தில் ஊழ்வினை எந்த அளவு மிச்சம் இருக்கிறது என்பதைக் கண்டுகொள்ள முடியும். இறந்து கொண்டிருக்கும் ஒருவனின் நாடியைப் பரிசோதித்து 'இன்னும் இரண்டு மூன்று மணி நேரத்துக்கு மேல் தாக்கு பிடிக்காது' என்று மருத்துவர் சொல்கிற மாதிரிதான் இதுவும். செத்துக் கொண்டிருக்கும் மனிதனின் நாடித்துடிப்பு எப்படி இருக்கும் என்பதை அவர் அனுபவத்தில் அறிவார். அதே மாதிரிதான் எச்சரிக்கை உணர்வுடைய ஒருவர் எந்த அளவு பிராரப்தம்

எஞ்சியிருக்கிறது - நாடித்துடிப்பு எந்த அளவில் என்பதைத் தெரிந்து கொண்டிருப்பதும். அத்துடன் தான் எப்போது போக வேண்டியிருக்கும் என்பதும் அவருக்குத் தெரியும்.

இதனை இரண்டு வழியில் செய்ய முடியும். சூத்திரம் சொல்கிறது ஒன்று மரணம் அல்லது பிராரப்த கர்மத்தில் கவனம் வையுங்கள் என்று. சஞ்சிதம் பிராரப்தம் என்கிற இரண்டு வகை கர்மங்களின் பேரில் அல்லது சகுனங்கள் அறிகுறிகளின் பேரில் சமநிலையைச் செயற்படுத்துவதன் மூலம் மரண காலத்தை முன்கூட்டியே துல்லியமாய் அறிய முடியும். இதனை இரண்டு வழியில் செய்ய முடியும்: ஒன்று பிராரப்தத்தைக் கூர்ந்து பார்ப்பது அல்லது ஒருசில சகுனங்களை அறிகுறிகளைக் கவனிப்பது.

எடுத்துக்காட்டாக, ஒரு நபர் இறப்பதற்கு முன், கிட்டத்தட்ட ஒன்பது மாதங்களுக்கு முன்பாய் ஏதோ ஒன்று நிகழும். சாதாரணமாக நாம் உணர்வோடு இருப்பதில்லை. காரணம் எவ்வகையிலும் நாம் உணர்ந்திருப்பதில்லை. அந்த நிகழ்வோ அதிநுட்பமானது. நான், 'கிட்டத்தட்ட ஒன்பது மாதங்கள்' என்றது அது மாறுபடும் என்பதால்தான். அது கருவுறுதலுக்கும் பிரசவத்துக்கும் இடையே உள்ள காலத்தைப் பொறுத்தது. நீங்கள் கருவறையில் ஒன்பது மாதங்கள் இருந்து, பின்பு பிறந்தீர்கள் என்றால் அப்போது ஒன்பது மாதங்கள்தாம். நீங்கள் கருவறையில் பத்து மாதங்கள் இருந்தபின் பிறந்தீர்களென்றால் அப்போது பத்து மாதங்கள். நீங்கள் கருவறையில் ஏழு மாதமே வாசம் செய்து பிறந்திருந்தால் ஏழு மாதங்கள் தாம் அது கருத்தரித்ததற்கும் பிறந்ததற்கும் இடையில் உள்ள காலத்தைப் பொறுத்தது. மர்ணத்துக்கு முன் மிகச் சரியாக அதே கால இடைவெளியில்தான் ஏதோவொன்று தொப்புள் மையத்தில் 'க்ளிக்' என்கிற ஒலியுண்டாக்கும். அது ஒலியெழுப்பக் காரணம் கருவுறுதலும் பிறத்தலுக்கும் இடையே இருந்த ஒன்பது மாத இடைவெளி. மிகச்சரியாக அதே கால அளவுதான் மரணத்திலும் மேற்கொள்ளப்படுகிறது. நீங்கள் பிறப்பதற்கு முன் தாயின் கருவறையில் ஒன்பது மாத ஆயத்தத்தில் இருந்தீர்கள் என்றால் மரணத்திலும் அதே கால அளவுதான் எடுத்துக் கொள்ளும் படி இருக்கும். அப்போது வட்டம் பூர்த்தியாகி விடும். தொப்புள் மையத்தில் ஏதோவொன்று நேரிடுகிறது. யார் உணர்வுடன் இருக்கிறார்களோ அவர்கள் உடனே தெரிந்து கொண்டு விடுவார், தொப்புள் மையத்தில் ஏதோவொன்று ஊடுருவிச் சென்றதை. சாவு சமீபித்து விட்டது என்பதை. தோராயமாக ஒன்பது மாதங்கள்.

அல்லது, எடுத்துக்காட்டாக வேறு அறிகுறிகளையும் கொள்ளலாம். ஒருவர் இறப்பதற்கு முன், இறப்பதற்கு மிகச்சரியாக ஆறு மாதங்களுக்கு முன், கொஞ்சம் கொஞ்சமாய் தம்முடைய மூக்கின் நுனியை அவரால் பார்க்க முடியாமல் போய்விடும். காரணம் கண்கள் மெள்ள மேல் நோக்கித் திரும்பி விடும். மரணத்தின் போது முற்றிலுமாய் மேல்நோக்கித் திரும்பி விடும். ஒரு குழந்தை பிறந்ததும் அது நிலையான பார்வையைப் பெற ஆறு மாதங்கள் பிடிக்கும். இல்லையேல் கண்கள் தளர்வுடையதாயிருக்கும். அதனால்தான் குழந்தைகள் தங்கள் கண்களை மூக்கிற்கு வெகு சமீபமாய் கொண்டுவர முடிவது. அவற்றால் கண்களை ஒரு கோடியில் இருந்து மற்றொரு கோடிக்கு எளிதாய் சுழற்ற முடியும். குழந்தை நிலையான பார்வையைப் பெறும் நாள் வரும். அந்த நாள் ஆறு மாதங்களிலோ, ஒன்பது மாதங்களிலோ வரலாம். பிற்பாடு அதே கால அளவுதான் கணக்கில் கொள்ளும்படி இருக்கும். அதனால்தான் கிராமப்புற மனிதர்கள் - ஒரு மனிதன் இறப்பதற்கு முன் தன்னுடைய மூக்கு நுனியை அவனால் பார்க்க முடியாமல் போகும் என்று - யோகிகளிடம் இருந்து கேள்விப்பட்டிருப்பார்களோ என்னவோ - சொல்கிறார்கள்.

யோகிகள் பல வழிகளில் தங்கள் மூக்கு நுனியைப் பார்க்கிறார்கள். அதன்பேரில் அவர்கள் கவனத்தை ஒருமுனைப்படுத்துவார்கள். அதன்பேரில் கவனத்தைச் செலுத்துகிறவர்கள் எதிர்பாராதவிதமாய் ஒருநாள் புரிந்து கொள்வார்கள் தங்கள் மூக்கைத் தங்களால் பார்க்க முடியாமல் போய்விட்டதை. மரணம் சமீபித்து விட்டதை இப்போது அவர்கள் தெரிந்து கொள்கிறார்கள்.

யோக சரீர தத்துவத்துக்கிணங்க ஒரு மனிதனின் உடம்பில் ஏழு மையங்கள் உள்ளன. முதலாவது பிறப்புறுப்பு, நிறைவானது சஹஸ்ராரம் - சிரசில் இருப்பது. இரண்டுக்கும் இடையில் மற்ற ஐந்தும் இருக்கின்றன. நீங்கள் இறக்கிறபோது ஒரு குறிப்பிட்ட மையத்தில் இருந்தே இறக்கிறீர்கள். சாதாரணமாக, மக்கள் தங்களுடைய பிறப்புறுப்பின் மூலமே இறக்கிறார்கள். காரணம் அவர்களுடைய வாழ்க்கை முற்றிலும் பாலுறவு மையத்தைச் சுற்றிதான் அமைகிறது. அவர்கள் தொடர்ந்து பாலுறவு பற்றியே கற்பனை செய்கிறார்கள், சிந்திக்கிறார்கள். ஒட்டுமொத்த வாழ்க்கையுமே பாலுறவு மையத்தைச் சுற்றியே இருப்பதுபோல் தோன்றுகிறது. பால் சார்ந்த மையமே அவர்களைப் பலி கொண்டு விடுகிறது. நீங்கள் கொஞ்சம் வெளியே வந்த, அன்பைப் படிப்படியாய் முயன்று அடைவீர்களாயின், பாலுறவைக் கடந்து செல்வீர்களாயின் அப்போது இருதய மையத்தில்

உங்கள் மரணத்தை எதிர்கொள்ளும்படி இருக்கும். நீங்கள் முற்றாக வெளிவந்து விட்டால், ஒரு சித்தராகி விட்டால் சஹஸ்ராரத்தில் மரணம் காத்திருக்கும்.

நீங்கள் எந்த மையத்தில் இருந்து மரணமடைகிறீர்களோ, அந்த மையத்தில் ஒரு திறப்பு (opening) இருக்கும். உயிர்ச்சக்தி முழுதும் அங்கிருந்தே வெளியேறும்.

சில நாட்களுக்கு முன்பாக விபாசனா இறந்து போனாள். அவளுடைய தலையில் தட்டுமாறு அவளது சகோதரன் வியோகி கேட்டுக் கொள்ளப்பட்டார். இந்தியாவில் அது சமயக் கோட்பாடுகளை ஒப்புக்கொள்ளும் ஒரு குறியீடு ஆகும். இறந்த ஒருவரைச் சுடுகாட்டில் சிதையில் வைத்ததும் தலையில் தட்டுகிறார்கள். குறியீடு சார்ந்ததுதான். அந்த மனிதர் பரமகதியை அடைந்திருந்தால் அப்போது அவருடைய தலை தானாகேவே பிளவுண்டிருக்கும். ஆனால் அவர் அடைந்திருக்க மாட்டார். ஆனாலும் நாம் நம்பிக்கையோடு பிரார்த்தித்துக் கொண்டு அவருடைய மண்டையைப் பிளப்போம்.

விடுபடுதல் பற்றிய கருத்து வெளிப்படையானது. இக்கருத்து கண்டுகொள்ளக் கூடியதுதான். நம்முடைய யோக சரீர தத்துவத்தை என்றாவதொரு நாள் மேற்கத்திய மருத்துவ இயல் தெரிந்து கொள்ளும். இதுவும் ஒரு மனிதன் எப்படி இறந்தான் என்பதை அறியும் சவப்பரிசோதனையின் ஒரு பகுதியாகி விடும். தற்போது அவனுடைய இறப்பு இயல்பானதா, நஞ்சூட்டலா, கொலையா, தற்கொலையா என்கிற அளவிலேயே அவர்கள் கண்டறிகிறார்கள். அவை வழக்கமானவை தாம். ஆனால் அடிப்படை விஷயத்தை - அந்த மனிதன் எப்படி இறந்தான். பால் சார்ந்த மையத்தில் இருந்தா, இருதய மையத்தில் இருந்தா, அல்லது சஹஸ்ராரத்தில் இருந்தா எங்கிருந்து என்பதைத் தவறவிட்டு விடுகிறார்கள். ஒரு முட்டை உடைந்தால் அதில் இருந்து ஏதோ ஒன்று வெளிப்படுவது போல் மனித சரீரத்திலும் குறிப்பிட்ட மையம் உடைவதை நாம் கண்டுகொள்ள முடியும், யோகிகள் அதுபற்றி நிறையவே ஆராய்ந்திருக்கிறார்கள்.

சமநிலையை அடைந்த ஒருவர், தாம் எந்த மையத்தின் வழியே வெளியேறப் போகிறோம் என்பதை, இறப்பதற்கு மூன்று நாட்களுக்கு முன்பாய் உணர்ந்து கொண்டு விடுவார். பெரும்பாலும் அவர் சஹஸ்ராரத்தின் வழியாகத்தான் வெளியேறுவார். அவர் இறப்பதற்கு மூன்று நாட்கள் முன்பே உச்சந்தலையில் ஒரு குறிப்பிட்ட செயல் அல்லது அசைவு இருக்கும்.

இந்தத் தெரிவிப்புகள் (indications) மரணத்தை எப்படி எதிர்கொள்வது என்பதில் உங்களைத் தயார்படுத்தும். மரணத்தை ஒரு கொண்டாட்டமாய், ஆனந்தமாய், ஆடிப்பாடி பரவசத்துடன் எதிர்கொள்வோமெனில், மீண்டும் பிறக்கிற நிலை இருக்காது. உங்களுடைய பாடம் பூர்த்தியாகி விட்டது. இந்த உலகில் நீங்கள் கற்றுணர வேண்டியதையெல்லாம் கற்றுக் கொண்டாயிற்று. தற்போது மிகப்பெரிய திட்டம் ஒன்றிற்காக, மிகச்சிறந்ததோர் வாழ்க்கைக்காக, எல்லையற்ற பெரு வாழ்வைப் பெறுதற்காக தொலைவில் உள்ள வேறுலகம் செல்வதற்குத் தயாராகிறீர்கள். தற்போது பிரபஞ்சம் உங்களை எடுத்துக் கொள்வதற்கு, பரம்பொருள் உங்களை உள்ளடக்கிக் கொள்வதற்கு நீங்கள் தயாராயிருக்கிறீர்கள். நீங்கள் அதை ஈட்டிவிட்டீர்கள்.

இந்தச் சூத்திரம் பற்றிய இன்னொரு விஷயம். கிரியம கர்மம் என்கிற அன்றாட கர்மம் ஒருசிறிய துண்டு ஆகும். நவீன உளவியல் சொற்பாங்கில் நாம் அதனை பிரக்ஞை அல்லது தன்னுணர்வு (conscious) என்கிறோம். அதனடியில் இருப்பது பிராரப்தம் - இதனை உள்மனம் (subconscious) என்கிறோம். அதற்கும் கீழே உள்ளது சஞ்சிதம், நவீன உளவியல் சொற்பாங்கில் நாம் இதனை உணர்வற்ற நிலை - உணர்வற்ற நிலை என்கிறோம்.

சாதாரணமாக, உங்கள் அன்றாட நடவடிக்கைகள் பற்றிய உணர்வுடன் நீங்கள் இருக்க மாட்டீர்கள். அவ்வாறிருக்க நீங்கள் எப்படி பிராரப்தம் அல்லது சஞ்சித வினையை உணர்ந்து கொண்டிருக்க முடியும்? சாத்தியமே இல்லை. எனவே, அன்றாட நடவடிக்கைகள் பற்றிய உணர்வைப் பெறத் தொடங்குங்கள். சாலையில் நடக்கிறபோது கூட கவனமாயிருங்கள். உண்பதைக் கவனமாய் உண்ணுங்கள். நீங்கள் எதைச் செய்தாலும் அதுகுறித்த விழிப்புடன் இருங்கள். செயலுடன் ஒன்றியிருங்கள். கவனத்தை அங்குமிங்கும் சிதறவிட வேண்டாம். ஒரு *'ஸோம்பி' (zombie)யைப் போல் செயல்படாதீர்கள். அறிதுயிலில் (hypnosys) ஆழ்த்தப்பட்டது போல் நடந்து கொள்ளாதீர்கள். நீங்கள் எதைச் சொன்னாலும் கவனமுடன் சொல்லுங்கள். பிற்பாடு வருந்த வேண்டியிருக்காது.

'நான் வருந்துகிறேன். நான் ஒருபோதும் சொல்லவே விரும்பாத ஒன்றைச் சொல்லி விட்டேன்' என்று நீங்கள் தெரிவிக்கிற போது,

---

* *ஸோம்பி (Zombie) - தீய நோக்குடன் ஆவித் தொடர்பு கொண்டு உயிர் உள்ளது போல் தோற்றமளிக்கிற பிணம்.*

நீங்கள் விழிப்புடன் இல்லை, உறக்க நிலையில் இருக்கிறீர்கள் என்பதையே அது காட்டும். 'நான் ஒன்றைச் செய்து விட்டேன். அந்தக் காரியத்தை ஏன் செஞ்சேன், எதுக்கு செஞ்சேன்னு தெரியலை. அது எப்படி நடந்திச்சின்னே தெரியலை. இருந்தாலும் அதை நான் செஞ்சிட்டேன்' என்று நீங்கள் சொல்கிறபோது அது உங்கள் உறக்க நிலைச் செய்கை என்பதை ஞாபகத்தில் கொள்ளுங்கள். உறக்கத்தில் நடக்கிற (somnambulist) ஒருவர் நீங்கள்.

உங்கள் எச்சரிக்கை உணர்வை அதிகரித்துக் கொள்ள பாருங்கள். அதுவே இங்கிருப்பதை அர்த்தமுடையதாக்கும். தற்போது நான் சொல்வதைக் கேட்கும் நிலையில் நீங்கள் அப்படியே காதுகளாகி விடுகிறீர்கள். என்னைக் கவனித்திருக்கும் நிலையில் நீங்கள் அப்படியே கண்களாகி விட முடிகிறது. இது முழுமையான கவனம். ஒரேயோர் எண்ணம்கூட உங்கள் மனதில் ஓடவில்லை, வேறெதிலும் உங்கள் மனம் லயிக்கவில்லை. முழுமையாய் கேட்கிறீர்கள், முழுமையாய் பார்க்கிறீர்கள், உங்கள் கவனம் என்மீதே குவிந்து கிடக்கிறது. இங்கே இப்போது என்னுடன் இருந்து கொண்டிருக்கிறீர்கள். இதுவே முதல் நடவடிக்கை.

நீங்கள் அதை முயன்று அடைந்து விட்டால், இரண்டாம் நடவடிக்கையாய் உள் மனத்தில் நுழைய முடியும். அதன் பிறகு யாரேனும் உங்களை இழிவு செய்தால் உடனே அந்த அவமதிப்பை உணர்ந்து கொண்டு விடுவீர்கள், உங்களுடைய இருப்புணர்வின் அடியாழத்திற்குள் ஏதோ ஒருவித கோபம் நுழைந்து விட்டிருப்பதை உணர்வீர்கள். சிறிய அளவில் அலைபோன்ற அசைவு - உணர்ச்சி வேகம் இருக்கும். அது ரொம்பவும் சூட்சுமமானது. அதை உணர்ந்து கொள்ளும் நுட்ப உணர்வு உங்களிடம் இல்லாவிடில் உங்களால் அதை அறிய முடியாது - அது உங்களுடைய உணர்வு நிலையில் பரவாத வரை அதை நீங்கள் அறிய முடியாது. கொஞ்சம் கொஞ்சமாய் கருத்தில் வேறுபாடுகளை, உணர்வெழுச்சிகளின் நுட்பமான சாயைகளை (shades)த் தெரிந்து கொள்வீர்கள் - அதுவே பிராரப்தம் (உள்மனம்)

உங்கள் உள்மனதை நீங்கள் தெரிந்து கொண்டதும் அடுத்த நிலையை நீங்கள் அடையப் பெறுவீர்கள். நீங்கள் எந்த அளவு வளர்கிறீர்களோ அந்த அளவுக்கு வளர்ச்சி சாத்தியமாயிருக்கும். தற்போது சஞ்சிதம் என்கிற முந்தைய வினையை நீங்கள் அறிந்து கொள்ள இயலும். இது மூன்றாம் செயல்நிலை, முடிவான நிலை. நீங்கள் உணர்வற்ற நிலையை ஒருமுறை அடைந்து விட்டால் உங்கள்

இருப்புணர்வின் அடியாழத்துக்கு உணர்வொளியைக் கொண்டு செல்கிறீர்கள் என்று பொருள். நீங்கள் ஞானியாகி விடுகிறீர்கள். ஒரு புத்தனாவதன் பொருள் அதுவே. தற்போது இருட்டில் (அறியப்படாமல்) எதுவும் இல்லை. ஒவ்வொரு மூலையிலும் ஒளி (அறிவு விளக்கம்) பதவிக் கிடக்கிறது. அந்நிலையில் நீங்கள் வாழ்கிறீர்கள். செயல்படுகிறீர்கள். ஆனால் எந்தவொரு கர்மத்தையும் சேகரித்துக் கொள்வதில்லை.

இரண்டாவது சூத்திரம்:

*'சம நிலையை நட்பு அல்லது வேறெந்த அடிப்படைப் பண்பின் பேரில் செயற்படுத்தினாலும் அந்தப் பண்பில் மிகப்பெரிய வலிமை தோன்றும்.'*

முதலில் ஒருவர் விழிப்புணர்வு கொள்ள வேண்டும். இரண்டாம் நடவடிக்கை தம்முடைய சமநிலையை நட்புணர்வு, அன்பு, இரக்கம் இவற்றின் பேரில் செயற்படுத்துவது.

ஒரு கதை சொல்கிறேன்.

அது நடந்ததுதான். தாமினோ ஒரு பெரிய புத்தத் துறவி. தம்முடைய உழைப்பாலும், முயற்சியாலும் *'சடோரி' நிலையை அவர் அடைந்திருந்தார். அவர் எதுபற்றிய உணர்வோடும் இருந்திருக்க வில்லை.

நீங்கள் உண்மையிலேயே உணர்வுடன் இருக்கிறபோது எதையும் உணர்ந்திருக்க மாட்டீர்கள். விழிப்புணர்வு பற்றிய உணர்வு மட்டுமே உங்களிடம் இருக்கும். அப்படிச் சொல்வதுகூட சரியல்ல. காரணம், அப்போது விழிப்புணர்வும் ஒரு பொருள் போலாகி விடும். இல்லை, எதையும் நீங்கள் உணர்ந்திருக்கவில்லை – 'இன்மை'யை மட்டுமே உணர்ந்திருக்கிறீர்கள்.

'...அவர் எதையும் உணர்ந்திருக்கவில்லை. அவருடைய ஆன்மா இன்மையை ஏதுமற்ற தன்மை (nothing)யைக் கொண்டிருந்தது. இந்த நிலை அமைதிக்கும் அப்பாற்பட்டது. அத்துடன் அவர் அதில் மகிழ்ச்சியோடு இருந்திருப்பார் எப்போதைக்குமாய்.

இதனை நினைவில் கொள்ளுங்கள்: சமநிலையை அடைகிற ஒருவர் எப்போதும் அதிலேயே இருந்து கொண்டிருக்க விரும்புவார், அதைவிட்டு வெளியேற யாரும் விரும்புவதில்லை – ஆனால், இதுவே

---

* *சடோரி (Satori): திடீர் என ஏற்படும் ஞான உதயம்.*

பயணத்தின் முடிவாகி விடாது. இது பயணத்தில் அரைவாசி மட்டுமே ஆகும். உங்கள் சமாதி நிலை அன்பாக உருவெடுக்கவில்லையெனில், உங்களுக்குள் கண்டுகொண்ட ஒன்றை இந்த மகத்தான உலகத்துக்கு வழங்காவிடில், உங்களுடைய சமாதி அனுபவத்தை மற்றவர்களுடன் நீங்கள் பகிர்ந்து கொள்ளாவிடில் உங்களை ஒரு கருமியென்று நீங்கள் நிரூபித்துக் கொண்டவராவீர்கள். சமாதி குறிக்கோளல்ல, அன்பே குறிக்கோள். ஆக, அது உங்களுக்கு எப்போது நேரிடட்டாலும் நீங்கள் அதில் இருந்து வெளியேற விரும்ப மாட்டீர்கள். அது ரொம்ப அருமையாகவும், பேரின்பமளிப்பதாகவும் இருக்கும்.

...இந்த நிலை அமைதிக்கும் அப்பாற்பட்டதாய் இருந்தது. அத்துடன் அவர் அதில் மகிழ்ச்சியோடு இருந்திருப்பார் எப்போதைக்குமாய். ஆனால் அது நேரிட்டபோது அவர் தமது மடாலயத்துக்கு அருகில் இருந்த வனத்தில் தியானம் செய்யச் சென்றிருந்தார். அவர் தன்னை மறந்து தியானத்தில் இருந்தபோது, அந்தப் பக்கமாய் ஒரு பயணி வந்தான். கொள்ளைக்காரர்கள் அவனைத் தாக்கிப் படுகாயப்படுத்தியதுடன் அவனுடைய பொருள்களைப் பறித்துச் சென்றார்கள். அந்தப் பயணி தாமினோவிடம் அபயக்குரல் கொடுத்தான். ஆனால் தாமினோவோ எதையும் காணாமலும், கேளாமலும் உணர்வற்றவராயிருந்தார்.

தாமினோ அங்கே இருந்தபடி இருந்தார். அந்த மனிதன் உதவி கேட்டபடி செத்துக் கொண்டிருந்தான். ஆனால், அவரோ எதுவும் தம்மை எட்ட முடியாத தம்முடைய அடியாழத்தில் இருந்தார். அவருடைய காதுகளில் எதுவும் எட்டவில்லை. அவருடைய கண்கள் எதையும் காணவில்லை. தம்முடைய இருப்புணர்வின் அதல பாதாளத்துக்கு அவர் சென்று விட்டிருந்தார். சரீரத்தில் சுவாசம் மட்டுமே இழையோடிக் கொண்டிருந்தது, ஆனால் பரப்பின் வெளி எல்லை (periphery)யில் அவர் இல்லை.

அந்த மனிதன் இரத்தம் பெருக்கெடுத்தோட மண்ணில் கிடந்தான், தாமினோ அப்போதுதான் தன்னுணர்வுக்குத் திரும்பினார். தாமினோ எதுவும் விளங்காமல் திகைத்தார், தாம் எதைக் கண்டோம், என்ன செய்ய வேண்டும் என்றே அவருக்குப் புரியவில்லை.

நீங்கள் புற எல்லையைப் பற்றிக்கொள்ள கொஞ்சம் அவகாசம் பிடிக்கும். அந்த மையம் முற்றிலும் மாறுபட்டது. நீங்கள் சற்றும் அறிந்திராத ஓர் எல்லைக்குள் செல்கிறீர்கள். நீங்கள் திரும்பி வருகிறபோது புற எல்லையுடன் பொருந்திக் கொள்வது அத்தனை

எளிதாயிருக்காது. அது சந்திரனுக்குச் சென்ற மனிதர்களின் நிலையைப் போன்றதுதான்.

அவர்கள் பூமிக்குத் திரும்பியதும் அவர்களுக்கென்று பிரத்தியேகமாய் உருவாக்கப்பட்ட வீட்டிலதான் மூன்று வாரங்களுக்குத் தங்கியிருக்க வேண்டும். அதன்பிறகே அவர்கள் வேறிடங்களுக்குச் செல்ல இயலும். (பழைய சூழலில் தங்களைப் பொருத்திக் கொள்ள அந்த அவகாசம் தேவைப்படும். அந்த அவகாசத்தில் அவர்கள் தங்களைத் தயார்படுத்திக் கொள்வார்கள்.) அப்படியில்லாமல், நிலவில் இருந்து திரும்பியதும், உடனே தங்கள் சொந்த வீட்டுக்குச் சென்றால் அவர்களுக்குப் பைத்தியந்தான் பிடிக்கும். காரணம் சந்திர மண்டலம் மாறுபட்டது. அங்கே ஈர்ப்பு விசை (gravity) குறைவு, பூமியின் ஈர்ப்பு விசையைவிட எட்டில் ஒரு பங்குதான் இருக்கும். ஒருவர் அறுபது, எழுபது அடி உயரத்தில் இருந்து தாவிக் குதித்து விடலாம். ஈர்ப்பு விசையே இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். ஒருவர் திகைத்துப் போகுமளவிற்கு நிலவு அத்தனை வெறுமையாயிருக்கும். அது இலட்சோபலட்சம் ஆண்டுகளாய் தொடர்ச்சியாய் நிசப்தத்தில் இருப்பது - கனத்த அமைதி - நிலவில் இருந்து ஒருவர் திரும்பி வருவதென்பது இறந்தவர் மீண்டும் பூமியில் வந்து பிறக்கிற மாதிரிதான்.

நிலவில் காலடி பதித்த முதல் மனிதர் ஆத்திரகரல்லர், ஆனாலும் அவர் உடனே மண்டியிட்டு பிரார்த்திக்கத் தொடங்கினார். நிலவில் செய்யப்பட்ட முதல் காரியம் பிரார்த்தனை. அங்கிருந்த அமைதி அத்தகையது. அது ரொம்ப ஆழமானது. அவர் தனிமையில், துணையாற்றிருந்தார், எதிர்பாராத விதமாய் கடவுளின் ஞாபகம் வந்துவிட்டது அவருக்கு. அந்தத் தனியான இடத்தில், ஏகாந்தத்தில், தாம் கடவுள் நம்பிக்கையற்றவர் என்பதைக்கூட அவர் மறுத்து விட்டார். தாம் நம்பிக்கைகளில் ஐயம் கொள்கிறவர் என்பதே அவருக்கு மறந்து போயிற்று. அவர் உடனே மண்டியிட்டு பிரார்த்திக்கத் தொடங்கினார்.

நிலவில் இருந்து பூமிக்குத் திரும்புகிறவர், பூமியின் தட்பவெப்ப நிலைக்குத் தக்கவாறு மீண்டும் தம்மைப் பழக்கிக்கொள்ள வேண்டியிருக்கும். ஆனால் உங்கள் இருப்புணர்வு மையத்துக்குச் சென்று திரும்புவதுடன் ஒப்பிடும்போது அது ஒன்றுமே இல்லைதான்.

...தாமினோ ஒன்றும் விளங்காமல் திகைத்துப் போனார். தாம் காண்பது என்ன, செய்ய வேண்டியது என்ன என்று புரியவில்லை

அவருக்கு. ஆனால், தற்போது சரீரத்தில் உயிரோட்டம் ஏற்பட்டதும் அவர் அந்த மனிதனிடம் சென்று, அவனுடைய காயங்களுக்குக் கட்டு போட்டார். ஆனால், இரத்தசேதம் அதிகமாயிருந்தது. அவன் தாமினோவைப் பார்த்தபடியே செத்துப் போனான். அந்தக் கண்களை தாமினோவால் மறக்க முடியவில்லை. அந்தக் கண்கள் அவருடைய மனதைவிட்டு அகலாது அவரை அவதிப்படுத்தின. அவர் ரொம்பவே அமைதிக்குலைவுக்குள்ளானார் – 'சடோரி' முழுதும் தொலைந்து போயிற்று – அவர் மையத்தைப் பற்றிய அனைத்தையும் மறைந்து போனார். அவர் குழப்பத்துக்குள்ளானார்.

அவன் சாவதற்குமுன், அவனுடைய கண்களில் தாம் ஒருசமயம் பார்த்திருந்த போர்க்களக் காட்சியைக் கண்டார் அவர். வெகுவாய் வருந்தி உழைத்துப் பெற்ற அவருடைய மொத்த அமைதியும் அவரைவிட்டு ஓடிப்போனது. அவர் திரும்பவும் மடாலயத்துக்குச் சென்று, மேல்தளத்தில் இருந்த புத்தர் சிலைகளின் பக்கமாய் அமர்ந்தார். அந்திச் சூரியனின் செம்மையில் அந்தச் சிலைகள் உயிர் பெற்று விடும் போல் தோன்றியது.

தாமினோ அந்த முகத்தில் இருந்த கண்களைப் பார்த்தபடி சொன்னார். 'புத்த பகவானே, தங்களுடைய அறிவுரைகள் சரியானவையா?' என்று.

அந்தச் சிலை பதிலளித்தது. 'சரியானதும் உண்டு, தவறானதும் உண்டு.'

'அதில் சரியானது எது?' தாமினோ கேட்டார்.

'இரக்கமும் அன்பும்.'

'அதில் தவறானது எது?'

'வாழ்வில் இருந்து தப்பியோடுதல்.'

'நான் திரும்பவும் சென்று வாழட்டுமா?' ஆனால், அந்த முகத்தில் விழுந்த ஒளி மறைந்து அது மறுபடியும் கல் முகமானது.

அருமையான கதை. ஆம், தாமினோ மீண்டும் வாழலானார். சமாதி நிலைக்குச் சென்ற ஒருவர் அன்புக்குத் திரும்ப வேண்டும். பதஞ்சலியின், 'சமாதிக்குச் சென்றபிறகு...' சூத்திரமும் இது பற்றியதுதான். 'சமநிலையை நட்பு அல்லது வேறு எந்த அடிப்படைப் பண்பின் பேரில் செயற்படுத்தினாலும் அந்தப் பண்பில் – இரக்கம், அன்பு – மிகப்பெரிய வலிமை தோன்றும்.'

சமகாலத்திய உளவியல் நிபுணர்களும் ஒரு குறிப்பிட்ட அளவு வரை அதை ஏற்றுக் கொள்வார்கள். நீங்கள் ஏதேனும் ஒன்றை இடைவிடாமல் எண்ணியபடி இருந்தால் அது உருப்பெறத் தொடங்கிவிடும். நீங்கள் 'எமிலி கூ' என்கிற பெயரைக் கேள்விப்பட்டிருப்பீர்கள். அந்தப் பெயரைக் கேள்விப்படாவிட்டாலும் அவருடைய கொள்கைக்குரலை (slogan)யேனும் கேட்டிருப்பீர்கள்.

'நான் ஒவ்வொரு நாளும் எல்லா வகையிலும் மேலும் மேலும் சிறப்படைகிறேன்.' அவர் நோய்வாய்ப்பட்ட ஆயிரக்கணக்கானவர்களுக்கு சிகிச்சையளித்திருக்கிறார். இடர்ப்பாட்டில் இருந்தவர்களுக்குப் பெருமளவில் உதவியிருக்கிறார். அவருடைய மருந்து இதுதான்: 'மீண்டும் மீண்டும் சொல்லுங்கள், நான் ஒவ்வொரு நாளும் எலலா வகையிலும் மேலும் மேலும் சிறப்படைகிறேன். இந்த எண்ணம் உங்களைச் சூழ்ந்து கொள்ளும்படியாய் திரும்பத் திரும்ப இதனைச் சொல்லுங்கள், உணர்ந்து சொல்லுங்கள்'. 'நான் சிறப்படைகிறேன், ஆரோக்கியமாயும் மகிழ்ச்சியாயும் இருக்கிறேன்.' ஆயிரக்கணக்கானவர்கள் அவருடைய உதவியைப் பெற்று நோயில் இருந்து விடுபட்டிருக்கிறார்கள். தங்களுடைய மன உபாதைகளில் இருந்து வெளிவந்திருக்கிறார்கள். தங்கள் இடர்ப்பாடுகளில் இருந்தும், வருத்தங்களில் இருந்தும் அவர்களால் வெளிவர முடிந்தது. அவர்கள் மறுபடியும் ஊக்க வளர்சசி பெற்றார்கள், சுறுசுறுப்பானார்கள். ஒரு சிறிய மந்திரம் அவ்வளவே - வேறெதுவும் இல்லை.

உங்களுடைய உலகத்தை நீங்கள் தோற்றுவித்துக் கொண்டீர்கள். நீங்கள் வாழ்வதற்கான உடம்பை, மனத்தை தோற்றுவித்துக் கொண்டீர்கள். உங்கள் எண்ணங்களைக் கொண்டீர்கள். உங்கள் எண்ணங்களைக் கொண்டு உருவாக்கினீர்கள். சற்று முன் பின்னாகவேனும் உங்கள் எண்ணம் மெய்யாகி விடுகிறது. ஒவ்வோர் எண்ணமும் பொருளாகி விடுகிறது படிப்படியாக, முடிவில்.

ஒரு சாதாரண மனம் இப்படித்தான் இருக்கும். அது ஒவ்வொரு கணமும் தன்னுடைய நோக்கத்தை மாற்றிக்கொண்டே போகும். தொடர்ந்து இங்குமங்கும் தாவியபடி இருக்கும். சமநிலை பற்றி என்ன சொல்வது? நட்பு என்கிற எண்ணம் எழுகிறது. ஒருவர் அதனுடன் ஒத்துணர்வு கொண்டவராகிறார், அதுவாகவே ஆகிவிடுகிறது.

புத்தர் சொன்னார், 'அடுத்தமுறை இந்த உலகத்துக்கு நான் வரும்போது என்னுடைய பெயர் மைத்ரேயன் என்பதாயிருக்கும்' என்று. அவர் வருகிறாரா இல்லையா என்பதல்ல முக்கியம். அது

குறியீடான ஒன்று. புத்தாவாகிவிட்ட பிறகு ஒருவன் நண்பனாகி விடவும் வேண்டும்' என்றார் அவர்.

சமாதி நிலையை அடைந்த ஒருவர் பிறகு இரக்கத்தை அடைய வேண்டும். உங்களுடைய சமாதி நிலை உண்மையோ இல்லையோ இரக்கம் என்பது அடிப்படைத் தத்துவம்.

ஞாபகமிருக்கட்டும், கருமியாகி விடாதீர்கள், ஏனெனில் பழக்கம் தொடர்வது. புற உலகில் நீங்கள் கருமியாய் இருந்துகொண்டு பணத்தை, பொருள்களை, கண்டதையெல்லாம் பற்றிக் கொள்கிறார்கள். சமாதி நிலை கூடும்போது சமாதி நிலையை பற்றிக் கொள்வீர்கள். இந்தப் பற்றிக்கொள்கிற வேலை தொடரும் - இந்தப் பற்றிக்கொள்ளல் விடப்பட வேண்டியது. பதஞ்சலி கூறுகிறார் நட்புணர்வை உள்ளே கொண்டு வாருங்கள், பகிர்தலைப் பற்றிச் சிந்தியுங்கள் என்று.

'பாலஸ்தீனத்தில் இரண்டு கடல்கள். ஒன்று பளிச்சென்று சுத்தமான நீரைக் கொண்டது. அதைச்சுற்றி பூமரங்கள் வளர்ந்திருந்தன. அதில் மீன்கள் இருந்தன. அதன் கரைகள் பசுமையாயிருந்தது. ஹெர்மான் மலைக்குன்றுகளில் இருந்து இறங்கி வரும் தூய்மையான சிற்றாறுகள் ஜோர்டானிய ஆறு மூலம் இந்தக் கடலில் கலந்தன. அதன் புனித நீர் குணமளிக்கும் தன்மை கொண்டதாகும்...'

இயேசுவானவர் இந்த ஆற்றை விரும்பினார். இயேசுபிரான் இந்தக் கடலை நேசித்தார். இந்த இடத்தில்தான் பல அற்புதங்கள் நிகழ்ந்தன.

...குருபிரான் இந்தக் கடலை நேசித்தார். இதன் அருகேதான் அவருடைய பணியின் மகிழ்ச்சிகரமான தருணங்கள் பலவும் கழிந்தன. இன்றளவும் அந்த இடம் அமைதியும் ஆற்றலும் நிரம்பியதாயிருக்கிறது.

அதே ஜோர்டான் ஆறு தெற்கில் வேறொரு கடலை நோக்கிப் பாய்கிறது. இங்கே உயிரோட்டமில்லை, பறவைகளின் கீதமில்லை, குழந்தைகளின் சிரிப்பில்லை. காற்று தீய இயல்புடையதாய் இருக்கிறது. அதன் அடக்குமுறை தெரிகிறது நீரின்மீது. மனிதனோ, விலங்கோ, பறவையோ அந்த நீரைக் குடிப்பதற்கில்லை. இந்தக் கடல் உயிரோட்டமில்லாதது.

பாலஸ்தீனத்தில் உள்ள இவ்விரு கடல்களுக்கிடையே மிகப்பெரிய வேறுபாடு இருக்கிறது. ஒன்று உயிர்த்துடிப்போடும் மற்றொன்று உணர்ச்சியற்றதாயும் இருப்பதுதான் அது.

இதுதான் வேறுபாடு. கலிலீ கடல் ஜோர்டான் ஆற்றில் இருந்து பெறுவதையெல்லாம் அப்படியே வைத்துக் கொள்வதில்லை. தன்னுள் வருகிற ஒவ்வொரு துளியையும் அது வெளியேற்றியபடி இருக்கும். அது எந்த அளவு மகிழ்ச்சியோடு இழக்கிறதோ அந்த அளவுக்கு அது திரும்பவும் பெறுகிறது. இதுவே கலிலீ கடலின் வாழ்க்கை முறை.

மற்றொரு கடலோ தன்னை வந்தடைகிற ஒவ்வொரு துளியையும் சேமித்து வைத்துக் கொள்கிறது. பிரதியாய் எதையும் கொடுப்பதில்லை. கலிலீ கடலோ கொடுக்கிறது. வாழ்கிறது. மற்றொரு கடலோ கொடுப்பதுமில்லை, வாழ்வதுமில்லை. அதனால்தான் அது உயிரற்ற கடல் எனப்படுகிறது.

மனித வாழ்க்கையும் அப்படிப்பட்டது என்பதே உண்மை. நீங்கள் உயிரோட்டமுள்ள கலிலீ கடலாக முடியும் அல்லது உயிரற்ற கடலாகவும் முடியும். நீங்கள் கலிலீ கடலாகி விட்டால் இயேசுவின் உணர்வை உங்கள் பக்கம் ஈர்த்துக் கொள்வீர்கள். அந்த நாயகர் உங்களைச் சுற்றி உலவியிருப்பார். மறுபடியும் உங்கள் அருகாமையில் தமது சீடர்களோடு காணப்படுவார். நீங்கள் முற்றிலும் வேறானதொரு உலகில் மீண்டும் இருப்பீர்கள். கடவுள் தன்மையை நீங்கள் ஸ்பரிசிப்பீர்கள். அல்லது, அந்த உயிரற்ற உணர்வற்ற கடலாவீர்கள். பெற்றுக்கொண்டே இருப்பீர்கள், கொடுக்க மாட்டீர்கள். சேமித்துக் கொண்டேயிருப்பீர்கள், பிரதியாக எதையுமே தரமாட்டீர்கள். அது எப்படி உயிரற்றதாகிறது? கருமியாயிருப்பவன் உயிரற்றவன்தான். அவன் தினமும் செத்துக்கொண்டே இருப்பான். பகிர்ந்து கொள்ளுங்கள், உங்களிடம் இருப்பது எதுவாயினும் பகிர்ந்து கொள்ளுங்கள். பகிர்ந்து கொள்பவர்கள் மேலும் பெறுவார்கள். அதுவே நட்பின் பொருளாகும்.

நீங்கள் இரக்கத்துக்கும் அன்புக்கும் நட்புக்கும் சமநிலையைக் கொண்டு செல்லுங்கள். அவை வளரட்டும் என்கிறார் பதஞ்சலி. நீங்கள் நட்பார்ந்தவராக மாறிவிடுவீர்கள் என்பதல்ல, நண்பராகவே மாறிவிடுவீர்கள். நீங்கள் நட்பார்ந்தவராக மாறிவிடுவீர்கள் என்பதல்ல, நட்பாகவே ஆகிவிடுவீர்கள். நீங்கள் அன்பு செய்வீர்கள் என்பதல்ல, அன்பின் தன்மையாக அன்பாகவே மாறிவிடுவீர்கள்.

மூன்றாவது சூத்திரம்:

***'ஒரு யானையின் பலத்தின்பேரில் சமநிலையைச் செயற்படுத்த யானை பலம் கிடைத்து விடும்.'***

நீங்கள் விரும்புவது எதுவாயினும் அதில் சமநிலையைக் கொடுப்பதன் மூலம் அதை நடக்கும்படி செய்யலாம் - காரணம் நீங்கள் அளவிற்குட்படாத வகையில் உயர்ந்தவர். நீங்கள் எடுக்க விரும்புகிற வடிவம் எதுவாயினும், சமநிலையை அடைந்த பின் உங்களால் எடுக்க முடியும். எல்லா அற்புதங்களும் சாத்தியந்தான், அது உங்களைப் பொறுத்தது. ஒரு யானையைப் போல் மிகுதியான ஆற்றலை நீங்கள் பெற விரும்பினால் உங்களால் அதைப் பெற முடியும். ஓர் எண்ணத்தை விதையைப்போல் உங்களுக்குள் வைத்திருங்கள். அதைச் சம புத்தியுடன் வைத்திருப்பதன் மூலம் நீங்கள் அதுவாகவே மாறி விடுவீர்கள்.

இந்தச் சூத்திரத்தின் காரணமாக பலரும் தவறான செய்கைகள் பலவற்றைச் செய்திருக்கிறார்கள். இது ஒரு முக்கிய சாதனம். ஆனால் நீங்கள் மோசமான ஒன்றாக விரும்பினால் அப்படியே ஆகிவிட முடியும். அறிவியலைத் தவறாகப் பயன்படுத்த முடிவது போலவே நீங்கள் யோகாவையும் தவறாகப் பயன்படுத்த முடியும். விஞ்ஞானம் அணுசக்தியை விடுவித்தது. தற்போது நீங்கள் அதைப் பயன்படுத்தி நகரங்களை அழிக்க முடிகிறது, மக்களைக் கொல்ல முடிகிறது. உங்களால் மேலும் பல ஹிரோஷிமாக்களையும், நாகசாகிகளையும் உண்டுபண்ண முடியும். ஒட்டுமொத்த உலகையும் ஓர் உயிரற்ற சுடுகாடாய், கல்லறையாய் நீங்கள் செய்துவிட முடியும்.

அதே அணு சக்தியை ஆக்கபூர்வமாகவும் பயன்படுத்த முடியும். உலகின் அத்தனை வறுமைகளையும் சில நிமிடங்களிலேயே தொலைத்துக் கட்டிவிட முடியும். வளர்ச்சிக்குத் தேவைப்படுகிற அனைத்தையும் நீங்கள் தோற்றுவித்துக் கொள்ளலாம், சிலர் மட்டுமே அனுபவித்துக் கொண்டிருக்கிற வசதிகளை - சொகுசுகளை எல்லாருக்கும் அவர்களுடைய இயல்பான வாழ்க்கையின் ஒரு பகுதியாய் கிடைக்கச் செய்ய முடியும். பாதையை யாரும் தடுத்துக் கொண்டிருக்கவில்லை. ஆனால், ஏதோ ஒருவகையில் மனிதனிடம் ஆக்கபூர்வமாய் பார்க்கும் திறன் இல்லாது போயிற்று.

யோகாவும் அதே முறையில்தான் தவறாகப் பயன்படுத்தப்பட்டு வந்திருக்கிறது.

அறிவால் கொணரப்படும் ஆற்றலை நேர்மறையாகவோ அல்லது எதிர்மறையாகவோ பயன்படுத்த முடியும்.

நான் கேள்விப்பட்ட ஒரு குட்டிக்கதை:

குடிகாரன் ஒருவன் பணக்கார லேவாதேவிக்காரரிடம் சென்று ஒரு காபி பருகுவதற்காக ஆறு பென்ஸ்கள் வேண்டும் என்று கேட்டான். ரொம்பவும் தயாள குணம் படைத்த அந்த லேவாதேவிக்காரர் பத்து ஷில்லிங் நோட்டு ஒன்றை அவனிடம் கொடுத்தார்.

'இதோ பார், இந்தப் பணத்தை வைத்துக்கொண்டு இருபது கோப்பை காபியை நீ வாங்கிக் கொள்ள முடியும்' என்றார் அவர்.

மறுநாள் மாலை அந்தத் தராதரமற்ற குடிகாரனை அவர் மறுபடியும் பார்க்க நேரிட்டது.

'இன்னைக்கு எப்படி இருக்கே?' என்று அவனிடம் உற்சாகமாய் கேட்டார்.

அந்தத் தத்தாரி அவரை வியப்புடன் நோக்கினான். 'நீர் இன்னும் போய்த் தொலையவில்லையா? நீரும் உம்முடைய இருபது கோப்பை காபியும் நாசமாய் போக. அவை என்னை ராத்திரி முழுக்கத் தூங்கவிடவில்லை' என்று கடுகடுப்பாய் சொன்னான் அவன்.

ஒரு வாழ்த்து நிந்தனையாகி விடக்கூடிய அபாயம் இருக்கிறது. பதஞ்சலி சொல்வது தீங்கற்ற ஜாலவித்தை. அது மந்திரம் போன்ற சூத்திரம். நீங்கள் அதை மோசமான சூன்ய வித்தையாக்கி விடவும் முடியும். அப்போது நீங்கள் மற்றவர்களுக்கு மட்டுமல்ல, உங்களுக்கும் கேடு சூழ்பவராகி விடுவீர்கள். இதனை ஞாபகத்தில் வையுங்கள். அவர் முதலில் நட்பார்ந்தவராய் இருக்க வேண்டும் என்றதும் பிறகு ஆற்றலைப் பற்றிப் பேசியதும் அதற்காகத்தான்.

பதஞ்சலி போன்றவர்கள் ரொம்பவும எச்சரிக்கையானவர்கள். அவர்கள் எச்சரிக்கையாயிருப்பது உங்களுக்காகத்தான். தங்களுடைய ஒவ்வோர் அடியையும் அவர்கள் கவனமுடன் எடுத்து வைக்கிறார்கள். சமநிலை அடைவதுபற்றி அவர் முதலில் சொல்கிறார். உடனடியாய் இரக்கம், நட்பார்ந்தவராயிருத்தல் பற்றிப் பேசுகிறார். காரணம் உங்களிடம் இரக்கம் இருந்து விட்டால் ஆற்றலைத் தவறாகப் பயன்படுத்த மாட்டீர்கள்.

'உடல் திறனுக்கு அப்பாற்பட்ட பாதையை நெறிப்படுத்துவதன் மூலம் சூட்சுமமாய் மறைவில் தொலைவில் இருக்கும் ஓர் அறிவு அடையப்படுகிறது.'

எப்படி இருப்பது கூடாது என்பதை நீங்கள் அறிந்தவுடன் அந்த சூட்சுமமாய் மறைந்து தொலைவில் இருக்கும் ஒன்றின் ஒவ்வொரு பரிமாணமும் கிடைக்கக் கூடியதாகி விடும்.

எவ்வித அகந்தையும் இல்லாமல் எப்படி இருப்பது என்பதை நீங்கள் அறிந்து கொண்டதும், தூய உணர்வாய் இருப்பது எப்படி என்பதை நீங்கள் தெரிந்து கொண்டதும், எவ்விதப் பொருளும் நோக்கமும் இல்லாமல் எல்லாமும் சாத்தியமாகி விடும். உங்களால் எல்லாவற்றையும் அறிந்து கொள்ள முடியும். ஒன்றை அறிந்து கொள்வதன் மூலம் எல்லாமும் அறியப்பட்டதாகும்.

'சமநிலையில் சூரியனின் பேரில் செயற்படுத்துவதன் மூலம் சூரிய மண்டலம் பற்றிய அறிவு அடையப்படுகிறது.'

இந்த சூத்திரம் கொஞ்சம் சிக்கலாய் தெரியும். தன்னளவில் அல்ல, உரையாசிரியர்களால்தான். பதஞ்சலி சூரியனைப் பற்றிப் பேசுவதாகத்தான் எல்லா உரையாசிரியர்களும் இந்தச் சூத்திரத்தைப் பற்றி விளக்கும் போது தெரிவிக்கிறார்கள். அவர் சூரியனைப் பற்றிச் சொல்லவில்லை, அவரால் அதைப்பற்றிச் சொல்ல முடியாது. அவரொன்றும் கோள்களின் நிலையைக் கணிக்கும் சோதிடரல்லர். அத்துடன் சோதிடவியலில் அவருக்கு ஆர்வம் இருந்திருக்கவு மில்லை. அவருக்கு மனிதனில் அக்கறை உண்டு. மனிதனின் உணர்வு நிலையைப் படம் பிடித்துக் காட்டுவதில் அக்கறை கொண்டவர் அவர். சூரியனைப் பற்றியது புறத்தேயானது அல்ல.

யோகாவின் சொற்பாங்கில் மனிதன் ஒரு 'மினி சைஸ்' பிரபஞ்சம். மனிதன் ஒரு நுட்ப வழியில் ஆராயப்படுகிறபோது சிறிய அளவிலான பிரபஞ்சந்தான். அவனுடைய இருத்தலும் (existence) மிகக்குறுகியதே. பிரபஞ்ச இருப்பு - முழுமையான பிரபஞ்ச இருப்பு என்பது மனிதனின் விசுவரூபமன்றி வேறேயென்ன. சிற்றண்டம், பேரண்டம் என்று வருவது யோகாவிற்குரிய சொற்பாங்கு. வெளியே உள்ளதுதான் மனிதனுக்கு உள்ளேயும் இருக்கிறது.

சூரியனைப் போலவே ஒரு சூரியனைத் தனக்குள் பெற்றிருக் கிறான் மனிதன். சந்திரனைப் போலவே ஒரு சந்திரன் இருக்கிறது அவனுக்குள். அகவுலகின் முழு அமைப்பியலையும் உங்களுக்கு வழங்குவதில் ஆர்வம் காட்டுகிறார் பதஞ்சலி, உள்ளிருக்கும் மனிதனைப் பற்றிச் சொல்வதிலும் விருப்பம். எனவேதான் அவர் 'புவன ஞானம் சூரிய சம்யமாத்' என்று சொல்கிறபோது - சூரியனின்பேரில் சமநிலையை செயற்படுத்துவதன் மூலம் சூரிய

மண்டலம் பற்றிய அறிவு அடையப்படுகிறது' என்கிறபோது வெளியே இருக்கும் சூரியனை மட்டும் அவர் குறிக்கவில்லை. உள்ளிருக்கும் சூரியனையுந்தான் கருத்தில் கொள்கிறார்.

உங்களுக்குள் சூரியன் எங்கே இருக்கிறது? உங்களுடைய சூரிய மண்டலத்துக்கான மையம் எங்கே இருக்கிறது? உங்கள் இனப்பெருக்க அமைவின் (reproductive system) அடியாழத்தில் இருக்கிறது. அதனால்தான் உடலுறவில் வெப்பம் இருக்கிறது. அது ஒருவகை வெப்பம். விலங்குகளுக்குப் பயன்படுத்தும் சொற்றொடரையே இதிலும் பயன்படுத்துகிறோம். ஒரு பெண் கருவுறத் தயாராகிற போதெல்லாம் அவள் 'ஹீட்' (heat)டில் இருப்பதாக நாம் சொல்கிறோம். அந்தச் சொல் சரிநுட்பமானது. பால் சார்ந்த மையமே சூரியன், சூரியனே பால் சார்ந்த மையம். அதனால்தான் பாலுறவின்போது நீங்கள் கதகதப்பாகவும், காய்ச்சல் வந்தது போலவும் உணர்கிறீர்கள். நீங்கள் பால்சார்ந்த செய்கையை மேற்கொள்கிறபோது ரொம்பவும் சூடாகி விடுகிறீர்கள். அச்சக் கிளர்ச்சியூட்டும் ஒரு சிகரத்தைத் தொட்ட மாதிரி இருக்கும் உங்களுக்கு. வியர்த்து வழிகிறது. உங்கள் சுவாசம் ஒரே சீரில் இருப்பதில்லை. அதன்பிறகு முற்றிலும் பலம் குன்றிய நிலைக்குத் தள்ளப்படுகிறீர்கள், முழுமையான சோர்வு உங்களை ஆட்கொண்டு விடுகிறது. நீங்கள் உறக்கத்தில் ஆழ்கிறீர்கள்.

உடலுறவு முடிந்ததும் உடனே சந்திரன் செயல்படத் தொடங்கும். சூரியன் அஸ்தமிக்கவும் சந்திரன் உதயமாகிறது. அதனால்தான் உடலுறவிற்குப் பிறகு நீங்கள் உறக்கத்திலாழ்வது. சூரியனின் இயக்கம் முடிந்து, சந்திரனின் இயக்கம் தொடங்குகிறது.

சூரியனே பால மையம். சமநிலையைச் செயற்படுத்துவதன் மூலம் உள்ளிருக்கும் சூரிய மண்டலம் முழுதையும் நீங்கள் அறிந்து கொள்ள இயன்றவராவீர்கள். பால்சார்ந்த மையத்தில் சமநிலையைச் செயற்படுத்துவதன் மூலம் அதற்கும் அப்பால் செல்கிற திறமை உங்களுக்கு வந்துவிடுகிறது. அதனுடைய இரகசியங்களனைத்தையும் நீங்கள் அறிந்து கொண்டு விடுகிறீர்கள். ஆனால் புறத்தே உள்ள சூரியனைப் பொறுத்தவரை அது ஏதும் செய்வதற்கில்லை.

ஆனால், அகத்தே உள்ள சூரியனை நீங்கள் அறிந்து கொண்டு விட்டால் அதன் பிரதிபலிப்பாய் (ஆழ்ந்த சிந்தனை மூலம்) புறத்தே உள்ள சூரியனைப் பற்றியும் தெரிந்து கொள்ள முடியும். இந்தச் சூரியனே சூரிய மண்டலத்தின் பால மையம் (sex center). அதனால்தான் உயிரோடிருக்கிற எல்லாவற்றுக்கும் சூரிய ஒளி

தேவைப்படுகிறது. மரங்கள் நெடுநெடுவென உயரமாய் வளர்கின்றன. வேறெங்கிலும் காணப்படுவதைவிட ஆப்பிரிக்காவில் அவை ஓங்கி வளர்வதற்குக் காரணம் காடுகள் அடர்த்தியானவை, போட்டி போட்டு வளர வேண்டியிருக்கும். உயர்ந்தோங்கி வளர இயலாத மரம் உயிரோடு வாழ இயலாது. உயரவில்லையென்றால் சூரியனைத் தொட முடியாது. உயிர் வாழ்வதற்கான ஆற்றலைச் சூரியன் உங்கள்மீது வர்ஷிக்க இயலாமல் போய்விடும்.

சூரியனே உயிர் வாழ்தலுக்கு ஆதாரம், பாலுறவே உயிர்த் தன்மையை வழங்குகிறது. வாழ்க்கை சூரிய ஒளியையும், பாலுறவையும் கொண்டு மேலெழுகிறது.

மரங்கள் ஓங்கி வளர முயல்கின்றன. அப்போதுதான் அவை சூரியனுக்கு எட்டக்கூடியதாயும், சூரியன் அவற்றுக்கு எட்டக் கூடியதாயும் இருக்கும். நன்றாகக் கவனியுங்கள். அதே மரங்கள்தாம் இந்தப் பக்கத்திலும் இருக்கின்றன. இங்கிருக்கும் இந்த பைன் வகை (pine-type) மரங்கள் மிகச்சிறியவை. அந்தப் பக்கத்தில் அவை தமமுடைய இயற்கையை மீறி வளர்ந்திருக்கின்றன. காரணம் அந்தப் பக்கத்தில் சூரிய ஒளி அதிகம் கிடைக்கிறது. இந்தப் பக்கமோ அது அதிக அளவில் கிடைப்பதில்லை.

பாலுறவு என்பது உள்ளிருக்கும் சூரியன். சூரிய மண்டலத்தில் சூரியனே பாலுறுப்பாய் இருக்கிறது. உங்கள் சிந்தனையின் மூலம் புறத்தேயுள்ள சூரிய மண்டலத்தைப் பற்றியும் நீங்கள் அறிய இயலும். ஆனால் உள்ளிருக்கும் சூரியனை அறிந்து கொள்வதே முக்கியம். எனவேதான், பதஞ்சலி அகவெளியை வரைபடமாக்குகிறார் என்று நான் அழுத்தமாய் கூறுவது. அத்துடன் அது சூரியனில் இருந்தே தொடங்கப்பட்டிருக்கும் என்பதும் உண்மை. காரணம் சூரியன் மையமாய் இருப்பது. அது இலக்கல்ல, மையம். அது மையமேயன்றி இறுதியானதாகாது. ஒருவர் அதற்கு மேலும் எழ வேண்டியவராகிறார், ஒருவர் அதற்கு மேலும் செல்ல வேண்டியிருக்கிறது. ஆனால் அது வெறும் தொடக்கமாக இருப்பது. அது முடிவல்ல, முதலெழுத்து.

சமநிலையை எப்படி அடைவது, எப்படி அன்பாய், இரக்கமாய், நட்பாய் நிலைமாற்றம் செய்வது, இரக்கத்துக்கும் அன்புக்குமான ஆற்றலை எப்படி அடைவது என்பதைச் சொன்னதுமே பதஞ்சலி அகவெளி பற்றிய தெளிவான விளக்கத்துக்கு வந்து விடுகிறார். சமநிலையைச் சூரியனின் பேரில் செயற்படுத்துவதன் மூலம் சூரிய மண்டலம் பற்றிய அறிவு அடையப்படுகிறது.

ஒட்டுமொத்த உலக மக்களை இரண்டு வகையாய்ப் பிரிக்கலாம்: சூரிய மாந்தர்கள், சந்திர மாந்தர்கள் என்று. அல்லது அவர்களை ‘யாங்’ (Yang) மற்றும் ‘யின்’ (Yin) என்று நீங்கள் அழைக்கலாகும். சூரியன் ஆண், சந்திரன் பெண். சூரியன் உறுதியும், சண்டைக்குணமும் உடையது. ஒட்டுமொத்த பிரபஞ்சத்தையும் இவையிரண்டையும் கொண்டே நீங்கள் பிரித்தறிய முடியும். சூரிய சந்திரரைக் கொண்டு உங்கள் சரீரத்தையும் உங்களால் பிரிக்க முடியும். யோகா அப்படிப் பிரித்திருக்கிறது.

அது உங்கள் சுவாசம் போன்ற அதிநுட்ப சமாசாரங்களைக் கூடப் பிரித்து வகைப்படுத்தியிருக்கிறது. வலது நாசியில் நிற்கும் நாடி பிங்கலை என்றும், இடது நாசியில் நிற்பது சந்திர கலை என்றும் அறியப்படுகிறது. நீங்கள் கோபப்படுகிறபோது பிங்கலை நாடியில் சுவாசிக்கிறீர்கள். நீங்கள் அமைதியாயிருக்கிற போது சந்திர கலையில் சுவாசிக்கிறீர்கள். ஒட்டுமொத்த சரீரமும் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒருபக்கம் ஆணாகவும், மறுபக்கம் பெண்ணாகவும் இருக்கிறது. மனதிலும் ஒரு பகுதி ஆண், மற்றொரு பகுதி பெண் என்று பிரிக்கப்பட்டிருக்கிறது.

ஒருவர் சூரியனில் இருந்து சந்திரனுக்கும், சந்திரனிலிருந்து அதற்கப்பாலும் செல்ல வேண்டியிருக்கும்.

*பகவானே! உங்களுடைய சீடர்கள் தகுதியைப் பெறுவது உடனடி ஞானத்தின் மூலமாகவா? அல்லது படிப்படியான வளர்ச்சியின் மூலமாகவா? உங்களுடைய பாதையற்ற பாதை எந்த ஒருவருக்குமா? அல்லது அசாதாரணமான எவருக்கேனும் அரிதாகவா?*

முதலில் அறிந்து கொள்ள வேண்டியது 'அடைதல்' என்ற வார்த்தை ஆன்மநிலை சார்ந்ததல்ல என்பதைத்தான். அது உங்களுடைய பேராசையின் ஒரு பகுதி. முயன்று அடைகிற எண்ணம் ரொம்பவும் உலகாயதமானது. நீங்கள் கவுரவத்தை அடைவதாயினும், அதிகாரம் அல்லது கடவுளை அல்லது நிர்வாணத்தை அடைவதாயினும் அவற்றுள் பெரிதாய் வித்தியாசம் எதுவும் இல்லை. அடைதற்கான விருப்பம் உலகியல் சார்ந்தது. அது காணும் பொருளே உண்மை என்பது.

உங்களுடைய பேராசையை, உங்களுடைய பொருந்துகிற எண்ணத்தை விடுகிறபோது மட்டுமே ஆன்மா சார்ந்த மாற்றம் நிகழ்கிறது. நீங்கள் முன்பே அடைந்து விட்டதை, அடைய வேண்டும் என்கிற ஆசை எதற்கு? நீங்கள் எதை அடைய விரும்புகிறீர்களோ அதுவாகத்தான் முன்பே இருந்து கொண்டிருக்கிறீர்கள். வேறு எதுவாகவும் ஒருபோதும் இருந்ததில்லை.

இந்தக் கணத்தில் கடவுள் உங்களுக்குள் இருப்பது ஆரோக்கிய மானதும் கிளர்ச்சியூட்டுவதும் ஆகும். ஏனெனில், கடவுள் உங்களில் இருந்தோ வாழ்க்கையிடமிருந்தோ வேறானவரல்லர். ஆனால், உங்கள் பேராசையே ஒரு பிரச்சினையாய் இருக்கிறது. உங்கள் பேராசையின் காரணமாகவே சூழ்நிலைகளைப் பயன்படுத்திப் பிழைப்பவர்கள் (exploiters) தொடர்ந்து உங்களுக்கு வழிகாட்ட முற்படுகிறார்கள்.

என்னுடைய முழு முயற்சியும், என்னுடைய முழு வேலையும் நீங்கள் முன்பே அதைப் பெற்று விட்டீர்கள் என்பதை உங்களுக்குப் புரிய வைப்பதற்காகத்தான். எதையும் முயன்று அடைகிற கேள்விக்கே

இடமில்லை. எந்தவோர் எதிர்காலம் பற்றியும் பிரச்சினையில்லை. முயன்று அடைதல் என்கிற வார்த்தையை நீங்கள் எண்ணுகிறபோதே அதில் நாளை வந்து விடுகிறது, வேளை வந்து விடுகிறது, எதிர்காலம் வந்து விடுகிறது. அது ஓர் ஆசை. உங்களைக் காட்டிலும் வேறொருவராக இருக்கவே நீங்கள் விரும்புவீர்கள் - அது சாத்தியமற்றது. எப்படி இருந்து கொண்டிருக்கிறீர்களோ அப்படித்தான் நீங்கள் இருக்க முடியும்.

இருக்க வேண்டும் என்பது கனவு, இருத்தலே உண்மை. ஆனால் உங்கள் பேராசை காரணமாகவே அடைதற்கான யோசனைகளை அவர்கள் உங்களுக்கு வழங்குவதும், நீங்கள் அவற்றை ஏற்பதும். அவர் சொல்வது உண்மை என்பதற்காக அல்ல, அது உங்கள் ஆசையை அதிகரிக்கிறது என்பதற்காகவே (நீங்கள் அதை ஏற்பது)

என்னுடன் நெருக்கமாக இருப்பதற்கு நீங்கள் அறிய வேண்டியதெல்லாம் இதுதான்: உங்கள் பேராசையை நினைவில் இருந்து நீக்கி விடுங்கள். அதைக் கைவிடுங்கள். மிகச்சரியாக இப்போதே. 'ஆகா, நாளை வேறொரு சமயம் அதை விட்டு விடுவோம்' என்று சொல்லாதீர்கள். தள்ளிப் போடாதீர்கள். பேராசையால் ஏற்படும் துன்பத்தை, அது ஏற்படுத்தும் பெரிய மனவேதனையைப் புரிந்துகொள்ள முயலுங்கள். பேராசை நரகத்தைக் கொண்டு வரும் என்பதை நீங்கள் புரிந்து கொண்டால் பின்பெதற்கு நாளை என்பது? அந்தக் காட்சியில், புரிதலில் அது நழுவி விடும். நீங்கள் அதை நழுவ விடவில்லை, அது தானாகவே நழுவி விடுகிறது.

முயன்று அடைதல் என்கிற கருத்தே முட்டாள்தனமாகிற போது உடனடியாய் அடையப்படுகிறதா அல்லது படிப்படியாகவா என்று கேட்பதில் என்ன பொருள்? அவை பொருத்தமற்றவை.

நீங்கள் முன்பே அதுவாக இருக்கிறீர்கள். இது எப்போதும் உங்கள் நினைவில் இருக்கட்டும். நீங்கள் தேவர்கள் என்பதையும், பெண் தெய்வங்கள் என்பதையும் ஒரு கணமும் மறந்து விடாதீர்கள். உங்களைக் கனவான்களாகவும் சீமாட்டிகளாகவும் கருதிக் கொள்கிற அபத்தத்தை விடுங்கள். நீங்கள் தேவர்கள், பெண் தெய்வங்கள், வேறு குறைவான எதிலும் அமைவுற்று விடாதீர்கள்.

ஆக, உங்களுடைய தவறான கருத்துகளை நான் அழித்தொழிக்கிறேன். ஆன்மிகம் என்கிற பெயரில் பல நூறு ஆண்டுகளாய் அந்த விற்பனையாளர்கள் உங்களிடம் மிக அதிகமாகவே வீற்றிருக்கிறார்கள்.

ஒரு குட்டிக்கதை சொல்கிறேன்:

கத்தோலிக்க மதத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணும், யூதப்பையன் ஒருவனும் கண்மூடித்தனமாய் காதலித்தனர். ஆனால், அவர் களுடைய மதமும், நம்பிக்கைகளும் குறுக்கே நின்றது. ஐரிஷ் கத்தோலிக்க பிரிவைச் சேர்ந்த தாய் தன்னுடைய மகளுக்கு அறிவுரை சொன்னாள். 'அவனிடம் ஒழுக்கப் பண்புகளைக் கொடு. கத்தோலிக்க மதத்தின் நேர்த்தியை, மகிழ்ச்சியை அவனுக்குப் போதித்திடு. முதலில் அவனை ஒரு கத்தோலிக்கனாக்கி விடு' என்று. அந்தப் பெண்ணும் அவ்வாறே செய்தாள். கடைசியில் திருமண நாளும் குறிக்கப்பட்டது. திருமணத்துக்கு முன் ஒருநாள் அந்தப் பெண் வீட்டுக்கு வந்துஅழுது புலம்பினாள். 'திருமணம் நின்றுவிட்டது' என்று தாயிடம் சொன்னாள்.

ஏன்? தாய் கேட்டாள். 'நீ அவனுக்கு ஒழுக்கப் பண்புகளைக் கற்றுக் கொடுக்கவில்லையா?' என்று.

'நான் அதிகம் கற்றுக் கொடுத்து விட்டதாய் நினைக்கிறேன். அவன் பாதிரியாக விரும்புகிறான்.'

ஒரு நூற்றாண்டில் இருந்து இன்னொரு நூற்றாண்டுக்கு என்று ஆயிரம் ஆண்டுகளாய் ஆன்மிக விற்பனையாளர்கள் நற்கதி அடைதற்கான யோசனையை உங்களிடம் கூடுதலாகவே விற்று வந்திருக்கிறார்கள். முக்கியக் கருத்தைக் கவனியுங்கள். நீங்கள் முன்பு எப்படி இருந்தீர்களோ அப்படித்தான் இருக்க முடியும் - வேறு எதுவும் சாத்தியமில்லை. அது உண்மை. அதுவே இறைவனால் அளிக்கப்பட்ட நற்கொடை. ஆக, ஆன்மிகம் என்பது முயன்று அடையப்படுவதல்ல. உண்மையில், அது அடையாளம் கண்டுகொள்ளப்படுகிறது, நினைவு கூரப்படுகிறது. நீங்கள் அதை மறந்து போனீர்கள், அவ்வளவே. நீங்கள் அதைத் தவறுதலாக எங்கோ வைத்து விட்டீர்கள். ஆனாலும் அது அப்படியே இருக்கிறது.

கேள்வியின் இரண்டாவது பகுதி, 'உங்களுடைய பாதையற்ற பாதை எவருக்குமானதா அல்லது அசாதாரணமான எவருக்கேனும் அரிதாகவா?'

அசாதாரணமானவர்களுக்கு மட்டுமே. ஆனால் எல்லாருமே அசாதாரணமானவர்கள்தாம். நான் சந்தித்தவர்களில் எவரும் சாதாரணமானவரல்லர். ஒரு கீழ்த்தரமான (ordinary) ஆணையோ பெண்ணையோ நான் சந்தித்ததில்லை. என்னிடம் வருகிற ஒவ்வொருவரையும் நான் கூர்ந்து ஆராய்கிறேன். அவர்கள் ஏதாவதொரு விதத்தில் இணையற்றவர்களாகவே இருக்கிறார்கள்.

எந்தவொன்றுடனும் ஒப்பிட முடியாத அளவு இணையற்ற தன்மை அவர்களிடம் முழுமையாகவே இருக்கிறது.

கடவுள் ஒருபோதும் செய்ததையே திரும்பச் செய்து கொண்டிருப்பதில்லை. அவருடைய படைப்புத்திறன் அசலானது. பிரதிகளில் அவருக்கு நம்பிக்கை இல்லை. அவர் மறுபடியும் ஒருவரைப் படைப்பதில்லை. சாதாரணமானவற்றில் அவர் நம்பிக்கை வைப்பது கிடையாது. அவர் அசாதாரணமானவற்றையும், இணையற்றவற்றையுமே தோற்றுவிக்கிறார்.

நீங்கள் ஒன்றைப் புரிந்து கொள்ள வேண்டும். இந்தச் சமூகம் நீங்கள் ஒரு சாதாரண ஆள் என்கிற கருத்தை உங்கள்மீது திணித்தபடி இருக்கிறது என்பதை. ஒருசிலர் மட்டுமே தாங்கள் சாதாரண ஆளில்லை என்பதை நிரூபிக்க முயல்கிறார்கள். இந்த மனிதக்கூட்டம் சாதாரணமானது என்பதை நிரூபித்தால் மட்டுமே தங்களை அவர்கள் நிரூபித்துக்காட்ட முடியும். எல்லாரும் இணையற்றவர்கள் என்பதை அரசியல்வாதிகளால் நம்ப முடியாது. எல்லாருமே இணையற்றவராய் இருந்து விட்டால் அவர்கள் (அரசியல்வாதிகள்) ஜனாதிபதிகளாகவும், பிரதம மந்திரிகளாகவும் ஆவதன் மூலம் என்ன செய்வார்கள்? அந்நிலையில் அவர்கள் ரொம்பவும் அபத்தமாய் தெரிவார்கள். அவர்கள் (அரசியல்வாதிகள்) இணையற்றவர்கள், அதனால்தான் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர் - மக்கள் கூட்டம் சாதாரணமானது. தாங்கள் அசாதாரணமானவர்கள் என்று நிரூபிக்கிறபோதே மற்றவர்கள் சாதாரணமானவர்கள் என்பதையும் அவர்களுடைய தன்முனைப்பு நிரூபித்து விடுகிறது.

உங்களிடம் அசாதாரணத் தன்மை இருந்தால் - நீங்கள் மெச்சத்தக்கவர் என்றால் ஒரு ராக்பெல்லரைப் போல் பணக்காரராகிக் காட்டுங்கள். ஒரு நிக்ஸன் அல்லது ஃபோர்டு மாதிரி ஆட்சி யதிகாரத்தைப் பெற்றிருங்கள். அல்லது குறைந்தபட்சம் ஓர் எஸ்ரா பவுண்ட் அல்லது கம்மிங்ஸ் மாதிரி கவிஞராகவேணும் வந்து காட்டுங்கள். ஒரு பிக்காஸோ ஒரு வான்காக் போன்று ஓவியராகப் பாருங்கள், நடிகனாகுங்கள் என்று அவர்கள் சொல்கிறார்கள். உங்களை நிரூபியுங்கள். ஏதாவதொரு போக்கில் வேறொருவராய் மாறிவிடுங்கள். உங்களுடைய திறமையை, நுண்ணறிவை, மன உறுதியை நிரூபித்துக் காட்டுங்கள். அதன்பிறகு தங்களை எந்த வழியிலும் நிரூபித்துக் காட்டாதவர்களெல்லாம் பாமரக்கூட்டம் என்றாகிவிடும். நீங்கள் அசாதாரணமானவராகி விடுவீர்கள்.

ஆனால், எல்லாருமே அசாதாரணமானவர்கள்தாம் என்பதை நான் உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். அதை நிரூபிக்க வேண்டும் என்கிற அவசியம் இல்லை. நிரூபிக்கிறவர்களும் தங்களுடைய இணையற்ற தன்மையில் தாங்களுக்குள்ள நிச்சயமற்ற தன்மையையே நிரூபிக்கிறார்கள். யார் தாழ்வு மனப்பான்மை கொண்டு தகுதியில் குறைந்தவர்களாய் இருக்கிறார்களோ அவர்கள்தாம் தங்களுடைய மேன்மையை நிரூபிக்க முயல்வது. தாழ்வு மனப்பான்மை உங்களுடைய மேம்பாட்டை நிரூபிக்க உதவலாம். ஆனால் அடிப்படையில் நீங்கள் இணையற்றவராகவே பிறந்திருக்கிறீர்கள். அதை நிரூபிக்க வேண்டும் என்கிற அவசியம் இல்லை.

கவிதை செய்வதில் உங்களுக்கு மகிழ்ச்சி என்றால் அதை அனுபவியுங்கள். ஆனால் அதை அகந்தையின் பயணமாக்கிக் கொள்ள வேண்டியதில்லை. உங்களுக்கு ஓவியம் வரைவதில் மகிழ்ச்சி என்றால் அதை அனுபவியுங்கள். ஆனால் அதை 'நான்' என்கிற அகந்தையின் நடனமாக்கி விட வேண்டாம். கவிஞர்களை, ஓவியர்களைப் பாருங்கள். அவர்கள் தற்பெருமையில் பித்துப் பிடித்த மாதிரித் திரிகிறார்கள். என்ன ஆயிற்று? அவர்கள் தங்களுடைய ஓவியத்திலோ கவிதையிலோ மகிழ்ச்சி கொண்டிருக்கவில்லை. அவர்கள் உச்சாணிக் கொம்பில் ஏறிக்கொண்டு 'நான் இணையற்றவன், நீங்கள் அப்படி இல்லை' என்று அறிவிப்பதற்குப் படிகளாகவே தங்கள் கவிதையையும், ஓவியத்தையும் பயன்படுத்துகிறார்கள்.

இந்த மனதுக்கிசைவற்ற ஆசாமிகளால்தான்... அவர்களிடம் நோய்க்குறி காணப்படுகிறது. அவர்களுக்கு உளவியல் சார்ந்த சிகிச்சை தேவைப்படுகிறது. எல்லா அரசியலவாதிகளுக்கும் தேவைப்படுகிறது. அதிகார மயக்கத்தில் உள்ளவர்களுக்கும், அகந்தை பிடித்தவர்களுக்கும் சிகிச்சை அவசியப்படுகிறது. அவர்கள் மருத்துவமனையில் சேர்க்கப்பட வேண்டியவர்கள். அவர்களுடைய சித்தப் பிரமையாலும், அச்சக் கிளர்ச்சியுடன் கூடிய போட்டியாலும் தங்களை வேறொருவராய் நிரூபிக்க அவர்கள் செய்யும் பெரு முயற்சியாலும் உங்களை முகமற்றவராய் முகவரியற்றவராய் நீங்கள் எண்ணத் தொடங்குகிறீர்கள். நாம் இழிவான வாழ்க்கை வாழ்ந்தும், இழிவான முறையில் மரணிக்க வேண்டியவர்கள் என்று எண்ணிக் கொள்கிறீர்கள். செடி கொடிகளைப் போன்று கிளர்ச்சியற்ற வாழ்க்கை வாழவே நீங்கள் இருக்கிறீர்கள்.

நச்சுத்தன்மையுடன் கூடிய ஓர் அபாயகரமான எண்ணம் உங்களுக்குள் வேரூன்றி விட்டது. அதை வெளியே பிடுங்கி எறியுங்கள்.

ஆனால் நினைவில் வையுங்கள். 'நான் உங்களை இணையற்றவர் என்று சொல்கிறபோது ஒன்றோடொன்று தொடர்பு படுத்துகிற வகையில் அதைக் குறிப்பிடவில்லை. நீங்கள் மற்றவர்களை விட ஈடு இணையற்றவர் என்று நான் சொல்லவில்லை. நீங்கள் இணையற்றவர் என்று சொல்கிறபோது மற்றொன்றுடன் தொடர்பு படுத்தாமல், ஒப்பிடாமல் எவ்விதச் சார்புமின்றிச் சொல்கிறேன். நீங்களும் இணையற்றவர்தாம் அடுத்தவரைப்போல, உங்கள் அண்டை அயலாரைப்போல. இணையற்ற தன்மை என்பது உங்கள் இயல்பு.

'உங்களுடைய பாதையற்ற பாதை எல்லாருக்குமா அல்லது விதிவிலக்காய் எவருக்கேனுமா?' என்று நீங்கள் கேட்கிறீர்கள். அது அரிதிலும் அரிதான அசாதாரணமானவர்களுக்கு மட்டுமே. ஆனால், எல்லாரும் அசாதாரணமானவர்தாம்.

ஒரு குட்டிக்கதை சொல்கிறேன்:

இது நடந்தது. தன்னைவிட உயர்ந்தவர்கள் இருப்பார்கள் என்கிற எண்ணத்தையே தாங்கிக்கொள்ள முடியாத ஒரு கொடிய அரசன் இருந்தான்.

கலப்படமில்லாத அரசியல்வாதி, கலப்படமில்லாத விஷம்!

தன்னுடைய ராஜ்யத்தில் உள்ள எல்லா பண்டிதர்களையும் முக்கியமான தருணங்களில் அழைக்கிற வழக்கப்படி அழைத்து அவர்களிடம் 'உங்கள் இருவருக்குள் யார் பெரியவர்? நானா கடவுளா?' என்றொரு கேள்வியைக் கேட்டான்.

காரணம், அகந்தையில் தலை கால் புரியாமல் ஆடுகிறவர்கள் கடைசியில் மோதுவது கடவுளோடுதான். கடைசி ஆட்டத்தைக் கடவுளோடு வைத்துக் கொள்வதற்குக் காரணம், என்றாவது ஒருநாள் யார் மேம்பட்டவர் நானா, கடவுளா? என்கிற பிரச்சினை தோன்றி விடுகிறது. ஃப்ரடெரிக் நீட்சே கூறுவான் 'என்னால் கடவுளை நம்ப முடியாது. நான் கடவுளிடம் நம்பிக்கை வைத்தால் என்றென்றைக்கும் தாழ்ந்தவனாகவே இருந்து விடுவேன்' என்று. அந்நிலையில், மேம்பாட்டுக்கான சாத்தியமில்லை. எனவேதான் நீட்சே கூறுகிறான, 'கடவுள் குறித்த எண்ணத்தை விட்டுவிடுவதே நல்லது' என்று. நீட்சே கூறுவான், 'இரண்டு பேர் எப்படி ஒரே உயர்நிலையை வகிக்க முடியும் - நானும், கடவுளும்?' என்று.

இந்தக் கொடிய அரசனும் சுத்த நீட்சேயாகத்தான் இருக்க வேண்டும்.

...பண்டிதர்கள் அச்சத்தில் நடுங்கினர். காரணம் அவர்கள் கடவுளை பெரியவர் என்று சொன்னால் உடனடியாய் கொல்லப்படுவார்கள். கண்டதுண்டமாய் வெட்டி வீசியெறியப்படுவார்கள். தங்களுடைய தொழிலுக்கேற்ற புத்தி சாதுர்யம் உடையவர்கள் என்பதால் அவர்கள் கொஞ்சம் அவகாசம் கேட்டனர். ஆனாலும் கடவுளுக்கு அதிருப்தி ஏற்படுத்தாத அளவுக்கு அவர்கள் தகுதி பெற்றவர்கள்தாம். எனவே, அவர்கள் நிரம்பவும் கவலைக்குள்ளாகி இருந்தனர். அவர்களுள் மூத்த பண்டிதர், 'என்னிடம் விடுங்கள், நாளையே நான் அரசரிடம் பேசுகிறேன்' என்று அவர்களுடைய அச்சத்தைப் போக்கி, அவர்களுக்கு நம்பிக்கையூட்டினார்.

மறுநாள் அவை கூடியபோது அந்த முதியவர் நெற்றி நிறைய விபூதி பூசி, பணிவுடன் கைகளைக் கட்டிக்கொண்டு அமைதியாய் வந்தார். தம்முடைய சிரம் தாழ்த்தி வணங்கி, 'பிரபுவே, தாங்கள்தாம் பெரியவர்' என்று சொல்லவும், அந்த அரசன் தன்னுடைய மீசையை முறுக்கியபடி, பெருமிதத்துடன் தலையை நிமிர்த்திக் கொண்டான். 'அரசே, நீங்கள்தாம் பெரியவர், நீங்கள் நினைத்தால் உங்கள் நாட்டில் இருந்து எங்களை நாடு கடத்த முடியும். ஆனால், கடவுளால் அது முடியாது. எல்லாமே அவருடைய ராஜ்யம், தம்முடைய ராஜ்யத்துக்கு வெளியே எப்படி எங்களை வெளியேற்றுவார்?' என்றார் அந்த மூத்த பண்டிதர்.

கடவுளை விட்டு நாம் எங்கேயும் செல்வதற்கில்லை. அதுவே உங்களுடைய இணையற்ற தன்மை. அதுவேதான் எல்லாருடைய இணையற்ற தன்மையும் ஆகும். கடவுளின் ஒரு பகுதியாய் இருப்பதன்றி வேறு எதுவாகவும் நாம் ஆவதற்கில்லை. அதுவே உங்களுடைய இணையற்ற தன்மை, எல்லாருடையதும். உங்களை மதியுங்கள், மற்றவர்களையும் மதியுங்கள். உங்களை மேம்பட்டவராய் நீங்கள் நிரூபிக்கத் தொடங்கியதுமே, உங்களை நீங்கள் அவமதிக்கிறவராகி விடுகிறீர்கள். காரணம் அந்த முயற்சியே நீங்கள் இணையற்றவரில்லை என்பதை ஏற்றுக் கொண்டதாகி விடுகிறது. நிரூபிக்க முயன்ற காரணத்தால் நீங்கள் அடுத்தவரிடமும மதிப்பின்றி நடந்து கொண்டவராவீர்கள்.

உங்களை மதியுங்கள், மற்றவர்களையும் மதியுங்கள். காரணம், அடியாழத்தில் நாம் வெவ்வேறானவர்களல்லர். நாம் ஒன்று சேர்ந்து

முழுமையாகிறோம். நாம் ஒவ்வொருவரும் அடுத்தவரின் அங்கமாகிறோம். நாம் தீவுகளல்ல தனித்திருப்பதற்கு. கடவுளின் விரிந்து பரந்த பெருநிலப்பகுதி (continent) நாம்.

***"அறியாமையின் மூலம் ஒருவர் அறியாமையைத் திரட்டுகிறார், ஒருவர் கர்மாவைக் குவிக்கிறார் என்று பதஞ்சலி சொல்கிறார்.தாங்கள் முன்பே ஒருவர் குறிப்பிட்ட பளிங்குத் தன்மையைப் பெறுகிறவரைத் தம்முடைய செயல்களுக்குத் தாம் பொறுப்பாக மாட்டார். சொல்லப் போனால், கடவுளே செயல்படுகிறவர், அவர்தாம் பொறுப்பு என்று கூறியிருக்கிறீர்கள். தயைகூர்ந்து முரண்பாடாய்த் தெரியும் இவற்றைத் தாங்கள் தெளிவுபடுத்துவீர்களா?"***

அவை உங்களுக்கு முரண்பாடுகளாய் தெரியலாம். இந்த முரண்பாடுகளைத் தெளிவுபடுத்துவதைவிட உங்களை நான் தெளிவுபடுத்தி விடுகிறேன். நான் உங்களை முற்றாகத் தெளிவடையச் செய்துவிட்டால் பிறகு எந்த முரண்பாட்டையும் நீங்கள் காண மாட்டீர்கள்.

முரண்பாடுகளைக் கண்டுகொள்வதற்கு அறிவின் நுட்பத்தைக் கொண்டு ஆராய வேண்டியிருக்கும். அறிவின் குறுக்கீடின்றி உங்கள் பார்வையும் தெளிவாக இருந்து விட்டால், உங்கள் உணர்வு நிலையில் எந்தவோர் எண்ணமும் நோக்கமின்றித் திரியாது. நீங்கள் முற்றிலும் வெறுமையாய் சமநிலையில் இருக்கிறீர்கள் - எந்தவொரு முரண்பாட்டையும் எங்கேயும் நீங்கள் காண்பதில்லை. எல்லா முரண்பாடுகளும் நிறைவு தருவதாகவே தோற்றமளிக்கும். அவை இருக்கிறதென்றாலும் மனம் அறிவாளிகளாலும், தர்க்க சாஸ்திர வல்லுநர்களாலும், அரிஸ்டாட்டில்களாலும் பயிற்றுவிக்கப்பட்டிருக் கிறது. எல்லாவற்றையும் எதிரெதிர் நிலைகள் கொண்டவைகளாய் பிரிப்பதற்கு நீங்கள் கற்பிக்கப்பட்டிருக்கிறீர்கள் - இரவு பகல், வாழ்க்கை மரணம், நல்லது கெட்டது, கடவுள், சைத்தான், ஆண், பெண் என்று நீர்க்கசிவு இல்லாத சிற்றறைகள்.

ஒவ்வொரு பெண்ணிலும், ஓர் ஆண் இருக்கிறான். ஒவ்வோர் ஆணிலும் ஒரு பெண் இருக்கிறாள் என்று நான் சொல்வேனாயின் உடனே நீங்கள் சொல்வீர்கள், 'பொறுங்கள். இதில் ஒரு முரண்பாடு இருக்கிறது. ஓர் ஆண் எப்படி பெண்ணாக முடியும்? ஒரு பெண் எப்படி பெண்ணாக முடியும்? ஆண் ஆண்தான், பெண் பெண்தான். குழப்பத்திற்கு இடமேயில்லை' என்று. ஆனால் அது அப்படி இல்லை.

வாழ்க்கை அரிஸ்டாட்டிலில் நம்பிக்கை கொண்டிருக்கவில்லை. வாழ்க்கை அரிஸ்டாட்டிலைவிடப் பெரியது. ஆணும் பெண்ணும் நிறைவு செய்கிறவர்களேயன்றி, முரண்பாடுகளல்லர்.

தாவோ கொள்கையாளர்களின் 'யின்' (Yin), 'யாங்' (Yang) என்கிற குறியீடுகளை நீங்கள் புரிந்து கொண்டிருக்கிறீர்களா? முரண்பாடுகள் ஒன்றையொன்று எதிர்கொள்கின்றன; ஒன்றில் ஒன்றாய் கரைகின்றன. பகல் இரவிலும், இரவு பகலினுள்ளும் வாழ்க்கை மரணத்திலும், மரணம் வாழ்க்கையினுள்ளும் மறைந்து கிடக்கிறது. அப்படித்தான் அது இருக்கிறது. வாழ்வும் மரணமும் இருவேறு பொருள்களல்ல. அவை இரண்டுக்கும் இடையே இடைவெளி இல்லை. பிறப்பு இறப்பாகிறது, இறப்பு மீண்டும் பிறப்பாகிறது.

கடலின் அலைகள் உயர எழுந்து பாய்கின்றன. அலை எழும்போது அதிலோர் உள்ளீடு (hollow) இருக்கும். அலைகள் மேலும் கீழுமாய் புரளும். எனினும் அவை இருவேறானவை அல்ல. மிகப்பெரிய மலையொன்றை நீங்கள் பார்க்கிறீர்கள், அதன் பக்கத்தில் ஒரு பெரிய பள்ளத்தாக்கு. அவையிரண்டும் வெவ்வேறானவை அல்ல. பள்ளத்தாக்கு என்பது தலைகீழான மலை அவ்வளவுதான். மலை என்பது தலைகீழான பள்ளத்தாக்கு என்பதன்றி வேறேயென்ன.

ஆண், பெண் மட்டுமன்றி அத்தனை முரண்பாடுகளுமே முரண்பாடுகளாய் தோற்றமளிக்கிறவைதாம். இந்த உண்மையை நீங்கள் புரிந்து கொண்டால், நான் முழுமையைப் பற்றிப் பேசவேண்டிய நிலையில் எதிர்மாறானவற்றை வலியுறுத்திப் பேசும்படியாகிறது என்பதை, எப்போதுமே உங்களால் தெரிந்து கொள்ள இயலும். நான் சொல்வது எதுவாயினும் ஒரு பகுதியைத்தான் அது மூடுகிறது (பாதுகாக்கிறது) மற்றொரு பகுதி அப்படியே விடப்பட்டு விடுகிறது. அந்தப் பகுதியையும் நான் சொல்லியாக வேண்டும். அந்த மற்றொரு பகுதியை நான் சொல்கிறபோது, 'பொறுங்கள், உங்கள் பேச்சில் முரண்பாடு தெரிகிறது' என்று நீங்கள் சொல்கிறீர்கள்.

கருத்து வெளியிடும் முறையில் அரிஸ்டாட்டிலின் நடை இருக்கிறது. அரிஸ்டாட்டிலின் நடையல்லாத ஒன்று சாத்தியப்படும் என்று நான் எண்ணவில்லை. பயனைக் குறிக்கோளாய்க் கொண்ட (utilitarian) அன்றாட வாழ்வில் வெள்ளை, கறுப்பு என்று எல்லாவற்றையும் நாம் பிரித்துப் பார்க்கத்தான் வேண்டியிருக்கிறது.

வெள்ளையும் கறுப்பும் வெவ்வேறானவை. ஆனால் நிஜ வாழ்க்கை ஒரு வானவில்லாய், நிறமாலை (spectrum)யாய் இருக்கிறது.

ஒருபக்கம் வெண்மையாயும் மறுபக்கம் கருமையாயும் அது இருக்கக்கூடும். ஆனால், இரண்டுக்கும் இடையில் இலட்சோபலட்சம். படிகள் இருக்கின்றன, எல்லாமும் ஒன்றாய் இணைகின்றன. வாழ்க்கை ஒரு நிறமாலை. நீங்கள் இடைநிலைப் படிகளைத் தவறவிட்டால் அப்போது எல்லாமே முரண்பாடாய்த் தெரியும். உங்கள் பார்வை இன்னும் தெளிவுபடவில்லை.

என்றோ ஒருநாள் இப்படி நடந்ததாய் நான் கேள்விப்பட்டேன்:

பிறப்பு இறப்புகளைப் பதிவு செய்யும் அலுவலகத்தில் ஒரு குடிகாரன் நுழைந்தான்.

'கனவான்களே! நான் இரட்டைக் குழந்தைகள் பிறந்திருப்பதைப் பதிவு செய்ய விரும்புகிறேன்' என்று விக்கியபடி சொன்னான்.

பதிவாளர் அவனிடம், 'எதற்காகக் கனவான்களே என்கிறாய்? நான் ஒரு ஆள்தான் இங்கே உட்கார்ந்திருக்கிறேன். உனக்குத் தெரியவில்லையா?' என்று விசாரித்தார்.

'நீங்கள் மட்டுமா?' அந்தப் புதிதாய் அப்பாவானவன்திணறியபடி தடுமாறினான். 'எதுக்கும் நான் இன்னொருவாட்டி ஆஸ்பிடலுக்குப் போய் இன்னொருவாட்டி பார்த்துடறேன்.'

இரட்டையாய் இல்லாமல் ஒன்றே ஒன்றுமட்டுமாய் இருக்கலாம். உங்களுடைய தன்னுணர்வின்மையே (unconsciousness) வாழ்க்கை பற்றிய மாறான - உண்மைக்குப் புறம்பான கண்ணோட்டத்தை உங்களுக்கு வழங்கியிருக்கும். அதனாலேயே திரும்பத் திரும்ப என்னுள் முரண்பாடுகளை உணரும் நிலைக்கு நீங்கள் தள்ளப் படுகிறீர்கள். அவை காட்சியளவில் இருக்கவே செய்கின்றன. எனினும் அடியாழத்தில் அவை ஒன்றோடொன்று தொடர்புடையவைதாம்.

தற்போது இந்தக் குறிப்பிட்ட முரண்பாடு:

'பதஞ்சலி சொல்கிறார் அறியாமையின் மூலம் ஒருவர் அறியாமையை திரட்டுகிறார். ஒருவர் கர்மாவைக் குவிக்கிறார் என்று. அத்துடன் தாங்கள் முன்பே சொல்லியிருக்கிறீர்கள், ஒருவர் படிகமாய் உருவாகிற வரை தம்முடைய செயல்களுக்குத் தாம் பொறுப்பாக மாட்டார் - சொல்லப்போனால், கடவுளே செயல்படுகிறவர் அவர்தாம் பொறுப்பு' என்று.

இவையிரண்டும் முற்றிலும் மாறுபாடான பாதைகளாய் தெரியலாம். ஒன்று எல்லாவற்றையும் கடவுளிடமே விட்டுவிடுவது

ஆனால், முழுமையாக விட்டுவிடுவது. அப்போது நீங்கள் பொறுப்பாளியாக மாட்டீர்கள். ஆனால் ஞாபகத்தில் வையுங்கள், அது முழுமையாக இருக்க வேண்டும். ஒட்டுமொத்த சரணாகதியாய், ஒப்புவித்தலாய் பணிதலாய் இருக்க வேண்டும். அந்நிலையில் நீங்கள் செய்கிற நல்லது கடவுள் செய்ததாகும், நீங்கள் கெட்டது செய்தால் அதுவும் கடவுள் செய்ததேயாகும்.

'மொத்தமும்' என்பதை ஞாபகத்தில் வையுங்கள். அந்த மொத்தமுமானது (totality) உங்களை மாற்றிவிடும். உங்களுடைய புத்தி சாதுர்யத்தையோ தந்திரத்தையோ நீங்கள் காட்ட வேண்டாம். காரணம், நீங்கள் எதைத் தகுதியாய் உணராவிட்டாலும் கடவுள்தான் அதற்குப் பொறுப்பு என்று சொல்லி விடுவீர்கள். உங்களைக் குற்றவாளியாய் உணரச் செய்கிற எதையும் நீங்கள் கடவுள் தலையில் சுமத்தி விடுவீர்கள். எது உங்களுடைய அகந்தையை அதிகரிப்பதாயினும், 'அது நான்' என்று நீங்கள் சொல்லிக் கொள்வீர்கள். நீங்கள் தெரிகிற மாதிரி அப்படிச் சொல்லா விட்டாலும் உள்ளுக்குள் அப்படித்தான் சொல்லிக் கொள்வீர்கள். ஒரு நல்ல கவிதையை நீங்கள் எழுதி விட்டால் 'நான் கவிஞன்' என்று நீங்களே சொல்லிக் கொள்வீர்கள். ஒரு நேர்த்தியான ஓவியத்தை வரைந்துவிட்டால், 'நான் ஓவியன்' என்று சொல்லிக் கொள்வீர்கள். உங்களுக்கு ஒரு நோபல் பரிசு வழங்கப்பட்டிருந்தால், 'அதைக் கடவுளிடம் கொடுத்து விடுங்கள்' என்று சொல்ல மாட்டீர்கள். 'ஆம், நான் இதற்காகத்தான் காத்திருந்தேன். ரொம்ப நாளைக்கு முன்பே இது வந்திருக்க வேண்டியது. இந்த அங்கீகாரம் ரொம்பவும் தாமதமாய் கிடைத்திருக்கிறது' என்றுதான் நீங்கள் சொல்வீர்கள்.

தமக்கு நோபல் பரிசு கிடைத்தபோது பெர்னார்ட்ஷா அதை வேண்டாமென்று மறுத்தார். 'நான் நீண்டகாலம் இதற்காகக் காத்திருந்தாயிற்று. தற்போது என்னுடைய மதிப்புக்கு குறைவானது இது' என்று சொல்லி விட்டார்.

ரொம்பவும் தற்பெருமைக்காரர்களுள் அவரும் ஒருவர் - 'தற்போது என்னுடைய மதிப்புக்கு அது தாழ்வானது. எனது இளமைக்காலத்தில் நான் அதைப் பெரிதும் விரும்பியதுண்டு. அதுபற்றிக் கனவு கண்டிருக்கிறேன். இப்போது வயதாகி விட்டது, எனக்கு அது தேவைப்படாது. உலக அளவில் எனக்கு முனபே பெரிய அங்கீகாரம் இருக்கிறது. மக்களிடமிருந்து மிகப்பெரிய பாராட்டு எனக்குக் கிடைத்திருக்கிறது. தற்போது எந்த நோபல் பரிசும் எனக்கு

வேண்டாம். இதன்மூலம் கூடுதலாய் எந்தப் புகழும் எனக்குக் கிடைத்து விடப் போவதில்லை' என்றார் அவர்.

இது நோபல் பரிசு வழங்கும் அமைப்பை அவமதிப்பதாகி விடும் என்று அவரிடம் நயந்து பேசி, அவரை ஏற்கச் செய்தார்கள். தாம் பெற்ற அந்தப் பரிசுத்தொகையை உடனே ஏதோ ஓர் அமைப்புக்கு அவர் வழங்கிவிட்டார். அந்த அமைப்பு யாரும் கேள்விப்பட்டிருக்கவில்லை. அவரே தலைவராகவும் உறுப்பினராகவும் உள்ள அமைப்பு அது.

அவருடைய அந்தச் செய்கை பற்றி பிற்பாடு கேட்டபோது, அவர் சொன்னார். 'நீங்கள் ஒரு நோபல் பரிசு பெற்றால் பத்திரிகைக்காரன் ஏதாவதொரு மூலையில் அந்தச் செய்தியைப் போடுவான். நான் அந்தப் பரிசை வேண்டாம் என்று மறுத்ததுமே அது தலைப்புச் செய்தியாகி விட்டது. பார்த்தீர்களா? பிறகு நான் அதை வாங்கிக் கொண்டேன். அதனால் அடுத்த நாள் பத்திரிகையிலும் அது தலைப்புச் செய்தியாயிற்று. அந்தத் தொகையை நான் நன்கொடையாய் அளித்தபோது மீண்டும தலைப்புச் செய்தியாய் போட்டார்கள். அந்த நன்கொடையை நானே பெற்றுக்கொண்டதால் மீண்டும் நான் தலைப்புச் செய்தியானேன். நான் அதை முழுமையாய் பயன்படுத்திக் கொண்டு விட்டேனாக்கும்.' அவர் ரசத்தின் கடைசித் துளியையும் விட்டுவைக்க வில்லை.

ஆக, உங்கள் அகந்தை தொடர்ந்து தெரிவு செய்து கொண்டே போக சாத்தியம் இருக்கிறது. ம்... உங்களுக்குக் குற்ற உணர்வைத் தருகிற எதையும் கடவுள் தலையில் கட்டி விடுகிறீர்கள். நீங்கள் நல்லவிதமாய் உணரக்கூடிய எதையும், 'ஆம், அதை நான்தான் செய்தேன்' என்று சொல்லிக் கொள்கிறீர்கள். அதிலும் முழுமை தேவைப்படுகிறது. தற்போதுள்ள இன்னொரு பாதை பதஞ்சலி, மகாவீரர், புத்தர் இவர்களுடையதாகும். அவர்கள் சொல்கிறார்கள். நீங்களே பொறுப்பாளி, ஒட்டுமொத்த பொறுப்பும் உங்களுடையதுதான் என்று. பதஞ்சலிக்குக் கடவுளிடம் நம்பிக்கை கிடையாது. நிர்வாணத்தை – ஞானத்தை அடைதற்கான ஒரு வழியே கடவுள் என்கிறார் அவர். அதுவும் ஒரு வழிதான். வழி மட்டுமே தவிர குறிக்கோளல்ல. மிகச்சரியாகச் சொன்னால், 'கடவுள் இல்லை. அதற்கு அவசியமில்லை, மனிதனே எல்லாவற்றுக்கும் பொறுப்பு' என்று கடவுளை முற்றாய் மறுத்த புத்தர், மகாவீரர் போன்றவர்போலதாம் அவரும். ஆனால் முழுமை தேவைப்படுகிறது சரியானதற்கு மட்டுமல்ல, தவறானதற்கும் கூட.

முழுமை என்கிற கருத்தமைவில் இரண்டு முரண்பாடுகள் எப்படி ஒன்று சேருகின்றன என்பதைப் பாருங்கள். இரண்டுமே முழுமையைக் கோரி நிற்பவை. அதுவே அவற்றை ஒன்றாய் இணைப்பதாகும். உண்மையில் நீங்கள் எல்லாவற்றையும் கடவுளிடம் ஒப்புவித்தாலும், முழுப்பொறுப்பையுமே உங்கள் தோளில் சுமந்து கொண்டாலும் அது ஒரு பொருட்டல்ல. நீங்கள் முழுமையாயிருக்கிறீர்கள் என்பதே உண்மையில் குறிப்பிடத்தக்கது. ஆக நீங்கள் எதைச் செய்தாலும் அதில் முழுமையாகி விடுங்கள். அதுவே உங்கள் விடுதலையாகும். முழுமையாயிருப்பதற்கு விடுபட்டவராயிருக்க வேண்டும்.

ஆக இவையிரண்டும் முரண்பாடாய் தெரிபவை. ஆனால், அப்படியில்லை. இரண்டுமே முழுமையை அடிப்படையாய் கொண்டவைதாம்.

மனிதர்கள் இரண்டு வகை. அதனால்தான் இரண்டு வகை செயல்முறைகள் தேவைப்படுகின்றன. விட்டுக் கொடுப்பதும் கீழ்ப்படிவதும், தியாகம் செய்வதும் பெண் மனத்துக்கு எளிதான காரியம். ஆனால், விட்டுக்கொடுப்பதும், கீழ்ப்படிவதும், தியாகம் செய்வதும் ஆண் மனத்துக்கு அத்தனை எளிதாயிருக்காது. எனவே, ஒட்டுமொத்த பொறுப்பையும் தன்னுடையதாக்கிக் கொள்ளும் ஆண் மனத்துக்குப் பதஞ்சலியின் பாதைதான் தேவைப்படும். நாரதர், மீரா, சைதன்யர், இயேசு போன்றவர்களின் அர்ப்பணிப்புப் பாதை (பக்தி)யே பெண் மனத்துக்குத் தேவைப்படுவது. எல்லாம் கடவுளுடையது, உம்முடைய ராஜ்யம் வந்தடைகிறது. ‘நான் அவருடையவன்’ என்கிறார் இயேசு. ‘அவர் என்னுடைய தந்தை. நான் அவருடைய மைந்தன். மகனாகப் பட்டவன் தந்தையினுடைய உணர்வு நிலையின் விரிவாக்கமேயன்றி வேறில்லை’ என்கிறார் அவர்.

ஏற்புத்தன்மையும், இணக்கமும் கொண்ட பெண் மனத்துக்கு பதஞ்சலி பெரிய அளவில் பயன்பட மாட்டார். அன்பான ஏதோ ஒன்று தேவைப்படுகிறது ஒருவரை முற்றிலும் கீழே சாய்ப்பதற்கு, உருச்சிதைப்பதற்கு, விட்டுக் கொடுப்பதற்கு. கரைவதும், கரைந்து மறைவதும் தேவைப்படுகிறது பெண்ணின் மனதுக்கு. ஆனால், ஆண் மனதுக்கு பதஞ்சலிதான் நிறைவளிப்பதாய் தெரிகிறது. இரண்டுமே சரி. காரணம் இரண்டுமே மனங்கள். இந்த மனித குலம் இவ்விரண்டு மனங்களிலேயே அடங்கி விடுகிறது.

முழுமையான மனதை உங்களால் புரிந்து கொள்ள முடியாத காரணத்தால்தான் முரண்பாடு தோன்றுகிறது. ஆனால் இவ்விரண்டு

வழிகளில் நீங்கள் தெரிவு செய்யும் வழி எதுவாயினும், எந்த ஒன்றாயினும் நீங்கள் முழுமையாகி விடுகிறீர்கள். போகப் போக உங்கள் மனம் முழுமையாய் மலர்ச்சியடையும்.

***அன்பிற்குரிய பகவானே,***

***இராமகிருஷ்ணர் புற எல்லையிலேயே (periphery) தங்கியிருப் பதற்கு ஓர் ஆதாரமாகத்தான் உணவைப் பதப்படுத்தினார். புற எல்லைக்குத் திரும்ப இரக்கம் மட்டும் போதாதா? தனிப்பட்ட முறையிலான ஒரு கேள்வியைக் கேட்பதற்கு என்னை மன்னியுங்கள், நீங்கள் உறுதியாய் பற்றிக் கொள்கிற ஆதாரம் (anchorage) எது?***

முதலாவது, இரக்கம் போதுமானதாயிருக்காது. காரணம் இரக்கம் ரொம்பத் தூய்மையானது. அதிலிருந்து உறுதியாய் பற்றிக் கொள்ள ஓர் ஆதாரத்தை உருவாக்குவதற்கில்லை. உலகிற்குரிய ஈர்ப்பு விசையால் அதன் பேரில் செயல்பட முடியாது. மண்ணுலகிற்குத் தேவையான ஒன்று தேவைப்படும். சரீரம் மண்ணின் ஒரு பகுதி. மனிதன் இறக்கும் போது மண்ணே மண்ணைச் சென்றடைகிறது. சரீரத்தில் உறைவதற்கு வெறும் இரக்கம் மட்டுமே போதுமானதாயிருக்காது.

உண்மையில், இரக்கம் உண்டாகிற நாளில், நீங்கள் சரீரத்தைத் துறக்கத் தயாராகி விடுவீர்கள். இரக்க முற்றிலும் வேறானதோர் ஈர்த்திழுப்பை (pull) உங்களுக்கு வழங்கும் – அது உயரேயிருந்து கிடைக்கிற இழுப்பு. மேலேயிருந்து கிடைக்கிற இழுப்பு. நீங்கள் மேலிருந்து இழுக்கப்படுவீர்கள். சரீரத்தில் தங்கியிருப்பது சாத்தியமற்றதாகும். இல்லை, அந்தத் தூய்மை ஒன்றும் பெரிய அளவில் உதவி விடாது. இந்த மண்ணுலகில் சரீரத்தோடு வாழும் வாழ்க்கைக்குக் கொஞ்சம் தூய்மையற்றிருப்பதும் அவசியந்தான். மிகுதியான அளவில் திடப்பொருள் தேவைப்படும். உணவு தகுதியாயிருக்கும். உணவுப் பொருள்கள் மண்ணின் ஒரு பகுதி, திடப்பொருளாகும். அது உங்களுக்கு எடையைக் கொடுக்கும்.

மக்கள் பல்வேறு பொருள்களைப் பல்வேறு வழிகளில் பயன்படுத்துகின்றனர். ஆனால், தூய்மையான இரக்கத்தைப் பயன்படுத்த முடியாது. உண்மையில் மாசற்ற இரக்க சிந்தனை உங்களை மேல்நோக்கிக் கொண்டு செல்லவே துணை செய்யும். ஒரு வார்த்தையை உங்களுக்கு அறிமுகப்படுத்துகிறேன். இறையருள் (grace) புவியீர்ப்பு விசை உங்களைக் கீழ்நோக்கி இழுக்கும். இறையருளோ உங்களை மேல்நோக்கி இழுக்கும். நீங்கள் இரக்கத்தால்

நிரம்பி வழியும் கணத்தில் இறையருள் செயல்படத் தொடங்கும். நீங்கள் பறக்குமளவு எடையற்றவராகி விடுவீர்கள். உங்களால் பறக்க முடியும். உங்களை இவ்வுலகில் இருக்கச் செய்வதற்கு ஒரு 'பேப்பர்-வெயிட்' தேவைப்படும்.

இராமகிருஷ்ணர் அதைப் பயன்படுத்தினார். உணவுதான் அவருடைய 'பேப்பர் வெயிட்.' அவர் இலேசாகி விட்டிருந்தார். ஈர்ப்பு விசை செயல்படுவதற்கு எடை தேவைப்பட்டது.

தற்போது நீங்கள் கேட்கிறீர்கள். நான் ஒரு குட்டிக்கதை சொல் கிறேன் உங்களுக்கு.

நான்கு பேர் தங்களுடைய தீய ஒழுக்கங்கள் பற்றி அந்தரங்க மாய் பேசிக் கொண்டிருந்தனர்.

அவர்களில் யூதகுரு சொன்னார். 'எனக்கு பன்றி இறைச்சி பிடிக்கும்' என்று.

'ப்ராட்டஸ்டண்ட்' சமயப் பிரிவைச் சேர்ந்த குரு சொன்னார். 'நான் தினமும் ஒரு போத்தல் *போர்பான் குடிப்பேன்' என்று.

'எனக்குப் பக்கத்தில் ஒரு பெண் சிநேகம் உண்டு' என்று ஒப்புக்கொண்டார் கிறிஸ்தவக் கோயில் சமயகுரு.

அவர்கள் 'பாப்டிஸ்ட்' மத குருவின் பக்கம் திரும்பினர். அவர் தோள்களைக் குலுக்கியபடி சொன்னார். 'நானா? எனக்குப் பிறரைப் பற்றி வம்பளப்பது பிடிக்கும்' என்று.

என்னுடைய பதிலும் அதுதான் - எனக்கும் வம்பளப்பு பிடிக்கும். அது எனக்குக் கனத்தை (weight)த் தருகிறது. இந்த விவாதங் களெல்லாம் வீண் பேச்சில்லாமல் வேறேயென்ன. அது உங்கள் தற்பெருமையைக் காயப்படுத்துமென்றால் அவற்றை பிரபஞ்ச பேச்சு, தெய்விக உரை என்று அழையுங்கள்.

ஆனாலும் அவை வம்பளப்புதான்.

***நான் மிகுந்த பணிவோடு கீழ்க்கண்ட கேள்வியைத் தங்கள் முன்பாய் வைப்பதுடன், தாங்கள் இதற்கான பதிலை நாளை வழங்குவீர்கள் என்று மனதார நம்புகிறேன். நான் சிங்கப்பூரில் இருந்து வருகிறேன். சீக்கிரமே திரும்பிச் சென்று விடுவேன்.***

---

* *போர்பான் (bourbon) - மக்காச்சோளம், கம்பு வகை கொண்டு தயாரிக்கப்படும் மது வகை.*

*ஐயனே, இன்று காலையில் தாங்கள் குறிப்பிட்டீர்கள் - அகந்தை உங்களைத் தடுக்கும் பெரிய தடை. அதை வெற்றி கொள்வதன் மூலமாகவோ அல்லது அகந்தையைக் கடப்பதன் மூலமாகவோ நம்முடைய அடிப்படை இயல்பை நாம் நிறைவு செய்து கொள்ள முடியும். அத்துடன் பால் சார்ந்த மனவேகத்தின் பேரில் கவனத்தை ஒருமுனைப் படுத்துவதன் மூலம் ஒருவர் ஞானம் பெற முடியும் என்றும் தாங்கள் சொன்னீர்கள். பாலுறவில் அல்லது பால் சார்ந்த உணர்வில் கவனத்தை ஒருமுனைப் படுத்தினால் நீங்கள் கர்த்தாவும் (doer), அகந்தை மிக்கவராகவும் ஆகி விடுகிறீர்கள் என்கிறபோது, உங்களுடைய இரண்டு கூற்றுகளும் முரண்படுவதைக் கருதவில்லையா?*

*சிற்றின்ப இச்சைகளை விலக்குவதால் மட்டுமே எங்களுடைய குறிக்கோளை அடைய முடியும் என்று நாங்கள் நினைக்கிறோம். தாங்கள் இந்தப் பிரச்சினையைத் தெளிவுபடுத்தி என் மனத்திலுள்ள தவறான கருத்தைப் போக்க வேண்டும் என்று நான் பணிவுடன் வேண்டிக் கொள்கிறேன்.*

இது ஓர் இந்தியரால் எழுப்பப்பட்ட கேள்வி. அது, பி. கங்காராம். அது இந்திய மனத்துக்குரிய அத்தனை தன்மைகளையும் வெளிக் காட்டுவதால் அதனை நீங்கள் குறித்துக்கொள்ள வேண்டம் என்று நான் விரும்புகிறேன். அந்தக் கேள்வியை படிப்படியாக அறுவைப் பகுப்பாய்வு (dissect) செய்ய முயலுங்கள்.

*'நான் மிகுந்த பணிவோடு கீழ்க்கண்ட கேள்வியைத் தங்கள் முன்பாய் வைப்பதுடன், தாங்கள் இதற்கான பதிலை நாளை வழங்குவீர்கள் என்று மனதார நம்புகிறேன். இதையெல்லாம் சொல்லத் தேவையில்லை.*

ஆனால், இந்திய மனம் சம்பிரதாயமானது. அது பாசாங்கானது. அது நேர்மையானதல்ல. அது சடங்குகள், வார்த்தைகள் இவற்றின் பின்னே ஒளிந்து கொள்வது. அது பண்பட்டதுபோல் காட்சியளிக்கும். ஆனால், அப்படியிருப்பதில்லை. காரணம் பண்பட்ட மனம் என்பது நேர்மையாயும் நெருக்கமாயும் இருப்பது. சடங்குகள், ஒழுங்கு முறைகள் இவற்றுக்குப் பின்னால் ஒருவர் ஒளிந்துகொள்ள வேண்டிய அவசியம் இல்லை - குறைந்தபட்சம் இங்காவது அவற்றை விட்டு விடலாம்.

கடவுள் ஒன்றும் சம்பிரதாயமானவரல்லர். வாழ்க்கையில் பிரச்சினைகளைத் தீர்ப்பதில் சமுதாய ஒழுங்குமுறைகள் எந்த விதத்தில் உதவுமென்று நினைக்கிறீர்கள்? அது இடர்ப்பாடு களைத்தான் உண்டுபண்ணும்.

> *'ஐயனே, இன்று காலையில் தாங்கள் குறிப்பிட்டீர்கள் - அகந்தை உங்களைத் தடுக்கும் பெரிய தடை. அதை வெற்றி கொள்வதன் மூலமாகவோ அல்லது அகந்தையைக் கடப்பதன் மூலமாகவோ நம்முடைய அடிப்படை இயல்பை நாம் நிறைவு செய்து கொள்ள முடியும்.'*

முதலாவது நான் சொல்லாத ஏதோ ஒன்றை நீங்கள் அறிந்திருக் கிறீர்கள். அதுவும் இந்திய மனதின் ஒரு பகுதிதான். சொல்லப்படுகிற ஒன்றைக் காது கொடுத்துக் கேட்பது இந்திய மனதுக்கு சிரமமாய் இருக்கும். அவன் (இந்தியன்) முன்பே தன்னுடைய சொந்தக் கருத்தை வைத்திருப்பான். உண்மையில் அது பலவாகவும் இருக்கும். அவனிடம் ஒரு கோட்பாடு, சமய நம்பிக்கை, மிகப்பெரிய சம்பிரதாயம் மற்றும் முட்டாள்தனங்கள் இருக்கும். அவன் தன்னிடம் வருகிற எல்லாவற்றையுமே தனக்குள் இருப்பவற்றுடன் கலந்தபடி இருப்பான்.

தற்போது இந்த விஷயம் - ஒருவர் 'கடக்கக் கூடியதைப் பற்றிதான் நான் உங்களிடம் சொல்லியிருக்கிறேன். ஆனால் 'வெற்றி கொள்வது' பற்றி நான் சொல்லவில்லை. இந்தக் கனவான் இங்கே சொல்கிறார், 'தடையை வெற்றி கொள்வதன் மூலமாகவோ அல்லது கடப்பதன் மூலமாகவோ...' என்று. அவை ஒரே பொருளைத் தருபவை அல்ல. வெற்றி கொள்வது (overcoming) என்பது ஒன்றை அடக்கி தோல்வி காணச் செய்வது. அதில் வன்முறை இருக்கும். அது கடும் முயற்சியுடன் சண்டையிட்டு எதிர்த்து நிற்பது ஆகும். நீங்கள் சண்டையிடுகிற போதெல்லாம் உங்களுடைய அகந்தை கடக்கப் படுவதில்லை. காரணம் போராடுவதிலும், போரிடுவதிலுந்தான் அகந்தை வாழ்கிறது. ஆக வெற்றி கொள்வதன் மூலம் அகந்தையைத் தோல்வியுறச் செய்வதற்கில்லை. நீங்கள் எந்த அளவு முயல் கிறீர்களோ அந்த அளவு அகந்தை அதிகரித்து விட்டிருக்கும். உண்மையில், உங்களுடைய அகந்தை தற்போது சமயம் சார்ந்ததாயும், புனிதமாயும், பக்தியாயும் இருக்கும். அகந்தை பக்தியாக மாறுகிறபோது அது நுட்பம் மிக்கதாயும், அதிக ஆபத்து நிறைந்ததாயும் ஆகிவிடும். அது சுத்திகரிக்கப்பட்ட நஞ்சு.

வெற்றி கொள்வதும் கடந்து செல்வதும் ஒன்றாகி விடாது. அதிலென்ன வேறுபாடு? புரிந்து கொள்வதன் மூலம் அடையப்படுவது கடந்து செல்லுதல், சண்டையிட்டு அடையப்படும் நிலை வெற்றி கொள்ளுதல். நீங்கள் போரிடடு வீழ்த்தி அதன் நெஞ்சின் மீதேறிக் கொண்டு அதனுடன் மற்போர் செய்கிறீர்கள். அப்போதுதான் அது வெற்றி கொள்ளப்பட்டதாகிறது. ஆனால் அது எப்போதுமே அங்கு இருக்கத்தான் செய்கிறது. அத்துடன் ஒரு பொறியில் நீங்கள் அகப்பட்டுக் கொள்கிறீர்கள். தற்போது உங்களால் அதைவிட முடியவில்லை. காரணம் நீங்கள் விழுகிற போதெல்லாம் அது எழுந்து கொண்டு விடுகிறது.

ஆக, தன்னுடைய அகந்தையை வெல்ல முயலும் தற்பெருமைக் காரர் பணிவை மேற்கொள்கிறார். அந்தப் பணிவிலும் அகந்தை இருக்கவே செய்கிறது. தங்களை ரொம்பவே தாழ்த்திக் கொண்டு பணிவு காட்டுகிறவர்களிடம் அகந்தை இருக்கிறது. அவர்கள் சொல் வார்கள். 'நாங்கள் ஒன்றுமே இல்லை' என்று. ஆனால், அவர் களுடைய கண்களுக்குள் பாருங்கள். 'ஐயன்மீர், தங்களுடைய கால் தூசி நாங்கள்' என்று அவர்கள் சொல்கிறார்கள். அவர்களது கண்களைக் கவனியுங்கள். அவர்களுடைய வார்த்தைகளைக் கூர்ந்து பாருங்கள்.

ஒரு குட்டிக்கதை சொல்கிறேன்:

மருத்துவரிடம் வந்த நோயாளி முறையிட்டுக் கொண்டார். 'டாக்டர், எனக்குக் கடுமையான தலைவலி. நீங்க அதுக்கு என்ன பண்ணப் போறீங்க?' என்று.

மருத்துவர் கேட்டார். 'அதிகம் புகைப்பதுண்டா?'

நோயாளி பதிலளித்தார். 'இல்லை, நான் புகையிலை சமாசாரங்களை தொட்டதே இல்லை. அத்துடன் நான் குடித்ததுமில்லை. இருபது வருஷமா பெண் சகவாசமே கிடையாது' என்று.

'அப்படீன்னா உங்க பிரச்சினைக்குக் காரணம் உங்களுடைய *ஒளிவட்டம் (halo) இறுக்கமாகி விட்டிருப்பதுதான்' என்றார் மருத்துவர்.

வெற்றி கொள்வதன் மூலம் நேரிடுவது அது. உங்கள் ஒளிவட்டம் இறுக்கமாகி விடுவதால் நீங்கள் தலைவலிக்குள்ளாகிறீர்கள்.

---

* *ஒளிவட்டம் (halo) - சித்திரங்களில் திருத்தொண்டர்களின் தலையைச் சுற்றி இருக்கும் வெண்மையான ஒளிவட்டம்.*

சமய நம்பிக்கையுள்ள எல்லாருக்கும் அப்படி நடக்கிறது. அவர்கள் தலைக்கனமும் போலித்தனமும் கொண்டு விடுகிறார்கள். நம்பகத்தன்மையற்றவர்களாகிறார்கள். கோபம் வரும்போது தொடர்ந்து புன்னகை செய்தபடி இருப்பார்கள். உண்மையில் அந்தப் புன்னகை ஒரு மேற்பூச்சு. தங்களுடைய கோபத்தை தன்னுணர்வின்மை (unconscious)யின் அடியாழத்துக்கு அவர்கள் கொண்டு செல்கிறார்கள். நீங்கள் அடக்கி வைப்பதெல்லாம் உங்கள் இருப்புணர்வில் விரிந்து பரவுகிறது. அது உங்களின் ஒரு பகுதியாகிறது. சமயம் சார்ந்த மனிதனிடம் கோபத்தால் உண்டாகும் குற்ற உணர்வை நீங்கள் பார்க்க முடியாது. அவனைக் கோபத்துக்குள்ளாக்குகிற நிகழ்ச்சி அவனுடைய வாழ்வில் இருந்தே மறைந்துவிடும். ஆனால, கோபம் அவனுடைய வாழ்க்கை முறையாகவே மாறிவிட்டிருக்கும். அவன் கோபப்படுவதை நீங்கள் கையும் களவுமாய் பிடிக்க முடியாது. ஆனால் அவன் எப்போதும் கோபத்துடன் இருப்பதை நீங்கள் புரிந்து கொள்ளவும், உணரவும் முடியும். கோபம் அவனுடைய இரத்தச் சுற்றோட்டத்தில் இருக்கும். அகந்தை அவனுடைய ஒவ்வொரு செய்கையிலும் பரவி நிற்கும். தான் வெற்றி கொள்கிற எதன்மீதும் அவனுக்கு அக்கறை இருக்கும். அந்த அக்கறை பாதுகாப்புணர்வுடன் கூடியது. அவன் தற்காத்துக் கொள்ளும் மனநிலையில் இருப்பவன்.

இல்லை. வெற்றி கொள்வதும் கடந்து செல்வதும் ஒன்றாகி விடாது. கடந்து செல்வதில் ஒரு நேர்த்தி இருக்கிறது. வெற்றி கொள்வது அருவருப்பூட்டுவது. நீங்கள் மனித வலிமையின் எல்லைகளை எல்லாம் கடந்து செல்கிறபோது (transcend) அகந்தையின் முட்டாள்தனத்தை, அறிவற்ற தன்மையை புரிந்து கொண்டிருப்பீர்கள், அதன் மாயையை நீங்கள் புரிந்து கொள்கிறீர்கள். அதன் அடிப்படையற்ற வேட்கையை நீங்கள் புரிந்து கொண்டு விடுகிறீர்கள். அந்நிலையில் அது தானாகவே கீழிறங்கி விடுகிறது. நீங்கள் அதை விடவில்லை. விட்டிருந்தால் இன்னோர் அகந்தையை நீங்கள் முயன்று அடைந்திருப்பீர்கள். புரிந்து கொள்வதன் மூலம் அது விடுபடுகிறது. புரிந்து கொள்ளும் திறன் நெருப்பு மாதிரி அது அகந்தையைப் பொசுக்கி விடும்.

மேலும், அகந்தை வெற்றி கொள்ளப்பட்டதா, கடந்து செல்லப்பட்டதா என்பதை நீங்கள் எப்படி அறிந்து கொள்வீர்கள்? அது வெற்றி கொள்ளப்பட்டதாயின் அந்த நபர் பணிவுடன் காட்சியளிப்பார். அது கடக்கப்பட்டதாயின் அவரிடம் தற்பெருமையோ பணிவோ

இருக்காது. அகந்தையுள்ளவர் தாம் பணிவுடையவராக முடியும். அகந்தை இல்லையேல் நீங்கள் எப்படிப் பணிவுடையவராக முடியும்? யார்தான் பணிவாக இருப்பார்? ஆக, அகந்தை வெற்றி கொள்ளப்படுகிற போதெல்லாம் அது பணிவாக மாறி விடுகிறது. அகந்தை கடக்கப்படுகிறபோது மனிதன் பொறியில் இருந்து விடுபட்டவனாகிறான். அவன் பணிவுடையவனாகவோ, தற்பெருமைக் காரனாகவோ இருப்பதில்லை. அவன் உண்மை உடையவனாய், நம்பகத்தன்மை உடையவனாய் இருக்கிறான். அவன் எந்த வகையிலும் இயல்பை மீறுவதில்லை, மிகைப்படுதல் இருக்காது.

மிகைப்படுதல் என்பது அகந்தையின் ஒரு பகுதி. முதலில் நீங்கள் சொல்கிறீர்கள், 'நான் மிகச்சிறந்த மனிதன்' என்று. பிறகு சொல்கிறீர்கள். 'நான் ரொம்பப் பணிவானவன்' என்று. இரண்டிலுமே மிகைப்படுதல் இருக்கிறது. முதலில் 'நான் முக்கியமானவன்' என்று மிகைப்படுத்திக் கூறுகிறீர்கள். பிறகு, 'கால் தூசி பெற மாட்டேன்' என்கிறீர்கள். இதுவும் மிகைப்படுத்திக் கூறுவதுதான். இரண்டிலுமே உங்களை ஸ்பெஷலான ஆளாகக் காட்டிக்கொள்கிற முயற்சி இருக்கிறது.

முதலில் - உங்களுடைய முக்கியத்துவத்தை உலகம் உணர்ந்து கொண்டு உங்களைப் புகழ வேண்டும் என்று விரும்புகிறீர்கள். அது பலனளிக்கவில்லை என்பதைக் கண்டு கொண்டதும்... காரணம், எல்லாரும் அதே பயணத்தை மேற்கொண்டிருக்கிறார்கள் என்கிற நிலையில் உங்களுடைய முக்கியத்துவம் பற்றி யாரும் கவலைப்படுவதில்லை. எல்லாருமே முக்கியமானவர்கள் தாம், அவர்கள் தங்களுடைய வழிகளை முயன்று பார்க்கிறார்கள். போட்டி கடுமையாயிருப்பதாக நீங்கள் உணர்கிறபோது ஒரு வழியை விட்டு இன்னொரு வழியை நீங்கள் தொடங்குகிறீர்கள். அது ரொம்பவும் ஏமாற்றுத்தனம் நிறைந்த வழி, சூழ்ச்சித்திறன் மிக்க வழி. 'நான் ரொம்பச் சாதாரணமானவன்' என்று நீங்கள் சொல்கிறீர்கள். ஆனாலும் காத்திருக்கிறீர்கள். தற்போது உங்களுடைய பணிவை அவர்கள் அடையாளம் கண்டு கொண்டவர்களாய் உங்களிடம் வருகிறார்கள் - நீங்கள் பெரிய மகான். உங்களுடைய பணிவால் உயர்ந்து விடுகிறீர்கள், உங்களுடைய அகந்தையை முற்றிலுமாய் விட்டு விட்டீர்கள். நீங்கள் உள்ளுக்குள்ளாக புன்னகைத்துக் கொள்கிறீர்கள். உங்களுடைய அகந்தை தாங்கி நிறுத்தப்பட்டதாய், நிறைவுற்றதாய் உணரும். நீங்கள் சொல்வீர்கள் 'இப்போது அவர்கள் வந்தாயிற்று' என்று.

வெற்றி கொள்வதென்பது கடந்து செல்வதாகாது என்பதை நினைவில் வையுங்கள்.

'ஐயனே, இன்று காலையில் தாங்கள் குறிப்பிட்டீர்கள் அகந்தை உங்களைத் தடுக்கும் பெரிய தடை. அதை வெற்றி கொள்வதன் மூலமாகவோ அல்லது அகந்தையைக் கடப்பதன் மூலமாகவோ...' வெற்றி கொள்வது கடந்து செல்வது இரண்டுக்கும் இடையே 'அல்லது' என்கிற வார்த்தையைப் பயன்படுத்தாதீர்கள். அவை இரண்டுமே வெவ்வேறான நடப்புகள் முறறிலும் மாறுபட்ட நடப்புகள். - "...அகந்தையைக் கடப்பதன் மூலமாக நம்முடைய அடிப்படை இயல்பை நாம் நிறைவு செய்து கொள்ள முடியும்."

அத்துடன நீங்கள் தெரிவித்தீர்கள். 'பால் சார்ந்த உணர்வில் கவனத்தை ஒருமுனைப்படுத்துவதன் மூலம்...' என்று. நான் ஒரு போதும் அதைச் சொன்னதில்லை. நான் சொன்னது சமநிலையைத் தான். கவன ஒருமையை அல்ல; அப்படித்தான் நீங்கள் கேட்டறிய விரும்புகிறவற்றை மட்டுமே கேட்டுக்கொண்டிருக்கிறீர்கள். நான் பலமுறை திருப்பிச் சொன்னாலும் நீங்கள் தவற விடுகிறீர்கள்.

உங்களுக்கு நினைவிருக்கிறதா, நேற்று 'சமநிலை' என்கிற வார்த்தையை நான் பலமுறை சொல்லியதோடு, அது எத்தகையது என்பதை உங்களுக்கு விளக்கவும் முயன்றேன். அது கவன ஒருமை மட்டுமல்ல. கவன ஒருமை என்பது அதை நோக்கி எடுத்து வைக்கிற முதல்படி. இரண்டாம் படியாயிருப்பது தியானம். தியானத்தில் கவன ஒருமை கைவிடப்படும். நீங்கள் மேல்படிக்குச் செல்கிற போது கீழ்ப்படியை விட வேண்டியதுதான். இல்லாவிடில் நீங்கள் எப்படி மேலே செல்ல முடியும். மாடிப்படிகளில் ஏறுகிற போது உங்களுக்குப் பின்னால் படிகளை விட்டுச் செல்கிறீர்கள்தானே. இரண்டாம் படியில் முதற்படி விடப்படுகிறது. தியானத்தில் கவன ஒருமை கைவிடப் படுகிறது. தியானத்தில தாரணை விடப்படுகிறது. மூன்றாம் படி: சமாதி. அப்போது தியானமும் விடப்படுகிறது. அந்நிலையில் சமாதியை அடைகிறீர்கள். இம்மூன்றுமே 'சமநிலை' என்று அழைக்கப்படுகிறது.

நீங்கள் பாலுறவில் சமநிலையைக் கொண்டு வருகிறபோது கவன ஒருமை மட்டுமல்ல, பிரம்மச்சர்யமும் அதில் இருந்து வெளிவந்து விடுகிறது. 'அதைத் தொடர்ந்து தாங்கள் சொன்னீர்கள். பால் சார்ந்த உணர்ச்சி வேகத்தில் சமநிலைப்படுகிறபோது ஒருவர் ஞானம் பெறுவர்' என்று. ஆம், எந்தவோர் உணர்ச்சி வேகத்தின் பேரில்

சமநிலையைக் கொண்டு வந்தாலும் ஒருவர் அதில் இருந்து விடுபட முடியும். காரணம், ஆழ்ந்த சமாதி நிலையில் நீங்கள் பெரிய பார்க்கும் திறனாய் (understanding) இருக்கிறீர்கள். பார்க்கும் திறன் விடுவிக்கிறது. பார்க்கும் திறனுடைய மனதுக்கு ஒன்றைத் தவிர்க்கிற அல்லது ஒன்றில் இருந்து தப்பித்துக் கொள்கிற அவசியமில்லை. உங்களால் அதை எதிர்கொள்ள முடியும். அந்தப் பிரச்சினை மறைகிறது. உங்களுடைய பார்க்கும் திறன் என்கிற தீ, பிரச்சினையைப் பொசுக்கி விடுகிறது.

ஆம், பாலுறவு வேட்கையில் நீங்கள் சமநிலையைக் கொண்டு வருவீர்களாயின் அந்த வேட்கை மறைந்து விடும். அது வெற்றி கொள்வதல்ல, நீங்கள் அதைக் கடந்து செல்கிறீர்கள்.

'அந்த இரண்டு கூற்றுகளுமே (statements) முரண்பாடானவை என்று நீங்கள் கருதவில்லையா?... இல்லை, நான் அப்படிக் கருதவில்லை. நீங்கள் முற்றிலுமாய் குழம்பியிருக்கிறீர்கள். அது உங்கள் கருத்தியல் காரணமாய் வந்த குழப்பம். கருத்துத் தொகுதிகள் எப்போதுமே குழப்பமூட்டுகிறவைதான். நீங்கள் எப்போதுமே உங்களுடைய கருத்துத்தொகுதி மற்றும் மறைநூலின் பின்னால் மறைந்துக் கொண்டு கவனிக்கிறீர்கள். பகவத் கீதையும், வேதங்களும் உபநிஷத்துகளும் உள்ளாகத் தொடர்ந்து கொண்டிருக்கிறது - நேர்மையாகக் காது கொடுத்துக் கேட்கும் ஓர் இந்தியனைக் காண்பது கடினம். இந்தியர்கள் கிளிகளைப் போல் ஆகிவிட்டார்கள். அவர்கள் எதையும் புரிந்து கொள்ளாமலே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். காரணம் நீங்கள் புரிந்து கொள்ளும் திறனுடையவராயிருந்தால் பகவத் கீதை போன்ற எதுவும் தேவைப்படாது. உங்களுடைய தெய்விக கானம் மேலெழுகிறது. நீங்கள் சொந்தமாய் பாடத் தொடங்குகிறீர்கள். நீங்கள் சொந்தமாய் செயல்படத் தொடங்குகிறீர்கள். கிருஷ்ணர் தம்முடைய பாடலை இசைத்தார். நீங்கள் எதற்காக அதையே செய்ய வேண்டும்? நகலெடுக்கவும், பாவனை மேற்கொள்வதற்கும் அவர் யார்? அந்நிலையில் நீங்கள் ஒரு போலி (பார்த்துப் பின்பற்றுகிறவர்)யாகி விடுவீர்கள். ஏறக்குறைய இந்தியர்கள் அனைவருமே போக்கு, நடை, கருத்து, கையாளும் வகை இவற்றில் மற்றவரைப் பின்பற்றுகிறவர்கள்தாம். தங்கள் நாடு சமயப்பற்று மிக்கது என்று அவர்கள் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அது அப்படியில்லை. உலகிலேயே ரொம்பவும் சாமர்த்தியமான நாடாகத்தான் அது இருக்கிறது.

'பாலுறவில் அல்லது பால் சார்ந்த உணர்வில் கவனத்தை ஒருமுனைப்படுத்தினால் நீங்கள் கர்த்தாவாகவும் (doer), அகந்தை மிக்கவராகவும் ஆகிவிடுகிறீர்கள் என்கிறபோது உங்களுடைய இரண்டு கூற்றுகளும் முரண்படுவதைக் கருதவில்லையா? பாலுறவில் சமநிலையைக் கடைபிடித்தால் நீங்கள் கர்த்தாவாகி விடுவீர்கள் என்று யார் சொன்னது? சமநிலையை மேற்கொள்கிற போது நீங்கள் சாட்சி பாவத்தில் இருப்பீர்களேயன்றி கர்த்தாவாகி விடுவதில்லை. பாலுணர்வின் வேகத்தை நீங்கள் கவனித்துக் கொண்டிருக்கிற போது நீங்கள் எப்படிக் கர்த்தாவாக முடியும்? நீங்கள் அதைப் பார்க்கிறபோது பார்க்கப்பட்டது பார்ப்பவரில் இருந்து வேறாகி விடுகிறது.

இங்கே நீங்கள் என்ன பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள், நிச்சயமாக நீங்கள் வேறு நான் வேறுதான். நான் உங்களைப் பார்த்துக் கொண்டிருக் கிறேன். நீங்கள் என்னுடைய பார்வையின் இலக்கு. நான் என்னுடைய பார்வையின் திறன். நீங்களும் நானும் வேவ்வேறானவர்கள்.

அறிபவரில் இருந்து வேறானது அறிந்தது. காண்பவரில் இருந்து வேறானது காண்பது. பாலுறவு, பேராசை, அகந்தை தொடர்பான உணர்வில், நீங்கள் சமநிலையைக் கொண்டு வருகிறபோது - சாட்சி பாவத்தில் இருந்து கவனிக்கிற போது நீங்கள் வேறானவர்தாம். அது ஒரு பொருள் அல்லது இலக்காயிருக்கிறது. நீங்கள் அங்கே ஒரு பார்வையாளராயிருக்கிறீர்கள். நீங்கள் எப்படிக் கர்த்தாவாக முடியும். சாட்சி பாவம் இல்லாத நிலையில்தான் ஒருவர் கர்த்தாவாகிறார். அவர் பார்வையின் இலக்குடன் அடையாளம் காணப்படுகிறார்கள். 'இந்தப் பாலுறவில் நான் இருக்கிறேன். நான் அதுவாக இருக்கிறேன், இந்த உடலின் வேட்கை என்னுடையது' என்று அவர் சொல்லத் தொடங்குகிறார். நீங்கள் அந்த வேட்கையைக் கண்காணிப்பவராயின், வேட்கை சரீரத்தில் இருக்கும், நீங்களோ வெகு தூரத்தில் இருபபீர்கள்.

அதைச் சோதித்தறியுங்கள். நீங்கள் பசியாய் உணர்கிறபோது அப்படியே இருந்து, கண்களை மூடியபடி கண்காணியுங்கள். உங்களைப் பசியோடு தொடர்புபடுத்திக் கொள்ள முடிந்திருக்காது. உங்களைப் பசியோடு அடையாளப்படுத்திக் கொள்ள முடிந்தால் சாட்சி பாவம் இழக்கப்பட்டிருக்கும். நீங்கள் கர்த்தாவாகி விடுகிறீர்கள். நீங்கள் எதையெல்லாம் பற்றிக் கொண்டிருக்கிறீர்களோ அதிலிருந் தெல்லாம் உங்களை வேறுபடுத்தி அறிவதில் துணை புரிவதே சாட்சி பாவத்தின் ஒட்டுமொத்தத் திறன் ஆகும்.

சாட்சி பாவத்தில் இருந்து கர்த்தா வெளிப்படுவதில்லை. கர்த்தா விட்டு விடுகிறார், மறைந்து விடுகிறார். சற்றும் எதிர்பாராத விதமாய் நீங்கள் ஒருபோதும் எதையும் செய்திருக்கவில்லை என்பதைப் புரிந்து கொள்கிறீர்கள். செயல்கள் நிகழ்ந்தபடி இருக்கின்றன. ஆனால், நீங்கள் எதையும் செய்யவில்லை. நீங்கள் கர்த்தாவல்ல. நீங்கள் சாட்சியாயிருக் கிறீர்கள். அத்னை மதங்களிலும் நிறைவாய் அடையப்படுவது இதுதான்.

சிற்றின்ப இச்சைகளில் இருந்து விடுபட்டிருப்பதன் மூலமே நம்முடைய இலக்கை அடைய முடியும் என்று நாம் எண்ணுகிறோம். உங்களிடம் சில யோசனைகள் இருப்பதாய் நீங்கள் கருதுகிறீர்கள். இதுதான் தொல்லையை உண்டுபண்ணுகிறது. உங்களிடம் ஏதேனும் யோசனைகள் இருந்தால் அவற்றை நடைமுறைப்படுத்திப் பாருங்கள், அவற்றில் உள்ள தவறுகளை நீங்கள் தெரிந்து கொள்வீர்கள். மேலும், ரொம்ப காலமாகவே அவற்றை நீங்கள் வைத்திருக்கிறீர்கள். ஆயினும், உங்களுக்குத் திகட்டவில்லை. அந்தக் கருத்துகள் மூலம் என்னதான் நடந்தது? எத்தகைய மாற்றம் உங்களை வந்தடைந்தது? எத்தகைய விடுதலை உங்களுக்குக் கிடைத்தது? உங்கள் வாழ்க்கை நெடுகிலும் அந்தக் கருத்துகளை நீங்கள் சுமந்து கொண்டிருக்கிறீர்கள். கொஞ்சம் அறிவுநுட்பத்தைப் பயன்படுத்துங்கள். புரிந்து கொள்ளப் பாருங்கள் – என்ன ஆயிற்று? தேவையற்றவைகளுக்காகவே உங்களுக்குள் ஓர் இடத்தை நீங்கள் ஒதுக்கும்படியாயிற்று. வேறொன்றும் நடக்கவில்லை. இப்போதே அந்த இடத்தைத் துப்புரவாக்கி விடுங்கள்.

நான் வேறு யோசனைகளையோ மாற்றுகளையோ உங்களுக்குக் கொடுக்க முயற்சிக்கவில்லை. என்னுடைய முழு முயற்சியும் உங்களை நிர்மூலப்படுத்துவதுதான். உங்களுடைய மனதை அழிப்பதன் மூலம் நீங்கள் மனமற்ற நிலையை, ஒரு தெளிவான காட்சியைப் பெற வேண்டும், அவ்வளவே. எனக்குக் கருத்தியலில் நம்பிக்கை இல்லை. அப்படியொன்றை நீங்கள் நம்புவதையும் நான் விரும்பவில்லை. எல்லாக் கருத்தியல்களுமே பொய்யானவை. எல்லாக் கருத்தியல் களையுந்தான் நான் சொல்கிறேன், என்னுடையது உட்பட. காரணம் கருத்துகளால் நிஜத்தைக் கொண்டு வர முடியாது. உங்களிடம் எந்தக் கருத்தும் இல்லாதபோதுதான் உண்மை அறியப்படுகிறது. உண்மை இருக்கவே செய்கிறது. நீங்கள் கருத்துகளால் நிரம்பியிருப்பதால் அதைத் தவற விடுகிறீர்கள். என்னை நீங்கள் செவிமடுக்கிறபோது, உங்களுடைய கருத்துகளைக் கொண்டு கேட்பீர்களாயின் நீங்கள் ரொம்பவே குழம்பிப் போவீர்கள்.

தயவு செய்து இங்கிருக்கும் கொஞ்ச நேரமாவது உங்கள் யோசனைகளை ஒதுக்கி வையுங்கள். நான் சொல்வதைக் கவனமாய் கேளுங்கள். நான் சொல்வதையெல்லாம் அப்படியே நம்புங்கள் என்று கூறவில்லை. காது கொடுத்துக் கேளுங்கள். பிற்பாடு அதுபற்றிச் சிந்தியுங்கள் என்றுதான் சொல்கிறேன். ஆனால், என்ன நடக்கிறது? நான் சொல்வது ஒன்றாகவும் உங்களுக்குள் மீண்டும் நீங்கள் சொல்லிக் கொள்வது வேறாகவும் அல்லவா இருக்கிறது. அந்த ஒலி நாடாக்கள் அனைத்தையும் நிறுத்தி விடுங்கள். இல்லையேல் உங்களால் என்னைப் புரிந்து கொள்ள முடியாது. நான் என்ன சொல்கிறேன் என்பதையுந்தான். உண்மையில் நான் அதிகம் சொல்லிக் கொண் டிருக்கவில்லை. ஏறக்குறைய இங்கே இருந்து கொண்டிருக்கிறேன். என்னுடைய வார்த்தைகள் உங்களுடன் இருந்து கொண்டிருப் பதற்கான ஒரு வழி, அவ்வளவுதான்.

ஆக, உங்களுடைய கருத்துகளைக் கொஞ்சம் ஒதுக்கி வைத்தால்... அவற்றை எப்போதைக்குமாய் வீசி விடுங்கள் என்று நான் சொல்லவில்லை. இப்போது மட்டும் அவற்றை ஒதுக்கி வைத்துவிட்டு என்னைக் கவனியுங்கள். அவை சிறப்பாக இருப்பின் பிற்பாடு அவற்றை முன்னிலைப்படுத்துங்கள். ஆனால், கலவையாக்கி விடாதீர்கள்.

ஒரு குட்டிக்கதை.

யூதர் ஒருவர், ரொம்ப வயதானவர், அமெரிக்காவில் உள்ள தன்னுடைய மகனைப் பார்க்க வந்திருந்தார். யூத மத விதிகளை அந்த இளைஞன் கடைபிடிக்காததைக் கண்டு அவர் அதிர்ந்து போனார். 'உணவு விதிகளை நீ கடைபிடிப்பதில்லையா என்று கேட்கிறீர்களா?' என்று கேட்ட மகன் சொன்னான். 'அப்பா, நான் உணவு விடுதிகளில் உண்கிறேன், *கோஷரில் நிலைத்திருப்பது சுலபமில்லை' என்று.

'குறைந்தபட்சம் சனிக்கிழமை ஓய்வையாவது (sab bath) கடைபிடிக்கிறாயல்லவா?'

'சாரிப்பா, அமெரிக்காவில் அதைச் செய்வது கடினம்.'

'சொல் மகனே, நீ இன்னமும் **ஆத்மீக வகையில் புனிதமாய் இருக்கிறாய்தானே?' என்று இகழ்ச்சிச் சிரிப்புடன் கேட்டார் அந்த முதியவர்.

---

* *கோஷர் (Kosher) - யூத உணவு முறைகளுக்கு ஏற்ற வகையில் உண்பது.*

** *ஆத்மீக வகையில் புனிதம் (circumcised) - ஆண்களின் பிறப்புறுப்பின் நுனித்தோல் இதழ் அகற்றுதல்*

பழைய அறிவு இப்படித்தான் வேலை செய்யும். அதை ஒதுக்கி வையுங்கள். அப்போதுதான் உங்களால் என்னைப் புரிந்து கொள்ள முடியும். இல்லையேல் அது சாத்தியப்படாது.

*சமநிலை என்பது கவன ஒருமை, தியானம் மற்றும் சமாதியின் கூட்டிணைவு என்று தாங்கள் நேற்று விளக்கினீர்கள். சமநிலைக்கும் ஞானம் பெறுவதற்கும் இடையே உள்ள வேறுபாட்டைத் தயவு செய்து விளக்குங்கள்.*

*பதஞ்சலி எப்படி எண்ணத்தூய்மை (catharsis) பற்றி சொல்லாமல் விட்டார். தாங்களோ எண்ணத் தூய்மைக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கிறீர்கள்?*

*மன ஆற்றல்கள் தவறாகப் பயன்படுத்தப்படும் நிலையில் அதற்கெதிரான ஆயத்த நச்சு முறிவு (antidote) பற்றித் தயவு செய்து விளக்குங்கள்.*

*ஒருவர் பிராரத்த கர்மத்தை ஊழ்வினையைக் கழிக்காமல் இருக்கிறார். அல்லது ஒருவர் புதிய கர்மங்களைச் சேர்த்துக் கொண்டே போகிறார் என்பதை எப்படி வேறுபடுத்திக் காண்பது?*

*ஒருவருடைய இறப்பு கணத்துல்லியத்தில் குறிக்கப் பட்டிருக்குமாயின் அந்த மனிதன் முன்கூட்டி இறப்பதற்கோ அல்லது தன்னுடைய ஆயுளை நீட்டிக் கொள்வதற்கோ அவருக்குச் சுதந்திரமில்லை என்பதை அது குறித்துக் காட்டுகிறதா?*

முதலாவது: 'சமநிலைக்கும் ஞானம் பெறுவதற்கும் இடையேயுள்ள வேறுபாட்டைத் தயவு செய்து விளக்குங்கள்.'

இறுதியாக அடையும் ஞானம் பற்றிக் கவலைப்படாதீர்கள். அதைப்பற்றி விளக்கவோ அல்லது விவரிக்கவோ எந்த வழியும் இல்லை. நீங்கள் உண்மையிலேயே ஆர்வமாயிருந்தால், முடிவான ஞானத்தை உங்களுக்கு வழங்க நான் தயாராயிருக்கிறேன். ஆனால் அதுபற்றிய விளக்கங்களைக் கேட்காதீர்கள். அதுபற்றி விவரிப்பதை விட அதை உங்களுக்குக் கொடுப்பது எளிது. காரணம் எந்த விவரணை (descriptio)யும் நேர்மையாயிருக்காது. அதைப்பற்றி விவரித்தவர் எவருமில்லை. சமநிலையை விவரிக்க முடியும். காரணம் சமநிலை ஒரு செயல்முறை.

சமநிலை என்பது ஒரு விதையை ஊன்றி, செடியாகிற போது நீரூற்றி, மரத்தைப் பாதுகாக்கிற மாதிரி. சமநிலை அதைப் போன்றது.

பிறகு அதில் பூக்கள் மலர்கின்றன. பூக்களைப் பற்றிச் சொல்வது கடினம். பூ மலர்வதற்கு முன் நிகழ்கிறவற்றைப் பற்றிச் சொல்ல முடியும். அவை ஒரு செயல்முறையை, தேர்ந்த திறனைக் கொண்டிருக்கும்.

அந்தத் திறன் பற்றியும், செயல்முறை பற்றியும் நான் உங்களுக்குச் சொல்ல முடியும். அந்தத் திறன்களையும், முறைகளையும் நீங்கள் உணர்ந்து கொண்டால் ஒருநாள் ஞானத்தில் விழிப்படைவீர்கள். அது தற்போதேகூட நிகழ முடியும். உங்களை முற்றிலுமாய் விட்டுக் கொடுக்க நீங்கள் தயாராயிருந்தால் அது நிகழ்ந்து விடும். உங்களை முழுமையாய் விட்டுக் கொடுக்கும்படி சொல்கிறபோது நான் எதைக் கருத்தில் கொள்கிறேன்? உங்களை முற்றிலுமாய் ஒப்புவித்துக் கொள்ள வேண்டும் (surrender) என்பதையே அது குறிக்கும்.

நீங்கள் இடமளித்தால் இப்போதே அதை நிகழ்த்த முடியும். காரணம், மெய்யறிவு (light) என்னுள் சுவாலை விட்டெரிகிறது. அந்தச் சுவாலை உங்களிடம் தாவி வரும். ஆனால் நீங்கள் இடமளிக்கிற தில்லை. நாம் எதையாவது இழந்து விடுவோமோ என்று தற்காப்புடன் இருக்கிறீர்கள். உங்களிடம் இழப்பதற்கு ஏதேனும் இருக்குமா என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. இழப்பதற்கு ஏதுமில்லை என்றாலும் நீங்கள் தற்காப்புடன் இருக்கிறீர்கள். எங்கே இதயத்தைத் திறந்தால் உள்ளே மறைந்திருக்கும் பொக்கிசங்கள் களவாடப்பட்டு விடுமோ என்று மேற்கொண்ட தற்காப்பு அது. அங்கே இருளையும், பல பிறவிகளில் படிந்த மாசையும் தவிர வேறெதுவு மில்லை.

நீங்கள் என்னிடம் வெளிப்படையாயிருந்தால், ஊறுபடத்தக்க வராயிருந்தால் (vulnerable), உங்களை மனமார விட்டுக் கொடுப்பதாயிருந்தால் நமக்கிடையே இணைவு இருக்கும். ஒரு சீடன் குருவிடம் தன்னை மனமார விட்டுக் கொடுக்காவிடில் (sacrifice) அந்த இணைவு ஏற்படுவதற்கில்லை. விட்டுக்கொடுத்தல் முழுமையாயிருக்க வேண்டும். நீங்கள் எதையும் நிறுத்தி வைத்துக் கொண்டுவிட முடியாது. நீங்கள் ஞானம் பெறத் தயாராயிருந்தால் நேரத்தை வீணடிக்க வேண்டாம். உங்களை முழுவதுமாய் விட்டுக் கொடுங்கள். என்னு டைய தாக்குதலுக்குள்ளாக்கத் தக்கவராய் (vulnerable) இருங்கள்.

கடினந்தான். ஒருவர் தொலைந்தோம் என்று எண்ணிக் கொள்கிறார். தன்னுடைய பொக்கிசமே களவாடப்பட்டதாய் ஒருவர் எண்ணிக் கொள்கிறார். அங்கே எதுவும் இல்லை, எந்தப் பொக்கிசமும் இல்லை. ஏதேனும் இழக்கப்படுமெனில் அது நீங்களல்ல. எது இழக்க

முடியாததோ அதுதான் நீங்கள். ஊறுபடத்தக்கவராதவன் மூலம் நீங்கள் ஒன்றை இழக்கிறீர்கள் என்றால் அது உங்களுடைய அகந்தைதான். நீங்கள் இழப்பது உங்களையல்ல. உங்களைத்தவிர மற்றவற்றை இழப்பதன் மூலம் முதல் முறையாய் உங்களுடைய அதிகாரபூர்வமான இருப்புணர்வை நீங்கள் முயன்று அடைகிறீர்கள்.

எனவே, முடிவான ஞானம் பற்றிக் கேட்காதீர்கள். புத்தர் சொன்னார். 'புத்தர்கள் மட்டுமே வழியைக் காட்ட முடியும், யாரும் உங்களுக்குச் சொல்ல முடியாது. என்னால் தண்ணீரை உங்களுக்குக் காண்பிக்க முடியும். ஆனால் அந்தத் தண்ணீர் தாகத்தைத் தணிக்கிறபோது ஏற்படும் உணர்வு பற்றி என்னிடம் கேட்காதீர்கள். நான் எப்படி உங்களிடம் சொல்ல முடியும்? தண்ணீர் இங்கே இருக்கிறது. ஏன் அதை ருசிக்காமல் இருப்பது? ஏன் அதைப் பருகாமல் இருப்பது? என்னைப்பருகி, உங்களுடைய தாகத்தைத் தீர்த்துக் கொள்ளுங்கள். அந்நிலையில் அது எப்படி இருக்கிறது என்பதை, எத்தகைய உணர்வைத் தருகிறது என்பதை நீங்கள் அறிந்து கொள்வீர்கள் - அது ஓர் உணர்வு. அதை விவரிக்க வழியேதுமில்லை. அது காதலைப் போன்றது. நீங்கள் காதல் கொண்டால் மட்டுமே அது எப்படிப்பட்டது என்று நீங்கள் அறிய முடியும். ஆனால், யாரேனும் காதல் என்றால் என்னவென்று உங்களிடம் கேட்டால் நீங்கள் குழப்பமுறுவீர்கள்.

அகஸ்டின் என்பவர் சொல்லியது: 'நேரத்தைப் பற்றி எனக்குத் தெரியும். ஆனால் யாரேனும் 'இப்போ நேரம் என்ன?' என்று கேட்டால் எனக்குத் தெரியாது. நேரம் பற்றி உங்களுக்குத் தெரியும். ஆனால் யாரேனும் கேட்கிறபோது அதைச் சொல்வது அத்தனை எளிதாயிருக்காது.

ரஷ்யாவின் சிறந்த நாவலாசிரியரான டால்ஸ்டாய் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் லண்டனில் இருந்தபோது ஒரு கனவானிடம் கேட்டார். 'தயவுசெய்து சொல்லுங்கள், நேரம் என்றால் என்ன?' என்று. அந்த ஆங்கிலேயன் தன்னுடைய தோள்களைக் குலுக்கியபடி, 'யாராவது ஒரு தத்துவ மேதையிடம் போய்க் கேளுங்கள்' என்றான். டால்ஸ்டாய்க்கு ஆங்கிலம் கொஞ்சம் தகராறு. அவர் 'What is the time?' என்று கேட்பதற்குப் பதில் 'What is time?' என்று கேட்டு வைத்திருந்தார். நேரம் என்றால் என்னவென்பதை நீங்கள் அறிவீர்கள். அது தொடர்ந்து உங்களைக் கடந்தபடி இருக்கிறது. ஒரு மீனானது நீரில் வாழ்வதுபோல் நீங்கள் நேரத்தில் வாழ்கிறீர்கள். ஆனால் நீரைப்பற்றி மீனால் விளக்க முடிவதில்லை.

உண்மையில் தத்துவ ஞானமுடைய ஒரு மீனின் கதையை நான் கேட்டிருக்கிறேன். அது கடலைப் பற்றிய கதைகளை நிறையக் கேட்டு கவலையில் ஆழ்ந்தது. அந்த மீன் ஆழ்ந்த சிந்தனையில் இருந்தபோது மீன்களின் அரசன் வந்து கேட்டதாம். 'என்ன விசயம். ஏன் ஒரு மாதிரி இருக்கே?' என்று. அதற்கு அந்த மீன் சொன்னது, 'எனக்கு ரொம்ப வருத்தமா இருக்கு. கடல்னா என்னன்னு எனக்குத் தெரியலை. அதைப்பத்தி நிறையக் கேள்விப்பட்டிருந்தாலும் அதை இன்னும் பார்த்ததில்லை' என்று. மீன்களின் அரசன் பெருஞ்சிரிப்புடன் சொன்னதாம். 'முட்டாளே, நீ அதிலதான் இருக்கிறாய்' என்று.

ஆனால், நெருக்கமாய் இருக்கிற ஒன்றைப் பற்றித் தெரிந்து கொள்வது கடினம். நீங்கள் ஒருபோதும் அதை எதிர் கொண்டிருக்க மாட்டீர்கள். நீங்கள் உரிய தருணத்தில் இருந்திருந்தாலும் நீங்கள் ஒருபோதும் அதைப் பார்க்கிறதில்லை, பற்றிக் கொள்கிறதில்லை. அதைப் பற்றி விவரிப்பது கடினம்.

நீங்கள் கடவுளில் இருக்கிறீர்கள். ஆனால் கடவுளைப் பற்றி விவரிப்பது கடினம். நீங்கள் முன்பே மெய்யறிவு பெற்றவர்தாம். ஆனாலும் தேவைப்படுகிறது. ஒரு திருப்பல் (turning), ஒரு தெளிவு, ஓர் இனம் காணல், ஒரு நினைவு கூர்தல். அதனால்தான் சொல்கிறேன். நான் அதை உங்களுக்குத் தரத் தயாராயிருக்கிறேன் என்று.

கொஞ்ச நேரம் உங்கள் கையைப் பற்றிக்கொள்ள இடமளியுங்கள்.

இரண்டாவது. 'எண்ணத் தூய்மை பற்றி பதஞ்சலி எதுவும் சொல்லவில்லை. நீங்களோ அதற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கிறீர்கள்?' என்பது பற்றி சின்னதாய் ஒரு கதை:

தள்ளாடியபடி நடந்த குடிகாரன் ஒருவன் எதிர்ப்பட்டவனிடம் கேட்டான். 'நேரம் என்ன?' என்று. எதிரில் வந்தவன் தன்னுடைய கடிகாரத்தைப் பார்த்துவிட்டு அவனிடம் சொன்னான்.

குடிகாரன் திகைப்புடன் தலையாட்டியபடி சொன்னான். 'எனக்குப் பிடிபடலை. நான் ராத்திரி முழுக்க கேட்டதெல்லாம் வெவ்வேறு பதில்களா இருக்கு' என்று.

இரவு முழுக்க! நீங்கள் என்னைப் பற்றியும் பதஞ்சலி பற்றியும் சிந்திக்கிறபோது ஐயாயிரம் ஆண்டு கால வேறுபாட்டை நினைவில் கொள்ளுங்கள். இரவு முழுக்க வெவ்வேறான பதில்களே உங்களுக்குக் கிடைத்துக் கொண்டிருக்கும்.

இந்நிலவுலகில் பதஞ்சலி வாழ்ந்த காலத்தில் மனிதன் முற்றிலும் வேறானவனாயிருந்தான். முறறிலும் மாறுபட்ட ஒரு மனிதப்பண்பு இருந்திருக்கிறது. எண்ணத் தூய்மை தேவைப்பட்டிருக்கவில்லை. மக்கள் பழம்பாணியில் (primitive), எளிமையாய், குழந்தைத்தனமாய் இருந்தார்கள். ஒரு குழந்தைக்கு எண்ணத் தூய்மை தேவைப்படாது, வயதேறியவனுக்குத் தேவைப்படும். ஒரு குழந்தை எதையும் தன்னுள் குவித்துக் கொண்டிருக்காது.

ஒரு குழந்தையைக் கண்காணியுங்கள். கோபவசப்பட்ட நிலையில் அது குதிக்கும், வீறிட்டலறும், வலியுள்ளது போல் கூச்சலிடும். அதன்பிறகு கோபம் மறைந்து புன்னகைக்கும். தான் எண்ணத்தைத் தூய்மை செய்யும் முறையில் இருந்ததை அது மறந்து விடும். அந்தக் குழந்தை அன்பார்ந்த நிலையில், ஓடிவந்து, உங்களைத் தழுவிக்கொண்டு முத்தமிடும். நடந்து கொள்ளும் முறை, ஒழுங்குமுறை பற்றியெல்லாம் அது கவலைப்படுவதில்லை. நீங்களும் அதைப்பற்றிக் கவலைப்பட மாட்டீர்கள். 'அவன் குழந்தைதானே. இன்னும் பண்பாடடையவில்லை' என்று சொல்வீர்கள். இன்னும் நச்சுத்தன்மை கலக்கவில்லை, கற்பிக்கப்படவில்லை, இன்னும் கட்டுப்படுத்தப்படவில்லை என்பதுதான் அது.

குழந்தை வீறிட்டலற விரும்பினால் வீறிடுகிறது; அது முழுமையான சுதந்திரத்தோடு இருக்கும், எண்ணத்தைத் தூய்மை செய்தல் அவசியப்படாது. அது தன்னிடம் வருவதையெல்லாம் வீசியடித்துக் கொண்டேயிருக்கிறது. எதையும் சேர்த்துக் கொள்வதில்லை. ஆனால் ஒரு முதியவர்? அதே குழந்தைதான் ஐம்பது, அறுபது, எழுபது ஆண்டுகளைக் கடந்தபின் முதியவனாகிறது. அவன் அப்போது நிறையவே குவித்துக் கொண்டிருப்பான். அவன் கோபப்பட விரும்பினாலும் அவனால் முடியாமல் போகும்.

நீங்கள் கோபப்பட ஆயிரத்தியொரு செயல்நிலைகள் இருக்கும். ஆனால், உங்களால் முடியாது – அது பொருளியலுக்குப் பொருந்தாததாகும். அல்லது நிதி சார்ந்த வகையில் ஆபத்தை உண்டுபண்ணுவதாகி விடும். உங்கள் முதலாளி உங்களிடம் கூச்சல் போடும்போது நீங்கள் புன்னகை பூத்தபடி இருப்பீர்கள். அந்த ஆளை அப்படியே கொன்று போட வேண்டும் போல இருக்கும். ஆனாலும் புன்னகை செய்வீர்கள். அந்தக் கோபத்துக்கு தற்போது என்னவாயிற்று. அது உள்ளுக்குள் அடக்கி வைக்கப்பட்டதாயிருக்கும்.

ஒரு சமுதாயமாய் கூடி வாழும் வாழ்க்கையிலும் அதுதான் நடக்கிறது. மக்கள் பழம்பாணியில் இருந்தபோது பதஞ்சலி இருந்தார். இந்தியாவின் உட்பகுதிக்கு இன்னமும் ஆதிவாசிகள் வாழும் இடங்களுக்கு நீங்கள் சென்றால், அவர்களுக்கு உங்களுடைய ஆற்றல் மிக்க தியானமெல்லாம் (Dynamic meditation) தேவைப்படாது என்பதை நினைவில் வையுங்கள். ஒவ்வோர் இரவும் தங்களுடைய வேலைகள் முடிந்த பிறகு அவர்கள் நடனமாடுகிறார்கள். மனம் கிளர்ச்சியடையும் வரை ஆடுகிறார்கள். பறைகளை ஒலித்தபடி இரவு பன்னிரண்டு ஒரு மணி வரை ஆட்டத்தைத் தொடர்கிறார்கள். தங்கள் ஆற்றலைப் பெருமளவு பயன்படுத்தி, பரவசத்தோடு ஆடுகிறார்கள். அதன்பிறகு மரத்தடியில் உறங்கி விடுகிறார்கள். நாள் முழுக்க அப்படியொரு வேலை, விறகு உடைக்கிற மாதிரி. அந்நிலையில் எப்படி உங்களால் கோபத்தைக் குவித்துக் கொண்டிருக்க முடியும்? அவர்கள் ஒன்றும் அலுவலகத்தில் வேலை பார்க்கிற எழுத்தர் களல்லர். அவர்கள் இன்னும் நாகரிகமடையவில்லை. வருவதை ஏற்று வாழும் வாழ்க்கை அவர்களுடையது. விறகு உடைப்பதன் மூலம் அவர்கள் வன்முறையற்றவராயினர். அவர்களுக்கு உபதேசிக்க எந்த மகாவீரரும் தேவையில்லை. வன்முறையற்றவராயிருப்பதற்கு எந்தச் சமணக் கோட்பாடும் அவர்களுக்குத் தேவைப்படவில்லை.

ஆம், ஒரு வியாபாரிக்கு வன்முறையற்ற கோட்பாடு தேவைப் படும். அதனால்தான் எல்லா சமணர்களும் வியாபாரிகளாயிருக் கிறார்கள். நாள் முழுக்கத் தங்களுடைய ஆசனத்தில் சிரித்தபடி அமர்ந்திருக்கிறார்கள். ம்... கிட்டத்தட்ட பைத்தியமே பிடித்து விடும். அந்நிலையில் கட்டுப்பாடாய் இருக்க, மிகுந்த உணர்ச்சி வேகமில்லாத (non-violence) ஒரு கோட்பாடு அவருக்குத் தேவைப்படும். இல்லையேல், எந்தக் காரணமுமில்லாமல் ஒருவர் அடுத்தவர் மீது பாய்ந்து விடுவார். ஆனால், விறகு தறித்துக் கொண்டிருக்கும் ஒரு மனிதனுக்கு வன்முறை இல்லாதிருக்க ஒரு கோட்பாடு தேவைப் படுமா என்ன? தன்னுடைய உணர்ச்சி வேகத்தை மொத்தமாய் வீசியெறிந்து விட்டுத்தானே அவன் வீடு திரும்புகிறான். அப்போது அவன் வன்முறையற்றவனாயிருக்கிறான்.

அதனால்தான் எண்ணத்தைத் தூய்மை செய்வது பற்றி பதஞ்சலி பேசவில்லை. அது தேவைப்பட்டிருக்கவில்லை. சமுதாயம் குழந்தைத்தனமான நிலையில் இருந்தது. மக்கள் குழந்தைகளைப் போல் கள்ளம் கபடமற்றவர்களாய் இருந்தனர். அவர்கள் தங்கள்

உணர்ச்சிகளை அடக்கி வைக்காமல் வாழ்ந்தார்கள். மனித மனத்துள் அடக்குமுறை நுழைகிற போதுதான் எண்ணத்தைத் தூய்மை செய்தல் (catharsis) தேவைப்படும். ஒரு சமுதாயம் எந்த அளவு அடக்கு முறையைக் கொண்டிருக்கிறதோ அந்த அளவு எண்ணத்தைத் தூய்மை செய்து வெளிப்படுத்த வேண்டியிருக்கும். அப்போது அதை வெளிக்கொண்டு வர நீங்கள் ஏதாவது செய்தாக வேண்டும்.

அடுத்தவரிடம் கோபத்தைக் காட்டுவதைவிட ஆற்றல் மிக்க தியானத்தை மேற்கொள்வது நல்லது என்று நான் உங்களுக்குச் சொல்கிறேன். காரணம், நீங்கள் அதை அடுத்தவர் மீது காட்டினால் உங்களுடைய சஞ்சித கர்மம் மேலும் பெரிதாகி விடும். நீங்கள் அதைத் தியானத்தில் சிதறடித்து விட்டால் உங்களுடைய சஞ்சித கர்மம் காலியாகி விடும். நீங்கள் கோபப்படுகிறீர்கள். ஆனால் யார் மீதும் அந்தக் கோபத்தைக் காட்டவில்லை. நீங்கள் கூச்சலிடுகிறீர்கள், ஆனால் யாருக்கெதிராகவும் அல்ல. அழுவதும், புலம்புவதும், கூச்சலிடுவதும், கோபத்துடனிருப்பதும், உணர்ச்சி வேகத்தைக் காட்டுவதும் உங்களைத் தூய்மைப்படுத்தி விடும். அது எதிர்காலத்தில் எந்தத் தொடர்ச்சியையும் உண்டாக்குவதில்லை.

ஆக, சமநிலை பற்றிப் பதஞ்சலி என்ன சொல்லியிருந்தாலும், நான் எண்ணத் தூய்மையை அதில் ஒரு பகுதியாக்குகிறேன். காரணம், நான் பதஞ்சலி பற்றிக் கவலைப்படவில்லை. என்னுடைய கவலை யெல்லாம் உங்களைப் பற்றித்தான் - நான் உங்களை நன்றாக அறிவேன். நீங்கள் அதைத் தொலைவில் எறியவில்லை என்றால் யார் மீதாவது எறிந்து விடுவீர்கள். அந்நிலையில் அது கர்மத் தொடர்பை உண்டுபண்ணி விடும்.

வரவிருக்கும் காலத்திலும் எண்ணத்தைத் தூய்மை செய்தல் இன்றியமையாத ஒன்றாகிறது. மனிதன் எத்தனைக்கு நாகரிகமடை கிறானோ அத்தனைக்கு அவனுடைய எண்ணத்தைத் தூய்மை செய்வதும் அவசியமாகிறது.

கேள்வியில் மூன்றாவது பகுதி: 'மன ஆற்றல்களைத் தவறாகப் பயன்படுத்தும் நிலையில் அதற்கான நச்சு முறிவு (antidote) பற்றித் தயவு செய்து விளக்குங்கள்.'

மன ஆற்றல்கள் தவறாகப் பயன்படுத்தப்பட்ட நிலையில் அதற்கான ஒரே நச்சு முறிவு அன்பு மட்டுமே. இல்லையேல் அதிகாரம் அதைக் கெடுத்துவிடும். அதிகாரம் அனைத்தும் கெடுக்கிறவைதாம்.

அது செல்வமாயிருக்கலாம், கவுரவமாயிருக்கலாம், அது அரசியலாக அல்லது மனம் சார்ந்ததாக இருக்கலாம் - அது ஒன்றும் பெரிய வேறுபாடாகாது. உங்களை அதிகாரம் மிக்கவராய் நீங்கள் உணரும் போது, மற்றவர்களைப் பொறுத்தவரை அது ஆபத்துதான், காரணம் அதிகாரம் கண்ணை மறைத்து விடும். அன்பு கண்களைத் திறக்கும், கண்களைத் தூய்மை செய்யும்... உங்களுடைய பார்க்கும் திறன் தெளிவடையும். அதிகாரமோ தெளிவற்றதாக்கும்.

ஒரு குட்டிக்கதை:

கருமித்தனமுடைய ஒரு பணக்காரன். அவன் ஏழ்மைப்பட்டவர்களுக்கு எதுவும் தருவதில்லை. அவனுடைய குரு, உணவும் மருந்தும் தேவைப்படுகிற ஓர் ஏழைக் குடும்பத்துக்கு உதவும்படி அவனிடம் கேட்டுக் கொண்டார். அவனோ மறுத்து விட்டான்.

அந்த குரு ஒரு கண்ணாடியை அவனிடம் கொடுத்து 'இதனுள் பார். உனக்கு என்ன தெரிகிறது?' என்று கேட்டார்.

அவன் சொன்னான். 'இந்தக் கண்ணாடியில் என்னுடைய முகந்தான் தெரிகிறது. வேறெதுவும் இல்லை' என்று.

'சரி, இப்போ சன்னல் வழியே பார். நீ எதைக் காண்கிறாய்?' என்று கேட்டார் குரு.

அவன் சொன்னான்: 'நான் ஆண்களையும், பெண்களையும் பார்க்கிறேன். இரண்டு காதலர்கள் ஒருவரையொருவர் கவரும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள். அத்துடன் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். ஏன், ஏன் என்னிடம் கேட்கிறீர்கள்?' என்று.

'உன்னுடைய கேள்விக்கு நீயே பதிலளித்து விட்டாய். சன்னலின் வழியே நீ பார்த்தது வாழ்க்கை; கண்ணாடியில் நீ பார்த்ததோ உன்னைத்தான். முகம் பார்க்கும் கண்ணாடி என்பது ஒரு கண்ணாடி சன்னல் மாதிரி. ஆனால், அதன் பின்புறத்தில் வெள்ளி முலாம் பூசியிருக்கும். இந்த வெள்ளிப் பூச்சு உனது வாழ்க்கை பற்றிய நோக்கு முறையை மறைத்து விடுகிறது. உன்னை மட்டுமே நீ பார்க்கிறாய். மற்றவற்றையெல்லாம் அது மறைத்து விடுவதால் நீ உன்னையே பார்க்கிறாய், உன்னைப் பற்றியே சிந்திக்கிறாய்' என்று குருவானவர் பதிலளித்தார்.

அந்தப் பணக்காரன் தலைகுனிந்தபடி சொன்னான். 'நீங்கள் சொல்வது சரிதான். வெள்ளி முலாம் என்னைக் குருடாக்கி விட்டது'

என்று. ஆனால், அதிகாரம் என்கிறபோது எல்லா அதிகாரங்களுமே கண்ணை மறைக்கிறவைதாம். அது வெள்ளியோ அல்லது தங்கமோ அல்லது மனம் சார்ந்த விதத்தில் அடையப்பட்ட எதுவோ எல்லா அதிகாரமும் கண்ணை மறைத்து விடும். நீங்கள் சமநிலையை அடைந்து விட்டால் அன்பும், நட்பார்ந்த தன்மையும் உடனே வந்துவிடும். சமநிலைக்கு அடுத்து அது முதலிடம் பெற்று விட்டால் உங்கள் ஒட்டுமொத்த ஆற்றலும் அன்பின் பிரவாகமாய், பகிர்ந்து கொள்வதாய் மாறிவிடும். ஆக, உங்களிடம் இருப்பவற்றை எல்லாம் நீங்கள் பகிர்ந்து கொள்ளத் தொடங்கி விடுவீர்கள். அந்நிலையில் எதையும் தவறாகப் பயன்படுத்துகிற சாத்தியமில்லை.

'பகவானே! ஒரு குடிகாரன் இன்னொருவனிடம் அனைத்திலும் பார்க்க இனியது உன்னுடைய மதுதான்' என்றதுபோல.

இது பூர்ணிமாவிடமிருந்து வந்தது. நான் ஒன்றை மட்டும் கூற முடியும்: 'பூர்ணிமா, நான் பசியைத் தூண்டும் பொருளை மட்டுமே உன்னிடம் தந்தேன். மதுவிற்காகக் காத்திரு. பசியூக்கி (appetizer)யிலேயே ரொம்பவும் மயங்கி விடாதே.

நான் உனக்குச் சொல்வதெல்லாம் பசியூக்கி மாதிரிதான்.

***பிரியமுள்ள பகவானே! தாங்கள் எப்போதேனும் பொய் பேசியதுண்டா?***

நான் ஒரு பொய்யன், அப்பழுக்கில்லாத பொய்யன் – அத்துடன் இதுவும் ஒரு பொய்தான்.

***சூத்திரம் – 28   'சந்தரே தாரா வ்யூஹ ஞானம்'***

சந்திரனின் மீது சம்யமம் செய்வதால் நட்சத்திரக் கூட்டங்களைப் பற்றிய அறிவு உண்டாகிறது.

***சூத்திரம் – 29   'த்ருவே தக்கதி ஞானம்'***

துருவ நட்சத்திரங்களின் மீது சம்யமம் செய்வதால் நட்சத்திரக் கூட்டங்களைப் பற்றிய அறிவு உண்டாகிறது.

***சூத்திரம் – 30   'நாபி சக்ரே காயவ்யூஹ ஞானம்'***

தொப்புள் சக்கரத்தில் சம்யமம் செய்வதால் உடலமைப்பு பற்றிய முழு ஞானம் உண்டாகிறது.

***சூத்திரம் – 31   'கண்ட கூபே க்ஷுத்பிபாஸா நிவிருத்தி'***

தொண்டைக்குழி மீது சம்யமம் செய்தால் பசி மறையும். தாகத்தையும் அதுபோல் நீக்கிக்கொள்ள முடியும்.

***சூத்திரம் – 32   'கூர்ம நாட்யாம் ஸ்தைர்யம்'***

கூர்மம் என்கிற நாடியில் சம்யமம் செய்தால் உடல் உறுதி பெறும்.

பதஞ்சலி *ஊக வணிகம் செய்பவரல்லர். அவர் ஒன்றும் கவலையற்ற, குற்றம் குறைகளற்ற தத்துவ மேதையுமல்லர். அவர் நடைமுறை சார்ந்தவர். என்னைப்போலவே அவரும் தொழிலைக் கருத்தில் கொள்பவர்தான். அவருடைய அணுகுமுறை விஞ்ஞான பூர்வமானது. அந்த அணுகுமுறையே மற்றவர்களிடமிருந்து அவரை முழுதுமாய் வேறுபடுத்திக் காட்டுவது. மற்றவர்கள் மெய்ம்மை (truth) பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பவர்கள். அவரோ மெய்ம்மை குறித்துச் சிந்தித்துக் கொண்டிருக்கவில்லை. மெய்ம்மையை எப்படி அடையலாம் என்பதற்கு உங்களைத் தயார்படுத்துகிறவர்.

மெய்ம்மையை எண்ணமிடுவதற்கில்லை, அது ஏற்கப்பட வேண்டியது. அது முன்பே உள்ளதுதான், அதைப்பற்றிச் சிந்திக்க வழிமுறை ஏதுமில்லை. நீங்கள் எந்த அளவுக்குச் சிந்திக்கிறீர்களோ அந்த அளவுக்கு அதிலிருந்து விலகித் திரிவீர்கள். சிந்தித்தல் என்பது சுற்றித் திரிதல், மேகக்கூட்டத்தினிடையே அலைந்து திரிவதாகும். நீங்கள் சிந்திக்கத் தொடங்கியதுமே அதிலிருந்து விலகியவராகி விடுவீர்கள்.

மெய்ம்மை காணப்பட வேண்டியது, சிந்திக்கப்பட வேண்டியதல்ல. பதஞ்சலியின் அணுகுமுறையே கண்களால் காணக்கூடிய தெளிவை உண்டுபண்ணுவதுதான். அது ஒன்றும் கவிதையோ கனவு காண்பதோ அல்ல, அது கடினமான வேலையாய் இருக்கும் என்பது உண்மை. ஒரு மனிதன் ஆய்வுக்கூடமாய் மாற வேண்டியிருக்கும். தனது ஒட்டுமொத்த வாழ்க்கையையும், ஒரு பரிசோதனையாய் அவர் மாற்றும்படி இருக்கும் - அந்நிலையில்தான் மெய்ம்மை என்பது தெளிவாய் புரிந்து கொள்ளப்படும்.

ஆக, பதஞ்சலியின் சூத்திரங்களைக் கவனிக்கும்போது, அவர் சில கொள்கைகளை உங்களிடம் கையளிக்கவில்லை என்பதை நீங்கள் மறந்துவிடக் கூடாது. உங்களை மாற்றக்கூடிய ஒரு

---

* *ஊக வணிகம் செய்பவர் (speculator) - விலைவாசிகள் தனக்குச் சாதகமாய் இருக்கும் என ஊகித்து வணிகம் செய்பவர்.*

செயல்முறையை அவர் உங்களுக்கு வழங்கியிருக்கிறார். ஆனால் அதன்பிறகு அது உங்களைப் பொறுத்ததாகி விடுகிறது.

சமயத்தில் அக்கறை கொண்ட மக்கள் நான்கு வகைப்படுவர். முதலாவது வகையினர் - பெருமபான்மையானவர்கள், 'அறிந்து கொள்ளும் ஆர்வம் (curious) உடையவராவர். அவர்கள் வேடிக்கை யானதையும், இயற்கை மீறியதையும், அக்கறை உண்டுபண்ணுகிற தையும், கவர்ச்சியானதையும் கவனமாய் தேடிக் கொண்டிருப்பவர்கள். பதஞ்சலி அவர்களுக்கானவரல்லர். காரணம், தனது வாழ்க்கையை மாற்றுமளவு தன்னால் நம்பிக்கை பெற முடியும் என்பதில் அவருக்கு ஆர்வம் இருந்ததில்லை. அவர் மனக்கிளர்ச்சியை எதிர்பார்க்கிறவர். பதஞ்சலி அவர்களுக்கானவரல்லர்.

அடுத்து, இரண்டாம் வகை, நாம் அதனை 'மாணவர்' (student) என்போம் - அறிவை வளர்த்திக் கொள்ளுதலில் தன்னை ஈடுபடுத்திக் கொள்பவர். இவர் அறிவுசார்ந்த விதத்தில் அக்கறை உடையவர். பதஞ்சலி எதை எண்ணுகிறார், எதைச் சொல்கிறார் என்பதை இவர் அறிய விரும்புவார். ஆனால் அறிதலைவிட அறிவில் இவருக்கு அதிக அக்கறை. அவர் தன்னை மாற்றிக்கொள்ளத் தயாராயில்லை. அவர் அவராகவே இருக்க விரும்புகிறவர், அறிவை மேலுமு சேகரித்துக்கொள்ள விரும்புகிறவர். பதஞ்சலி இவ்விரண்டு வகையில் எந்த வகைக்குமானவரல்லர்.

அடுத்து மூன்றாம் வகை சீடர் (disciple). தன்னுடைய வாழ்க்கையைக் கட்டுப்பாடுகளுக்குட்படுத்தத் தயாராயிருப்பவரே சீடர். ஒரு பரிசோதனையின் மூலம் தன்னுடைய ஒட்டுமொத்த இருப்புணர்வையும் மாற்றிக்கொள்ள யார் தயாராயிருக்கிறாரோ அவரே சீடர். அவர் உள்ளார்ந்த கிளர்ச்சியூட்டும் அனுபவத்தைத் தொடர்வதற்குப் போதிய துணிவுடன் இருப்பவர். அது மிகச்சிறந்த, துணிச்சல் மிக்க அனுபவம், காரணம் தாம் எங்கே சென்று கொண்டிருக்கிறோம் என்பது எவருக்கும் தெரியாது. அறிந்திராத ஒன்றை நோககியே ஒருவர் செல்கிறார். எல்லையற்ற ஆழத்துக்குள் அவர் செல்கிறார். யோகா சீடருக்குரியது. சீடர் பதஞ்சலியுடன் இசைவாகக் கூடியவராய் இருக்கிறார்.

அடுத்து வருவது நான்காம் நிலை - நான்காம் வகை, நான் அதை பக்தர் (devotee) என்பேன். சீடர் தன்னை மாற்றிக்கொள்ளத் தயாராயிருப்பவர். ஆனால், தன்னையே *பரித்தியாகம் செய்ய அவர்

---

* *பரித்தியாகம் - முற்றிலும் விடுதல் (sacrifice)*

தயாராயில்லை. பக்தரோ தன்னை முற்றுமாய் விட்டுக்கொடுக்கத் தயாராயிருப்பார். சீடர் பதஞ்சலியுடன் நெடுந்தொலைவுக்குச் செல்வார். ஆனால் பக்தராகாவிடில் முடிவெல்லை வரை அவர் செல்வதில்லை. அவர் பக்தராகாவிடில் மதம் அக்கறை காட்டும் மாற்றம் ஒரு மாற்றமேயல்ல என்பதை அடையாளம் காண முடியாது. அது ஒன்றும் உங்களிடத்தில் சின்னச்சின்ன திருத்தங்களைச் செய்வதல்ல, உங்களை மிகச்சிறந்தவராக்குவதும் அல்ல. அது ஒரு மரணம். அதில் தன்னை முற்றிலுமாய் ஒருவர் விடவேண்டியிருக்கும். அது உங்களுடைய கடந்த காலத்துடன் தொடர்ச்சியற்றதாகும்.

தன்னை மாற்றிக் கொள்வதற்கு மட்டுமல்ல, தன்னை இழப்பதற்கும் சீடன் தயாராகிறபோது அவன் ஒரு பக்தனாகி விடுகிறான். நெடுந்தொலைவு போக முடிகிற சீடன் ஒரு நாளில்லாவிட்டாலும் ஒருநாள் பக்தனாகி விடுவான். அவன் பக்தனாகி விட்டபின்பே பதஞ்சலியை முழுமையாய் புரிந்து கொண்டவனாவான். அதன் நேர்த்தியையும், சிறப்பையும், அறிந்திராத ஒன்றினுள் செல்ல பதஞ்சலி திறக்கும் மிகப்பெரிய வாசலையும் அப்போது அவன் புரிந்து கொள்கிறான்.

ஆனால், ஆர்வக்கோளாறு காரணமாய் ரொம்பப் பேர் பதஞ்சலி பற்றி பல நூல்களை எழுதியிருக்கிறார்கள். அவர்களுள் மாணவ நிலையிலுள்ள பலர், நிரம்பக் கற்றதனால் அமையும் அறிவைக் கொண்டு தடிமனான பல புத்தகங்களை எழுதித் தள்ளியிருக்கிறார்கள். அவர்கள் நிறையவே தீங்கு விளைவித்திருக்கிறார்கள் என்றுதான் சொல்ல வேண்டும். கடந்த ஐயாயிரம் ஆண்டுகளில் அவர்கள் பதஞ்சலிக்கு விளக்கங்களும் மறு விளக்கங்களும் தந்தபடி இருந்திருக்கிறார்கள். அதுமட்டுமல்ல, விளக்கத்துக்கு விளக்கம் அதற்கும் விளக்கம் என்றும் இருந்திருக்கின்றன. எல்லாம் சேர்ந்து ஒரு காடு போல் ஆகிவிட்டது. அந்தக் காட்டுக்குள் பதஞ்சலியைக் கண்டுகொள்வது கடினம்.

இந்தியாவில் மனிதனுடைய தன்னுணர்வில் (consciousness) எந்தவோர் உண்மையைக் கொண்டுவர முயன்றவருக்கும் இந்தப் பேராபத்து நிகழ்ந்திருக்கிறது. அவர்கள் தொடர்ந்து விளக்கமளித்தபடி இருக்கிறார்கள். அவர்கள் மேலும் குழப்பங்களை ஏற்படுத்து கிறார்களேயன்றி தெளிவையல்ல, காரணம் முதலில் அவர்கள் சீடர்களல்லர். அவர்கள் சீடர்களாகவே இருந்தாலும்கூட சரியான முறையில் விளக்கமளிக்கக்கூடிய மனநிலையில் அவர்கள்

இருக்கவில்லை. பக்தன் மட்டுமே... ஆனால் பக்தர்கள் சாதாரணமாய் தொல்லை கொடுப்பதில்லை.

இந்தக் காரணத்துக்காகவே நான் பதஞ்சலியை விவாதத்துக்கு எடுத்துக்கொண்டது. அந்த மனிதரிடம் நீங்கள் மிகுந்த கவனம் வைக்க வேண்டும். பதஞ்சலியின் அறிவியல் மனோபாவத்துடனும், உயர்வுடனும் ஒப்பிடக் கூடியவர்கள் அரிதிலும் அரிதாகவே இருப்பார்கள். அவர் மதத்தை கிட்டத்தட்ட ஓர் அறிவியலாகவே ஆக்கிவிட்டார். அவர் விளங்காத புதிர்களில் இருந்து மதத்தை வெளியே கொண்டு வந்தவர். ஆனால், விளக்கங்கள் அவருடைய சூத்திரங்களை மீண்டும் புதிர்களின் உலகத்துக்கே தள்ளிச்சென்று விடும் போலிருக்கிறது. பதஞ்சலி மீண்டும் வந்து, தம்முடைய சூத்திரங்களுக்கு அளிக்கப்பட்டிருக்கும் விளக்கங்களைப் பார்த்தால், அவராலேயே அதை நம்ப முடியாமல் போய்விடும்.

வார்த்தைகள் ரொம்பவும் அபாயகரமானவை. அவற்றை வைத்துக்கொண்டு நீங்கள் எளிதாய் காய்களை நகர்த்த முடியும். வார்த்தைகள் விலைமாதர்களைப் போல, அவற்றை நீங்கள் பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால் ஒருபோதும் அவற்றின் மீது நீங்கள் நம்பிக்கை வைப்பதற்கில்லை. புதிதாய் ஒவ்வொருவர் விளக்கமளிக்கிற போதெல்லாம் அவற்றின் பொருள் மாறிக்கொண்டே போகும். ஒரு காற்புள்ளி போதும், கதையையே மாற்றிவிட. சம்ஸ்கிருதம் ரொம்பவும் கவித்துவமான ஒரு மொழி – ஒவ்வொரு வார்த்தையும் பல பொருள்களைக் கொண்டதாயிருக்கும். ஆக ஒரு விஷயத்தைப் புரியாத புதிராக்கி விடுவது மிகவும் எளிது.

இது நான் கேள்விப்பட்டது. ஒரு சமயம் இரண்டு நண்பர்கள் ஓட்டல் ஒன்றில் தங்கியிருந்தனர். அவர்கள் மலைப்பிரதேசத்தில் பயணம் செய்து கொண்டிருந்தனர். அவர்கள் காலை மூன்று மணிக் கெல்லாம் அருகில் உள்ள ஒரு சிகரத்தில் ஏறி சூரியோதயத்தைக் காண விரும்பினர். எழுப்பும் பொறி (alarm) ஒலித்தபோது அவர்களுள் *ஆப்டிமிஸ்டான ஒருவன் சொன்னான். 'கடவுளே, காலை வணக்கம்' என்று. **பெசிமிஸ்டான மற்றொருவனோ, 'அடக்கடவுளே, பொழுது விடிஞ்சிட்டதா?' என்றான்.

---

* *ஆப்டிமிஸ்ட் (optimist) - கெடுதியான சூழ்நிலைகளிலும் நம்பிக்கை தளராதிருப்பவர், எதிலும் நலமே காண்பவர்.*

** *பெசிமிஸ்ட் (pessimist) - ஒவ்வொன்றிலும் குறை காண்பவர், எடுத்ததற்கெல்லாம் கவலைப்படுபவர்.*

அவர்கள் இருவருமே அதே வார்த்தைகளைத் தாம் பயன்படுத்தினார்கள். ஆனால், அதில் மிகப்பெரிய வித்தியாசம் இருந்தது.

நான் கேள்விப்பட்ட ஒரு சூஃபி கதை, ஒரு குருவின் இரண்டு சீடர்கள் மடாலயத் தோட்டத்தில் அமர்ந்து தியானம் செய்து கொண்டிருந்தனர்.

ஒருவன் சொன்னான், 'நாம் புகை பிடிக்க இடமளித்தால் நன்றாயிருக்கும்' என்று.

அடுத்தவன் சொன்னான், 'அது நடவாத காரியம். நம்முடைய குரு அதையெல்லாம் அனுமதிக்க மாட்டார்' என்று.

'ஏன் முயன்று பார்க்கக் கூடாது. அதனால் எதுவும் நஷ்டமாகி விடாது. நாம் அவரிடம் கேட்டேயாக வேண்டும்' என்று அவர்கள் சொல்லிக் கொண்டனர்.

அடுத்த நாள் குருவிடம் அவர்கள் கேட்டனர். குரு முதலாவது சீடனிடம் 'இல்லை, அதெல்லாம் கூடாது' என்று மறுத்தார். இரண்டாவது சீடனிடம், 'ஆகா, நிச்சயம் அப்படிச் செய்யலாமே' என்றார்.

இந்த ஆள் எந்த ரகத்தைச் சேர்ந்தவர் என்று புரியவில்லை அவர்களுக்கு. அவர்கள் சந்தித்துக் கொண்டபோது அவர்களுள் ஒருவன் கேட்டான். 'தயவு செய்து சொல், நீ என்னவென்று அவரிடம் கேட்டாய்?'

குருவானவர் யாருடைய வார்த்தையை மறுத்து 'கூடாது' என்றாரோ அவன் பேசினான். 'நான் அவரிடம், 'ஐயா, தியானம் செய்யும்போது புகைக்கலாமா?' என்று கேட்டேன். அவர் மறுத்துவிட்டார். அது சரி, நீ என்ன கேட்டாய்?'

இரண்டாமவன் சொன்னான். 'நான் அவரிடம், 'புகைக்கிறபோது தியானிக்கலாமா?' என்று கேட்டேன். 'ஆகா, நிச்சயமாய்' என்று அவர் சொல்லிவிட்டார்.

நிறைய வேறுபாடுகள். வார்த்தைகள், விலைமாதர்கள் ஒருவர் சொற்களை வைத்து ஆடும் ஆட்டத்துக்கு முடிவே இல்லை.

நான் பொருள் விளக்கம் தருகிறவனல்லன். நான் எதைச் சொன்னாலும் எனக்குத் தகுதியாய் பட்டதையே சொல்கிறேன். பதஞ்சலியால் அதிகாரமளிக்கப்பட்டு நான் சொல்லவில்லை.

என்னுடைய அனுபவங்களும் அவருடைய அனுபவங்களும் ஒத்திருப்பதால் நான் அவரைப்பற்றிப் பேசுகிறேன். ஆனால், பதஞ்சலியின் வலிமையை நிரூபிக்க நான் முயலவில்லை. நான் எப்படி அதை நிரூபிக்க முடியும்? பதஞ்சலி சரியானவர் என்பதை நிரூபிக்க நான் முயற்சிக்கவில்லை. நான் எப்படி அதை நிரூபிப்பது? என்னைப்பற்றி வேண்டுமானால் ஓரளவு நான் கூற முடியும். அந்நிலையில் நான் எதைக் கூற முடியும்? நான் சொல்லக்கூடியது இதுதான்: அதே அனுபவந்தான் எனக்கும் கிடைத்தது. பதஞ்சலி அதற்கோர் அழகான மொழிநடையையும், வெளிப்படுத்தும் முறையையும் தந்திருக்கிறார்.

அறிவியல் விளக்கத்தைப் பொறுத்தவரை பதஞ்சலியை உகந்த நிலைக்குக் கொண்டு வருவது கடினம். இதனை நினைவில் கொள்ளுங்கள்.

அவர் திரும்பி வருவாரெனில், கிட்டத்தட்ட அவருடைய நிலை:. ஒரு கதையைப் படித்தபோது அவரை நினைத்துக் கொண்டேன். அது ஒரு சாலையில் நடந்தது.

ஒரு மனிதன் நகரத்துக்கு வரும் சாலையில் கழுதைச் சவாரி செய்து வந்ததை மூன்று திருடர்கள் கண்டனர். கழுதையைத் தொடர்ந்து வந்த வெள்ளாட்டின் கழுத்தில் கணகணவென்று ஒலிக்கும் மணி கட்டப்பட்டிருந்தது.

திருடர்களில் ஒருவன் இறுமாப்புடன் சொல்லிக் கொண்டான் 'நான் அவனுடைய ஆட்டைத் திருடப் போகிறேன்' எறு.

இரண்டாம் திருடன் சொன்னான். 'அது ஒன்றும் பெரிய விஷயமில்லை. அவன் உட்கார்ந்திருக்கும் கழுதையை நான் களவாடப் போகிறேன்' என்று.

மூன்றாம்வன் சொன்னான். 'அந்த மனிதன் உடுத்தியிருக்கும் உடைகளை நான் அவனுக்குத் தெரியாதபடிக்கு எடுத்து வரப் போகிறேன்' என்று.

முதலாம் திருடன் அந்த மனிதனைத் தொடர்ந்து சென்று தெரு முனையில், ஆட்டு மணியை அவிழ்த்து கழுதையின் வாலில் கட்டிவிட்டு, ஆட்டை திருடிச் சென்றான். மணி ஒலித்துக் கொண்டேயிருந்ததால் ஆடும் தன்னைத் தொடர்ந்து வருகிறது என்று அந்தக் கிராமத்தான் நினைத்துக் கொண்டான்.

இன்னொரு தெரு முனையில் இரண்டாம் திருடன் அவனை யணுகி, 'ஹேய் என்ன இது! கழுதை வாலில் மணி கட்டியிருக்கு. புதுப்பழக்கமா?' என்று கேட்டான்.

அந்த மனிதன் பின்னால் திரும்பிப் பார்த்துவிட்டு 'என்னுடைய ஆட்டைக் காணோம்' என்று கூவினான்.

திருடன் சொன்னான். 'யாரோ ஒருவன் ஆட்டுடன் அந்தப்பக்கம் போவதைப் பார்த்தேன்' என்று.

அந்த மனிதன், 'என்னுடைய கழுதையைக் கொஞ்சம் பார்த்துக் கொள்' என்று சொல்லிவிட்டு, ஆட்டை மீட்டு வர ஓடினான்.

திருடன் கழுதை மீதேறிச் சென்றுவிட்டான்.

ஆட்டைத் தேடி அலைந்துவிட்டு, பயனிலலாமல் திரும்பினான் அந்தக் கிராமத்தான். அங்கே கழுதையைக் காணவில்லை. அவன் சோர்வுடன் கொஞ்ச தூரம் நடந்திருப்பான். அங்கே கிணற்றடியில் ஒருவன் அழுதபடி அமர்ந்திருக்கக் கண்டான்.

'என்ன விஷயம்? என்னுடைய ஆட்டையும், கழுதையையுந் தான் அவர்கள் திருடிச் சென்று விட்டனர். நீ எதற்காகப் புலம்பிக் கொண்டிருக்கிறாய்?' என்று அவனிடம் கேட்டான்.

'என்னுடைய நகைப்பெட்டி கிணற்றில் விழுந்து விட்டது. எனக்கோ கிணற்றில் இறங்குவதற்குப் பயம். நீர் அந்தப் பெட்டியை எடுத்துத் தந்தால் அதில் உள்ளதில் சரிபாதியை உமக்குத் தந்து விடுகிறேன்' என்றான் அவன்.

தன்னுடைய இழப்பை ஈடுசெய்யக் கருதிய கிராமத்தான், தன் உடைகளை அவிழ்த்து வைத்துவிட்டு, கிணற்றில் இறங்கினான். ஆனால் வெறுங்கையனாகத்தான் அவன் வெளியில் வந்தான். அவன் வெளியில் வந்து பார்த்தபோது அவனுடைய உடைகளைக் காணோம். அவன் ஒரு கம்பை எடுத்துச் சுழற்றத் தொடங்கினான். என்னவென்று பார்க்கக் கூட்டம் கூடியது.

அவன் சொன்னான். 'அவங்க என்கிட்டேயிருந்ததை எல்லாம் திருடிட்டாங்க. எங்கே என்னையும் திருடிட்டுப் போயிருவாங்க ளோன்னு பயமாயிருக்கு' என்று.

பதஞ்சலி மீண்டும் வந்தால் அதே நிலைதான் இருக்கும். பொருள் விளக்கங்கள் எல்லாவற்றையுமே துடைத்துப் போட்டு விட்டன. அவர்கள் எல்லாவற்றையும் களவாண்டு விட்டனர். இடுப்புத்

துணியைக்கூட விட்டு வைக்கவில்லை. நீங்கள் ஒருபோதும் சந்தேகிக்காத அளவுக்கு வெகு நேர்த்தியாகவே அவர்கள் அதைச் செய்து விட்டனர். உண்மையில் ஐயாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு நான் சொல்கிற விசயங்கள் பதஞ்சலியின் உரையாசிரியர்களைப் படிப்பவர்களுக்கு வியப்பாய் தெரியலாம். என்னுடைய சமாசாரங்களே வியப்பை உண்டுபண்ணுவதாகத்தான் இருக்கும். நான் புதுபபுது அர்த்தங்களைக் கற்பிப்பதாய் அவர்கள் எண்ணிக் கொள்வார்கள். நான் புதிதாய் பொருள் சொல்ல வரவில்லை. காலகாலமாய் பதஞ்சலிக்குத் தவறான விளக்கங்கள் வந்து கொண்டிருக்கும் நிலையில், அவர் கருத்தில் கொண்டது இன்னதென்று நான் சரியாகவே சொன்னாலும் அது விசித்திரமாகத்தான் படும், புதுமையாய் நம்ப முடியாததாய் தெரியும்.

கடைசி சூத்திரம் சூரியனைப் பற்றியது. சூரிய மண்டலத்தில் உள்ள சூரியனைப்பற்றி எண்ணமிடுவது இயல்பாகவே படும். அவ்விதமாகத்தான் உரையாசிரியர்கள் விளக்கமளிக்க முற்பட்டதும். அது அப்படியில்லை. சூரியன் உங்களுடைய பாலுறவு இயக்க நுட்பத்துடன் (sex mechanism) தொடர்புடையது உங்களுக்குள் ளிருக்கும் அனைத்து பலம், சக்தி, வெப்பம் இவற்றின் மூலமாயிருப்பது பாலுறவு இயக்கம்.

ஆங்கிலத்தில் ஒரு குறிப்பிட்ட நரம்புகளின் சேர்க்கையை (பின்னலமைப்பு) 'Solar *plexus' என்கிறோம். ஆனால் அந்த 'Solar plexus' தொப்புள் பகுதிக்குள் அமைந்திருப்பதாக மக்கள் கருது கிறார்கள். சூரிய சக்தி பாலுறவு மையத்தில் இருக்கிறதேயன்றி தொப்புள் பகுதியிலல்ல. காரணம், அங்கிருந்துதான் உங்களுடைய ஒட்டுமொத்த உடம்பும் வெப்பத்தைப் பெறுகிறது. இந்த விளக்கம் தலையைச் சுற்றி மூக்கைத் தொடுகிற மாதிரி தெரியலாம். எனவே, அதுகுறித்து நான் மேலும் விளக்குகிறேன். அத்துடன் சந்திரன், நட்சத்திரங்கள், துருவ நட்சத்திரம் இவையும் இருக்கின்றன.

பதஞ்சலி சூரிய மண்டலத்தைப் பற்றி சோதிடவியல் அல்லது கோளியலுக்கான சொற்பாங்கில் கூறுவதுபோல இருக்கலாம். ஆனால், அவர் உங்களுக்குள் இருக்கும் அண்டவெளி பற்றியே பேசுகிறார், மனிதன் ஒரு முழுமையான - பல பகுதிகளின் தொகுதி. வெளியில் இருக்கும் எல்லாமும் அவனுக்குள் இருக்கிறது. மனிதன் ஒரு 'மினி சைஸ்' பிரபஞ்சம்.

---

* *plexus - உடலில் இருக்கும் பின்னல் அமைப்பு போன்ற நரம்புகள்.*

மனிதர்களை இரண்டு வகையாய் பிரிக்கலாம். சூரிய வகை மற்றும் சந்திர வகை என்று. சூரிய வகையினர் உணர்ச்சி வேகம் மிக்கவராகவும், விஞ்சிச் செல்கிறவராயும் (outgoing), பரந்த மனம் கொண்டவராகவும் (extrovert) இருப்பார்கள். சந்திர வகையினரோ தன்னைப்பற்றியே எண்ணுபவராயும் (introvert), வலுச்சண்டைக்குப் போகாதவராகவும், இணக்கமானவராகவும், வரவேற்கும் பண்புடைய வராகவும் (receptive) இருப்பார்கள். ஆண் விஞ்சிச் செல்கிறவனாயும், பெண் உள்நோக்கிச் செல்கிறவளாயும் இருப்பார்கள். ஆணை 'யங்' (Yang) என்றும், பெண்ணை 'யின்' (Yin) என்றும் நீங்கள் அழைக்கலாம். ஆண் நேர்மறையானவன், பெண் எதிர்மறையானவள், அவர்களுடைய இயக்கங்கள் வேறானவை. காரணம், அவர்கள் வெவ்வேறு மையங்களில் இருந்து இயங்குகிறவர்கள். ஆண் சூரிய மையத்தில் இருந்தும், பெண் சந்திர மையத்தில் இருந்தும் இயங்குகிறார்கள்.

ஆக உண்மையில் ஓர் ஆண் சித்த சுவாதீனமற்றுப் போனால் அவனை 'லூனடிக்' (Lunatic) என்று அழைக்கக்கூடாது. ஒரு பெண்ணுக்கு சித்தம் கலங்கினால் மட்டுமே 'லூனடிக்' என்று அவளை அழைக்க வேண்டும். 'Lunatic' என்ற சொல் 'Lunar' என்ற சொல்லில் இருந்து வந்தது. ஓர் ஆண் சித்த சுவாதீனமற்றுப் போகிறபோது அவன் சூரியப் பாதிப்பிற்குள்ளானவன் ஆவான். அவன் சந்திரத் தாக்குதலுக் குள்ளானவனல்லன். பித்துப் பிடித்த மனிதன் வலுச்சண்டைக்குப் போவான். வன்முறையில் இறங்குவான். ஒரு பெண்ணுக்குப் பித்துப் பிடித்தாலோ அவள் மிகுந்த ஆர்வமுடையவளாய், இயற்கைக்கு மாறுபட்டவளாய் ஆகிவிடுவாள்.

'ஆண்' என்றும், 'பெண்' என்றும் சொல்கிறபோது நான் எல்லா ஆண்களையும், எல்லாப் பெண்களையும் கருத்தில் கொள்ளவில்லை. காரணம், அதிக பெண் தன்மை உடைய ஆண்கள் இருக்கிறார்கள். அதிக ஆண் தன்மை உடைய பெண்கள் இருக்கிறார்கள். எனவே, குழப்பமடையாதீர்கள். ஓர் ஆண் சந்திரனுக்குத் தகவாயும் (moon-oriented) இருக்க முடியும். சூரியனுக்குத் தகவாயும் (sun-oriented) இருக்க முடியம். அது அவர்களுடைய சக்தி எதிலிருந்து பெறப்பட்டது என்பதைப் பொறுத்தது. சந்திரன் தனக்கென்று ஒரு சக்தி மூலத்தை (source)க் கொண்டிருக்கவில்லை. அது சூரியனைத்தான் அப்படியே பிரதிபலிக்கிறது. அது பிரதிபலிப்பு நுட்பம் அவ்வளவே. அதனால்தான் அது குளிர்ச்சியாயிருக்கிறது. அது சக்தியை வெப்பத்தில் இருந்து குளிர்ச்சியாய் மாற்றுகிறது. பெண்ணும் பால்சார்ந்த மையத்தில் (sex

center) இருந்து சக்தியைப் பெறுகிறாள். ஆனால், அது சந்திரனின் வழியே கடந்து செல்கிறது.

சந்திரன் 'ஹரா' (hara)வாகும். தொப்புளுக்குக் கீழே சரியாய் இரண்டங்குலம் கீழாய் ஒரு மையம் இருக்கிறது. ஜப்பானியர்கள் அதை 'ஹரா' என்கிறார்கள். அவர்களுடைய சொல் முழுமையானது. அதனால்தான் தற்கொலையை 'ஹரகிரி' (harakiri) என்று அவர்கள் சொல்வது. காரணம் எது சந்திர மையமோ அதுவே மரண மையமாயும் இருக்கிறது. சூரிய மையம் பிறப்பு மையமாய் இருக்கிறது. பிறப்பு சூரியனிடமிருந்து, மரணம் சந்திரனிடமிருந்து.

குருட்ஜீவ் சொல்வார். 'சந்திரனுக்கு இரை மனிதன்' என்று. உண்மையில் பதஞ்சலியின் கருத்துக்கு வெகு நெருக்கமானதையே அவர் சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால் அவர் எதைக் கருத்தில் கொண்டிருந்தார் என்பதை மேற்கத்தியர்கள் புரிந்துகொள்ளவில்லை. 'ஒவ்வொன்றும் ஏதோவொன்றுக்கு இரையாகிறது' என்பதே அவர் சொல்லிக் கொண்டிருந்தது. பிரபஞ்சத்தின் சுற்றுப்புறவியலில் (Ecology) ஒவ்வொன்றும் இன்னொன்றுக்கு உணவாக வேண்டியது தான். நீங்கள் ஒன்றை உண்கிறீர்கள். ஏதோவென்றால் உண்ணப் படுவீர்கள். இல்லையேல் தொடர்ச்சியற்றுப் போகும், வட்டம் பிளவுண்டு விடும். மனிதன் பழத்தை உண்கிறான். பழங்கள் சூரிய சக்தியை உண்கின்றன, மண்ணையும், நீரையும் உட்கொள்கின்றன. தன்னுடைய முறை வரும்போது மனிதன் வேறொன்றால் உண்ணப்படுவான். மனிதனை யார் உண்பது? சந்திரன் மனிதனை உண்பதாக குருட்ஜீவ் கூறுகிறார். அவர் இயற்கைக்கு மாறுபட்ட (eccentric) ஆசாமி. அவர் வெளிப்படுத்தியவை எல்லாம் விஞ்ஞானபூர்வமானவை அல்ல. அவருடைய சொற்களை அப்படியே ஏற்றுக்கொள்வதற்கில்லை என்பது தெளிவு. ஆனால் ஒருவர் அவற்றின் அடியாழத்துக்குச் செல்வராயின் குற்றமில்லாத வைரங்களை அங்கே காண முடியும்.

முதலாவது சூத்திரம்:

**'சந்த்ரே தாரா வ்யூஹ ஞானம்'**

**சந்திரனின் மீது சம்யமம் செய்வதால் நட்சத்திரக் கூட்டங்களைப் பற்றிய அறிவு உண்டாகிறது.**

ஆக, 'ஹரா' என்கிற சந்திரன் சரியாக தொப்புளுக்கு இரண்டங்குலம் கீழே இருக்கிறது. அங்கே பலத்த அடி கொடுத்தால்

நீங்கள் செத்துப் போவீர்கள். ஒரு சொட்டு இரத்தம்கூட சிந்தாமல் நீங்கள் செத்துப் போவீர்கள். வலி இருக்காது. அதனால்தான் ஜப்பானியர்கள் எளிதில் இறந்து விடுகிறார்கள். மற்றவர்களுக்கு அது முடியாத காரியமாய் இருக்கிறது. அவர்கள் ஹரா எங்கே இருக்கிறது என்பதைச் சரியாக அறிவார்கள். அங்கே எளிதாகக் கத்தியை இறக்கிக்கொண்டு மறைந்து விடுகிறார்கள். உடலானது உயிருடன் தொடர்பற்றதாகி விடுகிறது.

சந்திர மையமே இறப்பு மையம். அதனால்தான் பெண்களிடம் ஆண்களுக்கு அதிக பயம். தங்களுக்குப் பெண்களென்றாலே அச்சம் என்று ரொம்பப் பேர் என்னிடம் வந்து தெரிவித்திருக்கிறார்கள். அது எத்தகைய பயம்? பெண் சந்திரனாக இருப்பதால் உண்டான பயம். பெண் ஆணைத் தின்று தீர்த்து விடுகிறாள். அதனால்தான் ஆண் எப்போதுமே அவளைத் தனது கட்டுப்பாட்டுக்குள் வைக்க முயல்வது. இல்லையேல் அவள் அவனைத் தின்று, நாசம் செய்து விடுவாள். பெண்கள் எப்போதுமே ஒரு பந்தத்தில் இருக்குமாறு நிர்ப்பந்திக்கப் படுகிறார்கள். அந்தத் தோற்ற நிலையை (phenomenon)ப் புரிந்து கொள்ள முயலுங்கள்.

உலகெங்கிலும் ஆண் எதற்குப் பெண்களை அடிமையாக்கி வைத்திருக்கிறான்? ஏன்? பெண்ணைச் சுதந்திரமாய் அவள் இஷ்டம் போல் நடந்துகொள்ள அனுமதித்து விட்டால் தன்னால் வாழ முடியாது என்கிற பயம் அவனுக்கு. ஆழ்ந்த பயம். அதில் உண்மை இருக்கவே செய்கிறது.

ஆண் ஒருமுறைதான் உச்சகட்ட இன்பத்தை (orgasm) அடைகிறான். பெண்ணுக்கோ பல உச்சகட்டங்கள். ஆனால் ஒரு சமயத்தில் ஒரேயொரு பெண்ணுடன்தான் இணைந்து கொள்ள முடியும். பெண் விரும்பினால் பலருடனும் இணைந்து கொண்டு விடு வாள். ஒரு பெண் சுயேச்சையாய் நடந்து கொள்ள அனுமதிக்கப்பட்டு விட்டால் எந்த ஓர் ஆணும் அவளைத் திருப்திப்படுத்த முடியாது. தற்போது உளவியல் நிபுணர்கள் இந்தக் கருத்தை ஒத்துக் கொள்கிறார்கள். பால்சார்ந்த விதத்தில் எந்த ஓர் ஆணும் ஒரு பெண்ணைத் திருப்திப்படுத்த முடியாது என்று மாஸ்டர்ஸ் அண்டு ஜான்சனின் (பாலியல் நிபுணர்கள்) ஆய்வும், கின்ஸே (இவரும் பாலியல் நிபுணர்தான்)யின் அறிக்கைகளும் தெரிவிக்கின்றன.

முழுமையான சுதந்திரம் வழங்கப்பட்டு விட்டால் ஓர் ஆண், ஒரு பெண் சேர்ந்து வாழ முடியாது. அந்நிலையில் தான் திருப்தி

அடையவில்லை என்று பெண் அதிகாரத்தோடு கேட்பாள் என்பதோடு அதுவே வாழ்வின் முடிவாகி விடும்.

பால்சார்ந்த சக்தி உங்களுக்கு உயிர்த்துடிப்பைக் கொடுக்கும். நீங்கள் எந்த அளவு பால்சார்ந்த சக்தியைப் பயன்படுத்துகிறீர்களோ அந்த அளவுக்கு மரணத்துடன் நெருக்கமாகி விடுவீர்கள். அதனால்தான் யோகிகள் பால்சார்ந்த சக்தியை வெளியேற்ற அஞ்சுகிறார்கள். அதைக் காப்பாற்றிக்கொள்ளத் தொடங்குகிறார்கள். காரணம், தாங்கள் வந்த காரியம் முடியும் வரை தங்களுடைய வாழ்நாளை அவர்கள் நீட்டித்துக் கொள்ள விரும்புவதால்தான். தங்கள் வேலை முடிவதற்குள் சாவதை அவர்கள் விரும்பவில்லை. ஏனென் றால் அவர்கள் மறுபடியும் அதைத் தொடங்க வேண்டியிருக்கும்.

உடலுறவு உங்களை உயிரோடு இருக்கப் பண்ணுகிறது. உறவுக்கான சக்தி உங்கள் உடம்பைவிட்டு நீங்கினாலே நீங்கள் மரணத்தை நோக்கிப் போக வேண்டியதுதான். ஒருமுறை பால்சார்ந்த உச்சநிலையை (orgasm) எட்டியதுமே சிற்றுயிர்களில் (insects) பலதும் மடிந்து விடுகின்றன. பெண் சிலந்தியுடன் உறவு கொள்ளும்போதே சிலந்திகளில் சில செத்துப் போகின்றன. செத்துப்போன ஆண் சிலந்தியை பெண் சிலந்தி தின்று தீர்க்கும். வேறென்ன செய்ய? பால் சார்ந்த உறவுகள் அனைத்திலும் இது உண்மையாகவே நடக்கிறதுதான். ஆண் கொஞ்சம் கொஞ்சமாய் அச்சத்தில் உறைகிறான்.

உடலுறவின் மூலம் பெண்ணுக்கு சக்தி கிடைக்கிறது. ஆணோ தனது சக்தியை இழக்கிறான். காரணம் பெண்ணின் ஹரா இயக்கத்தில் இருக்கிறது. அவள் வெப்ப சக்தியை குளிர் சக்தியாய் மாற்றுகிறாள். அவளிடம் ஏற்புத்தன்மை இருக்கிறது. வரவேற்றுக் கொள்ளும் ஓர் இணக்கமான வாயிலாக அவள் இருக்கிறாள். ஆண் சக்தியை இழக்கிறான், அவள் சக்தியை உறிஞ்சுகிறாள்.

இந்த ஹரா என்கிற மையம் இருக்கிறதே - சந்திரன் என்று வைத்துக் கொள்ளுங்களேன். இது மனிதனுள்ளும் இருக்கிறது. ஆனால் அது இயக்கமற்றிருக்கிறது. அதைச் செயல்படுத்த அதிக முயற்சி எடுத்துக் கொள்ளும்போதுதான் அது இயங்க முடியும்.

'தாவோ'வின் ஒட்டுமொத்த இயலும் சந்திர மையத்தை முழுமையாய் இயங்கச் செய்வதன்றி வேறில்லை. அதனால்தான் தாவோ (Tao)வின் ஒட்டுமொத்த போக்கும் ஏற்கும் தன்மையுடையதாய் பெண்மையின் இணக்கத்தோடு இருக்கிறது. யோகாவும் அதே போக்கினை, ஒரு மாறுபட்ட கோணத்தில் கொண்டிருக்கும். யோகா

சூரிய சக்தியை உடம்புக்குள் கொண்டு வரவும், சூரிய சக்தியின் பேரில் செயலபடவும், சூரிய சக்தி நகரும் பாதையில் செயல்பட்டு அதை சந்திரனுக்குக் கொண்டு வரவும் முயல்கிறது. தாவோவும், தாந்த்ரீகமும் சந்திரனின் பேரில செயல்பட்டு அதை இன்னும் ஏற்புத்தன்மை உடையதாகவும், காந்த சக்தி மிக்கதாகவும் செய்கின்றன. எனவேதான் அது சூரிய சக்தியை தன்னை நோக்கி இழுப்பது. யோகா ஒரு சூரிய செயல்முறை. தாவோவும் தந்த்ராவும் சந்திரச் செயல்முறையைக் கொணடவை. ஆனால் வேலை மட்டும் ஒரே மாதிரிதான்.

எல்லா யோகப் பயிற்சிகளும் சந்திரனை நோக்கி சூரிய சக்தியை அனுப்புவதாகவே இருக்கும். தாவோ மற்றும் தாந்த்ரீக பயிற்சிகள் சூரிய மையம் தோற்றுவிக்கும் சக்தியை ஈர்த்துக் கொள்ளுமளவு சந்திரனைக் காந்த விசை உடையதாக்கும்.

அதனால்தான் ஒரு புத்தர் அல்லது மகாவீரர் அல்லது பதஞ்சலி அல்லது லாவோட்சு தங்களுடைய மலர்ச்சியை முழுமையாய் அடைந்த நிலையில் ஆண்களைவிட மிகுந்த பெண் தன்மையுடன் காட்சியளிப்பது. அவர்களுடைய சரீரம் ரொம்பவும் பெண் தன்மை கொண்டு விடுகிறது. பெண்களுக்கே உரிய ஓர் அழகை அவர்கள் பெற்று விடுகிறார்கள். அவர்களுடைய கண்களும், முகங்களும், நடையும், அமர்ந்து கொள்ளும் முறையும் பெண் தன்மை கொண்ட தாகவே இருக்கும். அதன்பிறகும் அவர்கள் உணர்ச்சி வேகத்தில் பொங்கி எழுபவர்களாய் இருப்பதில்லை.

அவர்கள் சந்திரனின் பேரில் சமநிலையைக் கடைபிடிப்பதன் மூலம், நட்சத்திரங்களின் ஒழுங்கமைவு பற்றிய அறிவைப் பெறுகிறார்கள். உங்களுடைய சமநிலையை சாட்சி பாவத்தை 'ஹரா' மையத்துக்குக் கொண்டு வருவதன் மூலம் உங்கள் உடம்பினுள் இருக்கும் நட்சத்திரங்களையும், உங்கள் உடம்பினுள் இருக்கும் அத்தனை மையங்களையும் நீங்கள்அறிய இயன்றவராவீர்கள். காரணம் நீங்கள் சூரிய மையத்தில் கவனத்தைக் குவிக்கிறபோது, தெளிவற்றுப் போகுமளவு கிளர்ச்சியடைவீர்கள். நீங்கள் அச்சக் கிளர்ச்சிக்குள்ளாகி விடுவீர்கள். ஒருவர் தெளிவு பெற வேண்டு மென்றால் முதலில் சந்திரனுக்கு வந்தாக வேண்டும். சக்தியை நிலை மாற்றுவதில் சந்திரன் தனிச்சிறப்பு உடையதாகும்.

பாருங்கள், ஆகாயத்தில்கூட சூரியனிடமிருந்தே சந்திரன் சக்தியைப் பெறுகிறது. பிறகு அதைப் பிரதிபலிக்கிறது, இல்லையா? அது பிரதிபலிக்கிறதேயன்றி சொந்தமாய் ஒரு சக்தி அதனிடம்

இருக்கவில்லை. சந்திரனைக் கூர்ந்து பாருங்கள். உங்களால் அமைதியை உணர முடிகிறதுதானே. சூரியனைக் கூர்ந்து பார்த்தாலோ உங்களுக்குப் பித்து பிடித்தமாதிரி ஆகிவிடும். சந்திரனைக் கூர்ந்து பார்க்கிறபோது உங்களைச் சுற்றிலும் ஓர் அமைதி நிலவுவதை நீங்கள் உணர்வீர்கள். ஒரு பௌர்ணமி இரவிலதான் புத்தர் ஞானம் பெற்றது.

உண்மையில் சிறந்த ஒன்றை அடைந்தவர்களெல்லாம் அதை இரவில் அடைந்தார்கள் என்பதே உண்மை. ஒரேயொரு சீவன் கூட பகலில் ஞானம் பெற்றதில்லை. மகாவீரர் இரவில்தான் ஞானம் பெற்றார். அது ஒரு கும்மிருட்டான அமாவாசை இரவு. புத்தர் ஞானம் பெற்றது சுத்த பௌர்ணமியில். ஆனால், இருவருமே ஞானம் பெற்றது இரவில்தான். இதுவரை ஒருவர் பகலில் ஞானம் பெற்றதாய் எந்த நிகழ்வும் இல்லை. காரணம், ஞானம் பெறுவதற்கான சக்தி சூரிய ஒளியில் இருந்து சந்திர ஒளிக்குச் சென்றாக வேண்டியிருக்கிறது. ஞான நிலை என்பது எல்லாக் கிளர்ச்சிகளும், இறுக்கங்களும் தணிவு நிலை அடைவதேயாகும். அது மிகச்சிறந்த ஓய்வு. அது சற்றும் இயக்கமில்லாதது.

அதைச் செய்வதற்கு முயன்று பாருங்கள். உங்களுக்கு நேரம் கிடைக்கிற போதெல்லாம் கண்களை மூடிக்கொண்டு... தொடக்கத்தில் தொப்புளுக்கு இரண்டங்குலம் கீழேயுள்ள புள்ளியில் உங்கள் விரல்களால் அழுத்தி, அழுத்தத்தை உணருங்கள். அந்தப் புள்ளி வரை உங்கள் சுவாசத்தைச் செலுத்துங்கள். கொஞ்சம் கொஞ்சமாய் உங்கள் மூச்சு ஹரா பகுதியைத் தொடுவதைக் கண்டு கொள்வீர்கள். அதனைத் தொட்டேயாக வேண்டும் அது. அதனால்தான் மூச்சு நிற்கிறபோது ஒருவர் இறந்து விடுவது. அதற்கு மேலும் மூச்சு 'ஹரா' பகுதியைத் தொட்டுக் கொண்டிருப்பதில்லை. ஹராவுடனான தொடர்பு அறுந்து விடுகிறது. ஹராவில் இருந்தே மரணம் வருகிறது.

ஒரு மனிதன் இளமையில் சூரியனைச் சார்ந்தவனாயும், முதுமையில் சந்திரனைச் சார்ந்தவனாயும் இருக்கிறான். பெண் யவனப் பருவத்தில் சந்திரனைச் சார்ந்தவளாயும், முதுமையில் சூரியனைச் சார்ந்தவளாயும் இருப்பாள். அதனால்தானோ என்னவோ பல பெண்களுக்கு முதுமையில் மீசை முளைத்து விடுகிறது. அவர்கள் சூரியத் தொடர்புடையவராகி விடுகிறார்கள. சக்கரம் மாறிச் சுற்றுகிறது. ஆண்களில் பலர் முதுமையுற்ற நிலையில் எடுத்ததற்கெல்லாம் குற்றம் கண்டுபிடிப்பவர்களாகி விடுகிறார்கள். அவர்கள் ஒவ்வொன்றுக்கும் எரிந்து விழுகிறார்கள். தங்கள் கோபத்தை எல்லாவற்றின் மீதும்

காட்டுகிறார்கள். அவர்கள் கிறுக்கு கொண்டு விடுகிறார்கள். அவர்கள் தங்களுடைய சக்திகளை மாற்றிக்கொண்டு விடவில்லை. பெண்கள் முதுமையில் சண்டைக்காரர்களாய் இருப்பதற்குக் காரணம் அவர்களுடைய சந்திரசக்தி தீர்ந்து விடுவதுதான். அவர்கள் அதைப் பயன்படுத்தித் தீர்த்து விடுகிறார்கள். தற்போது அவர்களுடைய சூரியப்பகுதி புத்தம் புதிதாய் பயன்படுத்தத் தக்கதாயிருக்கிறது.

ஆண்கள் தங்களுடைய முதுமைக் காலத்தில் பெண்களின் நடைப்பாங்கை (style)க் கொண்டு விடுவதுடன், அவர்களிடமிருந்து ஒருபோதும் எதிர்பார்க்கப்படாத செயல்களை அவர்கள் செய்யத் தொடங்கி விடுகிறார்கள். உதாரணமாக, ஆணும் பெண்ணும் எல்லாவற்றிலும் வேறுபடுகிறவர்கள். ஆணுக்குக் கோபம் வந்தால் அடிப்பான். கோபம் கொண்ட பெண்ணோ வார்த்தையாடுவாள். தொடர்ந்து தொல்லை கொடுப்பாள். ஆனால் அடிக்க மாட்டாள். அவள் வலுச்சண்டை போகிறவளல்லள், இணக்கமானவள்.

நான் கேள்வியுற்ற ஒரு குட்டிக்கதை:

ஒரு பெண் சொற்பொழிவாளர் ரொம்பவும் ஆவேசமாய் உரை நிகழ்த்திக் கொண்டிருந்தாள். 'ஆம், பெண்கள் ஓராயிரம் வழிகளில் துன்பப்படுகிறார்கள்' என்றவள், தன் பேச்சின் விளைவைக் கவனிப்பதற்காகக் கொஞ்சம் நிறுத்தினாள்.

முதல் வரிசையில் இருந்து ஒரு நோஞ்சான் கையை உயர்த்தி, 'அவர்கள் துயரத்துக்குள்ளாகாத ஒரு வழியை நான் அறிவேன்' என்றான்.

அந்தச் சொற்பொழிவாளர் அவனை உறுத்து நோக்கி, 'அது என்ன வழி?' என்று அதிகாரமாய் கேட்டாள்.

'அவர்கள் வாயை மூடிக்கொண்டிருந்தால் துன்பப்பட வேண்டியிருக்காது' என்றான் அவன்.

ஓர் அமைதியான சக்தி தொடர்ந்து தொல்லை கொடுப்பதாகிறது. நீங்கள் கவனித்ததுண்டா? பையன்கள் பேசுவதற்கு முன்பே பெண் பிள்ளைகள் பேசத் தொடங்கி விடுகிறார்கள். பள்ளிக்கூடத்திலும் சரி, கல்லூரியிலும் சரி, கருத்தை வெளியிடுவதில் அவர்கள் பையன்களை முந்திக் கொண்டு விடுகிறார்கள். ஆண் குழந்தை பேசத் தொடங்குவதற்கு ஆறு மாதம் முந்தியே பெண் குழந்தை பேசத் தொடங்கி விடுகிறது. பெண் பிள்ளை வெகு சீக்கிரமாகவே பேசுவதில் வல்லமை பெற்று விடுகிறாள். அவள் பொருளற்ற விதமாய் பேசலாம்.

ஆனால், அவளோ திறமையாய் பேசுகிறாள். பெண்ணின் பேச்சில் பெரும்பாலும் குற்றம் குறைகள் இருப்பதில்லை. பையனோ பின்தங்கி விடுகிறான். அவனால் எதிர்த்து நிற்கவும், ஓடவும், வலுச்சண்டை போடவும் முடியும். ஆனால் அவனுக்கு அத்தனை தெளிவாகப் பேச வராது.

இரண்டு சக்திகளும் வெவ்வேறு வழியில் செயல்படுகின்றன. வாழ்க்கை சுமுகமாய் இல்லாவிடில் சந்திர சக்தி சோகம் கொண்டு விடுகிறது. வாழ்க்கை நல்லவிதமாய் நடக்கவில்லை என்றால் சூரிய சக்தி கோபப்படுகிறது. பெண்கள் வருத்தமுறுகிறார்கள, ஆண்கள் கோபமடைகிறார்கள். ஏதோவொன்று கோளாறாகி விடுமாயின் அதை எப்படியாவது சரிப்படுத்த வேண்டும் என்று ஆண் விரும்புவான். பெண்ணோ தன்னால் சரியாகட்டும் என்று காத்திருப்பாள். ஆணுக்குக் கோபம் வந்தால் யாரையாவது கொன்றுவிட விரும்புவான், பெண்ணுக்குக் கோபம் வந்தால் தற்கொலை செய்து கொண்டு விடுவாள். கோபத்தில் ஆணுக்குத் தோன்றுகிற முதல் காரியம் கொல்லு, கொலை பண்ணு என்பதுதான். கோபமுற்ற பெண்ணுக்கு முதல் காரியமாய் தோன்றுவது தற்கொலைதான்.

சண்டை போட்டுக் கொள்ளும் கணவன்–மனைவிகளை நீங்கள் பார்த்ததுண்டா? கணவன் மனைவியை அடிக்கத் தொடங்குவான். மனைவியோ தன்னைத்தானே அடித்துக் கொள்வாள். செயற்பாடு வெவ்வேறாயிருக்கும்.

ஆனால், நிறைவான ஒரு மனிதனோ சூரியனுக்குரிய மற்றும் சந்திரனுக்குரிய சக்திகளைக் கூட்டிணைவாய் பெற்றிருப்பான். இரண்டு சக்திகளும் சரிபாதியாய் சமநிலையில் இருக்கும்பொழுது இம்மண்ணுலகுக்குரியதல்லாத ஓர் அமைதியை நீங்கள் அடையப் பெறுவீர்கள். சூரியன் சந்திரனையும், சந்திரன் சூரியனையும் நடைமுறையில் இருந்து விலக்கப் பார்க்கும். நீங்களோ எவ்விதத்திலும் பாதிக்கப்படாதவராய் இருப்பீர்கள். உங்களுடைய முற்றான இருப்புணர்வில் (being) எவ்வித இயக்கமோ, செயல்தூண்டலோ இல்லாமல், விருப்பற்றவராய் நீங்கள் இருப்பீர்கள்.

ஹராவின் செயல்பாட்டை, உங்களுடைய சூரிய சக்தி ஹராவினால் மாற்றப்பட்டிருப்பதை உங்களால் உணர முடிகிறபோது, உங்களுக்குள் பலவற்றை நீங்கள் காண்பீர்கள். அத்தனை நட்சத்திரங்களையும் நீங்கள் காண்பீர்கள். அந்த நட்சத்திரங்கள் – உங்களுடைய மையங்களேயாகும்.

உங்களுடைய மன வானில் ஒவ்வொரு மையமும் ஒரு நட்சத்திரம். ஒவ்வொரு மையமும் அறியப்பட வேண்டியது. உங்களுடைய சிந்தனையை நீங்கள் அதன் பேரில் செலுத்த வேண்டியிருக்கும். காரணம், தனக்குப் பின்னால் பல புதிர்களை அது கொண்டிருக்கும். அது உங்களுக்கு அவற்றை வெளிப்படுத்திக் காட்டும். நீங்கள் ஒரு சிறந்த புத்தகம். உங்களை நீங்கள் புரிந்து கொள்ளாவிடில் அத்தனை வாசிப்பும் பயனற்றதுதான்.

சாக்ரட்டீஸ் மற்றும் சாக்ரட்டீஸ் போன்றவர்கள் 'உன்னையே நீ அறிவாய்' என்று சொல்கிறபோது இதனையே கருத்தில் கொள்கிறார்கள். உங்களுடைய உள்ளார்ந்த இருப்புணர்வை - அதன் ஒவ்வொரு பகுதியையும் நீங்கள் அறிந்துகொள்ள வேண்டும் என்பதையே அவர்கள் குறிக்கிறார்கள். ஒவ்வொரு மூலை முடுககும் பயணம் செய்யப்பட வேண்டியது, வெளிச்சம் அங்கே கொண்டு வரப்பட வேண்டும். அந்நிலையில் நீங்கள் யார் என்பதை - வெளியேயிருக்கும் பிரபஞ்சத்தைப்போல் உங்களுக்குள்ளும் ஒரு முடிவற்ற பிரபஞ்சம் இருப்பதைக் கண்டு கொள்வீர்கள். ஒருவிதத்தில் அதைவிட இது (உள்ளிருப்பது) பெரியதுதான், காரணம் நீங்கள் தன்னுணர்வாகவும் (conscious) இருக்கிறீர்கள், உயிரோடு இருப்பது மட்டுமல்ல, ஒரு சாட்சியாகவும் இருக்கிறீர்கள்.

**'த்ருவே தத்கதி ஞானம்'**

***சிந்தனையை துருவ நட்சத்திரத்தில் வைப்பதன் மூலம் நட்சத்திரங்களின் இயக்கம் பற்றிய அறிவையும் பெறுகிறீர்கள்.***

உங்களுடைய இருப்புணர்வில் இருக்கும் துருவ நட்சத்திரம் எத்தகையது? துருவ நட்சத்திரம் ஒரு குறியீடு. புராணங்களில் துருவ நட்சத்திரம் முழுதுமாய் அசைவற்ற ஒரு நட்சத்திரம் என்றே கருதப்பட்டது. அது உண்மையல்ல. அந்த நட்சத்திரம் நகரக்கூடியது, வெகு நிதானமாய் நகரும். ஆகையால் அது குறியீடாகிறது. உங்களுக்குள் இருக்கிற ஏதோவொன்று எவ்வகையிலும் அசைவற்ற தாய் காணப்பட்டிருக்க வேண்டும். அதுதான் உங்களுடைய இயல்பாய் இருக்க முடியும். அதுமட்டுமே உங்கள் இருப்புணர்வாய் இருக்க முடியும். அது துருவ நட்சத்திரத்தைப்போல் அசையாதது, முற்றிலும் அசைவற்றது.

**'இயக்கமிருப்பின் அது காலம்**
**இயக்கமற்றிருப்பின் அது நிலைபேறு.'**

இயக்கத்துக்குக் காலம் தேவைப்படும். இயக்கமற்ற ஒன்றிற்குக் காலம் தேவைப்படாது. உங்களுடைய ஒவ்வோரசைவும் தொடக்கம், முடிவு கொண்டது. எல்லா இயக்கமும் தொடங்குகிறது, முடிகிறது. இயக்கம் இல்லையென்றால் தொடக்கமும் இல்லை, முடிவும் இல்லை. ஆனால் இயக்கம் இல்லாவிடில் அப்போது நீங்கள் தொடக்க மற்றவர்தான், முடிவற்றவர்தான். அந்நிலையில் பிறப்பும் இல்லை, மரணமும் இல்லை.

ஆக, உங்களுக்குள் துருவ நட்சத்திரம் எங்கே இருக்கிறது? யோகா எதனை 'சாட்சி' என்று கூறுகிறதோ அதுதான் அது. முதலில் உங்கள் சிந்தனையை சூரிய சக்தியின் மீது செலுத்துங்கள். அங்கேதான் நீங்கள் வழக்கமாகவும், சரீர ரீதியாகவும் இருப்பது. அதுவே உங்களை நீங்கள் கண்டுகொள்கிற இடம். அதுவே முன்னதாக வழங்கப்பட்டது. அதனைச் சந்திர சக்திக்கு நிலைமாற்றம் செய்யுங்கள். அமைதியும் நிதானமும் உடையவராயிருங்கள். அச்சக் கிளர்ச்சியையும், கோபத்தையும் போக விடுங்கள். அப்போதுதான் உள்ளிருக்கும் ஆகாயத்தை நீங்கள் அக்கறையுடன் கண்காணிக்க முடியும். அந்நிலையில் கண்டறியப்பட வேண்டியது யார் கண்காணிப்பவர் என்பதைத்தான். அது துருவ நட்சத்திரம். காரணம் எது கண்காணிக்கிறதோ அது மட்டுமே உங்களுக்குள் அசை வற்றிருப்பது.

தற்போது நான் அதனை உங்களுக்கு விளக்குகிறேன். நீங்கள் கோபமாய் இருக்கிறீர்கள். ஆனால், எப்போதைக்கும் நீங்கள் கோபமாய் இருக்க முடியாது. சிலசமயம் கடுங்கோபத்தில் உள்ள ஒருவன் சிரித்து விடுவதும் உண்டு. கோபம் என்பது நிலையான ஒரு சங்கதியாக முடியாது. வருத்தத்தில் ஆழ்ந்தவனும் புன்னகை புரிவதுண்டு. தொடர்ந்து சிரித்துக்கொண்டே இருப்பவன்கூட சில சமயம் கண்களில் அருவியாய் கண்ணீர் பெருக அழுது புலம்புவதுண்டு. உணர்வெழுச்சிகள் நிரந்தரமாக முடியாது. எழுச்சி, கிளர்ச்சி, பெருக்கு என்று எப்படிச் சொன்னாலும் அதில் 'இயக்கம்' இருக்கிறது. (ஆங்கிலத்தில் 'emotions' என்கிற வார்த்தை 'motion' என்கிற வார்த்தையில் இருந்து மருவி வந்தது) அவை இடம் பெயர்கின்றன (move). ஆம், நீங்கள் தொடர்ந்து ஒன்றில் இருந்து மற்றொன்றிற்கு மாறிக்கொண்டே இருக்கிறீர்கள். இந்தக் கணத்தில் வருத்தமாயிருக்கிறீர்கள். அடுத்த கணத்தில் சிரிக்கிறீர்கள். இந்தக் கணத்தில் கோபப்படுகிற நீங்கள் மறுகணமே இரக்கம் காட்டுகிறீர்கள்.

இந்தக் கணத்தில் நேசிக்கிறீர்கள். இன்னொரு கணத்தில் வெறுப்பை உமிழ்கிறீர்கள். காலைப்பொழுது அழகாயிருந்தது. மாலையோ அருவருக்கத்தக்கதாயிருக்கிறது. இது தொடர்கிறது.

இது உங்களுடைய இயல்பாய் இருக்க முடியாது. காரணம் இந்த மாற்றங்களுக்கப்பால் இவற்றை ஒன்று சேர்க்கிற ஏதோ ஒரு நூல் இருக்கவே செய்யும். ஒரு மாலையில் பூக்களைப் பார்க்கிற நீங்கள் அந்தப் பூக்களை இணைக்கிற நாரைப் பார்ப்பதில்லை. ஆக, இவையும் பூக்கள்தாம். சில நேரங்களில் கோபம் பூக்கிறது. சில நேரங்களில் வருத்தம் பூக்கிறது. சில நேரம் மகிழ்சசியும், வேதனையும், கடும் துயரமும் பூக்களாகின்றன. உங்கள் வாழ்வென்னும் மாலையில் இவையெல்லாம் பூக்கள். ஒரு நூல் (அல்லது நார்) இருக்க வேண்டும். இல்லையேல் எப்போதோ நீங்கள் துண்டு துண்டாகி விடடிருப்பீர்கள். நீங்கள் உளதாயிருக்கும் ஒரு பொருளாகத் தொடர்கிறீர்கள், அப்படியெனில் உங்களுக்குள் நூலாக இருப்பது எது, துருவ நட்சத்திரமா? உங்களுக்குள் மாறாமல் இருப்பது எது?

அதுவே மதங்களின் முழுமையான தேடலாயிருக்கிறது. எது உங்களுக்குள் மாறாமல் இருக்கிறது. நிலையற்றவற்றில் நீங்கள் அக்கறை காட்டி ஈடுபடுவீர்களாயின் நீங்கள் உலகாயதமாயிருக் கிறீர்தான். நிலையான ஒன்றின் மீது உங்கள் கவனத்தைத் திருப்பும் கணத்தில் நீங்கள் சமய நம்பிக்கை கொண்டவராகி விடுகிறீர்கள்.

உங்கள் கோபத்துக்கு நீங்கள் சாட்சியாக முடியும். உங்கள் வருத்தத்துக்கு நீங்கள் சாட்சியாக முடியும். உங்களுடைய துயரத்துக்கு நீங்கள் சாட்சியாக முடியும். உங்களுடைய பரம சுகத்துக்கு (bliss) நீங்கள் சாட்சியாக முடியும். சாட்சி பாவம் அப்படியேதான் இருக்கிறது. அல்லது, எடுத்துக்காட்டாக இரவில் நீங்கள் உறங்குகிறீர்கள். பகற்பொழுது போய்விட்டது. நாள் முழுக்க நீங்கள் சுமந்திருந்த 'நீங்கள் யார்' என்கிற படிமமும் (image) போய் விடுகிறது. பகலில் நீங்கள் ஒரு பணக்காரராய் இருக்கலாம், கனவில் நீங்கள் ஒரு பிச்சைக்காரராகி விடலாம்.

சாம்ராஜ்யத்தை ஆளும் சக்கரவர்த்திகளும் தங்கள் கனவில் பிச்சைக்காரர்களாகி விடுகிற போக்கு இருக்கிறது. அதேபோல் பிச்சைக்காரர்களும் தங்கள் கனவில் சக்கரவர்த்தியாகி விடுகிறார்கள். காரணம் கனவு ஒரு இஷ்டபூர்த்தி. சரிதான், ஒரு சக்கரவர்த்தி பிச்சைக் காரனாக விரும்பி கனவு காண்பானா? என்று நீங்கள் கேட்கக்கூடும். பிச்சைக்காரர்கள் வீதிகளில் எவ்வித கவலையுமில்லாமல்

சுதந்திரமாய் சுற்றியலைவதைக் கண்டு அந்த சக்கரவர்த்திக்கே சில சமயம் பொறாமை ஏற்பட்டிருக்கும். அவர்கள் சூரிய ஒளியையும் சூரியக் கதிர்களையும் கண்டு மகிழ்ந்தபடி வெயிலில் காய்ந்திருப்பதை அவன் கண்காணிக்கிறான். அவனால் அதைச் செய்ய முடிவதில்லை. அவன் செய்ய வேண்டிய வேறு பல காரியங்கள் இருக்கின்றன. எப்போதும் ஏதாவதொன்றில் மனதை நிறுத்தும்படி இருக்கும். நட்சத்திரங்கள் கண் சிமிட்டும் இரவில் அவர்கள் கவலையின்றிப் பாடுவதை அவன் பார்க்கிறான். அவனால் அதைச் செய்ய முடியாது. ஒரு சக்கரவர்த்திக்கு அது தகுதியான ஒன்றாய் இருக்காது. அவன் பொறாமையாய் உணர்கிறான். இரவில் சக்கரவர்த்திகள் பிச்சைக் காரர்களாகி விடுகிறார்கள் - தாங்கள் பிச்சைக்காரர்களாகி விட்டதாய் கனவு காண்கிறார்கள். பிச்சைக்காரர்களோ தாங்கள் சக்கரவர்த்தியாகி விட்டதாய் கனவு காண்கிறார்கள். காரணம் அவர்களும் பொறாமைக் குள்ளானவர்கள்தாம். அவர்கள் அரண்மனைகளை, செல்வங்களை, அங்கு நடைபெறும் களியாட்டங்களைக் காண்கிறார்கள். அவர்களும் அதைப் பெற விரும்புவார்கள்தானே.

ஆக, தேவைப்படுகிறவை - தேவைக்கும் குறைவாய் இருப்பவை, அவை எதுவாயினும் உங்கள் கனவில் வருகின்றன. உங்கள் கனவுகளை நீங்கள் ஆராய்ந்தால் உங்களுடைய வாழ்வில் எது தேவைப்படுகிறது என்பது தெரிய வரும். எதுவும் தேவைப்படாத கணத்தில் கனவுகள் மறைந்து விடும். எனவேதான் ஞானியானவன் ஒருபோதும் கனவு காண்பதில்லை, அவனால் கனவு காண முடியாது. கனவு காண்பது என்பது அவனைப் பொறுத்தவரை நடக்காத ஒன்று. காரணம் அவனுக்கு எதுவும் தேவைப்படுவதில்லை. அவன் மனநிறைவு கொண்டவன். அவன் யாசித்து வாழ்பவனாயினும் தன்னுடைய வறிய நிலையில் சக்கரவர்த்தியாய் நிறைவு கொண்டிருப்பான்.

ஒருசமயம் இப்படி நடந்தது. இப்ராகிம் என்கிற சூஃபி மறை ஞானி ஒருவர் ஏழ்மைப்பட்ட ஒருவனுடன் இருந்திருக்கிறார். இப்ராகிம் துணிவுமிக்கவர், அரியாசனத்தின் பொய்ம்மையை போலித்தனத்தை நன்கு புரிந்து கொண்டதால் அவர் அதனை துறந்து விட்டார். தம்முடைய ராஜ்யத்தை விட்டு நீங்கி, இரந்துண்டு வாழ்பவராகி விட்டார். அந்நிலையில்தான் ஒரு யாசகன் அவருடன் சிலநாள் இருந்தான். அந்த யாசகன் ஒவ்வோர் இரவிலும் கடவுளிடம், 'கடவுளே ஏதாவது செய்யுங்கள். என்னை ஏன் இத்தனை ஏழைமையாய் இருக்க

விட்டீர்கள்? உலகமே மகிழ்ச்சியை அனுபவித்துக் கொண்டிருக்கிறது. நானோ அதற்கு வெளியில் இருக்கிறேன். உண்பதற்கு ரொட்டித் துண்டு போதிய அளவில் இல்லை, உடுப்பதற்கு உடையில்லை, இருப்பதற்கு இடம் இல்லை. ஏதாவது செய்யுங்கள். என்னுடைய பிரார்த்தனைகள் நிறைவேறாத நிலையில் தாங்கள் இருக்கிறீர்களா இல்லையா என்றே சந்தேகம் வந்து விடுகிறது எனக்கு' என்று பிரார்த்தித்துக் கொள்வான்.

இந்தப் பிரார்த்தனையை இரண்டு மூன்று தரம் கேட்டிருந்த இப்ராகிம், ஒருநாள் அவனிடம், 'பொறு, உன்னுடைய வறுமையை அதற்குரிய விலை கொடுக்காமல் நீ பெற்றிருப்பதாய் தெரிகிறது' என்று.

அந்த யாசகன் கேட்டான். 'என்னது, வறுமைக்கு விலையா? என்ன சொல்கிறீர்கள், எந்த அர்த்தத்தில் சொல்கிறீர்கள்? வறுமைக்கும் விலை தர வேண்டியிருக்குமா?' என்று.

இப்ராகிம் சொன்னார். 'ஆம், என்னுடைய ராஜ்யத்தையே விலையாகக் கொடுத்துதான் நான் அதன் அழகைப் புரிந்து கொண்டேன். நீயோ அதற்குரிய விலையைக் கொடுக்காமல் அதைப் பெற்றாய். அதனால்தான் வறுமை என்றால் என்னவென்று உனக்குத் தெரியவில்லை. அது கொண்டு வரும் சுதந்திரத்தை நீ அறிந்திருக்க வில்லை. அது ஏற்படுத்தும் கவலையற்ற தன்மையை நீ அறிய மாட்டாய். முதலில் ஒரு பணக்காரனைப் போல் நீ துன்புற வேண்டும். அப்போதுதான் அதைத் தெரிந்து கொள்வாய். நான் இரண்டையும் அறிவேன்... நான் மனநிறைவோடு இருக்கிறேன்.

இப்ராகிம் மேலும் சொல்வார். 'உண்மையில் என்னால் பிரார்த்திக்க முடியாது. காரணம், பிரார்த்தனையின் மூலம் வேண்டிப் பெறும்படியாய் நான் எதையும் காணவில்லை. அதிகபட்சம், 'கடவுளே, உமக்கு நன்றி' என்றுதான் சொல்வேன். அத்தோடு தீர்ந்தது. அதற்குமேல் சொல்லும்படியாய் எதுவும் இல்லை. நான் ரொம்ப மனநிறைவோடு இருக்கிறேன்.

ஞானம் பெற்ற ஒருவனால் கனவு காண முடியாது. அவன் மிகுந்த மனநிறைவோடு இருக்கிறான். அத்துடன் நான் சொல்கிறேன், 'கடவுளே, உமக்கு நன்றி' என்றுகூட அவன் சொல்ல மாட்டான். அல்லது, ஒருமுறை சொன்னாலும் சொல்லலாம். 'மேற்சொன்னபடி' (ditto) என்று தினமும் ஒருமுறை சொல்வானோ என்னவோ. அப்படிச் சொல்வதில் என்னதான் பொருள் இருக்கப் போகிறது? உங்கள் இதயம் முழுதும் நன்றியால் நிரம்பியிருப்பதை அவன் முன்பே அறிவான்.

அதை வார்த்தையில் சொல்வதால் என்ன முக்கியத்துவம் ஏற்படப் போகிறது?

நீங்கள் இரவில் கனவு காண்கிறீர்கள், நாள் முழுக்க நீங்கள் மேற்கொண்டிருந்த படிமத்தை (image) மறந்து விடுகிறீர்கள். பகலில் நீங்கள் மெத்தப் படித்த மேதையாயிருக்கலாம். மாலையில் அதனை மறந்து விடுவீர்கள். நீங்கள் ஓர் அரசனாயிருக்கலாம். அதனை மறந்து விடுவீர்கள். அல்லது நீங்கள் உலகைத் துறந்த பெரிய துறவியாயிருக் கலாம். கனவுகளில் அழகிய பெண்கள் உங்களைச் சூழ்ந்திருக்க, நீங்கள் ஒரு துறவியென்பதையே மறந்து விட்டிருப்பீர்கள். பகலில் நல்லது, கெட்டதாய் தெரிந்ததெல்லாம் போயே போய்விடும். காரணம் நீங்கள் முற்றிலும் வேறுபட்டவராகி விடுகிறீர்கள். மனநிலை மாறுகிறது, தட்பவெப்பநிலை மாறுகிறது. ஆனால் ஒன்று மட்டும் மாறாமல் இருக்கிறது. பகலில் - வீதியில் நடப்பது, உணவுண்பது, அலுவலகம் செல்வது, வீடு திரும்புவது, கோபப்படுவது, நேசிப்பது போன்ற நடவடிக்கைகளை நீங்கள் கண்காணிப்பீர்களாயின், இரவிலும் அதுபோலவே கண்காணிக்கக் கூடும். இது கனவென்கிற உணர்வுடன் கண்காணிப்பீர்கள். ஆக, நான் கனவில் சக்கரவர்த்தி ஆகிறேனா? நல்லது. நீங்கள் தொடர்ந்து கண்காணிக்கக்கூடும்.

இருபத்து நான்கு மணி நேரத்தில் ஒரேயொரு விஷயம் மட்டும் மாறாமல் இருக்க முடிகிறது. அது - கண்காணிப்பவர், சாட்சி. அதுவே உங்களுக்குள் துருவ நட்சத்திரமாய் இருப்பது.

'துருவ நட்சத்திரத்தின் பேரில் சிந்தனையைச் செலுத்துவதன் மூலம் நட்சத்திரங்கள் பற்றிய அறிவு பெறப்படுகிறது. ஒன்றை நினைவில் வையுங்கள் - பதஞ்சலி முதலில் சொல்கிறார் சந்திரனின் பேரில் சிந்தனை செலுத்த நட்சத்திரங்களின் ஒழுங்கமைவு பற்றிய அறிவு பெறப்படுகிறது' என்று. எந்தெந்த நட்சத்திரம் எங்கே இருக்கிறது என்கிற அறிவு. துருவ நட்சத்திரத்தின் மீது சிந்தனையைச் செலுத்த நட்சத்திரங்களின் இயக்கம் பற்றிய அறிவு கிடைக்கிறது. நிலையாக - மாறாமல் இருக்கிற ஒன்றை முன்னிட்டுக் கொண்டே இயக்கம் அறியப்படுகிறது. எதுவுமே மாறாமல் இருக்குமெனில் இயக்கத்தை அறிய முடியாது. எல்லாமே அசையக்கூடியதாய் இருப்பின், நிலையான ஓர் அடித்தளம் இருக்காது. அப்போது இயக்கத்தை உங்களால் எப்படி அறிய முடியும்?

அதனால்தான் பூமியின் சுழற்சியை உங்களால் உணர முடிவதில்லை. உங்கள் கற்பனையின் வேகத்தைப் போலவே பூமியும்

வேகமாய் சுற்றுகிறது. அது ஒரு விண்வெளிக்கலம் (space ship) போன்றது. தன்னுடைய மையத்தில் சுழன்றபடி சூரியனையும் அது சுற்றும். தொடர்ந்து நிலை மாறியபடி இருக்கும். நாள்கணக்காய், ஆண்டுக்கணக்காய் அது சுற்றிக் கொண்டிருந்தாலும் அதை நீங்கள் உணர மாட்டீர்கள். காரணம், மற்றுமுளள யாவும் அசைந்து கொண்டிருப்பதால்தான், மரங்கள், வீடுகள், நீங்கள் என்று சகலமும் அதே வேகத்தில் அசைந்தபடி இருப்பதால்தான். அதை உணர்வது சாத்தியமில்லை. காரணம் வேறுபாடாய் எதுவும் இருக்கவில்லை. ஒட்டுமொத்த பூமியும் சுற்றிக் கொண்டிருக்க நீங்கள் மட்டும் அப்படியே நின்று விட்டிருந்தால்... அப்போது தெரிந்து கொள்வீர்கள். உங்களுக்குத் தலை சுற்றும் வேகத்தில் அது போய்க்கொண்டே இருக்கும். அந்நிலையில் நீங்கள் புனேயில் இருக்க மாட்டீர்கள். சில நேரம் ஃபிலடெல்பியா கடந்து செல்லும். சில நேரம் டோக்கியோவாக இருக்கும். தொடர்ந்து பூமி நகர்ந்தபடி சுழன்றபடி இருக்கிறது.

அது வேகமாய் அசைந்தபடி இருக்கும். ஆனால், அதை அறிவதற்கும், உணர்வதற்கும் ஓர் அசைவற்ற தளம் தேவைப்படும். அதனால்தான் நூற்றாண்டுகள் பலவாய் மனிதன் பூமியின் மீது வாழ்கிறான். முந்நூறு ஆண்டுகளுக்கு முன் கலிலியோ மற்றும் கோபர்நிக்கஸ் மூலமாக பூமி சுழல்கிறது என்பதை நாம் தெரிந்து கொண்டோம். இல்லையேல், இலட்சோப லட்சம் ஆண்டுகளாய் இருந்த பூமி மையம் சுழலாமல், பூமியிலுள்ள மற்றவையெல்லாம் சுழல்கின்றன' என்ற கருத்தையே நாம் கொண்டிருந்திருப்போம். நட்சத்திரங்களும், சூரியனும், சந்திரனும் சுற்றிக்கொண்டு மையத்தில் பூமி மட்டும் சுற்றாமல் இருப்பதாய் எண்ணியிருப்போம்.

தற்போது மிகவும் சிக்கலான ஒரு விஷயத்தை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. உதாரணமாக இந்த நிமிஷம் வரை மையங்கள் நிலையாக இருப்பதாகவே நான் சொல்லி வந்திருக்கறேன். அவை அப்படி இருக்கவில்லை. சில சமயங்களில் தலையில் பால் சார்ந்த மையம் அசைந்தபடி இருக்கும். அதனால்தான் மனம் ரொம்பவே பார் சார்ந்த வேட்கையைக் கொண்டு விடுகிறது. சில சமயங்களில் அந்தப் பால் சார்ந்த மையம் உங்கள் கைகளில் இருக்கும். அப்போது ஒரு பெண்ணை நீங்கள் தொட விரும்புவீர்கள். சில சமயம் அந்த மையம் உங்கள் கண்களில் இருக்கும். அப்போது நீங்கள் எதைப் பார்த்தாலும் அது உடலுறவுக்கான பொருளாகவே தெரியும். சில சமயம் அந்த மையம் காதுகளில் இருக்கும். அப்போது

நீங்கள் கேட்கிற எதுவும் பால்சார்ந்த விதத்தில் உங்கள் வேட்கையைத் தூண்டும்.

நீங்கள் கோயிலுக்குச் சென்று பஜன்களை - தெய்விக கீதங்களைப் பாடக் கேட்கிறீர்கள். அப்போது உங்கள் மையம் காதுகளில் இருக்குமாயின் அந்தப் பாடல்களும் உங்கள் இச்சையைத் தூண்டி விடும். 'என்ன நடக்குது? நான் கோயில்ல இருக்கேன். ஒரு பக்தனா வந்திருககேன். இருந்தாலும் என்னமோ நடக்குதே?' என்று நீங்கள் மிகுந்த கவலையில் ஆழ்ந்து விடுவீர்கள். சில நேரங்களில் இப்படியும் நடக்கலாம். உங்கள் சிநேகிதி அல்லது மனைவி உங்களருகே அமர்ந்திருப்பாள். நீங்களாகத் தொடங்கட்டும் என்று காத்திருப்பாள். ஆனால் உங்களுக்கோ பால்சார்ந்த (sexual) உணர்வே இருந்திருக்காது. காரணம் பால சார்ந்த மையம் அதற்குரிய இடத்தில் இல்லாமலிருக்கும். சில நேரங்களில் உடலுறவு பற்றிய கற்பனையில் நீங்கள் ஆழ்ந்திருப்பீர்கள். அது இன்பத்தின் எல்லைக்கே உங்களைக் கொண்டு சென்று விடக்கூடும். பெண்ணுடன் உடலுறவு கொள்கிற போதுகூட அத்தனை இன்பம் கிடைத்திருக்காது உங்களுக்கு.

என்னதான் நிகழ்கிறது? உங்களுடைய மையம் எங்கே இருக்கிறதென்று உங்களுக்குத் தெரிந்திருக்கவிலலை. ஒருவர் சாட்சி பாவத்தில் இருந்து கவனிக்கிறபோது, அந்த மையம் எங்கே இருக்கிறதென்பதைத் தெரிந்து கொள்வார்.

அது உங்கள் காதுகளில் இருக்கும்பொழுது உங்கள் காதுகளுக்குச் சக்தியை வழங்கும். அந்தக் கணங்கள் உங்களுடைய காதுகளைப் பழக்கி, உங்களை ஓர் இசைக்கலைஞனாக்கக் கூடியவை. அது உங்கள் கண்களில் இருக்கும்பொழுது, அந்தக் கணங்கள் உங்களை ஓவியனாக்கி விடும். அந்நிலையில் நீங்கள் பார்க்கிற மரங்கள் மிகவும் பச்சையாய் தெரியும். ரோஜாக்களின் மலரும பண்பு மாறுபட்டதாய், உயர்ந்த தரத்தில் இருக்கும். பால் மையம் உங்கள் நாவில் இருந்தால் மக்களை வசியம் செய்யக்கூடிய சிறந்த பேச்சாளராய் திகழ்வீர்கள். ஒரே வார்த்தையாய் கேட்பவர்களின் இதயத்தைத் தொட்டு விடுவீர்கள். மிகச்சரியான கணங்கள் இருக்கின்றன... உங்களுடைய பால் மையம் உங்கள் கண்களில் இருந்தால் நீங்கள் ஒரே பார்வையில் எதிராளியை கட்டுண்டு போகச் செய்து விடுவீர்கள். அத்தகைய வசிய சக்தியை நீங்கள் பெற்றிருப்பீர்கள். பால் மையம் உங்கள் கைகளில் இருந்தால் நீங்கள்

எதைத் தொட்டாலும் பொன்னாகி விடும். காரணம் பாலுணர்வில் இருக்கிறது சக்தியும், உயிர்ப்பும்.

சந்திரனைப் பற்றிய சங்கதியும் அதேமாதிரிதான். இதுவரைக்கும் அவற்றின் நிலையான இருப்பிடங்களைப் பற்றி நான் சொல்லி யிருந்தேன். வழக்கமாக அவை அங்கே காணப்படும். ஆனால், எதுவும் நிலையாக இருக்காது. ஒவ்வொன்றும் எல்லாமும் சுழன்று கொண்டேயிருக்கும்.

உங்களுடைய இறப்பு மையம் உங்கள் கைகளில் இருந்து நீங்கள் ஒரு மருத்துவராயும் இருந்தால் மருந்து கொடுங்கள். நோயாளி இறந்து விடுவார். நீங்கள் எதைச் செய்தாலும் உங்களுடைய நோயாளியை உங்களால் காப்பாற்ற முடியாது. 'ஒரு மருந்து மருத்துவருடைய கைகள் அந்த டாக்டருக்கு இருக்கு. அவர் எதைத் தொட்டுக் கொடுத்தாலும் அது மருந்தாயிடுது' என்று இந்தியர்கள் சொல்வார்கள். சரி, வேறு டாக்டர்? 'அந்த ஆளு பக்கமே போக வேணாம். ஒரு சின்ன நோய்க்கு அவர்ட்ட போனாக்கூட அதைப் பெரிசு பண்ணிருவார். அங்கே நீங்க போனப்ப இருந்ததைவிட மோசமாத்தான் திரும்பி வருவீங்க.'

யோகி விழிப்புடன் இருப்பவர். பண்டைய இந்தியாவில் யோகாவின் பக்கக் கிளையாய் ஆயுர்வேதம் தோற்றுவிக்கப்பட்டது. மருத்துவர் யோகியாகவும் இருக்கும்படியாயிற்று. நீங்கள் ஒரு யோகியாக இல்லாவிட்டால் ஒரு மருத்துவராக நீங்கள் இருக்க முடியாது. நீங்கள் குணமளிப்பவராக இருக்க மாட்டீர்கள். நோயாளியை அணுகி சிகிச்சையளிப்பதற்கு முன் மருத்துவர் தனது அகவொழுங்கைக் கண்காணிக்க வேண்டியிருக்கும். இறப்பு மையம் கைகளில் இருந்தால் அவர் போக மாட்டார். இறப்பு மையம் தன்னுடையை கண்களில் இருந்தாலும் அவர் போகமாட்டார். இறப்பு மையம் அவருடைய 'ஹரா' (hara)விலும், உயிர்ப்பு மையம் கைக ளிலும் இருந்தால் நோயாளியிடம் செல்வார். சரியான ஒழுங்கமைவு.

உங்களுடைய அகவுலகை நீங்கள் அறிந்து கொண்டதுமே பல விஷயங்கள் உங்களுக்குச் சாத்தியமாகும். சில நேரங்களில் அதைக் கருத்தூன்றிக் கவனித்திருந்தாலும் என்ன நடக்கிறதென்று உங்களுக்குத் தெரியாமல் போய்விடுவதுண்டு. சில நேரங்களில் நீங்கள் எதையுமே செய்திருக்க மாட்டீர்கள். தொடர்ந்து வெற்றி பெறுவீர்கள். சில வேளைகளில் கடுமையாய் உழைத்திருந்தும் வெற்றி கிட்டாமல் எல்லாமும் தோற்று விட்டிருக்கும். உங்களுடைய ஏற்பாடு

சரியாயிருந்திருக்காது. ஒரு தவறான மையத்தின் வழி நீங்கள் செயல்பட்டுக் கொண்டிருப்பீர்கள்.

போர் முனைக்குச் செல்கிற வீரன் இறப்பு மையம் தன் கைகளில் இருக்கும்போது போருக்குச் செல்ல வேண்டும். அந்நிலையில் அவனால் வெகு எளிதாகக் கொன்று தீர்க்க முடியும். அப்போது அவன் மனித உருவெடுத்த மரணமாகிறான். இறப்பு மையம் ஒருவனுடைய கண்களில் இருக்கும் போது அவன் உங்களைக் கூர்ந்து நோக்கினால் நீங்கள் இடர்ப்பாட்டுக்குள்ளாக்கி விடுவீர்கள். அவனுடைய பார்வையே சபிப்பதாயிருக்கும்.

சிலருக்கு உயிர்ப்பு மையத்தில் கண்கள் நிலைபெற்றிருக்கும். அவர்களுடைய பார்வை உங்களுக்கு மகிழ்ச்சியளிக்கும். உங்களைப் புனிதமாக்கும். அவர்கள் உங்களைப் பார்க்கிற போது உயிரோட்டமான ஏதோ ஒன்று உங்கள் மீது வர்ஷிக்கும்.

துருவ நட்சத்திரத்தின் பேரில் சிந்திப்பதன் மூலம் நட்சத்திரங்களின் இயக்கம் பற்றிய அறிவு அடையப்பெறும்.

தொப்புள் மையமே உங்கள் உடலின் மையம். காரணம்,

**'நபி சக்ரே கயா வ்யூஹ ஞானம்'**

தொப்புள் மையத்தில் சிந்திப்பதன் மூலம் உடலமைப்பு பற்றிய அறிவு அடையப்பட்டதாகிறது.

தொப்புள் மையத்தின் வழியாகவே நீங்கள் கருவறையில் இருந்தபோது, தாய் உங்களுக்கு உணவூட்டியது. ஒன்பது மாத காலம் தொப்புள் மையத்தின் மூலமே நீங்கள் வாழ்ந்திருக்கிறீர்கள். நீங்கள் தொப்புளுடன் தொடர்புடையவராயிருக்கிறீர்கள். அது நடைவழியாய், பாலமாய் இருந்தது. அந்தத் தொப்புள் மையம் – தொப்புள் கொடி துண்டித்து, தாயிடமிருந்து வேறாக்கப்பட்டபிறகு நீங்கள் சுதந்திரமாகி விடுகிறீர்கள். உங்கள் உடம்பைப் பொறுத்தவரை உங்களுடைய தொப்புள் தனிச்சிறப்பு வாய்ந்ததாயிருக்கிறது.

'தொப்புளில் சிந்தனையைச் செலுத்துவதன் மூலம் உடலமைப்பு பற்றிய அறிவு அடையப்படுகிறது'. சரீரம் சிக்கலான அதே சமயம் மிகச்சிறந்த இயக்க நுட்பங்களைக் கொண்டது. ஒற்றைச் சரீரத்தில் இலட்சோபலட்சம் உயிரணுக்கள். உங்களுடைய சிறிய தலையில் இலடச்க்கணக்கான நரம்புகள். விஞ்ஞானிகள் பல சிக்கலான இயக்க நுட்பங்களை அபிவிருத்தி செய்தாலும் மனித சரீரத்துடன் ஒப்புடும்போது அவையெல்லாம் ஒன்றுமேயில்லை எனலாம்.

அத்தகைய கடினமானதோர் இயக்கத்தை உருவாக்கக்கூடிய திறமை அவர்களிடம் எப்போதுமே இருப்பதற்கில்லை. அது ஓர் அற்புதம். அது தானகேவே, தொடர்ந்து இயங்குகிறது. எழுபது அல்லது நூறு ஆண்டு காலத்துக்கு அது (உடம்பின் இயக்க நுட்பம்) பாட்டுக்கு இயங்கிக் கொண்டிருக்கிறது.

எல்லாமும் கச்சிதமாய் எந்தக் குறையும் இல்லாமல் செய்யப் பட்டிருக்கிறது. அது சுயமாய் தொடரும் ஓர் அமைவு. உங்களுக்குப் பசியுணர்வைத் தோற்றுவித்துப் பசியைக் கொடுக்கும். நீங்கள் உண்கிறீர்கள். நன்றாக உண்டதும், 'போதும் நிறுத்து' என்று தெரிவிக்கிறது. செரித்த உணவை இரத்தமாகவும், எலும்புகளாகவும், மஜ்ஜை (marrow)ப் பொருளாகவும் ஆகும்படி செய்கிறது. அத்துடன் தன்னைத்தானே அது சுத்தப்படுத்திக் கொண்டு விடுகிறது. காரணம் ஒவ்வொரு கணத்திலும் மரிக்கிற உயிர் அணுக்களை (cells)த் தூக்கியெறிய வேண்டியிருக்கிறது. உருவாக்குகிறது, சுத்தப்படுத்து கிறது, தன்னைத்தானே தொடர்ந்து காப்பாற்றிக் கொள்கிறது. எல்லாமும் தானாகவே இயங்குகிறது.

ஓர் இயல்பான வாழ்க்கை முறையை நீங்கள் கடைபிடித்தால், உடம்பு வெகு நேர்த்தியாக செயல்படுகிறது. அழகாய் ரீங்கரிக்கிறது.

தொப்புள் மையத்தை அறிந்து கொள்வதன் மூலம் உடம்பின் முழுமையான இயக்க நுட்பத்தையும் நீங்கள் அறிந்து கொண்டவராவீர்கள். யோகா சரீர தத்துவம் அவ்விதமாய் அறியப்படுகிறது. அது வெளியேயிருந்து அறியப்படுவதில்லை. அது பிணக் கூறாய்வின் (postmortem) மூலம் அறியப்படுவதில்லை. காரணம் நீங்கள் இறந்தவனைப் பற்றித் தெரிவிக்கிற எதுவும் உயிரோடு இருப்பவனின் விஷயத்தில் உண்மையாகாது என்கிறது யோகா. இறந்தவன் இருப்பவனிடமிருந்து முற்றிலுமாய் வேறுபடுகிறான். தற்போது விஞ்ஞானிகள் பிணக்கூறாய்வின மூலம் ஓர் ஊகத்துக்குத்தான் வருகிறார்கள். காரணம் செத்தவனின் உடம்பு ஒருவிதமாய் செயல்படும். உயிரோடிருப்பவனின் உடம்பு வேறுவிதமாய் செயல்படும். ஆக நாம் சவத்தைப் பற்றி அறிந்திருப்பது உடம்பின் விஷயத்தில் ஏறத்தாழ உண்மையாக இருக்குமே தவிர சரிநுட்ப உண்மையாய் இருக்காது.

யோகா உள்ளிருந்தே அறிகிறது. யோகா சரீர தத்துவத்தை உயிருடனும் உணர்வுடனுமே கண்டறிகிறது. அதனால்தான் யோகா சொல்கிற பல விஷயங்கள் நவீன மருத்துவத்துடன் ஒத்துப்

போவதில்லை. காரணம், நவீன உடலியங்கியல் (physiology) இறந்து போன ஒருவனைப் பற்றியது, சவத்தைப் பற்றியது. யோகாவோ உயிருடன் தொடர்புடையதாயிருக்கிறது.

எண்ணிப்பாருங்கள். கம்பி வழியே மின்சாரம் பாய்ந்து கொண்டிருக்கும் போது நீங்கள் கம்பியைத் துண்டிக்கிறீர்கள். அப்போது ஓர் அனுபவத்தை நீங்கள் பெறுகிறீர்கள். மின்சாரம் பாய்வது நின்ற நிலையில் கம்பிகளைத் துண்டிக்கிறீர்கள். அப்போது உங்களுக்கு மற்றோர் அனுபவம் கிடைக்கிறது. இவையிரண்டுமே வெவ்வேறானவை.

நீங்கள் ஆய்வுக்காக ஒரு சவத்தை வெட்டுகிறீர்கள். உயிருள்ள உடலை அவ்வாறு நீங்கள் வெட்ட முடியாது. காரணம் நீங்கள் வெட்டும்போது அது உயிரற்றதாகி விடும். ஆக, ஒருநாளில்லா விட்டால் இன்னொரு நாள் மருத்துவர்கள் யோகாவின் ஆய்வை ஏற்க வேண்டியிருக்கும். நீங்கள் உயிருள்ள உடம்பைப்பற்றி அறிந்து கொள்ள விரும்பினால் எப்படியாவது உங்கள் அடியாழத்துக்குச் சென்று, சாதகமான நோக்குமுறையைக் கொண்டு இந்த உடம்பை இது எப்படி ஒழுங்கு செய்யப்பட்டிருக்கிறது என்பதை அறிய வேண்டும்.

ஒரு சவத்தை ஆராய்வதென்பது உரிமையாளன் இல்லாத ஒரு வீட்டில் நுழைகிற மாதிரி. அங்கே நாற்காலி, மேசை போன்ற தட்டுமுட்டு சாமான்களை எதிர்கொள்வீர்கள். ஆனால், வீட்டுக்காரனை எதிர்கொள்ள மாட்டீர்கள். நீங்கள் ஒரு வீட்டுக்குள் செல்கிறபோது அந்த வீட்டுக்குச் சொந்தக்காரன் அங்கிருப்பின் அவனுடைய இருத்தல் (presence) வெற்றிடத்தை நிரப்பி விடுகிறது. நீங்கள் உடம்பினுள் இருக்கும்போது, உங்கள் இருத்தல் ஒவ்வோர் உயிர் அணுவையும் (cell) பண்பு அடிப்படையில் வேறாக்கி விடும். நீங்கள் போய்விட்ட உயிரற்ற ஒரு பொருள்தான் அங்கே விடப்பட்டிருக்கும்.

*'சிந்தனையைத் தொண்டையின் பேரில் செயற்படுத்து வதன் மூலம் பசி தாக உணர்வுகள் ஒழிந்து விடும்.'*

இவை உள்ளார்ந்த விசாரணைகளாகும். நீங்கள் பசியாயிருக்கும் போது பசி மிகச்சரியாக உங்கள் வயிற்றில் இருக்குமென்பதில்லை. நீங்கள் தாகமாயிருக்கும்போது தாகம் மிகச்சரியாக உங்கள் தொண்டையில் இருக்காது. வயிறு மூளைக்குத் தகவல் கொடுக்கும். அதன்பிறகு மூளை அந்தத் தகவலை உங்களுக்குத் தெரிவிக்கும். அது சில தெரிவிப்புக் குறிகளைக் கொண்டிருக்கும். உதாரணமாக,

நீங்கள் தாகத்தை உணர்கிறபோது, மூளை உங்கள் தொண்டைக்கு தாக உணர்வைக் கொடுக்கிறது. உடம்புக்குத் தண்ணீர் தேவைப்படும் நிலையில் மூளை ஓர் அறிகுறியை உங்கள் தொண்டையில் ஏற்படுத்தும். அப்போது நீங்கள் தாகத்தை உணர்கிறீர்கள். உங்களுக்கு உணவு தேவைப்படுகிற போது, உங்கள் வயிற்றில் ஏதோ ஒன்றை மூளை தோற்றுவிக்கிறது. உங்களுக்குப் பசி வேதனை உண்டாகிறது.

ஆனால், மூளையை நீங்கள் வெகு எளிதாய் ஏமாற்றிவிட முடியும். நீங்கள் தண்ணீருடன் சர்க்கரை கலந்து பருக முடியும். காரணம், மூளை சர்க்கரையின் மொழியைப் புரிந்து கொள்கிறது. எனவே, நீங்கள் சர்க்கரையைச் சாப்பிட்டாலும், சர்க்கரை கலந்த நீரைக் குடித்தாலும் எதுவும் தேவையில்லை என்று மூளை நினைத்துக் கொண்டு விடும். பசி மறைந்து விடும். அதனால்தான் நிறைய இனிப்புகளை உண்கிறவர்களுக்குப் பசியுணர்வு போய்விடுகிறது. சிறிய அளவில் உட்கொண்ட சர்க்கரை உங்களுக்குப் போதிய ஊட்டச்சத்தை வழங்கி விடாது. ஆனால் உங்களுடைய செய்கை மூளையை முட்டாளாக்கி விடும். சர்க்கரை ஒரு மொழி - கருத்து வெளியிடும் முறை. சர்க்கரை அளவு உயர்ந்து விட்டதென்று மூளை நினைத்துக் கொண்டால் தீர்ந்தது. நீங்கள் நிறையச் சாப்பிட்டு வைத்ததால்தான் சர்க்கரை அளவு கூடிவிட்டதென்று அது நினைத்துக் கொள்ளும். நீங்கள் ஒரு சர்க்கரை மாத்திரையைத் தான் போட்டிருப் பீர்கள். அதுவே மூளையை ஏமாற்றப் போதுமானதாகி விடுகிறது.

சில மையங்களில் சமநிலையைக் கொண்டு வருவதன் மூலம் பொருள்கள் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்துவிடக் கூடும் என்பது யோகாவிற்குத் தெரியும். எடுத்துக்காட்டாக உங்கள் சிந்தனையைத் தொண்டையின் பேரில் செலுத்தினால் தாகம் போய்விட்டதை, பசி போய்விட்டதை நீங்கள் உணர்வீர்கள். அப்படித்தான் யோகிகள் ரொம்ப காலத்துக்குப் பசியில்லாமல் இருக்க முடிவது. மகா வீரர் தொடர்ந்து மூன்று நான்கு மாதங்கள் கூட உண்ணாமல் இருந்திருக்கிறார் என்று சொல்லப்படுகிறது. அவர் தியானத்தில் இருந்த பன்னிரண்டு ஆண்டுகளில், பதினொரு ஆண்டுகள் அவர் உண்ணாமை (fast)யைக் கடைபிடித்திருக்கிறார். மூன்று மாதங்களுக்கு உண்ணாமல் இருப்பார். அதன் பிறகு ஒருநாள் உண்பார். அதன்பிறகு ஒரு மாதம் உண்ணாமல் இருந்துவிட்டு இரண்டு நாள் உணவு கொள்வார். பன்னிரண்டு ஆண்டுகளில் அவர் உணவு கொண்டது ஓராண்டு காலம் மட்டுமே. பன்னிரண்டு நாட்களுக்கு ஒருநாள் உண்டது

என்கிற கணக்கில் பதினொரு நாள் உண்ணாநோன்பு. அவர் எப்படி அதைச் செய்தார்? அவரால் எப்படி அதைச் செய்ய முடிந்தது? அது மனித சாத்தியமற்றது. யோகா சில இரகசியங்களின் உறைவிடம்.

நீங்கள் தொண்டையில் ஒருமுகப்படுவீர்களாயின்... முயன்று பாருங்கள். அடுத்த முறை உங்களுக்குத் தாகமெடுக்கிறபோது உங்கள் கண்களை மூடிக்கொண்டு அமருங்கள். உங்கள் ஒட்டுமொத்த கவனத்தையும் தொண்டைக்குக் கொண்டு வாருங்கள். அங்கே கவனப்படுகிறபோது, உங்கள் தொண்டை தணிவு நிலைக்கு வருவதை உணர்வீர்கள். காரணம், உங்களுடைய முழுக்கவனமும் எந்த ஒரு முனையில் இருந்தாலும், நீங்கள் அதில் இருந்து நீங்கி விலகி விடுகிறீர்கள். தொண்டையில் தாகமெடுக்கிறது. நான் தாகமாய் இருக்கிறேன் என்று உணர்கிறீர்கள். சாட்சி பாவத்தில் இருக்கும் உங்களுடைய தன்னுணர்வை நீங்கள் அங்கே கொண்டு வந்தால் திடீரென்று நீங்கள் அதிலிருந்து விலகி விடுகிறீர்கள். உங்களுடைய ஒத்துழைப்பு தகர்ந்து விடுகிறது. தற்போது தாகத்தில் இருப்பது தொண்டையேயன்றி நான் அல்ல என்பதை உணர்வீர்கள். சரி, நீங்கள் இல்லாமல் ஒரு தொண்டைக்கு எப்படி தாகம் இருக்க முடியும்?

நீங்கள் இல்லாமல் உடம்புக்கு எப்படிப் பசியெடுக்கும்? செத்துப்போன ஒருவன் பசி, தாகத்துடன் இருப்பதை நீங்கள் கண்டதுண்டா? உடம்பின் ஒட்டுமொத்த நீர்த்துவமும் மறைந்து விட்டிருந்தாலும், உடம்பில் இருந்து ஆவியாகி விட்டிருந்தாலும் செத்துப்போன ஒருவனுக்குத் தாகமெடுக்காது.

சோதித்தறியுங்கள். அடுத்த முறை பசியெடுக்கிறபோது அதைச் சோதித்தறியுங்கள். கண்களை அப்படியே மூடிக்கொண்டு தொண்டையின் அடியாழத்துக்குச் செல்லுங்கள். உங்களிடமிருந்து தொண்டை விலகி வேறாகி விடுகிற அந்தக் கணமே, தான் பசியாயிருப்பதை உடம்பு சொல்லாமல் நிறுத்திக்கொண்டு விடும். உடம்பு பசியாயிருக்க முடியாது. உடம்புடனான உங்கள் அடையாளப்படுதல் (Identification) மட்டுமே.

***கூர்ம நாடி என்கிற நரம்பின் பேரில் சிந்தனையைச் செயற்படுத்துவதன் மூலம் யோகி முற்றிலும் அசைவற்றிருக்கும் திறனைப் பெறுகிறான்.***

கூர்ம நாடி பிராணனின் (மூச்சுக்காற்று) ஒரு சாதனம். உங்கள் மூச்சை நீங்கள் – அதன் சீர்மைத்தன்மையைச் சிறிதும் மாற்றாமல்,

அமைதியாய் கவனித்தால், அதை இயல்பாக இருக்கும்படி செய்து, சும்மா கவனித்தபடி இருந்தால் நீங்கள் முற்றிலும் அசைவற்றவராகி விடுவீர்கள். உங்களுக்குள் எவ்வித அசையும் இருக்காது. ஏன் அப்படி? காரணம், அத்தனை அசைவுகளும் மூச்சு விடுவதால் வருவது. மூச்சின் வழியே இயக்கம் உங்களுக்குள் இடம் பெறுகிறது. மூச்சு நின்று விடுகிறபோது - ஒரு நபர் இறந்து விடுகிறார். அவரால் அசைய முடியாது. உங்களுடைய சிந்தனையை இடைவிடாமல் மூச்சு இயக்கத்துக்கு (breathing)க் கொண்டு வருகிறபோது, கொஞ்சம் கொஞ்சமாக உங்கள் மூச்சு நின்று விடுவதை நீங்கள் கண்டு கொள்வீர்கள்.

ஒரு நிலைக் கண்ணாடிக்கு எதிரில் இருந்தபடி யோகிகள் இந்தத் தியானத்தைச் செய்கிறார்கள். காரணம், மூச்சுக்காற்று அந்த அளவு அமைதியாகி விடுகிறது. அவர்களால் அதை உணர முடிவதில்லை. தங்களுடைய மூச்சில் இருந்த மூடுபனி மாதிரி ஒரு படலம் நிலைக்கண்ணாடியில் படிவதை அல்லது படியாமல் இருப்பதை மட்டுமே அவர்களால் காணமுடியும். சிலசமயம் தாங்கள் உயிரோடு இருக்கிறோமா இல்லையா என்பதே தெரியாத அளவுக்கு அத்தனை அமைதியாகி விடுவார்கள். சில சமயம் ஆழ்ந்த தியானத்தில் இருக்கும்போது உங்களுக்கும் இந்த அனுபவம் நேரிடக் கூடும். மூச்சு கிட்டத்தட்ட நின்று விடும். பயப்பட வேண்டாம்.

உங்கள் உணர்வு நிலை சரியாயிருந்து, மூச்சு கிட்டத்தட்ட நின்றிருந்தாலும் கவலைப்படாதீர்கள். அது மரணமல்ல, அசைவற்றிருக்கும் ஆழ்ந்த அமைதியாகும்.

யோகாவின் முழு முயற்சியும் அப்படியோர் அசைவற்ற நிலைக்கு உங்களைக் கொண்டு வருவதேயாகும். அதனை எதுவும் தகர்க்க முடியாது. எதனாலும் அமைதிக் குலைவை உண்டுபண்ண முடியாத உணர்வு நிலை அது.

நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

வழியோடு போய்க் கொண்டிருந்த ஒரு பைத்தியக்காரன் கடையொன்றில் நுழைந்து, 'நீ எதுக்காக நாள் முழுக்க இங்கே உட்கார்ந்திட்டிருக்கே?' என்று கடைக்காரனிடம் கேட்டான்.

'இலாபம் சம்பாதிக்க' என்று பதில் வந்தது.

'இலாபம்னா என்ன?' பைத்தியக்காரன் கேட்டான்.

'அது ஒன்றை இரண்டாக்குவது' என்றான் கடைக்காரன்.

'அதில் இலாபம் இல்லை, இரண்டை ஒன்றாக்குகிற போதுதான் அது இலாபமாகும்' என்றான் பைத்தியக்காரன்.

அந்தப் பைத்தியக்காரன் சாதாரண பைத்தியம் அல்லன். அவன் தெளிவாகப் புரிந்து கொண்டவனாயிருக்க வேண்டும். அவன்(ர்) ஒரு சூஃபி குரு.

ஆம், இரண்டை ஒன்றாக்குவதுதான் ஆதாயம். எல்லா இரட்டைத் தன்மைகளும் (duality) மறைகிறபோது ஒன்றே ஒன்று மட்டும் எஞ்சியிருக்கும். அதுவே ஆதாயம்.

'யோகா' என்கிற வார்த்தை ஒன்றாகிவிடும் செயல்முறையைக் குறிக்கிறது. பிரிந்து கிடப்பவற்றை எப்படி ஒன்றாக்குவது என்பதையே யோகா கருத்தில் கொள்கிறது. யோகா என்கிற வார்த்தைக்கு 'ஒன்றாகச் சேர்வது' என்பதே பொருள். யோகா என்கிற வார்த்தை ஒருங்கிணைந்திருக்கும் தன்மை (union) என்று பொருள்படுகிறது. ஆம், இலாபம் என்பது நீங்கள் இரண்டை ஒன்றாக்குவதில் இருக்கிறது.

முழு முயற்சியும் நிலையான ஒன்றைக் கண்டுகொள்வதில், பலவற்றுக்கும் பின்னால் இருக்கிற ஒன்றை எப்படிக் கண்டுகொள்வது என்பதில், அத்தனை மாற்றங்களுக்கும் பின்னால் நிலையாக இருக்கிற ஒன்றைக் கண்டுகொள்வதில் இருக்கிறது. இறவாமையுற்ற ஒன்றை, எல்லாவற்றுக்கும் அப்பால் இருக்கிற ஒன்றைக் கண்டு கொள்வதே முழுமையான முயற்சியாகும். உங்களுடைய பழக்க வழக்கங்களே உங்களை அவதிக்குள்ளாக்கலாம். காரணம் நீங்கள் ரொம்ப காலமாகவே தவறான பழக்க வழக்கங்களைத்தான் கைக்கொண்டிருந் தீர்கள். உங்கள் மனம் தவறான பழக்கங்களிலேயே கட்டுண்டிருக்கிறது – நீங்கள் எப்போதுமே அபிப்பிராயத்தில் மாறுபாடு கொண்டிருப்பவர், பிரித்துப் பார்ப்பவர். உங்களுடைய அறிவுத்திறன் பகுப்பாய்வு செய்யவும், பிரித்தறியவுமே பயிற்றுவிக்கப்பட்டிருக்கிறது. மனிதன் இதுவரைக்கும் அறிவின் துணை கொண்டே வாழ்ந்து விட்டிருக்கிறான். அவற்றை எப்படி ஒன்றாக்குவது என்பதை மறந்து போனான்.

இஸ்லாமிய மறைஞானியான ஃபரீத்திடம் ஒருவன் வந்தான், ஒரு தங்கக் கத்தரிக்கோலை அவன் வெகுமதியாய்க் கொண்டு வந்திருந்தான். அந்தக் கத்தரிக்கோல் உண்மையிலேயே வெகு நேர்த்தியாகவும், மதிப்புமிக்கதாயும் இருந்தது. ஆனால் ஃபரீத் சிரித்த படி, அவனிடம் சொன்னார், 'கத்தரிக்கோலை வைத்துக்கொண்டு நான்

என்ன செய்யப் போகிறேன். நான் எந்த ஒன்றையும் வெட்டி இரண்டாக்குவதில்லை. நீ அதை எடுத்துச் செல். உண்மையில் ஒரு கத்தரிக்கோலை விட ஊசி நல்லது. நீ எனக்கு ஒரு ஊசியைக் கொடுக்கலாம். அது தங்க ஊசியாய் இருக்க வேண்டும் என்பதில்லை. எந்த ஊசியும் பயனளிப்பதாயிருக்கும். நான் தைப்பதன் மூலம் இணைக்க விரும்புகிறேன். என்னுடைய முழு முயற்சியும் இணைப்பு வேலையில்தான்.'

ஆனால், பழைய பழக்கவழக்கங்கள் ஆய்வுக்காக வெட்டித் தள்ளும் வேலையையே செய்திருக்கின்றன. எது தொடர்ந்து மாறிக் கொண்டிருக்கிறது என்பதைக் கண்டறிவதே பழைய பழக்கங்கள். எந்த ஒன்று புதிதாய் இருக்கிறதோ மாறிக் கொண்டிருக்கிறதோ அது மனதுக்குக் கிளர்ச்சியூட்டும். எது மாறாமல் இருக்கிறதோ அதில் அக்கறை ஏற்படாது. நீங்கள் இந்தப் பழக்கங்கள் பற்றித் தெரிந்திருக்க வேண்டும். இல்லையேல் ஏதாவதொரு வழியில் அவை தங்கள் நிலையை வற்புறுத்திக் கொண்டேயிருக்கும்... மனம் ஏமாற்றத் தெரிந்தது.

ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு:

மவுலானா அர்ஷத் வாயேஸ் ஒரு சிறந்த உபதேசி (preacher) சொல்லாற்றல் படைத்தவர். ஆனால், வறிய நிலையில் இருப் பவருங்கூட

ஒரு சமயம் அரசன் அவரைத் தம்முடைய அவைக்கு அழைத்து, 'மவுலானா, என்னுடைய அமைச்சர்களின் பரிந்துரையை ஏற்று ஷிராஸில் உள்ள ஷா ஷோஜாவின் அவைக்கு ஒரு பிரதிநிதியாக உம்மை அனுப்புகிறேன். ஆயினும், நீர் அயல்நாட்டில் இருக்கிற காலத்தில் யாசிப்பதை விட்டு விடுவதாய் எனக்கு வாக்குறுதி அளிக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன் - காரணம் என்னுடைய பிரதிநிதி யாசகம் எடுப்பது எனக்குப் பிடிக்காது. எனவே, நீர் எனக்கு வாக்குறுதி கொடுக்க வேண்டும்' என்றான்.

அரசன் கேட்டபடியே மவுலானா சத்தியம் பண்ணிக் கொடுத்துவிட்டு ஷிராஸ் சென்றார்.

அங்கு தம்முடைய பணியை அவர் வெற்றிகரமாக முடிக்கும் நிலையில், ஷா அவரிடம், 'தங்கள் சமயச் சொற்பொழிவு இங்கே ரொம்பப் பிரசித்தம். தங்களுடைய விளக்கப் பேருரைகளில் ஒன்றைக் கேட்க நாங்கள் ஆவலாயிருக்கிறோம்' என்றான்.

மவுலானாவும் அதற்கு இசைந்தார்.

முடிவு செய்யப்பட்ட ஒரு வெள்ளிக் கிழமையில் மவுலானா உரைமேடையில் ஏறி மனதைத் தொடக்கூடிய உரையொன்றை நிகழ்த்தினார். கேட்பவர்கள் நெகிழ்ந்து, கண்ணீர் மல்கும்படியாய் அது இருந்தது. ஆனால் மேடையை விட்டு இறங்குவதற்கு முன், தம்முடைய யாசிக்கும் பழக்கத்தைத் திடீரென்று அவரால் கட்டுபபடுத்த முடியாமல் போனது.

அவர் சொன்னார், 'பல வாரங்களுக்கு முன்பு வரை நான் யாசகம் எடுத்துக் கொண்டிருந்தேன். ஆனால், நான் இங்கே வருவதற்கு முனனால், 'உங்கள் நகரத்தில் தங்கியிருக்கும் காலத்தில் நான் யாசிக்கக்கூடாது' என்று என்னிடம் அவர்கள் சத்தியம் வாங்கிக் கொண்டனர். என் சகோதரர்களே! உங்களிடம் நான் கேட்கிறேன், நான் யாசகம் எடுக்க மாட்டேன் என்று சத்தியம் செய்திருந்தால் நீங்களும் எனக்கு எதையும் கொடுப்பதில்லை என்று சத்தியம் செய்திருக் கிறீர்களா?' என்று.

மனம் தந்திரமானது. அது வழிகளையும், உபாயங்களையும் கண்டறியும்.

யோகா கூட்டிணைவு என்பதையும், மனம் பகுப்பாய்வு (analysis) செய்வதைப் பழக்கமாய்க் கொண்டது என்பதையும் நினைவில் வையுங்கள். எனவே மனம் ஆய்வைத் தொடங்குகிறபோதெல்லாம் ஒருபக்கமாய் அதனை ஒதுக்கி வையுங்கள். பகுப்பாய்வின் மூலம் கடைசி வரை - நுட்பமான சிறு துகளையும் (atom) நீங்கள் கண்டடைகிறீர்கள். கூட்டிணைவு (synthesis) மூலம் மிக முழுமையான ஒன்றை நீங்கள் அடைகிறீர்கள்.

'அறிவியல் அணுவைக் கண்டுபிடித்தது
யோகா ஆத்மாவைக் கண்டு கொண்டது'

அணுவென்பது அதிநுட்பமான ஒன்று. ஆத்மா என்பது மிகப்பெரியது. யோகா முழுமையைக் கண்டடைகிறது. அறிவியல் மிகச் சிறியவற்றை அறிந்து கொள்வதற்கானது.

அறிவியல் முதலில் பொருளை மூலக்கூறுகளாய் (molecules) பிரித்துப் பார்க்கிறது. அப்போது மூலக்கூறு ஒன்றை பிரித்தறிவது கடினம் என்று அவர்கள் கருதினார்கள். பிறகு அதைப் பிரிப்பதிலும் அவர்கள் வெற்றி கண்டார்கள். 'அணு' என்கிற சொல்லுக்கு 'பிரிக்க முடியாதது' என்று பொருள். அதற்கு மேலும் பிரிக்க முடியாது என்கிற

நிலையில், அதையும் அவர்கள் பிரித்தார்கள். அதன்பிறகு *எலக்ட்ரானையும், **நியூட்ரானையும் பிரித்தறிய முடியாது என்று அவர்கள் கருதினார்கள். அதற்குக் காரணம் அவை கண்ணுக்கே புலனாகாதவை என்பதுதான். எலக்ட்ரானை யாருமே பார்த்ததில்லை என்கிறபோது அதை எப்படிப் பிரிப்பது? ஆனால், தற்போது அதைப் பிரிப்பதிலும் அவர்கள் வெற்றி கண்டு விட்டார்கள். அதைப் பார்க்காமலே, அதைப் பிரிப்பதில் வெற்றி கண்டு விட்டார்கள்.

அவர்கள் தொடர்ந்தபடி இருப்பார்கள்... ஏனென்றால் எல்லாமும் கைநழுவிக் கொண்டே போகிறது.

யோகா அப்படியே நேர் எதிரான செயல்முறை: கூட்டிணைவு மூலம் மேலும் மேலும் இணைத்துக் கொண்டே போய் ஒரு முழுமையை அடைகிறீர்கள். முழுமை என்பது தனிப்பட்ட ஒன்றாக இருப்பது.

மனம் கூட சூரிய மனம் சந்திர, மனம் என்று பிரித்தறியப்படுகிறது. சூரிய மனம் அறிவியல் சார்ந்தது. சந்திர மனம் கவித்துவமானது. சூரிய மனம் எண்ணங்களை அல்லது பொருள்களைப் பலவகையாய் பாகுபடுத்தி அறியும். சந்திர மனமோ இணைந்து உருவாக்குவது. சூரிய மனம் கணக்குப் போடும், தர்க்கம் செய்யும். அரிஸ்டாட்டில் மாதிரி கோட்பாடுகளைத் தோற்றுவிக்கும். சந்திர மனமோ முற்றிலும் வேறுபட்டது. அது தர்க்கவாதத்துக்கு ஒவ்வாதது, பகுத்தறிவுக்குப் புறம்பானது. அவற்றுக்கிடையே கருத்தை வெளியிடும் முறை (language) எதுவும் இல்லை என்பதால் அவை ஒன்றுக்கொன்று மாறுபட்டே இயங்குகின்றன.

நாடோடி ஒருவன் தன்னுடைய மகனுடன் சண்டை போட்டுக் கொண்டிருந்தான். தன் பையனிடம், 'சோம்பேறி, உதவாக்கரை, நீ ஏதாவது செய்யணும், உன்னுடைய வாழ்க்கையை சோம்பேறித்தனமா கழிக்கக் கூடாதுன்னு உனக்கு எத்தனை முறை சொல்லியிருப்பேன். செப்பிடு வித்தை, கோமாளி வேலை கத்துகிட்டாதான் உன்னுடைய வாழ்க்கையில் நீ சந்தோஷமா இருக்க முடியும்னு உனக்கு எத்ததனை முறை சொல்றது?' என்று கடிந்து கொண்டான்.

பிறகு அச்சுறுத்துவதுபோல் தன்னுடைய விரலை உயர்த்திக் கொண்டு, 'கடவுளறிய என்னுடைய பேச்சை நீ இதுக்குப்பிறகும்

---

* *எலக்ட்ரான் - மிகச்சிறிய மின்னியக்க அணுத்துகள்*

** *நியூட்ரான் - மின்னியக்கமில்லாத சிற்றணு*

கேக்கலேன்னா உன்னை நான் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பி விடுவேன். அப்புறம் அறிவுகெட்டத் தனமா பல விஷயங்கள நீ மண்டையில் திணிச்சிக்க வேண்டியிருக்கும். நீ ஒரு படிப்பாளி ஆயிருவே, ஆனா பற்றாக்குறையிலும் துன்பத்திலுந்தான் உன்னோட மிச்ச வாழ்க்கையை நீ கழிச்சிட்டிருப்பே' என்றான்.

ஒரு நாடோடியின் மனம் அத்தகையது. தான் ஊர் சுற்றியாயிருந்தாலும் மகிழ்ச்சியாய் இருக்க வேண்டும் என்று நாடோடி நினைக்கிறான். நாடோடி சொல்கிறான், 'நான் உன்னைப் பள்ளிக்கூடத்தில் போட்டு விடுவேன், நீ முட்டாள்தனமான பல விஷயங்களைப் பொறுக்கிச் சேர்த்திட்டிருப்பே, ஓர் அறிவாளி ஆயிருவே - அப்புறம் உன்னோட வாழ்க்கையே வீண்தான். நீ துன்பத்தில் வாழும்படியாகும்' என்று. நீங்கள் எங்கே இருக்கிறீர்கள் என்பதைக் கண்டுகொள்ள முயலுங்கள். அறிவிற்கு ஏற்புடைய, விவாதிக்கிற, தர்க்கம் செய்கிற சூரிய மனத்திலா? அல்லது, கவித்துவமான, கனவு காண்கிற, கற்பனை செய்கிற சந்திர மனத்திலா? நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்?

இரண்டுமே முழுமையானதல்ல. ஒருவர் அந்த இரண்டுக்கும் அப்பால் செல்ல வேண்டியிருக்கும். நீங்கள் சூரிய மனத்தில் இருந்தால் முதலில் சந்திர மனதுக்கு வந்தாக வேண்டும். காரணம் வழியானது அதன் வழியேதான் செல்கிறது. நீங்கள் வீட்டில் வசிப்பவராயிருந்தால் முதலில் ஒரு நாடோடியாகப் பாருங்கள்.

அதுவே சந்நியாசம். நான் உங்களை நாடோடிகளாக்குகிறேன், ஊர் சுற்றிகளாக்குகிறேன். நீங்கள் ரொம்பவே தர்க்கம் செய்பவராக இருந்தால், நான் கூறுவேன், சரணடையுங்கள், விட்டுக்கொடுங்கள், கீழ்ப்படிகிறவராயிருங்கள் என்று. நீங்கள் ரொம்பவே விவாதம் பண்ணுகிறவராயிருந்தால் நான் சொல்வேன், என்னிடம் வாதிடுவதற்கு எதுவும் இல்லை என்று. அப்படியே என்னை உற்றுப் பாருங்கள், முடிந்தால் என்னை நேசியுங்கள். உங்களால் நம்ப முடிந்தால், உங்களுடைய ஆற்றலை சூரியனில் இருந்து சந்திரனுக்கு மாற்றிக் கொண்டு விடுவீர்கள்.

உங்கள் சக்தியை சூரியனில் இருந்து சந்திரனுக்கு நீங்கள் மாற்றிக் கொண்டவுடன் ஒரு புதிய சாத்தியம் அங்கே தொடங்கும். உங்களால் சந்திரனுக்கப்பாலும் போக முடியும். அப்போது - நீங்கள் ஒரு சாட்சியாகி விடுவீர்கள். அதுவே குறிக்கோள் ஆகும்.

*'ஞானம் பற்றிய உணர்வுடன் இருப்பதும், ஞானம் பெற்றவராயிருப்பதும் சாத்தியமா? ஞானம் பெற்று விட்டதால் ஒருவருக்கு அகந்தை வந்து விடுமா? அருள்கூர்ந்து விளக்குங்கள்.'*

முதலில் புரிந்துகொள்ள வேண்டியது: அகந்தை என்றால் என்ன என்பதுதான். அகந்தை (Ego) ஒன்றும் உறுதியாய் கட்டமைக்கப் பட்டதல்ல. உண்மையில் அது ஒன்றும் பெரிதில்லை. அது ஓர் எண்ணம், பதிலி (substitute). அது இல்லாமல் நீங்கள் வாழ்வது கடினமாகி விடும். காரணம், நீங்கள் யார் என்பது உங்களுக்குத் தெரியாது. உங்களைப் பற்றி திட்டமான ஒரு கருத்தை நீங்கள் உருவாக்கிக் கொள்ள வேண்டும். இல்லையேல் உங்களுக்குப் பைத்தியந்தான் பிடித்து விடும். 'இதுவே நான்' என்று நீங்கள் தெரிந்து கொள்ளும்படியாய் சில சுட்டிக்காட்டல்களை (indicator's) நீங்கள் நிலைப்படுத்திக் கொள்ள வேண்டும்.

நான் கேள்வியுற்றிருக்கிறேன். முட்டாள் ஒருவன் ஒரு பெரிய நகரத்தைச் சென்றடைந்தான். அங்கே ஒரு தர்மசத்திரத்தில் அவன் தங்கியிருந்தான். நிறைய பேர் நடுவே அதற்குமுன் அவன் தூங்கிப் பழக்கமில்லை. அவனுக்குக் கொஞ்சம் கவலையாகவும், அச்சமாகவும் இருந்தது. இரவு படுத்துத் தூங்கி காலையில் கண் விழிக்கும் போது தான் யார் என்பதைக் கண்டுகொள்ள முடியாமல் போய் விடுமோ என்கிற பயம். நிறைய பேர் இருந்தார்கள். அவன் எப்போதுமே வீட்டில் தனியாக ஓர் அறையில் படுத்துத் தூங்கியதால் பிரச்சினை இல்லை. அதற்கான சாத்தியமும் இல்லை. உண்மையில் அவன் எந்த நாளிலும் அவனாகவே தான் இருந்திருக்கிறான். ஆனால் இப்போதோ அவனைச் சுற்றி ஒரு கூட்டமே படுத்திருந்தது. அவர்கள் மத்தியில் அவன் காணாமல் போய்விடக்கூடும். நீங்கள் கண் விழிக்கும் போது தொடர்ந்து உங்களை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள முடிந்தால் அது சரியே. ஆனால் தூங்கும்போது நீங்கள் தொலைந்து விடலாம். இல்லையா; நீங்கள் மறந்துவிடக் கூடும். கூட்டத்தில் தொலைந்துவிட, காலையில் குழப்பத்துக்குள்ளாகலாம்.

தன்னுடைய படுக்கையில் அவன் கவலையோடு உட்கார்ந்திருப்பதைக் கண்டு யாரோ கேட்டார்கள். 'என்ன விஷயம்? நீ தூங்கப் போகலையா?' அவன் தன்னுடைய பிரச்சினையை விவரித்தான். கேட்டிருந்த ஆள் சிரித்தான், அவனிடம் 'இது ரொம்ப எளிது. அதோ மூலையில் ஒரு பலூன் கிடக்கிறது பார், எந்தக் குழந்தையோ விட்டுச் சென்றது. அதைக் கொண்டு வந்து உன் காலில் கட்டிக்கொள். காலையில் அந்த பலூன் உன்னுடைய காலில் இருந்தால் அது நீதான் என்பதைச் சரியாகத் தெரிந்து கொள்ளலாம்' என்றான்.

அந்த முட்டாளும், 'ரொம்பச் சரி' என்றான். தன்னுடைய காலில் பலூனை ஒரு நூலால் கட்டிக்கொண்டு படுத்தான். மிகவும் களைத்திருந்தபடியால் படுத்த உடனே தூங்கி விட்டான்.

யோசனை சொன்ன மனிதனுக்குக் கொஞ்சம் தமாஷ் பண்ணத் தோன்றியது. அந்த முட்டாள் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தபோது. அவனுடைய காலில் இருந்த பலூனை அவிழ்த்துத் தன்னுடைய காலில் கட்டிக் கொண்டான். காலையில் எழுந்த முட்டாள் சுற்று முற்றும் பார்த்தபடி அழுது புலம்பத் தொடங்கினான். கூட்டம் கூடிவிட்டது. அவர்கள் 'என்ன ஆச்சு?' என்று அவனிடம் கேட்டனர்.

அவன் சொன்னான். 'இப்போ எனக்கு ரொம்ப சரியாத் தெரியுது. அவன்தான் நான் என்று. ஆனால் நான் யார்?'

இதுதான் பிரச்சினை.

நீங்கள் யார் என்று அறியாத காரணத்தால் உங்களிடம் அகந்தை இருக்கிறது. ஆக ஒரு பெயர், ஒரு முகவரி, கண்ணாடியில் நீங்கள் பார்க்கிறபோது பிரதிபலிக்கிற ஒரு குறிப்பிட்ட முகம், புகைப்படங்கள், ஆல்பம் - இவையெல்லாம் உங்களுக்குத் தேவைப்படுகின்றன. அவை உங்கள் காலில் கட்டிய பலூன்கள்.

நீங்கள் கண்ணாடியில் எப்போதும் பார்த்துப் பழகிய முகத்தைத் திடீரென்று ஒருநாள் கண்ணாடியில் பார்த்து 'இது நான் அல்ல' என்று எண்ணிக் கொண்டால் - உங்களுக்குப் பைத்தியமே பிடித்து விடும் - அந்த பலூன் தவறிப் போயிருக்கும். முகம் இடைவிடாமல் மாறிக் கொண்டே இருப்பது. ஆனால் நீங்கள் அதைக் கண்டுகொள்ளாத அளவு அந்த மாற்றம் நிதானமாயிருக்கும். உங்கள் வீட்டுக்குப் போய் உங்களுடைய குழந்தைப் பருவ ஆல்பத்தை எடுத்துப் பாருங்கள். அது நீங்கள்தான் என்று உங்களுக்குத் தெரிகிறது. அதனால்தான் அதிக வித்தியாசத்தை நீங்கள் காணவில்லை. ஆனால், அதுபற்றி

ஆழமாய் சிந்தித்துப் பாருங்கள். நீங்கள் ரொம்பவே மாறிவிட்டிருப்பது தெரியும். அந்த முகம் நீங்களல்ல. உங்களின் அடியாழத்தில் ஏதோ ஒன்றுமாறாமல் இருந்தபடி இருக்கிறது. உங்களுடைய பெயரை மாற்றிவிட முடியும். நான் தினமும் அதைச் செய்கிறேன். பெயர் என்பது உங்களோடு கட்டப்பட்ட பலூன் என்பதை உங்களுக்கு உணர்த்துவதற்காகவே உங்களுடைய பெயர்களை நான் மாற்றிக் கொண்டிருக்கிறேன். அதை மாற்றிவிட முடியும். அதனால் பெயருடன் உங்களை நீங்கள் அடையாளப்படுத்திக் கொள்ள முடியாமல் போகும்.

அகந்தையென்பது உங்கள் சுயத்துக்கு தவறான மாற்றே தவிர வேறில்லை. எனவே, நீங்கள் யார் என்பது உங்களுக்குத் தெரிய வருகிறபோது மறுபடியும் அகந்தை தோன்ற சாத்தியமில்லை.

நீங்கள் என்னிடம் கேட்கிறீர்கள். 'ஞானம் பற்றிய எண்ணமே அகந்தையைத் தோற்றுவிக்க முடியுமா?' என்று. அது ஓர் எண்ணமாக மட்டுமே இருந்தால், எண்ணத்தால் முடிகிறதுதான். அந்நிலையில் 'தோற்றுவிக்கக்கூடும்' என்பது சரியாய் படவில்லை. காரணம் அகந்தை முன்பே இருந்து கொண்டிருக்கிறது! என்பதுதான் உண்மை. அந்த எண்ணம் அகந்தையால் முன்பே எண்ணப்பட்டது. அகந்தை மறைந்து, நீங்கள் உண்மையிலேயே ஞானம் பெற்றுவிட்டால், அதுதான் ஞானத்தின் பொருள். அகந்தையில் இருந்து சுயத்துக்கு (self) இடப்பெயர்ச்சி – நிலைமாற்றம். உண்மையல்லாததில் இருந்து உண்மைக்கு மாறுதல், மனமல்லாததில் இருந்து மனதுக்கு மாறுதல். உடல் வடிவில் இருந்து எண்ண வடிவாதல். நீங்கள் யார் என்பதை நீங்கள் அறிந்து கொண்டு விட்டால், யாரும் உங்கள் காலில் பலூன் கட்டிக் கொள்ளும்படி உங்களை இணங்க வைக்க முடியுமென்று எனக்குத் தோன்றவில்லை. அது நடவாத காரியம்.

ஞானியானவன் தன்னை மையமாய்க் கொண்டு எதையும் தன்னுடைய நலனுக்காகக் காண்பவனல்லன். அவனால் கர்வித்திருக்க முடியாது. ஆனால் அவனுடைய வலியுறுத்தல்களில் தற்பெருமை இருப்பதாகவே உங்களுக்குப் படும். தன்னுடைய சீடனான அர்ச்சுனனுக்கு பகவான் கீதையில் சொல்வார். 'எல்லாவற்றையும் விட்டுவிட்டு என்னுடைய பாதத்தைக் கதியாய்க் கொள். இந்த உலகத்தைப் படைத்த கடவுள் நானே' என்று. ரொம்பவே தற்பெருமை. அவரைவிட தற்பெருமையுள்ள ஒரு மனிதனை நீங்கள் காண முடியுமா என்ன? இயேசு கூறுவதைக் கவனியுங்கள்; 'விண்ணகத்தில் இருக்கிற பிதாவும் நானும் ஒன்றே'. மிகுந்த தற்பெருமை. மன்சூர்

அறிவித்துக் கொண்டார். 'நானே மெய்ப்பொருள், நானே இறுதியான மெய்ப்பொருளாய் இருப்பது' என்று. கோபம் கொண்ட முகமதியர்கள் அவரைக் கொன்று போட்டார்கள். யூதர்கள் இயேசுவைக் கொன்றார்கள். அந்த உறுதியுரைகள் (assertions) அகந்தையின் பிரதிபலிப்புகள். உபநிடதங்கள் கூறும், 'அகம் பிரம்மாஸ்மி' என்பதன் பொருள். 'நானே பூரணமானவன், நானே சகலமும்' என்பதாகும்.

ஆனால் அவர்களிடம் தற்பெருமை இல்லை. நீங்கள் அவர்களைத் தவறாகப் புரிந்து கொண்டீர்கள். அவர்கள் எதைச் சொல்லியிருந்தாலும் அது உண்மை.

தன்னுடைய தாழ்வுணர்ச்சி குறித்து ரொம்பவே கவலைக்குள்ளாகியிருந்த ஒரு மனிதனைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். எனவே, உளப் பகுப்பாய்வு நிபுணரிடம் (Psycho analyst) அவன் சென்றான். அவரிடம், 'நான் தாழ்வுணர்ச்சியால் அவதிப்படுகிறேன். தாங்கள் எனக்கு உதவ முடியுமா?' என்று வேண்டினான். அந்த நிபுணர் அவனை ஆராய்ந்து விட்டுச் சொன்னார். 'அது ஒன்றும் தாழ்வு மனப்பான்மைப் பிரச்சினையல்ல. நீ தகுதியில் குறைந்தவனாய், முக்கியத்துவமற்றவனாய் இருக்கிறாய் - அதற்கு நான் என்ன பண்ணட்டும்?' என்று.

'நான் கடவுள்' என்று கிருஷ்ணர் சொல்லிக் கொள்கிறபோது அவர் கடவுள்தான். அவர் தற்பெருமையில் அதைச் சொல்லவில்லை. அவர் என்ன செய்வார்? 'நான் கடவுளில்லை' என்று அவர் சொன்னால் அது பொய்யாகி விடும். 'மகாத்மா' என்று அழைக்கப்படுகிற சிலர் 'நான் உங்கள் கால் தூசி' என்று சொல்வதுபோல் அவரும் பவ்யமாய் சொல்லியிருந்தால், அவர் பொய்மையும் போலித்தனமும் உடையவர்தான். அவர் உண்மையை மறைப்பவராவார். 'நான் மெய்ப்பொருளாய் இருக்கிறேன்' என்று மன்சூர் சொல்கிறபோது, அவர் மெய்ப்பொருளாகவே இருக்கிறார். பிரச்சினை மன்சூரிடமோ, கிருஷ்ணரிடமோ அல்லது இயேசுவிடமோ இருந்திருக்கவில்லை. பிரச்சினை உங்களிடந்தான் இருக்கிறது. அகந்தையின்மை (non ego)யின் மொழியை நீங்கள் அறிந்திருக்கவில்லை. உங்களுடைய சொந்த முறைகளிலேயே அதை விளங்கிக் கொள்கிறீர்கள்.

ஒரு குட்டிக் கதை:

பலசரக்கு வியாபாரி ஒருவனிடம் ஓர் அழகான கிளி இருந்தது. அது அவனுடைய வாடிக்கையாளர்களை எல்லாம் ஆச்சரியப் படுத்தியதோடு. அவன் இல்லாதபோது கடையையும் கவனித்துக்

கொண்டது. ஒருநாள் சடங்குடன் நீராடுவதற்காக அவன் வெளியே சென்றபோது, அந்தக் கிளி ஓர் அலமாரியின் மேற்பலகையில் இருந்தபடி கடையைக் கவனித்துக் கொண்டிருந்தது. அப்போது கடைக்காரனின் பூனை திடீரென்று ஒரு சுண்டெலியின் மீது பாய்ந்தது. ரொம்பவே பயந்து போன கிளி, கடையின் குறுக்காகப் பறந்தபோது பாதாம் எண்ணெய் இருந்த ஜாடியைத் தள்ளிவிட்டது.

வியாபாரி திரும்பி வந்ததும், அந்தக் காட்சியைக் கண்டு கோபாவேசமானான். அவன் ஒரு கோலை எடுத்து, கிளியின் மண்டையில் திரும்பத் திரும்ப அடித்தான். பாவம், தலை வழுக்கையாகிப் போன அந்தக் கிளி, மூலையில் இருந்த அலமாரித் தட்டில் சோர்வுடன் உட்கார்ந்து கிடந்தது. அது நாட்கணக்கில் வாயைத் திறக்கவேயில்லை. தன்னுடைய செயலுக்காக வருந்திய வியாபாரி, தனது தோழனை சமாதானப்படுத்த பல தந்திரங்களை முயன்று பார்த்து விட்டான். அந்த விஷயத்தில் தன்னுடைய வாடிக்கையாளர்களின் உதவியையும் அவன் நாடினான்.

எல்லாமே பயன்படாமல் போயிற்று. அந்தக் கிளி பேசவே யில்லை. எப்போதும் போல் அந்தக் கிளி பேசாமல் உட்கார்ந்திருந்த போது, ஒருநாள் வழுக்கைத்தலை துறவி ஒருவன் கடைக்கு வந்தான். அவனைப் பார்த்த கிளி கேட்டது. ‘ஆக நீயும் பாதாம் எண்ணெய் ஜாடியைக் கீழே தள்ளி விட்டாயா?’ என்று.

ஒரு பாதாம் எண்ணெய் இருந்த ஜாடியைத் தள்ளியதால்தான் தன்னுடைய தலை வழுக்கையாயிற்று என்று அந்தக் கிளி எண்ணிக் கொண்டிருந்தது. அப்போது அங்கே வந்த துறவியின் தலையும் வழுக்கையாயிருக்கவே அந்த விளக்கம்.

இதுவரை நாம் பழகியிருந்த மொழியைத் தான் நமக்குத் தெரியும்.

ஞானியிடம் அகந்தை இல்லை – அடக்கமும் இல்லை. அடக்கம் என்பது அகந்தையின் மேற்பூச்சு. அகந்தை மறைந்தால் அடக்கமும் மறைந்து விடுகிறது.

தான் யார் என்பதை ஞானி அறிவான். எனவே ஒரு பொய்யான அடையாளத்தைச் சுமக்கிற அவசியம் அவனுக்கில்லை. முன்பெல் லாம் அது தேவைப்பட்டது. இல்லையேல் பெருங்கூட்டத்தில் நீங்கள் தொலைந்து போவீர்கள். அது இல்லாமல் வாழ்வதென்பது முடியாத காரியமாகவே இருந்திருக்கும். நீங்கள் அறியாமையில் இருக்கிறபோது

அகந்தை தேவைப்பட்டிருக்கும். ஆனால், ஞானம் பெற்றபின், தன்னுடைய சொந்த இசைவின் பேரிலேயே அது மெள்ள நழுவி விட்டிருக்கும். தன்னுடைய வழியைக் கோல் கொண்டு துழாவிக் கண்டுபிடிக்கிற ஒரு குருடனைப்போன்றதுதான் அது. 'ஒருவருக்குக் கண்கள் குணமாகி விட்ட பின் கைக்கோல் தேவைப்படுமா அல்லது தேவைப்படாதா?' என்று அவன் கேட்கக்கூடும். நான் என்ன சொல்வோம்? 'கண்கள் குணமாகி விட்டால் கைக்கோலை விட வேண்டியதுதான்' என்று சொல்வோம். கோலும், கோலால் துளாவிக் கண்டுபிடித்தலும் ஒரு பதிலி (substitute)தான். மோசமான பதிலிதான் என்றாலும் ஒருவர் குருடாக இருக்கும் போது, அது அவசியமாகி விடுகிறது.

தற்போது கேள்வி புரிந்து கொள்ளப்பட வேண்டியது: 'ஞான உணர்வுடன் இருப்பதும், ஞானமுற்றிருப்பதும் சாத்தியமா? ஞானம் பெற்று விட்டோம் என்கிற எண்ணமே அகந்தையைத் தோற்று விக்குமா?' அகந்தை முன்பே இருக்கிறது, அதைத் தோற்றுவிக்கிற அவசியம் இல்லை. அதன் மூலமே ஞானம் பற்றிய எண்ணம் உருவானது. அகந்தை விடப்பட்டிருந்தால் உண்மையிலேயே விழிப்புணர்வும், பிரக்ஞையும், சுயமும் இருட்டில் இருந்து மேலெழுந்து விட்டிருக்கும் - சூரியோதயம் நிகழ்ந்திருக்கும் - அந்நிலையில் அகந்தை பற்றிய கருத்தை - எண்ணத்தை எதுவும் தோற்றுவிக்க முடியாது. உங்களை நீங்களே கடவுளாய் அறிவித்துக் கொண்டிருக்க முடியும். ஆனால் அதுகூட தற்பெருமை கொள்ளும் பழைமையான அமைப்பைத் தோற்றுவித்திருக்காது.

ஞானம் பற்றிய உணர்வுடன் இருப்பது சாத்தியமா...? ஞானமே தன்னுணர்வோடு (conscious) இருப்பதுதான். மறுபடியும் உங்களுடைய கருத்து வெளியிடும் முறையை நீங்கள் பயன்படுத்துகிறீர்கள். என்னால் அதைப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் அது தவறு. தன்னுணர்வு பற்றிய உணர்வோடு நீங்கள் இருப்பது முடியாத காரியம். இல்லையேல் நீங்கள் வெகு தூரம் பின்னோக்கிச் செல்லும் நிலைக்கு (regression)த் தள்ளப்படுவீர்கள். அந்நிலையில் நீங்கள் அதீத தன்னுணர்வுக்கு ஆளாகி, அதற்கொரு முடிவேயில்லாமல் போய்விடும். ஓர் உணர்வென்றால் அதை நீங்கள் உணர்ந்திருக்க முடியும். இரண்டாவதாய் ஓர் உணர்வையும் நீங்கள் உணர்ந்திருப்பீர்கள். மூன்றாவது..... இப்படியே போய்க்கொண்டே இருக்க முடியும். இல்லை, அது அவசியமில்லை. ஓர் உணர்வே போதுமானது.

ஞானமுற்ற ஒருவர் உணர்வோடு இருக்கிறார். ஆனால் ஒருவர் தன்னுணர்வை (consciousness) உணர்ந்திருப்பதற்கில்லை. ஒருவர் முழு உணர்வோடு இருக்கிறார். ஆனால், அதில் பொருளேதும் இல்லை (நோக்கம்). தன்னைச் சுற்றியுள்ள வெற்றிடத்தை வெளிச்சப்படுத்துகிற விளக்கு மாதிரி, ஒருவர் எளிதாய் உணர்வோடு இருக்கிறார். அது சுத்த உணர்வு நிலை. புறப்பொருள் மறைந்து அகப்பொருள் முழுமையாய் மலர்கிறது. பொருள் (நோக்கம்) இல்லை. அதனால் எண்ணமும் இல்லை. பொருளும், எண்ணமும் மறைந்து விடுகிறது. நீங்கள் வெறும் உணர்வோடு மட்டுமே இருக்கிறீர்கள். எதுபற்றியும் உணராமல் வெறும் உணர்வாக மட்டுமே இருக்கிறீர்கள். நீங்களே உணர்வு நிலையாகி விடுகிறீர்கள்.

புரிந்துகொள்ள எளிதான வேறொரு பரிமாணத்தில் நான் இதனை உங்களுக்கு விளக்குகிறேன். நீங்கள் காதலிக்கிறபோது, காதலிக்கப் படுகிறபோது நீங்கள் ஒரு காதலனாய் இருப்பதில்லை. காதலாகவே மாறி விடுகிறீர்கள். நீங்கள் ஏதோ ஒன்றைச் செய்கிறீர்கள் என்பதாலல்ல. நீங்கள் எதையும் செய்கிறவராயில்லை என்கிறபோது உங்களை எப்படி ‘காதலன்’ என்று சொல்லிக் கொள்வீர்கள்? நீங்கள் காதலாக இருக்கிறீர்கள் என்பதே சரியான சொற்றொடராய் இருக்கும்.

என்னிடம் வருகிறவர்களின் கண்களில் நான் நம்பிக்கை உணர்வைக் காண்கிறேன்.

நான் அவர்களிடம், ‘நீங்கள் நம்பிக்கையுணர்வோடு இருக் கிறீர்கள்’ என்று சொல்வதில்லை. ‘நீங்கள் நம்பிக்கையாகவே இருக்கிறீர்கள்’ என்றுதான் சொல்வேன். இரண்டுக்கும் உள்ள வேறுபாட்டைப் புரிந்து கொள்ளுங்கள். யாரேனும் ஒருவர் இன்னொருவரிடம் ‘நீங்கள் நம்பிக்கை உடையவராய் இருக்கிறீர்கள்’ என்று சொல்கிறபோது, அது போதிய அளவாயிருக்காது. ஆனால், ‘நீங்கள் நம்பிக்கையின் வடிவம்’ என்கிறபோது அது மிகப்பெரிய அளவில் முக்கியத்துவம் பெற்று விடும். நீங்கள் விரும்பக்கூடிய ஏதோ ஒன்று அந்த நபரிடம் இருப்பதாய் கருதியோ அல்லது உங்களுடைய உயர்ந்த நோக்கம் ஒன்று ஈடேறுவதற்கு அவர் பயன்படலாம் என்பதற்காகவே நீங்கள் அதனைக் குறிப்பிடலாம். ஒரு தந்தை தன் மகனிடம், ‘நீ நம்பிக்கையூட்டுகிறவனாக இருக்கிறாய்’ என்கிறபோது, ‘நான் பெரிய பணக்காரனாக விரும்பினேன். என்னால் முடியாமல் போயிற்று. அதை முடிக்கும் திறமை உன்னிடம் உள்ளது - நீ நம்பிக்கையளிக்கிறாய்’ என்பதையே கருத்தில் கொள்கிறான்.

தன்னுடைய பேராவல் தன் மகன் மூலம் பூர்த்தி செய்யப்படும் என்று தந்தை கருதுகிறான்.

'நீங்கள் நம்பிக்கையாகவே இருக்கிறீர்கள்' என்று நான் சொல்கிறபோது, உங்கள் மூலம் நிறைவேற்றிக் கொள்ளும்படியாய் என்னிடம் எந்தப் பேராவலும் இல்லை. உங்களைப் பற்றி ஒரு விவரவுரை (statement)யையே நான் வழங்குகிறேன். என்னுடைய நோக்கத்துடன் அதற்கு சம்பந்தம் இல்லை. நான் நிறைவாகவே இருக்கிறேன். யார் மூலமாகவும் ஒன்றை நிறைவேற்றிக் கொள்கிற விருப்பம் எனக்கில்லை. 'நீங்கள் நம்பிக்கையாகவே இருக்கிறீர்கள்' என்று நான் சொல்கிறபோது, உங்களைப்பற்றிய தகவலறிக்கையாகவே அதைத் தருகிறேன். அது உங்களுடைய சாத்தியத்தை, நிகழ்த்தும் தன்மையையே அது காட்டுகிறது.

பாருங்கள், நீங்கள் ஓர் இசைக்கலைஞராய் இருக்கலாம், அதற்காக உங்கள் மகனும் இசைக்கலைஞனாக வேண்டும் என்பதில்லை. அவனிடம் அதற்கான போக்கோ, விருப்பமோ, திறமையோ இல்லாமலிருக்கலாம். அந்நிலையில் நீங்கள் அவனை 'நம்பிக்கையூட்டுகிறவன்' என்று அழைக்க மாட்டீர்கள். அதே மகன் கணிதத்தில் நிபுணரான ஒரு தந்தைக்கு நம்பிக்கையளிப்பவனாய் இருக்கலாம். நீங்கள் பணத்தைத் துரத்திக்கொண்டு போகிறவராய் இருந்து, உங்கள் மகன் உலகப் பற்றுகளைத் துறந்தவனாய் இருந்தால் அவன் உங்களுக்கு நம்பிக்கையூட்டுகிறவனாய் இருக்க மாட்டான், அவன் எதிரிடையானவனாகவே இருப்பான். ஒருவரை 'நம்பிக்கை அளிப்பவர்' என்று நீங்கள் அழைக்கிறபோது, உங்களுடைய சொந்த விருப்பங்களோடு அவரைத் தொடர்புப் படுத்துகிறீர்கள்.

'நீங்கள் நம்பிக்கையாகவே இருக்கிறீர்கள்' என்று நான் சொல்கிறபோது, நீங்கள் செயல்படுவதற்கு எந்தப் போக்கினைத் தேர்ந்தெடுத்திருந்தாலும், உங்களிடம் வளர்ச்சிக்கும், மலர்ச்சிக்கும் மிகப்பெரிய சாத்தியம் இருப்பதையே நான் குறிப்பிடுகிறேன்.

நீங்கள் எப்போதாவது காதல் கொண்டிருந்தால் உங்களை ஒரு காதலராக நீங்கள் உணர மாட்டீர்கள், உங்களைக் காதலாகவே உணர்வீர்கள். அதனால்தான் இயேசு கூறுகிறார். 'இறைவன் அன்பே வடிவானவன்' என்று. 'கடவுள் மிகவும் அன்பாயிருப்பவர்' என்று அவர் சொல்லியிருக்க வேண்டும். 'கடவுள் அன்பு வடிவானவன்' என்கிறபோது நீங்கள் எதைக் கருத்தில் கொள்கிறீர்கள்? கடவுளும் அன்பும் ஒரே பொருளைத் தருகிற இருவேறு சொற்கள். 'கடவுள்

அன்பே வடிவானவர்' என்கிறபோது அவர் கூறியதையே திரும்பக் கூறியவராகிறார். அன்பு இறைவனின் ஒரு பண்பு அல்ல. அது அவருடைய இருப்புணர்வு (being) ஆகும்.

***'நான் வழக்கமாகவே சூரியன் மற்றும் சந்திரன் என்கிற இரண்டு மனங்களைக் கொண்டிருக்கிறேன். தயவு செய்து விளக்கமளியுங்கள்.'***

மனம் இரு மனமாகவே இருக்கிறது. அப்படித்தான் அது செயல்படுகிறது. மனதின் இப்பக்நுட்பம் முழுவதையும் அது எப்படி இயங்குகிறது என்பதையும் நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

மனதின் செயற்பாடு பிரித்தறிவது. நீங்கள் பிரித்துப் பார்க்கா விடில் மனம் மறைந்து விடும். மனதுக்குப் பிரித்தல் (பகுப்பு) தேவைப் படும். மனம் எதிரிடையானவற்றைத் தோற்றுவிப்பது. மனம் சொல்லும், 'உன்னை நான் விரும்புகிறேன். உன்னை நான் விரும்பவில்லை. 'நான் உன்னை நேசிக்கிறேன். நான் உன்னை வெறுக்கிறேன்' என்று. மனம் சொல்கிறது. 'இது அழகானது. அது அருவருப்பானது' என்று. மனம் சொல்கிறது. 'இதைச் செய்ய வேண்டும். அதை விட்டுவிட வேண்டும்' என்று. மனம் தேர்ந்தெடுக்கும் உரிமை கொண்டது. ஜே.கே. கூறுவார், 'நீங்கள் தேர்வற்றவராயின் மனமற்றவராகி விடுவீர்கள்' என்று. தேர்வற்றிருத்தல் என்பது உலகைப் பிரித்துப் பார்ப்பதை விட்டு விடுவது என்று பொருள்.

எண்ணிப் பாருங்கள். இம்மண்ணுலகில் இருந்து மனிதன் மறைந்து விட்டால் அழகான எதுவும் இங்கே இருக்குமா என்ன? அருவருப்பூட்டக் கூடியதுதான் இருக்குமா? ஏதேனும் ஒரு நல்லது இருக்குமா? ஒரு கெட்டது இருக்குமா?

மனித இனத்தோடு மறைந்து விடும் எல்லாப் பிரித்தல்களும் (divisions). உலகம் மட்டும் அப்படியேதான் இருக்கும். பூக்கள் மலரும். நட்சத்திரங்கள் நகர்ந்தபடி இருக்கும். சூரியன் மேலெழும். எல்லாம் ஏற்கெனவே இருந்தபடி தொடரும். ஆனால் பிரித்தல் மறைந்து விடும் மனிதனோடு. மனிதன் தான் பிரித்தலை உலகத்துக்குக் கொண்டு வந்தான். மனிதன் என்றால் 'மனம்' என்பதைக் குறிக்கும்.

விவிலியத்தில் கூறப்பட்ட கதையின் முழுமையான பொருள் அதுதான். அறிவு என்கிற விருட்சத்தின் கனியைப் புசிக்காதே என்று கடவுள் ஆதாமிடம் சொன்னார். 'அறிவு விருட்சம்' என்பதைவிட 'மனவிருட்சம்' என்று நாம் மொழி பெயர்க்க முடிந்தால் அது சிறப்பு.

ஒட்டுமொத்த கதையும் 'ஜென்' (Zen)னாகி விடும். அதுவே மிகச் சரியான பொருள். அறிவு விருட்சமே மனவிருட்சம். இல்லையேல், கடவுள் எதற்காகத் தன் குழந்தைகள் அறிவற்றவர்களாய் இருக்க வேண்டும் என்று விரும்பியது? அவர்கள் மனமற்றவர்களாய் இருக்க வேண்டும் என்று அவர் விரும்பினார். அவர்கள் பிரித்தல் (பகுப்புவேலை) இல்லாமல் ஒற்றுமையாய், இணைந்து வாழ வேண்டும் என்று விரும்பினார். விவிலியக் கதையின் பொருள் அதுவே. ஒரு ஜென் குரு அதன்பேரில் விளக்கமளிப்பதாய் இருந்தால், அல்லது நான்அதைப்பற்றி கருத்து தெரிவிப்பதாய் இருந்தால் 'மனவிருட்சம்' என்று கூறுவதே மேல் என்று கூறியிருப்பேன். அப்போது விஷயம் மிகத் தெளிவாகி விட்டிருக்கும்.

ஆதாம் மனமற்றவனாய் வாழவேண்டும் என்று கடவுள் விரும்பினார். வாழ்க்கையைப் பிரித்துப் பாராமல் வாழ்வதாயின் அது பெருமளவில் கடுமையாகி விடும். தீவிரத்தன்மை பெற்று விடும். பிரிப்பு வேலை உங்களையும் பிரித்துப் போடும். நீங்கள் எப்போதாவது கவனித்ததுண்டா? நீங்கள் பிரிக்கிறபோதெல்லாம் ஏதோ ஒன்று உங்களுக்குள் பின்னுக்கு இழுத்துக் கொள்கிறது, ஏதோ ஒன்று உங்களுக்குள் உடைகிறது. 'நான் ஒருவரை விரும்புகிறேன்' என்று நீங்கள் சொல்கிற கணத்தில் யாரோ ஒருவரை நோக்கி உங்கள் கரம் நீள்கிறது. 'நான் விரும்பவில்லை' என்று சொல்கிற கணத்தில் அந்தக் கரம் பின்னுக்கு இழுத்துக் கொள்ளும். வாழ்வு முழுமை அடையும் வண்ணம் நீங்கள் வெளிப்படையாயில்லை. ஆதாம் முழுமை யாயிருக்க வேண்டும் என்று கடவுள் விரும்பினார்.

அந்த விவிலியக்கதை மேலும் கூறுகிறது; மனிதன் தன்னுடைய அறிவைக் கைவிடாவிடில், கடவுளின் தோட்டத்தில் அவன் மறுபடியும் ஏற்கப்பட மாட்டான்' என்று. இயேசு அறிவைக் கைவிட்டார். அதனால்தான் அவர் அறிவுக்கு ஏற்புடைமையற்றவராய், மெய்யுரைபகன்றாலும் முரண்பாடாய் தோன்றுவது. கடவுளுக்கு எதிராய் ஆதாம் செய்ததை மனிதனின் உணர்வு நிலையில் இருந்து இயேசு துடைத்தெறிந்து விட்டார். ஆதாம் தோட்டத்தை விட்டு வெளியே வந்தான். இயேசு மறுபடியும் பிரவேசித்தார். இயேசு எப்படி மறுபடியும் பிரவேசித்தது? மனதையும், பிரித்தலையும் விட்டதன் மூலம்.

மனம் எப்போதும் பிரித்தலின் வழியே செயல்படுகிறது. பிரிக்காமல் இருக்க முயன்று பாருங்கள். நீங்கள் ஒரு பூவைப்

பார்க்கிறீர்கள். 'அது அழகாயிருக்கிறது' என்று சொல்லாதீர்கள். அதற்கு அவசியமில்லை. நீங்கள் அப்படிச் சொல்லா விட்டாலும் அது அழகாகவே இருக்கிறது. அப்படிச் சொல்வதன் மூலம் கூடுதலாய் எந்த அழகையும் அதற்கு சேர்த்து விடவில்லை.

லாவோட்சு பற்றி ஒரு சின்னக்கதை உண்டு. அவர் காலையில் உலாவச் செல்வது வழக்கம். அண்டை வீட்டுக்காரனும் அவரைத் தொடர்ந்து செல்வான். லாவோட்சு அதிகம் பேச விரும்ப மாட்டார் என்பது அவனுக்குத் தெரியும். எனவே அவன் வாயை மூடிக்கொண்டு விடுவான். ஒருசமயம் அண்டை வீட்டுக்காரனுடன் தங்கியிருந்த அவனுடைய நண்பனும் அவர்களோடு உலவி வர விரும்பினான். லாவோட்சுவும், லாவோட்சுவின் அண்டை வீட்டுக்காரரும் அமைதியாயிருந்தனர். அந்த நண்பனுக்குக் குழப்பமாகி விட்டது என்றாலும் அவனும் அமைதியாயிருந்தான். காரணம், 'நீ எதுவும் பேசக்கூடாது' என்று அண்டை வீட்டுக்காரன் அவனுக்குச் சொல்லியிருந்தான். அப்போது சூரியன் உதயமாகிக் கொண்டிருந்தது. அது ரொம்பவும் அழகாயிருந்தது. அவன் மறந்து விட்டவனாய் சொன்னான். 'ஆகா, என்னவொரு அழகான காலை நேரம்!' என்று. லாவோட்சுவோ, அவனுடைய நண்பனோ அதுபற்றி கருத்து கூறவில்லை.

வீடு திரும்பிய லாவோட்சு அண்டை வீட்டானிடம் சொன்னார், 'இந்த ஆசாமியைக் கூட்டிட்டு வராதே. ரொம்பப் பேசறான்' என்று.

ரொம்பப் பேசுகிறானா?

அண்டை வீட்டான் கூட சொன்னான், 'அந்த ஆள் எதுவும் பேசவில்லையே. 'அழகான ஒரு காலைப்பொழுது' என்றுதானே சொன்னான்.

லாவோட்சு கூறினார், 'நானுந்தான் அங்கிருந்தேன். அதைச் சொன்னதால் என்ன ஆகிவிட்டது? அதைச் சொல்லாவிட்டாலும் அது அழகுதான். மனதை எதற்காக உள்ளே கொண்டு வருவது? இல்லை. அந்த மனிதன் ரொம்பப் பேசறான், அவனைக் கூட்டிட்டு வராதே'.

காலைப்பொழுது முழுவதையும் அவன் நாசமாக்கி விட்டானா? அவன் உலகைப் பலவகைகளாய்ப் பிரித்துப் பார்த்தான். சூரியோதயம் அழகாயிருப்பதாய் அவன் சொன்னான். ஏதோவொன்றை அழகாயிருப்பதாக நீங்கள் சொல்கிற போதெல்லாம், ஏதோவென்றுக்கு கடுமையாய் வெறுப்பு தெரிவிக்கப்படுகிறது, காரணம் அழகு என்பது

அருவருப்பு என்கிற ஒன்று இல்லாமல் இருப்பதில்லை. ஒன்று அழகா யிருப்பதாய் நீங்கள் சொல்கிறபோது, வேறொன்று அருவருப்பாய் இருப்பதாகவும் நீங்கள் சொல்லி விடுகிறீர்கள். ‘நான் உன்னை விரும்புகிறேன்’ என்று நீங்கள் சொல்கிறபோது, வேறொருவரை நீங்கள் வெறுப்பதைச் சொல்லி விடுகிறீர்கள்.

நீங்கள் பல வகைகளாகப் பிரிக்காமல் வாழ்வதாயின்... பூவை அப்படியே பார்த்திருங்கள். அது எதுவாயிருந்தாலும் இருக்கட்டும். ‘அப்படியே இருக்கட்டும். தனது மெய்ம்மையில் (reality) அது இருக்கும்படியாய் விட்டு விடுங்கள். வாய்விட்டு எதையும் சொல்ல வேண்டாம். உள்ளார்ந்த விதத்திலும் சொல்ல வேண்டாம். அதுகுறித்து எந்தவொரு கருத்தையும் உருவாக்கிக் கொள்ளாதீர்கள். அந்நிலையில் மிகப்பெரிய அளவிலான புரிதல் ஏற்படும்.

நீங்கள் துயரத்துக்குள்ளாகிறபோது அதைத் துயரம் என்று சொல்லாதீர்கள். நிறைய பேருக்கு இந்தத் தியானத்தை நான் வழங்கியிருக்கிறேன். அவர்கள் வியப்படைந்திருக்கிறார்கள். நான் அவர்களிடம் சொல்கிறேன். ‘அடுத்த முறை நீங்கள் துயரப்படும் போது அதைத் துயரம் என்று சொல்லாதீர்கள். அப்படியே அதைப் பார்த்திருங்கள்’ என்று. நீங்கள் அதைத் துயரம் என்று சொன்னால் அதைத் துயர்ப்படுத்துவது போலாகும். அது எதுவாயினும் அப்படியே பார்த்திருங்கள். அதைப் பகுப்பாய்வு செய்யாதீர்கள். முத்திரை குத்தாதீர்கள். மனதை உள்ளே கொண்டு வராதீர்கள். மனம் பிரித்துப் போடும். முத்திரை குத்தும், வகையினப்படுத்தும். வகையினப்படுத் தாதீர்கள். உண்மை தன்னைத்தானே உறுதிப்படுத்திக் கொள்ளட்டும். நீங்கள் ஒரு சாட்சியாயிருந்து விடுங்கள். போகப்போக நீங்களே சொல்வீர்கள், துயரம் என்பது துயரமே அல்ல’ என்று. அத்துடன் மகிழ்ச்சியும் நீங்கள் நினைத்ததுபோல் மிகுந்த மகிழ்ச்சியாய் இருக்காது.

கொஞ்சம் கொஞ்சமாய் எல்லைக்கோடுகள் ஒன்றையொன்று எதிர்கொண்டு, இரண்டறக் கலந்து, இல்லையென்றாகும். அதன்பிறகு நீங்கள் சொல்வீர்கள் இருப்பது ஒரே சக்திதான் - மகிழ்ச்சி, மகிழ்ச்சியின்மை என்கிற இரண்டும் ஒன்றேயென்று. எப்போதுமே சக்தி ஒன்றுதான். உங்கள் விளக்கமே வேறுபாடுகளை உண்டு பண்ணுகிறது. பரவசமும் வேதனையும் ஒன்றே. உங்கள் விளக்கம் அதை இரண்டாக்குகிறது. உலகமும் கடவுளும் ஒன்றுதான். உங்கள் விளக்கமன்றோ அதை இரண்டாக்கியது.

உண்மையைப் புரிந்து கொள்ளுங்கள், விளக்கங்களை விட்டு விடுங்கள். எது விளக்கப்படாததோ அது உண்மை. விளக்கப்பட்டது உண்மையல்லாததாகும்.

'நான் வழக்கமாகவே இரு மனதில் இருக்கிறேன்....' என்பது கேள்வி. மனம் எப்போதுமே இருமனதாகத்தான் இருக்கிறது. மனம் இயங்குவதற்கும், ஊக்க வளர்ச்சி கொள்வதற்கும், வாழ்வதற்கும் அதுதான் வழி.

சூரியன் மற்றும் சந்திரன்: அதுவும் புரிந்து கொள்ளப்பட வேண்டியதுதான். காரணம் ஒவ்வோர் ஆணிடமும் பெண்மைத்தன்மை இருக்கிறது. ஒவ்வொரு பெண்ணிடமும் ஆண் தன்மை இருக்கிறது.

இது சாத்தியம்: நீங்கள் உள்ளாகப் பகுத்துக் கொண்டிருக்க முடியும் – ஆண் பெண்ணிடமிருந்து வேறாக இருக்கிறான். உள்ளிருக்கும் பெண் உள்ளிருக்கும் ஆணிடமிருந்து விலகியே இருக்கிறது. அந்நிலையில் ஒரு மோதல், கடுமையான போட்டி எப்போதுமே இருந்து கொண்டிருக்கிறது. இது மனித குலத்தின் இயல்பான நிலை. உங்களுக்குள் இருக்கும் ஆணும் பெண்ணும் ஒருவரையொருவர் எதிர்கொண்டு, ஆரத்தழுவி, இரண்டறக் கலந்துகொள்ள முடியும். முதல் முதலாக நீங்கள் ஒற்றை (one)யாகிறீர்கள் – ஆண் பெண் பேதமற்ற ஒன்றாக. அதன்பிறகு நீங்கள் மனிதத் திறனுக்கும் அறிவுக்கும் அப்பாற்பட்டவராகி விடுகிறீர்கள்.

ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு. அது துணிச்சலை, இடர்ப்பாடுகளைச் சமாளிக்கும் மனப்பண்பைப் பற்றிய கதைகளுள் ஒன்று. அத்தகைய தீரக்கதை இந்தியாவில் மட்டுமே சாத்தியமாகும். நான் இன்றைய இந்தியாவைச் சொல்லவில்லை. காரணம் இன்றைய இந்தியா ரொம்பவும் கோழைத்தனமானது – ஆபத்தை எதிர்கொள்ளத் தேவையான மன உறுதி இல்லாதது.

நீங்கள் ஒரு லிங்கத்தை கட்டாயம் பார்த்திருப்பீர்கள். சிவனுடைய குறியீடு, படைப்பாற்றலை உருப்படுத்துவது. சிவலிங்கத்துக்கென்றே இலட்சோபலட்சம் கோயில்கள் இருக்கின்றன. உண்மையில் சிவனுடைய சிலையை நீங்கள் பார்ப்பதற்கில்லை. அவருடைய சிலைகளெல்லாம் மறைந்து விட்டன. இருப்பது குறியீடு (symbol) மட்டுமே. அந்தக் குறியீடு லிங்கம் மட்டுமல்ல, அதுவே யோனியாகவும் உள்ளது. ஆணும் பெண்ணுமாய் அது இருக்கிறது. அது பெண்ணுக்குள்ளாக ஆண், சந்திரனுக்குள்ளாக சூரியன்.

பெண்ணை எதிர்கொள்ளும் ஆணாகவே அது இருக்கிறது. அது பால் சார்ந்த விதத்தில் இறுகத் தழுவிக்கொள்ளும் ‘யின்’ (Yin) மற்றும் ‘யாங்’ (Yang) சக்தியாகும். உள்ளிருக்கும் ஆண், உள்ளிருக்கும் பெண்ணை எப்படி எதிர்கொண்டு ஏற்கிறான் என்பதற்கான சுட்டுதலே இது. காரணம் உள்ளே உள்ளதற்கு முகம் இல்லை. அதனால்தான் சிவனுடைய உருவச்சிலைகள் மறைந்து விட்டன. உள்ளே இருப்பது சக்தி மட்டுமே. எனவேதான் லிங்கம் உருவற்றிருக்கிறது. வெறும் சக்தியாக இருக்கிறது.

ஆனாலும் அந்தக் கதை சொல்லப்பட்டது... அதைக் கேட்டு அதிர்ந்து விடாதீர்கள். காரணம் மேற்கத்திய மனம் மெய்ம்மை (reality) பற்றி ரொம்பவே அச்சத்துக்குள்ளாகியிருக்கிறது.

கதை இதுதான். சிவன் தன்னுடைய மனைவியான பார்வதியுடன் காதல் விளையாட்டில் ஈடுபட்டிருந்தார். சிவன் தன்னுடைய மனைவியுடன் புரியும் காதல் சாதாரண மனிதக் காதல் போன்ற தல்லவே. அவர் மூடிய கதவுகளுக்குப் பின்னால் இருந்துகொண்டு முயங்கவில்லை, கதவுகள் திறந்தேயிருந்தன. தேவலோகத்தில் திடீரென்று ஒரு நெருக்கடி நிலை. தேவர்கள் கூட்டம் சிவனிடம் தீர்வு பெற வேண்டி பிரும்மா, விஷ்ணுவுடன் திரண்டு வந்தது. பிரச்சினை ரொம்ப அவசரமானது. எனவே அவர்கள் அறைக்குள் வந்து விட்டார்கள் - சிவனுடைய தனிமை கெட்டு அந்த இடமே சந்தைப் பேட்டையானது - ஆனால் அவரோ தன்னைச் சுற்றி ஒரு கூட்டமே நின்று பார்ப்பதைக் கவனியாமல் காதலில் மெய்ம்மறந்திருந்தார். தேவர்களனைவரும் பாலுணர்வூட்டுபவை கண்டு பாலின்பம் அடைபவராயினர் (voyeurs). அவர்களால் அங்கிருந்து போகமுடியவில்லை, ஆற்றல் மிக்கதோர் ஆடலல்லவா நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஆற்றல் அளவிட முடியாததாயிருந்தது. அவர்கள் அதனை உணர்ந்தனர். அவர்களால் அங்கிருந்து போகமுடியவில்லை. அவர்கள் அந்த இடத்தின் அமைதியைக் குலைப்பதற்கில்லை. காரணம் அது அத்தனை புனிதமாயிருந்தது.

சிவனது காதல் விளையாட்டு தொடர்ந்தது, மேலும் மேலும் தொடர்ந்தபடி இருந்தது. அவர் அதை முடிவுக்குக் கொண்டு வருவாரோ இல்லையோ என்று தேவர்கள் கவலைப்பட்டனர். உடனடியாய் தீர்வு காணப்பட வேண்டிய நிலையில் இருந்தது அவர்களுடைய பிரச்சினை. ஆனால் சிவனோ தம்மை முற்றிலுமாய் இழந்து விட்டிருந்தார். அவரும் அங்கில்லை, தேவியும் அங்கில்லை.

ஆணும் பெண்ணும் ஒருவரோடொருவர் முழுமையாய் ஐக்கியப்பட்டு விட்டிருந்தனர். ஒரு சேர்க்கை நிகழ்ந்தது. மிகப்பெரிய ஒரு கூட்டிணைவு, சக்திகளின் சங்கமம்.

அவர்கள் அங்கே தாமதிக்க விரும்பினர். ஆனால், மற்ற தேவர்களைப் பற்றிய அச்சம் வந்துவிட்டது பண்பு மனம் அப்படித்தானே செயல்படும். அந்தக் காட்சிக்கொரு சாட்சியாய் இருப்பதில் அவர்கள் ஆர்வம் காட்டினர். ஆனாலும் அஞ்சினர். காரணம் தாங்கள் கண்டு மகிழ்வதை மற்றவர்கள் பார்த்து விட்டால் தங்களுடைய மதிப்பு ஆபத்துக்குள்ளாகி விடுமோ என்கிற அச்சம். எனவே அவர்கள் எல்லாருமாய் சிவனைச் சபித்தனர். ‘இன்று முதல் உலகில் உமக்கு உருவச் சிலையே இல்லாமல் போகட்டும். நீர் லிங்கக் குறியீட்டில் (phallic symbol) நினைவு கொள்ளப்படுவீராக’ என்று. லிங்கம் யோனியில், சூரியன் சந்திரனில். ‘நீர் தற்போதிருந்து பாலுறவின் உச்சகட்ட உணர்வாகவே (orgasm) நினைவு கொள்ளப் படுவீர்’ என்று சபித்தனர்.

எப்போதுமே இப்படியாகிறது. ஆபாச எழுத்துகளைக் கடுமையாக எதிர்க்கிற ஒருவர் எனக்கு நண்பராயிருந்தார். அவருடைய புத்தகத் தொகுப்பில் நிறைய ஆபாச இலக்கியங்களும், படங்களும் இருந்தன. ஒருமுறை அவரைக் காணச் சென்றிருந்த நான் அவரிடம் கேட்டேன். ‘என்ன இதெல்லாம்?’ என்று. அவர் சொன்னார். ‘என்ன செய்யட்டும், நான் இவற்றையெல்லாம் படித்து இவற்றில் உள்ள குறை நிறைகளை ஆராய வேண்டியிருக்கிறது’ என்று. ‘நான் ஆபாச இலக்கியங்களுக்கு எதிரானவன் என்பதால், அவற்றில் என்ன இருக்கிறது என்பது எனக்குத் தெரிந்திருக்க வேண்டுமல்லவா’ என்று தம்முடைய செய்கையை அவர் நியாயப்படுத்தவும் முற்பட்டார். இதைத்தானே, ‘கொன்றால் பாவம் தின்றால் போச்சு’ என்பது.

மற்ற தேவர்கள் சிவனைச் சபித்தது எனக்கென்னவோ வாழ்த்துகிற மாதிரி பட்டது. காரணம், அந்தக் குறியீடு (symbol) உண்மையில் வெகு அழகானது, இல்லையா. உலகிலேயே இந்த லிங்கக் குறியீடு ஒன்றுதான் கடவுளாய்க் கருதி வணங்கப்படுகிறது. அது ஒரு படைப்பாற்றல் சின்னம் என்பதையே இந்துக்கள் மறந்து விட்டார்கள். அது வெறும் சின்னம் - குறியீடு என்று அவர்கள் நினைக்கவில்லை. அதை அவர்கள் மிகவும் உள்ளார்ந்த விதத்தில் ஏற்றுக் கொண்டார்கள். அந்தச் சின்னம் - குறியீடு அழகாயிருக்கக் காரணம் அதில் லிங்கத்தோடு யோனியும் இருக்கிறது என்பதால்தான்.

'யின்' (Yin) சக்தியும் சிவனுடன் இருக்கிறது. லிங்கம் யோனியில் அமைக்கப்பட்டிருக்கிறது. இரண்டும் ஒன்றோடொன்று தொடர் புற்றிருக்கின்றன. அது ஓர் இணைவிழைச்சின், உச்சகட்டத்தின், ஒன்றாகி விட்ட ஆற்றலின் குறியீடாய் இருக்கிறது.

உள்ளேயும் அதேபோன்று நிகழ்கிறது. ஆனால், உங்களுடைய மனத்தை நீங்கள் கைவிட்டால்தான் அது நிகழ்கிறது. மனதை விடுகிற போதுதான் நேசம் உங்களுக்குச் சாத்தியப்படும். ஆனால் மனதைக் கைவிட்டால் நேசம் மட்டுமல்ல, கடவுளும் சாத்தியமாகி விடும். காரணம் அன்பே கடவுள்.

உங்களுக்குள்ளாக சூரியனுக்கும் சந்திரனுக்கும் இடையே மோதல் ஏற்படுமாயின் உங்களுக்கு வெளியேயுள்ள பெண்ணைத் தெரிந்து கொள்வதில் விருப்பம் ஏற்பட்டு விடும். நீங்கள் ஆணாக இருந்தால் உங்களுக்கு வெளியேயுள்ள பெண்ணால் கவரப்படுவீர்கள். நீங்கள் ஒரு பெண்ணாக இருப்பின் உங்களுக்கு வெளியேயுள்ள ஆணால் கவரப்படுவீர்கள். உள்ளே இருந்த முரண்பாடு பகுதிகளாய் பிரிக்கப்பட்டபின், உங்களுடைய சூரிய சக்தி (ஆண் சக்தி) சந்திர சக்திக்குள் (பெண் சக்தி) நகர்ந்து செல்லும். அதற்கு மேலும் பிளவு இருக்காது. அவை இணைந்து விடும். அதன்பிறகு நீங்கள் புறத்தேயுள்ள ஆண் அல்லது பெண்ணிடம் கவரப்படுகிற நிலை இருக்காது. முதல் முறையாக நீங்கள் பால்சார்ந்த விதத்தில் நிறைவடைவீர்கள்.

நீங்கள் புறத்தேயுள்ள பெண்ணை விட்டுப் போய்விடுவீர்கள் என்று நான் சொல்லவில்லை. அதற்கு அவசியம் இல்லை. அல்லது புறத்தேயுள்ள ஆணைவிட்டு நீங்கள் போகவும் அவசியம் இல்லை. ஆனால், தற்போது ஒட்டுமொத்த உறவுமே முற்றிலும் மாறுபட்டு விடுகிறது. ரொம்பவும் இணக்கமுடையதாகி விடும். தேவையை முன்னிட்டு ஏற்படுத்திக் கொண்ட உறவாக அது இருக்காது. பகிர்ந்து கொள்கிற உறவாகவே இருக்கும். தற்போது ஓர் ஆண் பெண்ணொருத்தியை அணுகுவது தேவையின் பொருட்டுதான். பெண்ணை ஒரு சாதனமாகப் பயன்படுத்தவே அவன் விரும்புகிறான். பெண்ணும் அவனைச் சாதனமாய்ப் பயன்படுத்திக்கொள்ளவே விரும்புகிறாள். அதனால்தான் ஆண்களும், பெண்களும் தொடர்ந்து சண்டையிட்டு எதிர்த்து நிற்பது. அடிப்படையில் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்பவர்தாம் அவர்கள். அதே எதிர்ப்பைத்தான் வெளியேயும் அவர்கள் பிரதிபலிக்கிறார்கள்.

அத்துடன், ஒரு பெண்ணை நீங்கள் பயன்படுத்துகிறபோது அவள் எப்படி உணர்விலும் செயலிலும் உங்களோடு ஒத்துப் போவாள் என்று நினைக்கிறீர்கள்? தான் ஒரு கருவியாகப் பயன்படுத்தப் படுவதை எண்ணி அவள் உள்ளுக்குள் சீற்றமடைவாள். தன்னுடைய ஆன்மாவையே இழந்து விட்டதுபோல் அவள் உணர்வாள். அதனால்தான் அவள் கோபப்படுவது. அந்நிலையில் அவளும் அந்த ஆணை கருவியாகவே (தன்மையில் தாழ்த்தி) பயன்படுத்துவாள். தன் கணவனை அவள் பெண்டாட்டி தாசனாக்கி விடுவாள். அந்தக் கதை தொடரும்.

இதனை காதல் அல்ல மோதல் என்றே சொல்ல வேண்டும். காதலைவிட போரைப் போன்றே இருக்கும். அன்பை விட வெறுப்பே அதிகமாயிருக்கும்.

உங்களுக்குள் இருக்கும் ஆண் அல்லது பெண்ணுடன் நீங்கள் ஒருமுறை இசைவாகி விட்டால், சற்றும் எதிர்பாராத விதமாய் மற்றவர்களுடனும் நீங்கள் இசைவாகி விடுகிறீர்கள். உங்களுக்குள் இருந்த முரண்பாடு மறைகிறது. எது உள்ளே இருக்கிறதோ அதனுடைய நிழல்தான் வெளியே இருக்கிறது. அந்நிலையில் நீங்கள் தொடர்புற்றவராயிருப்பீர்கள் அல்லது தொடர்பற்றவராகி விடுவீர்கள். நீங்கள் முற்றிலும் தடையற்றவர்தாம். அந்நிலையில் நீங்கள் எதைத் தெரிவு செய்கிறீர்களோ அதுதான் இருக்கும். நீங்கள் தொடர்புடைய வராயிருப்பதை விரும்பாவிடில், தனிமையில் இருக்க விரும்பினால், உங்களால் தனித்திருக்க முடியும். ஒருவர் உள்ளாக ஓர் ஒழுங்கமைவைப் பெற முடிவதே இதன் நேர்த்தி.

சூரிய மண்டல சக்தியை சந்திரமண்டல சக்தியாய் எப்படி மாற்றுவது என்பதே பதஞ்சலியின் ஒட்டுமொத்த முயற்சியாகும். எப்படி அவையிரண்டுக்கும் சாட்சியாயிருப்பது, அவற்றை எதிர்கொண்டு, இரண்டறக் கலந்து, ஒன்றாகி விடுவது என்பது பற்றியும். அவை எப்படி ஆராய்ந்தறியாமலே நேரடியாய் உணரப்படுகிறது என்பது பற்றியும்.

மனதை நீங்கள் கைவிடாதவரை மனம் ஒருபோதும் உங்களுக்கு இடமளிப்பதில்லை. மனம் எப்போதுமே பிரிக்கப்பட்டதாய் இருக்கிறது. காரணம் அது பிறப்பிலேயே அமைந்தது – சுபாவம். அது பிரித்தலைச் சார்ந்திருக்கிறது. ஆக, நீங்கள் ஓர் ஆணாக இருக்கிறீர்கள், நீங்கள் ஒரு பெண்ணாக இருக்கிறீர்கள். இதுதான் பிரிப்பு, இதுதான் மனம். புத்தர் யார் – ஓர் ஆணா அல்லது பெண்ணா? நாம் சிவனை அர்த்த நாரீஸ்வரராக – பாதி ஆண் அல்லது பாதி பெண் என்கிற குறியீட்டில்

உருப்படுத்துகிறோம். அப்படியிருக்கக் காரணம் ஒரு தந்தை மற்றும் தாயைக்கொண்டே நீங்கள் பிறந்தீர்கள். உங்களில் பாதி உங்கள் தந்தையிடம் இருந்தும், உங்களில் பாதி உங்கள் தாயிடம் இருந்தும் வந்தடையப் பெற்றது. ஆக ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே யுள்ள மிகப்பெரிய வேற்றுமை அவர்களுடைய பண்பு வேறுபாடல்ல. (அவர்களுக்கு அளிக்கப்படுகிற முக்கியத்துவத்தில்தான் வேறுபாடு). பெண் உணர்வு சார்ந்த விதத்தில் பெண்ணாகவும், தன்னுணர்வில்லாத (unconscious) போது ஆணாகவும் இருக்கிறாள். ஆண் உணர்வு நிலையில் ஆணாகவும், தன்னுணர்வில்லாத போது பெண்ணாகவும் இருக்கிறான். அவ்வளவுதான் வேறுபாடு.

உங்களுடைய மனங்கள் ஓர் ஆணாக அல்லது பெண்ணாக இருக்கும்படி வைக்கப்பட்டிருக்கிறது. சமுதாயம் அந்தப் பாத்திரங் களுக்கு அழுத்தமாய் முக்கியத்துவம் கொடுக்கிறது. ஒரு நிலைத்திராத இருப்புணர்வை (fluid being) அது அனுமதிப்பதில்லை. அது உங்களைத் திண்மை (solid)யுடையவராக்குகிறது. பெற்றோர்கள் சொல்கிறார்கள். 'நீ ஒரு பையன், நீ பொம்மைகளை வைத்துக் கொண்டு விளையாடக் கூடாது. அது ஒரு பையனுக்குத் தகுதியானதல்ல. நீ ஆண் பிள்ளை. பொம்மை விளையாட்டெல்லாம் பெண்களுக்குத்தான் என்று. ஆண்கள் எவ்வகையிலும் பெண் பிள்ளைகளைக் கணக்கில் எடுத்துக் கொள்வதில்லை. 'நீ என்ன *சிஸ்ஸி (அலியா?' ஆண் பிள்ளையா லட்சணமா இரு' என்பார்கள். தான் எங்கே அழைத்துச் செல்லப்படு கிறோம் என்பது தெரியாமலே அந்தச் சிறுவன் ஓர் ஆடவனைப்போல் நடந்து கொள்வதில் கவனம் செலுத்துகிறான். அவன் ஆணாகிறான். அது அவனுடைய இருப்புணர்வில் பாதியாகும்.

ஒரு சிறுமி பெண்ணாகிறாள். அவளுடைய இருப்புணர்வில் பாதி அது. மரங்களில் ஏறக்கூடாது என்று அவளுக்குச் சொல்லப்படுகிறது. அது பையன்களுக்கு மட்டுமானதாம். சுத்த முட்டாள்தன வார்த்தை. மரங்கள் எல்லாருக்குந்தானே. 'ஆற்றில் நீந்தப் போகாதே, அதெல் லாம் பையன்களுக்கானது' என்பார்கள். ஆறு எல்லாருக்குந்தானே.

மனித இனம் அப்படித்தான் வளம் குன்றியது. ம்ம்...? சிறுவனுக்கு என்று ஒரு பாத்திரம், சிறுமிக்கென்று ஒரு குறிப்பிட்ட பாத்திரம். அவர்களுடைய முழுமையே முற்றாய் இழக்கப்பட்டது. தங்களுடைய சன்னல்களின் பக்கம் அவர்கள் அசையாமல் நிற்கிறார்கள்.

* *சிஸ்ஸி (sissy) - பெண் தன்மை கொண்ட சிறுவன்*

அவர்களால் வானத்தை முழுதுமாய் பார்க்க முடிவதில்லை. சன்னலின் பக்கச்சட்டம் தடுக்கிறது.

ஆண் ஒரு சட்டமாய் (frame) இருக்கிறான், பெண் ஒரு சட்டமாய் இருக்கிறாள் - அது (அந்தக் குறிப்பிட்ட அமைவு) உங்கள் இருப்புணர் வாகாது. அந்த சட்டத்தோடு உங்களை அடையாளப்படுத்திக் கொள்ளாதீர்கள். அதை விட்டு வெளியே வாருங்கள்.

ஒருமுறை நீங்கள் கட்டுத்தளர்வும், தணிவடையவும் தொடங்கி விட்டால், நிராகரிக்கப்பட்ட மறுக்கப்பட்ட பகுதியை மறுபடியும் நீங்கள் பயன்படுத்தத் தொடங்கி விட்டால், கற்பனை செய்யவோ, கனவு காணவோ முடியாத அளவு நீங்கள் தகுதியில் உயர்ந்து விடுவீர்கள். அந்நிலையில் உங்களுடைய இருப்புணர்வு (being) முழுமை பெற்று விடும்.

நீங்கள் புனிதமாயிருக்க வேண்டும் என்று நான் விரும்புகிற போது, அதைத்தான் கருத்தில் கொள்கிறேன். ஒரு கத்தோலிக்க சாமியார், அல்லது புத்தத்துறவி அல்லது சமணத் துறவியாவதை நான் கருதவில்லை. எல்லாமே அபத்தம். நீங்கள் புனிதமாக வேண்டும் என்று நான் விரும்புகிறேன். புனிதத்தின் பொருள் முழுமை யாயிருப்பது. சமுதாயத்தால் மறுக்கப்பட்டது எதுவாயினும் அதை மறுபடியும் பயன்படுத்தப் பாருங்கள். மறுபடியும் பயன்படுத்துவதில் அச்சம் வேண்டாம். நீங்கள் ஓர் ஆணாயிருந்தால் சில சமயம் பெண்ணைப்போல் நடப்பதற்கு அஞ்ச வேண்டாம்.

யாரோ செத்துப் போனார்கள். உங்களால் அழ முடியவில்லை. காரணம் நீங்கள் ஓர் ஆண். அத்துடன் கண்ணீர் பெண்களுக்கு மட்டுமேயானது. கண்ணீர் - எத்தகைய நேர்த்தியான விஷயம் - அது ஆண்களுக்கு மறுக்கப்பட்டது. அப்போது ஆண் கடின சித்தமும், வன்முறையும், கவலைத்தன்மையும் கொண்டு விடுகிறான். அடால்ஃப் ஹிட்லர்கள் இங்கே அவதாரம் பண்ணுவதில் வியப்பதற்கு என்ன இருக்கிறது? எந்த ஒரு மனிதனின் கண்ணீர் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து விடுகிறதோ அவன் என்றாவதொரு நாள் ஹிட்லராகி விடுவான். எவனிடம் கண்ணீர் சுரக்கவில்லையோ அவன் செங்கிஸ்கானாகி விடுவான். அந்நிலையில் அவனிடம் இரக்க உணர்வே அற்றுப் போய்விடும். தான் மக்களுக்கு என்ன செய்கிறோம் என்று உணரமுடியாத அளவுக்கு அவன் கடின சித்தனாகி விடுவான். தன்னுடைய உணர்வில் சின்ன உறுத்தல்கூட இல்லாமல் ஹிட்லர் லட்சோபலட்சம் பேரைக் கொன்று தீர்த்தான். அவனிடம் உண்மையில்

ஆண் சக்தி மட்டுமே இருந்தது. பெண் சக்தி முற்றிலுமாய் இருந்திருக்கவில்லை. பெண்ணுக்குரிய அன்பு, இரக்கம் எல்லாம் மறைந்து போயிற்று. கண்ணீர்த்துளிகள் காணாமல் போய்விட்டன.

பெண்களைப்போலவே ஆண்களும் கண்ணீர் விட்டு அழ வேண்டும் என்று நான் விரும்புகிறேன். உருண்டோடும் கண்ணீர்த் துளிகள் உங்கள் இதயத்தை மென்மையாக்கி விடும். அவை உங்களைத் தங்குதடையின்றி தொடரச் செய்யும். அவை உங்கள் சன்னல் சட்டத்தை உருகச் செய்துவிடும். அவை விரிந்து பரந்த வானத்தை நீங்கள் காண்பதற்கு இடமளிக்கும்.

குரு தயாளைப்போல் உரக்கச் சிரிக்க பெண்களுக்கு இடமளிக் கப்படவில்லை – எந்தவொரு பெண்ணும் சிரிப்பதற்கு இடமளிக்கப்பட வில்லை. அது பெண்ணின் அழகுக்கு எதிரிடையானது. என்னவோர் அறிவற்ற காரியம்! நீங்கள் மனம் விட்டுச் சிரிக்க முடியாது போனால் மிகுதிய அளவில் தவற விடுவீர்கள். சிரிப்பு என்பது வயிற்றில் இருந்து வரவேண்டும். ஒட்டுமொத்த உடம்பும் குலுங்குகிற மாதிரி சிரிப்பு என்பது பெருங்களிப்புடையதாய் (hilarious) இருக்க வேண்டும். அது பட்டமாகவோ, முரட்டுத்தனமாகவோ இருக்கக்கூடாது. ஆனால் பெண்கள் சிரிப்பதில்லை, புன்னகை பூப்பதோடு சரி. உரக்கச்சிரிப்பது நாகரிகமடந்தைக்கு ஒவ்வாதது. அந்நிலையில் பெண்களின் வாழ்க்கை அச்சக் கிளர்ச்சி உடையதாகிவிடும். காலப்போக்கில் அவர்கள் மெல்லிய படலம் போல், கனவைப்போல், இயல்பாயில்லாமல், நம்பிக்கையற்றவராகி விடுகிறார்கள்.

சீமாட்டிகளாகவும், கனவான்களாகவும் மாறிவிடாதீர்கள். புனிதர்களாக மாறுங்கள். முழுமை எல்லாவற்றையும், ஒவ் வொன்றையும் ஒன்று சேர்க்கிறது. கடவுளையும் சைத்தானையும் முழுமை ஒருங்கிணைக்கிறது. பிறகு அங்கே பிரித்தல் இருக்காது. மனம் அப்போது விடப்பட்டு விடும். புனிதமான ஒருவனிடம் மனம் இருப்பதில்லை.

புனிதமானவன் இன்னும் கத்தோலிக்கனாயிருந்தால் அவன் புனிதமானவனல்லன். காரணம், அவனிடம் கத்தோலிக்க மனம் இருக்கும். புனிதமானவன் இன்னும் இந்துவாக இருந்தால் அவன் புனிதனல்லன். அவனிடம் இந்து மனம் இருந்து கொண்டிருக்கும்.

முன்பொரு நாள் பகல் பாபா பற்றிய புத்தகமொன்றை நான் படித்துக் கொண்டிருந்தேன். அவருடைய பெயருக்குப் பொருள்

'கிறுக்குப் பிடித்த தந்தை' ஆகும். அவர் கிறுக்கராக இருந்திருக்க வேண்டும். சூஃபிகளின் சொற்பொருளில் அது கிறுக்கு ஆகாது. காரணம் அவர்கள் ஞானமுறறவர்களைத்தான் 'பித்தன்' என்று அழைப்பது. ஆனால், உளப்பகுப்பாய்வில் அது கிறுக்குப் பிடித்ததாகி விடும். அவர் நரம்புக் கோளாறில் பாதிக்கப்பட்டவர் (reurotic). தன்னுடைய நூலொன்றில் அவர் சொல்கிறார் - நான் அதை எதிர்ப்பட்டபோது திகைத்துப் போனேன். அத்துடன் அவர் புனிதர் என்று கருதப்படுகிறார். தனது நூலில் அவர் சொல்கிறார். 'தாங்கள் இந்துவாக மாறவிரும்புவதாக மேற்கத்தியர்கள் பலரும் என்னிடம் சொன்னதுணடு. அது சாத்தியமில்லை என்று நான் அவர்களுக்குச் சொல்லியிருக்கிறேன். இந்துவானவன் பிறக்கிறான், எவரும் இந்துவாக மாற முடியாது' என்று. பிறப்பிலேயே இந்து - பல பிறவிகளாய் தேடிப் பெறப்பட்டது அது. பல பிறவிகளிலும் நீங்கள் நல்வினைகள் செய்திருந்தால்தான் இந்துவாகப் பிறப்பீர்கள். நீங்கள் இந்துவாக மாற முடியாது. ஒரு கிறிஸ்துவனாக மதம் மாறுவதைப் போல் அத்தனை மலினமான காரியம் அல்ல அது.

அந்தப் புனிதரான பகல் பாபா சொல்கிறார். 'நான் அவர்களுடைய கோரிக்கையை மறுத்தேன். காரணம் அது பல பிறவிகளில் தேடிப் பெற வேண்டிய ஒன்று. இந்துவாக இருப்பதற்கு உச்சநிலை அடைந்திருக்க வேண்டும் என்று. 'நீங்கள் இந்துவாகவே பிறந்திருந்தாலும், நல்வினைகளைச் செய்யாமல், வெறும் சமயப்பற்றுடையவராக மட்டுமே இருந்தால் மனித குலத்தில் கடைப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவராவீர்கள்' என்றும் அவர் கூறுகிறார். உதாரணமாக - நீங்கள் ஓர் அமெரிக்கராகலாம். இந்த மனிதர் 'சைமன் அண்ட் ஷீஸ்டர்' என்கிற பதிப்பாளரை முயன்று அடைந்திருக்கிறாரே.

இவர்கள் புனிதர்களல்லர். இவர்கள் இந்து வெறியர்கள் மதியற்றவர்கள் - உணர்ச்சி மிகைப்பு (neurotic)க்குள்ளானவர்கள்.

நீங்கள் மனம் உடையவராயிருந்தால் புனிதரல்லர். எவ்வளவுதான் நற்பண்புடையவராயினும், மனம் புனிதமற்றதாகவே இருக்கும். காரணம் மனதால் முழுமையடைய முடியாது என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

ஒரு மாலைப் பொழுதில் முல்லா நஸ்ருத்தீன் தனது மனைவியிடம் சொன்னார். 'கொஞ்சம் பாலாடைக்கட்டி கொண்டு வா சாப்பிடுவதற்கு. பாலாடைக்கட்டி பசியுணர்வை அதிகரிப்பதோடு. கண்களைப் பளிச்சிட வைக்கும்' என்று.

மனைவி சொன்னாள். 'நம்மிடம் பாலடைக்கட்டி இல்லை' என்று.

'ரொம்ப சரி. பாலடைக்கட்டி பல்லுக்கும், ஈறுக்கும் கெடுதல் பண்ணும்' என்று பதிலளித்தார் முல்லா.

'நீங்கள் சொன்னதில் எது உண்மை' என்று கேட்டாள் மனைவி.

'வீட்டில் பாலடைக்கட்டி இருந்தால் முதலில் சொன்னது. இல்லை என்றால் இரண்டாவது' என்று பதில் வந்தது.

மனம் இவ்விதமாய் செயல்படுகிறது.

ஒரு பெண் உங்களுக்கு வசமானால் அவளைக் காதலிப்பீர்கள், அவள் விலகிச் சென்றாலோ வெறுப்பீர்கள். வீட்டில் பாலடைக்கட்டி இருந்தால் முதலாவது, வீட்டில் பாலடைக்கட்டி இல்லையென்றால் இரண்டாவது.

பிரிவுகளை விடுங்கள், பிரித்தலை விடுங்கள். வாழ்க்கையை முழுமையாய் வாழப்பாருங்கள். எனக்குத் தெரியும். அது அத்தனை எளிதான காரியம் அல்ல என்று. பல நூற்றாண்டுகளாகவே இந்த மனம் பிரிப்பதற்கான நிலையில் மட்டுமே வைக்கப்பட்டிருக்கிறது.

உளவியல் நிபுணர்கள் சொல்கிறார்கள். வாழ்க்கையில் தொண்ணூற்று எட்டு சதவிகிதத்தை நாம் தவறவிட்டு விடகிறோம் என்று. ஆம், தொண்ணூற்று எட்டு சதவிகிதம். இரண்டு சதவிகிதம் மட்டுமே வாழப்படுகிறது. காரணம் சன்னல் சட்டம் (frame) அதற்குமேல் இடமளிப்பதில்லை.

சன்னலை உடையுங்கள், சட்டத்தைத் தகர்த்தெறியுங்கள் - எரித்துப் போடுங்கள். உங்களுடைய மதங்களை எரித்துப் போட்டுவிட்டு வெளியே வாருங்கள். உங்களுடைய அத்தனை கருத்தியல்களில் இருந்தும், மனோபாவங்களில் இருந்தும், தவறான ஊகங்களில் இருந்தும் வெளியே வர முடிந்தால் நீங்கள் முழுமையாகி விடுவீர்கள்.

> ***'நீங்கள் அடிக்கடி சொல்லியிருக்கிறீர்கள், ஞானிகள் கனவு காண்பதில்லை என்று. ஆனால் சுவாங்சு தாம் ஒரு வண்ணாத்திப் பூச்சியாவதாய் கனவு கண்டார் என்றும் எங்களிடம் நீங்கள் சொல்லியிருக்கிறீர்கள். தயவு செய்து இதுபற்றி விளக்குங்கள்.'***

இது ஸ்வாமி யோக சின்மயா கேட்டது. அவரால் நகைச் சுவையைப் புரிந்துகொள்ள முடியவில்லை என்றே படுகிறது. அவரால்

அதை ஏன் புரிந்து கொள்ள முடியவில்லை என்பது எனக்குத் தெரியும். அவர் தவறான இடத்தில் - இந்திய யோகிகள் மற்றும் சாதுக்கள் கூட்டத்தில் அதிகம் இருந்திருக்க வேண்டும் - அத்துடன் நகைச் சுவையுணர்வின் துல்லியத்தை அவர் மறந்திருப்பார். புனிதமாயிருப் பதற்கான அடிப்படைப் பண்பு நகைச்சுவை. புனிதமானவன் நகைச்சுவையுணர்வுடையவனாயிருப்பான். ஆனால் இவரோ ரொம்பவும் அசைந்து கொடுக்காதவராய் இருக்கிறார்.

சுவாங்சு கனவு கண்டார் என்று நான் சொன்னபோது சுவாங்சு அந்தக் கனவுடன் தொடர்புடையவராயிருந்தார் என்ற பொருளில் தான் சொன்னேன். கனவு கண்டார் என்று சொல்லவில்லை. தம்மைப்பற்றி ஓர் அழகான நகைச்சுவையை அவர் உருவாக்கினார் - தம்மைப்பற்றித் தாமே சிரித்துக் கொண்டார். மற்றவர்களைப் பற்றிச் சிரிப்பது ரொம்ப சுலபம், தன்னைப் பார்த்து தானே சிரித்துக்கொள்வது கடினம். உங்களைக் கண்டு நீங்கள் நகைக்கக்கூடிய திறமை உங்களுக்கு வரும்போது நீங்கள் அகந்தையற்றவராகி விடுவீர்கள். காரணம், அகந்தை எப்போதுமே அடுத்தவரைக் கண்டுதான் நகைக்கும். உங்களைக் கண்டு நீங்கள் நகைக்கத் தொடங்குகிற போது, அகந்தை அங்கே இருக்க முடியாது.

ஆம், எந்த ஞானியும் கனவு காண்பதில்லை. ஆனால் ஞானிகள் நகைச்சுவையுணர்வுடையவர்கள். அவர்களால் சிரிக்க முடியும். அடுத்தவர்களையும் சிரிக்க வைக்க முடியும்.

இப்படி நடந்தது. மூன்று பேர் மெய்ப்பொருளைக் காண வேண்டி பயணம் மேற்கொண்டனர். ஒருவர் யூதர், அடுத்தவர் கிறிஸ்தவர், மூன்றாமவர் ஒரு முகமதியர். அவர்கள் சிறந்த நண்பர்கள்.

ஒருநாள் தாங்கள் கண்டெடுத்த ஒரு நாணயத்தைக் கொண்டு அவர்கள் அல்வாத் துண்டொன்றை வாங்கினர். அந்த முகமதியரும், கிறிஸ்தவரும் அப்போதுதான் வயிறு புடைக்கச் சாப்பிட்டிருந்தனர். அதனால் அவர்கள் கொஞ்சம் கவலைப்பட்டனர். காரணம் அந்த யூதர் அல்வா முழுவதையும் சாப்பிட்டு விடுவாரே என்று. அவர்கள் சாப்பாட்டை வாரித் திணித்திருந்ததால் அவர்களுடைய வயிற்றில் அதற்குமேல் எதற்கும் இடமிருக்கவில்லை. எனவே அவர்கள் யோசித்து, சதியாலோசனை செய்து - ஒரு யோசனையைத் தெரிவித்தனர். 'நாம் இப்போது படுக்கச் செல்வோம். காலையில் நம்முடைய கனவுகளைப் பற்றி சொல்வோம். யார் மிகச் சிறந்த கனவு கண்டவரோ அவர் அந்த அல்வாவைச் சாப்பிடலாம்' என்று. அது

பெரும்பான்மைக் கருத்தாயிருந்தபடியால் (இரண்டு பேர்) யூதர் (ஒருவர்) அதை ஏற்கும்படியாயிற்று - அதுதானே மக்களாட்சிக் கோட்பாடு. வேறு என்ன செய்ய.

ரொம்பவும் பசியோடிருந்த யூதரால் நன்றாகத் தூங்க முடிய வில்லை. நீங்கள் பசித்திருக்கிறீர்கள். அத்தோடு பக்கத்தில் அல்வாவும் இருக்கிறது என்கிற போது எப்படித் தூக்கம் பிடிக்கும்? மேலும் உங்களுக்கெதிராய் இரண்டு பேர் சதியாலோசனை செய்திருக் கிறார்களே.

நள்ளிரவில் அவர் எழுந்து, அல்வாவை சாப்பிட்டுவிட்டு, படுத்துக் கொண்டார்.

காலையில் கிறிஸ்தவர்தான் முதலில் தம்முடைய கனவை விரித்துச்சொல்பவராயிருந்தார். அவர் சொன்னார். 'என் கனவில் இயேசு வந்தார். அவர் விண்ணகத்துக்குச் செல்லும்போது என்னையும் தம்மோடு கூட்டிச் சென்றார். நான் கண்டதிலேயே மிக அருமையான கனவு அதுதான்' என்று.

முகமதியர் சொன்னார். 'என்னுடைய கனவில் மகமது வந்தார், என்னை சொர்க்கத்துகக்கு அழைத்துச் சென்றார்... அங்கே அழகிய பெண்கள் நடனமாடிக் கொண்டிருந்தனர். திராட்சை ரசம் ஆறாய் ஓடியது. தங்கத்தாலான மரங்களில் வைரங்கள் பூத்திருந்தன. அடேயப்பா என்ன அழகு' என்று.

இப்போது யூதரின் முறை. அவர் சொன்னார். மோசஸ் என்னிடம் வந்து சொன்னார். 'முட்டாளே, நீ எதற்காகக் காத்திருக்கிறாய்? இயேசு உன்னுடைய நண்பர்களிலொருவரை விண்ணுக்கு அழைத்துச் சென்று விட்டார். மகமது இன்னொருவரை சொர்க்கத்தில் வரவேற்று உபசரித்துக் கொண்டிருக்கிறார். நீ குறைந்தபட்சம் எழுந்து அல்வாவையாவது சாப்பிடலாமே' என்று.

நகைச்சுவை என்பது புனிதத்தன்மையின் ஒரு பகுதி. எங்காவது ஒரு புனிதரின் முகத்தில் தீவிரத்தன்மை காணப்பட்டால் அங்கிருந்து நழுவிச் சென்று விடுங்கள். காரணம் அவர் ஆபத்தான ஆள்.

அவர் உள்ளே சரிநுட்பமில்லாதவராய் (ill) இருக்க வேண்டும். தீவிரத்தன்மை ஒருவகை நோய். அது, உயிராபத்தை உண்டுபண்ணும் நோய்களுள் ஒன்று... சமயத்தில் (religion) பிடித்திருக்கும் நாட்பட்ட பிணி.

இதனைப் புரிந்துகொள்ள முயலுங்கள். ரொம்பவும் சாமர்த்தியம் வேண்டாம். அது முட்டாள்தனத்தை நிரூபிப்பதாகி விடுமேயன்றி வேறில்லை. கொஞ்சம் முட்டாள்தனமும் உங்களிடம் இருக்கட்டும். அப்போதுதான் மதிநுட்பமுடையவராவீர்கள். முட்டாள் விவேகத்துக்கு எதிரானவன். ஆனால் அறிவாளியோ முட்டாள்தனத்தையும் கிரகித்துக் கொள்கிறான். அவன் அதற்கு எதிரானவன் அல்லன், அதையும் பயன்படுத்துகிறவன்.

சுவாங்சு உலகிலேயே அதிக நகைப்பிற்கிடமான - அறிவுக்கு ஏற்புடைமையற்ற மனிதர்களுள் ஒருவர். அதனால் தான் இந்த அரங்கத்திற்கு 'சுவாங்சு அரங்கம்' என்று நான் பெயர் சூட்டி யிருக்கிறேன். அந்த மனிதரை நான் நேசிக்கிறேன். நீங்கள் எப்படி இந்த ஆளை நேசிக்காமல் தவிர்க்க முடியும்?

'நான் கனவு கண்டேன்' என்று புத்தர் கூறமாட்டார். அவரிடம் கொஞ்சம் தீவிரத்தன்மை இருந்தது. பதஞ்சலியும் அப்படிக் கூறமாட்டார். 'ஞானிகள் கனவு காண்பதில்லை, நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?' என்று யாரோ ஒரு சுவாமி கேள்வி எழுப்பலாம். சுவாங்சு யாரைப் பற்றியும் பயப்படுகிறவரல்லர், அவர் சொல்கிறார், 'நான் கனவு கண்டேன்' என்று. அவர் அன்புமிக்கவர், புனிதமானவர். அவரால் சிரிக்க முடியும், மற்றவர்களையும் சிரிக்க வைக்க முடியும். அவருடைய புனிதம் மிகப்பெரிய அளவில் சிரிப்பினைக் கொண்டதாகும்.

***ஐயனே, தன்னிறைவுடையவராவதற்கு பதஞ்சலியின் செய்முறையியல் (methodology) அல்லது உங்களுடைய உத்தி என்னவென்பீர்கள்? இது தொடர்பாய், ஆன்மா சார்ந்த மனிதர் கணத்துக்குக் கணம் எப்படி வாழ்கிறார் என்பதைத் தாங்கள் அருள்கூர்ந்து விளக்க வேண்டும்.***

அன்றாட வாழ்க்கையில் - நடைமுறையில் ஒவ்வொரு கணத்திலும் வாழும் பழக்கத்தை எப்படி வளர்த்துக் கொள்வது?

இந்தக் கேள்வி முழுதும் என்னை எவ்வகையிலும் புரிந்து கொண்டிராத ஒருவரிடமிருந்தே வந்திருக்க வேண்டும். முற்றிலும் புதியவரான ஒருவரிடமிருந்தே வந்திருக்கும் என்று தோன்றுகிறது. ஆனால், பலர் இன்னமும் பரிச்சயமற்றவர்களாகவே இருக்கிறார்கள். மேலும், யார் பரிச்சயமற்றவர் என புரிந்து கொள்வதற்கு இதுபோல கேள்விகள் துணை புரியும்.

'தன்னிறைவுடையவராவதற்கு உங்களுடைய உத்தி என்ன?' உங்களைத் தன்னிறைவுடையவராக்குவதற்கு நான் எவ்வகையிலும் அக்கறை காட்டவில்லை. காரணம், அது சாத்தியமற்றது. நீங்கள் பரம்பொருளுடன் மிகவும் இணைந்திருக்கிறீர்கள் என்கிறபோது எப்படித் தன்னிறைவுடையவராயிருக்க முடியும்? தன்னிறைவு டையவராவது என்பது அகந்தையின் முயற்சியேயாகும். முற்றிலும் சுயேச்சையாய் இருப்பது அகந்தையில் தடுக்கி விழுவதன்றி வேறெயென்ன?

இல்லை. நீங்கள் தன்னிறைவுடையவராயிருக்க முடியாது. நீங்கள் முழு நிறைவுடையவராயிருக்க முடியும். ஆனால் தன்னிறைவு கொண்டவராய் இருப்பதற்கில்லை. நீங்கள் முழுமையை (பூரணம்) உட்கொண்டிருக்க முடியும். முழுமை உங்களை உட்கொண்டிருக்க முடியும். ஆனால் நீங்கள் தன்னிறைவுடையவராய் இருக்க முடியாது. இப்பிரபஞ்சத்தில் இருந்து நீங்கள் எப்படித் தனியாக உங்களைப் பிரித்தெடுப்பீர்கள்? ஒரேயொரு கணம்கூட உங்களால் தனியே தாக்குப்பிடிக்க முடியாது.

நீங்கள் சுவாசம் பண்ணாமல் உயிரோடிருப்பது இயலாத காரியம். உங்கள் மூச்சுக்காற்றை நீங்கள் உள்ளேயே இழுத்துப பிடிப்பதற் கில்லை. அது வெளியேற்றப்பட்டாக வேண்டும். அது மறுபடியும் உள்ளே வர வேண்டியிருக்கும். அது முழுமைக்கும் உங்களுக்கும் இடையே மாறாத ஓர் இயக்கம். அறிந்தவர்கள் சொல்கிறார்கள். சுவாசிப்பது நீங்கள் அல்ல, பிரபஞ்சம் உங்களைச் சுவாசிக்கிறது என்று.

கொஞ்ச நேரம் உங்கள் சுவாச இயக்கத்தை அமைதியாய் கவனியுங்கள். ஒருநாள் நீங்கள் சற்றும் எதிர்பாராத ஒரு கணத்தில் உங்கள் கவனம் புதிரான ஒரு புதிய அனுபவத்திற்கு இடம் பெயரும். முதலில் உங்களுடைய சுவாசத்தை - புத்தரால் அனபான சதியோகம் என்று அழைக்கப்படுகிற - கூர்ம நாடியைக் கவனித்திருக்கும் போது, நீங்கள் மூச்சு விட்டுக் கொண்டிருப்பதாய் எண்ணிக் கொள்வீர்கள். கொஞ்சம் கொஞ்சமாய் புரிந்து கொள்வீர்கள். உண்மையில் நீங்கள் மூச்சு விட்டுக்கொண்டிருக்கவில்லை என்பதை. நீங்கள் மூச்சு விட வேண்டிய அவசியம் இல்லை. அதனால்தான் உறக்கத்திலும் சுவாசம் தன்னால் நிகழ்கிறது. நீங்கள் உணர்வற்றுக் கிடந்தாலும், கோமா (coma)வில் விழுந்தாலும் தொடர்ந்து சுவாசம் நிகழ்ந்து கொண் டிருக்கும். சுவாச இயக்கமும் உங்கள் கட்டுப்பாட்டில் இருக்கும்

பட்சத்தில் சில நேரம் நீங்கள் அதை மறக்கவும், அதன் விளைவாய் இறக்கவும் நேரிடும்.

சுவாச இயக்கம் தன்னால் நிகழ்வது, தன்னுடைய இசைவில் (accord) தானே நிகழ்த்திக் கொள்வது. 'நான் சுவாசிக்கிறேன்' என்பது பொருளற்ற பேச்சு. தானே நிகழ்த்திக் கொள்வது. 'நான் சுவாசிக்கிறேன்' என்பது பொருளற்ற பேச்சு. மாறாக, 'சுவாசம் என்னை சுவாசித்துக் கொண்டிருக்கிறது' என்பதே சரி.

அதன்பிறகு ஒருநாள் உங்கள் உணர்வு நிலையில் ஒரு மாறுதலை, மிகப்பெரிய மாறுதலை நீங்கள் அடைவீர்கள். இந்த மூச்சை நாம்தான் வெளியேற்றுகிறோம், உள்ளிழுக்கிறோம் என்று நீங்கள் எண்ணிக் கொண்டிருப்பீர்கள். ஒருநாள் நீங்கள் புரிந்து கொள்வீர்கள். உங்களுடைய வெளிச்சுவாசம் (exhalation) கடவுளின் உட்சுவாசம் (inhalation) ஆகிறது என்பதையும், நீங்கள் உள்ளிழுக்கிற மூச்சு கடவுளால் வெளியேற்றப்பட்ட மூச்சு என்பதையும், பிரபஞ்ச மாயிருக்கும் கடவுள் காற்றை வெளியேற்றுகிறார்; அந்தக் கணத்தில்தான் நீங்கள் காற்றை உள்ளிழுப்பதாய் உணர்வது. கடவுள் காற்றை உள்ளிழுக்கிறார் அந்தக் கணம்தான் நீங்கள் காற்றை வெளியேற்றுவதாய் உணரும் கணம்.

நீங்கள் யார்? என்ன ஓர் அபத்தத்தை நீங்கள் கேட்கிறீர்கள் - தன்னிறைவு அடைவது எப்படி என்று. சூரியன் இல்லாமல் நீங்கள் இல்லை. சூரியன் தொலைந்து போனால் நீங்களும் தொலைந்து போவீர்கள். ஒட்டுமொத்த வாழ்க்கையும் மறைந்து விடும். நாம் ஒன்றோடொன்றாய் இணைந்திருக்கிறோம். இப்பிரபஞ்சம் முழுதும் ஒன்றேயாகும். இங்குள்ள எல்லாமும், ஒவ்வொன்றும் ஒன்றோ டொன்றாய் இணைக்கப்பட்டிருக்கின்றன. தளையறுத்த நிலை (விடுதலை) என்பது சாத்தியமில்லை. நான் சார்பு நிலைக்குச் சாதகமானவனல்லன். காரணம், எப்போது சுயேச்சையாய் இருப்பது சாத்தியமில்லை என்றாகிறதோ அப்போதே சார்ந்திருப்பதும் சாத்தியமில்லை என்றாகி விடுகிறது. என்னுடைய பேச்சு, 'ஒன்றையொன்று சார்ந்திருப்பது' பற்றியது. அதுவே இயல்பானதும், சரியானதும் ஆகும்.

தன்னிறைவு (self-containment) என்கிற சொற்பாங்கில் சிந்திக்காதீர்கள். 'தான்' (self) என்கிற அகநிலைப் பண்பே ஒரு நோய். அதை விடுங்கள். அக்கணமே பிரபஞ்சமே உங்களுக்குக் கிடைக்கக் கூடியதாகும். அப்போதுதான் உங்களால் ஒவ்வொரு கணத்திலும் வாழ

முடியும், இல்லையேல் அது முடியாததாகி விடும். உங்களை நீங்கள் பாதுகாத்துக் கொண்டும், அரண் செய்து கொண்டும், தற்காத்துக் கொண்டும் இருப்பீர்களாயின் எப்படி உங்களால் கணங்களில் வாழ முடியும்? வருங்காலத்திற்கு நீங்கள் ஆயத்தமாக வேண்டும். உங்களிடம் யார் அக்கறை கொண்டிருப்பார்கள்? உங்களுடைய வங்கி இருப்பைத்தான் நீங்கள் நம்பியிருக்கும்படி ஆகும். நீங்கள் ஆயத்தப்பட வேண்டியிருக்கும். ஒவ்வொரு கணத்திலும் வாழ்வது உங்களால் முடியாத காரியம்.

'இருப்பது நானல்ல, பிரபஞ்சமே' என்பதை யார் தெளிவாகப் புரிந்து கொண்டிருக்கிறாரோ, அவர்தான் கணந்தோறும் வாழ்கிறவர். காரணம் அப்போது வாழ்வதற்கு வேறெந்த வழியும் இருக்காது. வருங்காலம் என்பது இன்னும் வந்தபாடில்லை. இந்தக் கணத்தில் பிரபஞ்சம் என்னைத் தாயாயிருந்து தாங்கிக்கொள்ளுமாயின், இது வரை என்னைக் காத்தது போல் இனியும் என்னைக் காத்திருக்கும் தானே. நான் தேவையில்லை என்று பிரபஞ்சம் தீர்மானித்து விட்டால் நான் கரைந்து போவேன். படிப்படியாய் மறைந்து காணாமல் போவேன். அதை மறுப்பதற்கு நான் யார்?

சமய நம்பிக்கையுள்ள மனிதன் இப்படித்தான் இருப்பான். பிரபஞ்சத்திடம் முழுமையான சரணாகதி. அதன்பிறகு அவன் கணந்தோறும் வாழ்பவனாகி விடுகிறான்.

'இது தொடர்பாய் ஆன்மா சார்ந்த மனிதர் கணத்துக்குக் கணம் எப்படி வாழ்கிறார் என்பதைத் தாங்கள் அருள்கூர்ந்து விளக்க வேண்டும்.'

அவன் வாழ்கிறதில்லை. தன் மூலம் கடவுள் வாழ அவன் இடமளிக்கிறான். அந்நிலையில்தான் ஒருவர் ஆன்மா சார்ந்தவராவது. உலகாயத மனிதன் (worldlyman) தன்னுடைய வாழ்க்கையைத் தானே வாழ்கிறான். ஆன்மிகத்தில் உள்ளவனோ தன் மூலம் கடவுள் வாழ இடமளிக்கிறான். அவன் ஒரு சாதனமாகி விடுகிறான். 'ஐயனே வாரும். உம்முடைய ராஜ்யம் வந்தடைவதாக. வாரும் என் வழியே கடந்து செல்லும், என் வழியாக வாழ்ந்திரும், என்னில் இரும். நான் வெற்றிடமாய், தயாராக இருக்கிறேன். உள்ளீடற்ற (hollow) ஒரு மூங்கில் நான். வாரும், என்னை ஒரு புல்லாங்குழலாக்கி, என்னில் இருந்து ஒரு கீதத்தை நீர் பாடுவீராக. உம்முடைய அமைதியைப் பாடும் அல்லது உம்முடைய கீதத்தைப் பாடும். ஆனால் என் வழியே கொண்டாடு வீராக. நான் தயார் நிலையில், உமக்குக் கிடைக்கக் கூடியவனாய், உமக்காகக் காத்திருக்கிறேன்.

ஆன்மா சார்ந்த மனிதன் பெரிய அளவில் கிடைக்கும் தன்மை கொண்டவன். அவன் கடவுளிடம் சொல்கிறான். 'நீர் எப்போது விரும்பினாலும் நான் தயாராக இருக்கிறேன். நான் காத்திருப்பேன். பொறுமையைக் கடைப்பிடிப்பேன். ஒன்றும் அவசரமில்லை. நீர் வேறு எங்காவது அதிக வேலை இருந்து, அதில் ஈடுபட்டிருந்தாலும் சரியே. நான் கால காலத்துக்கும் காத்திருப்பேன்.

ஆன்மா சார்ந்த மனிதன் தன்னுடைய வாழ்க்கையைத்தானே வாழ்கிறவனல்லன். இந்தியாவிலும் சரி, உலகின் மற்ற நாடுகளிலும் சரி, ஆன்மா சார்ந்த ஒருவன் ரொம்பவும் கட்டுப்பாடான வாழ்க்கையை வாழ வேண்டும் என்றொரு கருத்து நிலவுகிறது. ஆன்மிகத்தில் உள்ளவனுக்கு இது விளக்கமாகாது (definition). உங்கள் வாழ்க்கையை நீங்களே வாழத் தொடங்கிவிட்டால் நீங்கள் கடவுளுடன் ஓயாமல் சண்டையிட்டு எதிர்த்து நிற்பவராகி விடுவீர்கள. ஆற்றில் நீந்தாதீர்கள், அதைத் தள்ளிச் செல்ல முற்படாதீர்கள். அதன் போக்கில், அதன்மீது மிதந்து செல்லுங்கள். அதனுடன் கடலுக்குச் செல்லுங்கள். அது முன்பே போய்க் கொண்டுதான் இருக்கிறது. கவலை வேண்டாம். கவலைகள் அனைத்தையும் விட்டுவிடுங்கள். நீரோட்டத்துக்கு எதிராக நீந்தாதீர்கள். சோர்ந்து போவீர்கள். கடவுளிடம் சண்டையிட்டு எதிர்த்து நிற்கிற ஓர் ஆன்மிகவாதி பற்றிய கருத்தும அதுவேதான்.

குருட்ஜீவ் சொல்வார். 'உங்களால் மதங்கள் என்று அழைக்கப் படுகிறவைகளெல்லாம் கடவுளுக்கு மாறானவைதாம்' என்று. அவர் சொன்னது சரிதான். அவையெல்லாமே அகந்தையின் நுட்பமான செயல் திட்டங்கள் தாம். அவற்றிடம் விழிப்போடு எச்சரிக்கையாயிருங்கள்.

உங்களைக் கடவுளின் விரோதிகளாக்குவதற்காக நான் இங்கே இருக்கவில்லை. அவரை எதிர்க்காமல், எப்படி நட்பார்ந்தவராய் இருந்து கொண்டு, எப்படி அவரோடு இழைந்தியங்குவது (float) என்பதைக் கற்பிக்கவே நான் இருக்கிறேன். உங்களுடைய ஒழுக்க முறைமை, நன்னெறிக் கோட்பாடுகள், கட்டுப்பாடுகள் என்று அத்தனை வியூகங்களையும் உடைத்தெறியவே நான் இருக்கிறேன். இவற்றைக் கொண்டுதான் உங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும். எதையும் எவரையும் சார்ந்திராமல் தளையற்றவராயிருக்கவும், தன்னிறைவு காணவும் நீங்கள் முயல்வது. ஆன்மா சார்ந்த ஒரு மனிதராயிருப்பதில் நீங்கள் வெற்றி பெற முடியாது.

'இந்தப் பழக்கத்தை எப்படி அபிவிருத்தி செய்து கொள்வது...?' மதம் ஒரு பழக்கமல்ல. ஆன்மிகம் ஒரு பழக்கமல்ல. அது ஒரு

விழிப்புணர்வு. பழக்கம் என்பது விழிப்புணர்வுக்கு நேர் எதிரிடையானது. பழக்கம் தன்னுணர்வற்றது. ஆனால் மிகப் பலரும் அதைத்தான் செய்கிறார்கள். உதாரணமாக நீங்கள் சிகரெட் புகைக்கிறீர்கள். அது ஒரு பழக்கமாகி விடுகிறது. அது ஒரு பழக்கமாகி விட்டது என்று நீங்கள் எப்போது சொல்வீர்கள்? நீங்கள் விடமுடியாத அளவுக்கு அது தன்னியக்கம் கொண்டு விடுகிறபோது அப்படிச் சொல்வீர்கள். அப்போது புகைக்காமல் இருந்தால் பெரிய அவஸ்தை யாய் உணர்வீர்கள். அதை விடமுடியாத அளவு உங்களுக்குள் ஓர் உந்துதல் ஏற்பட்டிருக்கும். அதை உடன் கொண்டிருக்கும் நிலைக்கு நீங்கள் தள்ளப்படுவீர்கள். தற்போது அது ஒரு பழக்கமாகிறது. அதேமாதிரிதான் பிரார்த்தனையும் ஒரு பழக்கமாய் கொள்ள நீங்கள் முயற்சிக்கிறீர்கள். நீங்கள் தினமும் பிரார்த்திக்கிறீர்கள், அது காலப்போக்கில் புகைப்பது மாதிரியே ஆகிவிடுகிறது. பிரார்த்தனை செய்யாமல் இருந்தால் எதையோ தவற விட்டது போல் உணர்வீர்கள். நீங்கள் அதை சமய நம்பிக்கை என்பீர்கள். அப்படியானால் ஏன் புகைப்பதையும் சமய நம்பிக்கை என்று கூறாமல் இருப்பது?

புகைத்தல் ஒரு மந்திரம். மந்திரத்தில் நீங்கள் என்ன செய்கிறீர்கள்? ஒரு குறிப்பிட்ட ஒலியை நீங்கள் திரும்பத் திரும்பச் சொல்கிறீர்கள். புகைப்பது போலத்தான் நீங்கள் 'ராம், ராம், ராம், ராம்.... என்று சொல்வதும். புகைப்பதிலும் அப்படித்தான். நீங்கள் புகையை உள்ளிழுக்கிறீர்கள், வெளியே விடுகிறீர்கள். திரும்பத்திரும்ப அதையே செய்ய அது ஒரு மந்திரமாகி விடுகிறது. அதுமுன்பே *ஆழ்நிலைத் தியானமாய் (transcendental - meditation) இருந்து கொண்டிருக்கிறது.

இல்லை, சமயத்துக்கும் பழக்கங்களுக்கும் சம்பந்தம் இல்லை. சமயம் என்றால் நல்ல பழக்கங்களுடன் தொடர்பு கொண்ட, கெட்ட பழக்கங்களில் இருந்து விலகியிருப்பது என்று நீங்கள் கருதிக் கொண்டிருக்கிறீர்கள் – புகைப்பது கெட்ட பழக்கம்; பிரார்த்தனை நல்ல பழக்கம். ஆனால், எல்லாப் பழக்கங்களுமே உணர்வற்றவைதாம். சமயம் என்பது தன்னுணர்வோடு பொருந்துவதாகும்.

நல்லதைச் செய்யும் வழக்கத்தை ஏற்படுத்திக் கொள்வது சாத்தியமாயிருக்கிறது. கெட்டதைச் செய்வது சாத்தியமற்றதாய் இருக்கிறது. ஆனால், அது உங்களை ஆன்ம உணர்வுடையவராக்கி

---

* *ஆழ்நிலை தியானம் - ஆராய்ந்து அறியாமலே நேரடியாய் உணரப்படுகிற, உள்ளுணர்வால் அறியப்படுகிற தியானம்.*

விடாது. அது உங்களை சவுகரியமாய் உணரச் செய்யும். அது உங்களை உலகில் ஒரு நல்ல குடிமகனாக்கும். சமூகத்தில் ரொம்பவும் தகுதியான ஓர் அங்கமாக்கும். ஆனால், சமயத்தில் பெரும் நம்பிக்கையுடைய வராக்கி விடாது. சமூகம் உங்களிடம் பல சூழ்ச்சிகளைச் செயல் படுத்துகிறது. நீங்கள் தொடர்ந்து நல்லனவற்றையே செய்து கொண்டிருக்கிறீர்கள். உங்களால் கெட்டவற்றைச் செய்ய முடியாது. அதுவே ஒரு பழக்கமாகி விடுகிறது. ஆனால் பழக்கம் ஒரு பண்பாகி விடாது. விழிப்புணர்வு.

சில நேரங்களில் சூழ்நிலை ஒரே மாதிரி இருக்காது. ஆனால் நீங்கள் சூழ்நிலைகளைக் கவனிக்காமல் செய்து கொண்டிருக்கப் பழகி விடுகிறீர்கள். சில சமயங்களில் கெட்டதாய் தெரிவது வேறு சில சமயங்களில் நல்லதாய் தெரியும். ஒரு சூழ்நிலையில் நேர்மையாய் தெரிவது வேறொரு சூழ்நிலையில் குற்றமாய் தெரியும். ஆனால் நீங்கள் பழக்கப்படுத்திக் கொண்டு விட்டால் ஒரு ரோபோ (robot)வைப் போல் தானியங்கி இயந்திரமாகி விடுகிறீர்கள்.

நான் கேட்டதிலேயே மிகவும் அருமையான ஒரு கதையை உங்களுக்குச் சொல்கிறேன்.

திருவாளர் கின்ஸ்பர்க் இறந்ததும் சொர்க்கத்துக்குச் சென்றார். அங்கே பதிவு செய்யும் அதிகாரியாயிருந்த தேவதூதன் அவரை மகிழ்வுடன் வரவேற்றான்.

'கின்ஸ்பர்க் அவர்களே, நாங்களெல்லாம் உங்களுக்காகத்தான் காத்திருக்கிறோம். நீங்கள் ஒரு நல்ல மனிதர். உங்களைப்பற்றி இங்குள்ள பதிவுகளைப் பாருங்கள்' என்றவன் ஒரு பெரிய பதிவேட்டை எடுத்து ஒவ்வொரு பக்கமாய் புரட்டினான். 'பாருங்கள், நற்செயல்கள், நற்செயல்கள், நற்செயல்கள். கின்ஸ்பர்க்... நிறைய புண்ணியத்தைச் சம்பாதித்திருக்கிறீர்கள்.'

ஆனால் பக்கங்களைப் புரட்டிக்கொண்டே போனதும் அந்த தேவதூதனின் முகத்தில் பெருமிதத்தோடு, கவலையும் தெரிந்தது - பதிவேட்டை மூடி வைத்துவிட்டு அவன் சொன்னான். 'கின்ஸ்பர்க், ஒரு தொல்லையில் சிக்கிக் கொண்டிருக்கிறோம்' என்று.

'ஏன்?' கின்ஸ்பர்க் எச்சரிக்கையாய் வினவினார்.

'அது எனக்குப் புரியவில்லை. ஆனால் ஒன்றுமட்டும் புரிகிறது. நீங்கள் நற்செயல்களையே செய்திருக்கிறீர்கள், எவ்வகையிலும் பாவகாரியங்களைச் செய்யவில்லை.'

'அதுதானே எதிர்பார்க்கப்படுவது' கின்ஸ்பர்க் கேட்டார்.

'ஒரு வகையில் அப்படித்தான். ஆனால் நடைமுறையில் நாம் சில குற்றங்களைச் செய்கிறோம். அதோ, அந்த ஆசாமி - ரொம்ப நல்ல மனிதர் ஒன்றேயொன்றுதான் செய்திருக்கிறார். ஆனால், உண்மையிலேயே அது ரொம்பப் பெரியது. இப்போது நீங்கள் எந்தப் பாவத்தையும் செய்யாமல் இங்கே வந்து சேர்ந்திருக்கிறீர்கள். ஆனால் அது கொஞ்சம் பொறாமையையும், சங்கடத்தையும் உண்டு பண்ணும் போலிருக்கிறது. முணுமுணுப்பும், புறங்கூறலும் இருக்கும். சுருங்கச் சொன்னால் கடுமையான கருத்து வேறுபாட்டையும், பழிபாவத்தையும் தான் நீங்கள் சொர்க்கத்துக்குக் கொண்டு வந்திருக்கிறீர்கள்.

கின்ஸ்பர்க் பரிதாபமாய் கேட்டார். 'அப்படியானால் என்ன செய்வது, நான் என்ன செய்யட்டும்?' என்று.

அந்த தேவதூதன் சொன்னான். 'நீங்கள் என்ன செய்ய வேண்டுமென்று நான் தெரிவிக்கிறேன். இது வழக்கத்துக்கு மாறாக இருக்கிறது. ஆனாலும் இதிலிருந்து தப்பிக்க முடிகிறதா என்று பார்க்கிறேன். உங்களைப்பற்றிய பதிவுகளில் கடைசிப் பக்கத்தை அழித்து விடுகிறேன். உங்களுக்கு இன்னும் ஆறு மணிநேரம் இருக்கிறது. நீங்கள் உயிரோடிருப்பதற்கான மற்றொரு வாய்ப்பு. கின்ஸ்பர்க், இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு ஒரு பாவ காரியத்தைச் செய்து விடுங்கள். பிறகு, இங்கே வாருங்கள்' என்று.

அவன் சொல்லி வாய் மூடவும், தம்முடைய சொந்த ஊரிலேயே மீண்டும் தாம் இருக்கக் கண்டார் கின்ஸ்பர்க். தொடர்ந்து நற்செயல்களையே செய்து வந்தவர் இன்னும் சில மணி நேரத்துக்குள் ஒரு பாவ காரியத்தைச் செய்தாக வேண்டும். அப்போதுதான் அவர் சொர்க்கத்துக்குச் செல்ல முடியும். ஆனால், எந்த மாதிரியான பாவத்தைச் செய்வது? பாவம் என்றால் என்னவென்றே தெரியாத அளவுக்குப் பண்பாளர் அவர்.

ரொம்பவும் சிந்தித்ததில், அடுத்தவன் மனைவியுடன் ஒருவன் உறவு வைத்துக் கொள்வது பாவம் என்பது அவருடைய நினைவுக்கு வந்தது. ஓர் இளம் பெண் அர்த்த பாவத்துடன் கூடிய பார்வையை, அடிக்கடி தம்மீது வீசியதும், தாம் அவளை அசட்டை செய்ததும் அவருக்குத் தோற்றமாயிற்று.

அவர் அதற்கு மேலும் அலட்சியமாயிருப்பதற்கில்லை. நேரமோ பறந்து கொண்டிருக்கிறது. ஒரு தீர்மானத்துடன் அவளுடைய வீட்டை

நோக்கி நடந்தார். அந்தப் பெண் - செல்வி லெவினுக்கு இன்னும் கல்யாணமாகியிருக்கவில்லை. அவர் கதவைத் தட்டினார். அவள் கதவைத் திறந்து, அங்கே நின்றவரைப் பார்த்து அதிர்ச்சியுற்றாள். 'மிஸ்டர் கின்ஸ்பர்க்!' நீங்கள் நோய்வாய்ப்பட்டிருந்ததைக் கேள்விப் பட்டேன். செத்துக் கொண்டிருக்கிறீர்களோ என்று பயந்து போனேன். ஆனால், நீங்கள் முழு ஆரோக்கியத்துடன் இருப்பதாய் தெரிகிறதே!'' என்றாள்.

'நான் ரொம்ப நல்லாருக்கேன். உள்ளே வரலாமா?' என்று கேட்டார் கின்ஸ்பர்க்.

'தாராளமாய்' மகிழ்ச்சியுடன் சொன்ன லெவின் அவர் உள்ளே நுழைந்ததும், கதவைத் தாளிட்டாள்.

அதன் பிறகு நடந்தது தவிர்க்க முடியாதது. அவர்கள் அந்தப் பாவத்தைச் செய்யலானார்கள். திருவாளர் கின்ஸ்பர்க் தமக்காகக் காத்திருக்கும் சொர்க்கத்தைக் கருத்தில் கொண்டு மகிழ்ச்சியுடன் செயல்பட்டார்.

அது ஒரு தகுதியான பாவமாய், பதிவு அதிகாரியான தேவதூதனுக்குத் திருப்தியளிப்பதாய் இருக்க வேண்டுமே என்கிற கவலை அவருக்கு. அவசரப்படாதிருக்க சிரமப்பட்டார். தமக்கு அளிக்கப்பட்ட அவகாசம் முடியும்வரைத் தம்முடைய செயலைத் தொடர்ந்தார்.

தமக்குக் கிடைக்கவிருக்கும் சொர்க்கத்தைப் பற்றிய உவகை யுடன் கின்ஸ்பர்க் எழுந்தார். 'மிஸ். லெவின், எனக்கு ஒரு முக்கியமான வேலை இருக்கிறது. நான் உடனே போயாக வேண்டும்' என்று சொன்னார்.

படுக்கையில் இருந்த லெவின் அவரைப் பார்த்து புன்னகைத் தாள். 'மிஸ்டர் கின்ஸ்பர்க் எப்பேர்ப்பட்ட ஒரு நல்ல காரியத்தை இன்று எனக்காகச் செய்தீர்கள்' என்று மிருதுவான குரலில் முணுமுணுத்தாள்.

எப்பேர்ப்பட்ட நற்காரியம்! பாவம் கின்ஸ்பர்க். நல்லதையே ரொம்பவும் பழககப்படுத்திக் கொண்டு விடாதீர்கள். ரொம்பவும் பழக்கப்பட்டு, இயந்திரத்தனமாகி விடாதீர்கள். 'ஒவ்வொரு கணத்திலும் வாழும் பழக்கத்தை எப்படி அபிவிருத்தி செய்து கொள்வது?' என்று கேட்காதீர்கள். அது எவ்வகையிலும் பழக்கமல்ல, விழிப்புணர்வு.

வேறெதுவும் இருப்பதற்கில்லை. கடந்த காலம் போய்விட்டது. வருங்காலமோ இன்னும் வந்தபாடில்லை. கடந்து சென்றுவிட்ட ஒரு

காலத்தில் நீங்கள் வாழ முடியுமா என்ன? நீங்கள் எப்படி அதில் வாழ முடியும்? அதை எளிதாய் புரிந்து கொண்டு விடலாம். சொல்லாமலே புரிந்து கொள்ளலாம். நிகழ் காலத்தில் மட்டுமே உள்ளது நடப்பு சாத்தியமான வாழ்க்கை. அதை ஒரு பழக்கமாக்கிக் கொள்கிற அவசியம் இல்லை. மதத்துடன் அதற்கு ஆகவேண்டியது எதுவும் இல்லை, கொஞ்சம் அறிவைக்கொண்டே அதைச் செய்து கொண்டு விடலாம். கடந்த காலம் போயாயிற்று. நீங்கள் எப்படி அதில் வாழ முடியும்? வருங்காலம் இன்னும் வந்தடையாத நிலையில், அதில் எப்படி வாழ்வீர்கள்? கொஞ்சம் அறிவுத்திறன் மட்டுமே தேவைப் படுகிறது.

அதோ நிகழ்காலம் மட்டுந்தான் இருக்கிறது. நிகழ்காலமன்றி வேறெதுவும் இல்லை. ஆக, நீங்கள் வாழ விரும்பினால் அதை வாழுங்கள். கடந்த காலத்தையும், வருங்காலத்தையுமே நீங்கள் நினைத்துக் கொண்டிருந்தால் அதை வீணடித்தவராவீர்கள். நீங்கள் கடந்த காலத்தைப் பற்றியே எண்ணிக் கொண்டும், நிகழ்காலத்தைப் பற்றி திட்டமிட்டுக் கொண்டும் இருப்பீர்கள். வருங்காலம் என்பது வரும்போது நீங்கள் அங்கே இருப்பதில்லை. ஒன்று கடந்த கால நினைவுகளில் மூழ்கி விடுகிறீர்கள் அல்லது வருங்காலக் கற்பனைகளில் மிதக்கிறீர்கள்.

நினைவுகளையும், கற்பனைகளையும் விடுங்கள். இந்தக் கணத்தில் இங்கே இருங்கள். அது ஒன்றும் பழக்கம் பற்றிய பிரச்சினை அல்ல. நீங்கள் பழக்கத்தால் மட்டுமே எப்படி இங்கே இப்போது இருக்க முடியும்? பழக்கம் என்பது கடந்த காலத்தில் இருந்து வந்தது – பழக்கம் உங்களை கடந்த காலத்துக்குத்தான் இழுத்துச் செல்லும். அல்லது நீங்கள் அதை வருங்காலத்துக்காகச் செய்து கொள்கிறீர்கள். 'இன்று நான் பழக்கப்படுத்திக் கொள்கிறேன். நாளை நான் மகிழ்ச்சி யாயிருப்பேன்' என்கிறீர்கள். ஆனால் நீங்கள் மறுபடியும் வருங்காலத்தையே கருத்தில் கொண்டு விடுகிறீர்கள்.

பழக்கம் பற்றிய கேள்விக்கே இடமில்லை. அது எவ்வகையிலும் பொருத்தப்படாது. கவனமாயிருங்கள். நீங்கள் உண்பதாயின் உண்கிற வேலையை மட்டுமே செய்யுங்கள். உங்களுடைய இருப்புணர்வு முழுதும் அதில் ஈடுபட்டிருக்க வேண்டும். நீங்கள் உடலுறவு கொள்கிறபோது ஒரு சிவனைப் போலவும், உங்கள் மனைவி தேவியைப் போலவும் ஆகிவிட வேண்டும். புணர்ச்சியின் போது தேவர்கள் வருவார்கள், பார்ப்பார்கள், வந்து போகட்டும்,

கவலைப்படாதீர்கள். நீங்கள் எதைச் செய்தாலும்... சாலையில் நடக்கிறீர்களா நடப்பதை மட்டுமே செய்யுங்கள். மென்காற்றை அனுபவியுங்கள், சூரியனை, மரங்கள் – இது நிகழ்காலத்திற்கானது.

இதனை நினைவில் வையுங்கள். நான் தேர்ச்சி பெறுவதற்காகத் தொடர்ந்து முயற்சி மேற்கொள்ளுங்கள் என்று சொல்லவில்லை. எவ்வித முயற்சியும் இல்லாமல் உடனடியாக அதைச் செய்ய முடியும் என்றுதான் சொல்கிறேன், கொஞ்சம் அறிவுத்திறனைப் பயன்படுத்தினால் போதும்.

பழக்கங்கள், பண்படுத்துதல்கள் எல்லாம் மதியற்றவர்களுக் கானவை. காரணம் அவர்களால் அறிவைக்கொண்டு வாழ முடியாது. பழக்கங்கள், ஒழுங்கு முறைகள் போன்றவற்றையே அவர்கள் துணையாய் கொள்ள வேண்டியிருக்கும். நீங்கள் அறிவுத்திறன் கொண்டவராயின் நான் உங்களை அறிவாளியாகப் பார்ப்பேன். நம்பிக்கையுணர்வாய் உங்களைக் கண்டு கொள்வேன். அதற்கு அவசியமில்லை. இப்போதே தொடங்கி விடுங்கள். எப்படியென்று கேட்காதீர்கள். உடனே தொடங்கி விடுங்கள். என்ன நான் சொல்வதைக் கவனிக்கிறீர்களா? ரொம்பப் பேர் காது கொடுத்துக் கேட்காமல், எதையாவது எண்ணியபடியும், குறிப்புகளுடனும் (notes) உங்களுடைய தவறான ஊகங்களை ஒப்பிட்டுக் கொண்டும் இருக்கிறீர்கள்.

யார் கேள்வி கேட்டாரோ அவர் கவனித்துக் கொண்டிருக்க வில்லை. யார் கேட்டார் என்பது தெரியாமலே நான் அதை உறுதியாய் சொல்ல முடியும். என்னுடைய நிச்சயத்தன்மை எங்கிருந்து வந்தது? ஒருவருடைய கேள்வியைக் கொண்டே அவருடைய மனதை என்னால் புரிந்து கொள்ள முடியும். அவர் கண்டிப்பாய் கோபப்படுவார், சீற்றமடைவார்.

மக்கள் கேள்வி கேட்பதெல்லாம் தங்களுக்கு அமைதியையும், ஆறுதலையும் அளிக்க வேண்டும் என்பதற்காகத்தான். ஆனால், உங்களுக்கு ஆறுதலளிப்பதற்காக நான் இங்கே இருக்கவில்லை. நான் இங்கிருப்பது உங்களுடைய அமைதியைக் குலைத்து, நீங்கள் கொண்டிருக்கும் அருவருப்பான விஷயங்களையும், உத்திகளையும் விட்டொழிக்கச் செய்ய வேண்டும் என்பதற்காகத்தான். நான் உறுதியுடன் இருக்கிறேன். அது முன்பே நடந்து விட்டது போன்ற உறுதியுடன்.

ஷேக் ஃபரீத் ஒரு சூஃபி மறைஞானி. ஒரு சமயம் அவரை வரும்படி அரசன் பணிவுடன்அழைப்பு விடுத்திருந்தான். எனவே, அவர் அரசவைக்குச் சென்றார். அரசனிடம், 'உங்களுடைய எண்ணங்களை என்னால் படிக்க முடியும். உங்கள் மனதில் தற்போது ஓடிக் கொண்டிருக்கும் எண்ணம் இன்னதென்று என்னால் சொல்ல முடியும். உங்களால் அதை நம்ப முடியாது. உங்களுடைய எண்ணத்தை என்னால் புரிந்து கொள்ள முடியும். தற்போது உங்களுக்குள் சொல்லிக் கொள்கிறீர்கள் 'என்னால் அதை நம்ப முடியாது' என்று. நான் சொல்வது சரியா, இல்லையா?' என்று கேட்டார்.

அரசன் சொன்னான். 'ஆகா, என்னை வியக்கச் செய்து விட்டீர்கள்' என்று.

கேள்வி கேட்டவர் ரொம்பவும் கோபவசப்பட்டிருப்பார். கோபவச ப்பட்ட நிலையில் என்னை உங்களால் கவனிக்க முடியாது. இங்கே, இக்கணத்தில், இருக்க முடியாது. அந்நிலையில் ஒன்றை நீங்கள் தவற விடுகிறீர்கள்.

> ***பிரியத்திற்குரிய பகவானே! தாங்கள் ராமிடம் 'ஞானம் பெற்றுவிட்டாய்' என்று கூறியதாக ஒருவர் சொல்கிறார். 'தாங்கள் வாயைத் திறக்கவேயில்லை' என்று மற்றொருவர் சொல்கிறார். 'தாங்கள் தமாஷ் பண்ணுவதாகவும், நான் அதைக் கேட்டறிய வேண்டும்' என்றும் ராம் சொல்கிறார். 'உண்மையில் அது என்னுடைய வேலையல்ல' என்றே எனக்குப் படுகிறது. ஆனாலும் அவரா, அவருக்குக் கிடைத்து விட்டதா? என்று கேட்கத் தோன்றுகிறது.'***

இது அனுராக்கிடம் இருந்து வந்த கேள்வி. 'நான் தமாஷ் பண்ணுகிறேன் என்பதை அவர் புரிந்து கொண்டிருந்தால், அப்போது அவர் ஞானம் பெற்றவர்தான்.'

***சூத்திரம் – 33 'மூர்த்தஜ்யோ திஷி சித்ததர்சனம்'***

உச்சந்தலையில் எழுகிற சோதியில் சம்யமம் செய்தால் சித்தர்களது காட்சி கிடைக்கும்.

***சூத்திரம் – 34 'ப்ராதி பாத்வா சர்வம்'***

பிரதிபா சக்தியால் எல்லா அறிவும் பெறுகிறான்.

( பிரதிபை - தூய வாழ்வினால் தானாக எழும் அறிவு உள்ளுணர்வு. )

***சூத்திரம் – 35 'ஹ்ருதயே சித்த ஸம்வித்'***

இதயத்தில் சம்யமம் செய்வதால் மனங்களைப் பற்றிய அறிவு உண்டாகிறது.

மனிதன் படிப்படியாக வளர்ச்சியடைகிறவன். தான் வளர்ச்சியடைவதோடு, வளர்ச்சிக்குச் சாதனமாகவும் அவன் இருக்கிறான். அவனே பரிணாமமாயுமிருக்கிறான். பெரிய அளவிலான பொறுப்புணர்ச்சி, அதுகுறித்து உண்டாகிற மகிழ்ச்சி அதுவே மனிதனை மகிமைப்படுத்துவதாய் இருக்கிறது. பருப்பொருளில் (matter) தொடக்கம், பரம்பொருளில் நிறைவு (end). பருப்பொருள் *ஆல்பா முனையாகவும் பரம்பொருள் **ஒமேகா முனையாகவும் இருக்கிறது. மனிதன் பாலமாயிருக்கிறான். ***பருப்பொருள் மனிதனின் வழியே சென்று கடவுளாய் நிலை மாற்றம் அடைகிறது. கடவுள் ஒரு பொருளல்ல, கடவுள் எங்கே காத்திருக்கவுமில்லை. கடவுள் உங்கள் வழியே வெளிப்படுகிறார். கடவுள் உங்களோடு பொருந்திக் கொண்டு விடுகிறார். நீங்கள் பருப்பொருளை பரம்பொருளாய் மாற்றுகிறீர்கள். மெய்ப்பொருள் நிகழ்த்தியதிலேயே மிகப்பெரிய பரிசோதனை நீங்கள்தாம். அதன் மகிமையை எண்ணிக் கொள்ளுங்கள். அத்தோடு பொறுப்புணர்வையும் கருத்தில் கொள்ளுங்கள்.

மிகப்பலவும் மனிதனையே சார்ந்திருக்கிறது. ஆனால் நீங்கள் மனித உருவில் இருப்பதால் ஏற்கெனவே அங்கிருப்பதாய் எண்ணிக் கொள்வீர்களாயின் அது உங்களுடைய மனம் உங்களை தவறான வழியில் செலுத்துவதாய் இருக்கும். நீங்கள் ஓர் அமைப்பைப் பெற்றிருக்கிறீர்கள், ஒரு சாத்தியமாக மட்டுமே நீங்கள் இருப்பது. மெய்ம்மை நிகழ்த்தவிருக்கிறது. அது நிகழ்வதற்கு நீங்கள் இடமளிக்க வேண்டும். அதை ஏற்றுக்கொள்வதற்கு இசைவாய் (open) நீங்கள் இருக்க வேண்டும்.

யோகா என்பது அதைப் பற்றியதுதான். ஒமேகா முனையை நோக்கிச் செல்வதில் எப்படி உங்களுக்கு உதவுவது என்பதாகும். ஒமேகா முனையில்தான் உங்களுடைய முழு ஆற்றலும்

---

* *ஆல்பா (Alpha) - கிரேக்க நெடுங்கணக்கின் முதல் எழுத்து.*

** *ஒமேகா (Omega) - கிரேக்க நெடுங்கணக்கின் கடைசி எழுத்து.*

*** *பருப்பொருள் (matter) - எடையுள்ள, இடத்தை அடைத்துக் கொள்ளக்கூடிய பொருள்.*

வெளிப்படுகிறது, உருமாற்றம் பெறுகிறது. பருப்பொருளின் முழுமையும் தெய்வ சக்தியாய் மாறுகிறது. பாலுறவில் இருந்து சமாதி நிலை வரைக்கும், கீழ்மையமான மூலாதாரத்தில் இருந்து உச்சித்தளமாகிய சஹஸ்ராரம் வரைக்குமாய் ஒட்டுமொத்த பயணத்தையும் யோகா வரைவு செய்கிறது.

நாம் சூத்திரங்களில் பிரவேசிப்பதற்குமுன் இவற்றையெல்லாம் புரிந்து கொள்ள வேண்டும். யோகா மனிதனை ஏழு அடுக்குகளாய், ஏழு நிலைகளாய், ஏழு மையங்களாய் பிரிக்கிறது. முதலாவது மூலாதாரம். இது பால்சார்ந்த மையம், சூரிய மையம். நிறைவாக - ஏழாவதாயிருப்பது சஹஸ்ராரம். இது கடவுள்மையம் ஒமேகா முனை.

பால் மையமானது உள்ளார்ந்த விதத்தில் கீழ்நோக்கிப் போய்க்கொண்டிருப்பது. இது பருப்பொருளுடன் உங்களை இணைப்பதாகும். யோகா இதனை பிரகிருதி - இயல்பு என்கிறது. (பிரகிருதி - பிரபஞ்ச மாயை). பால் சார்ந்த மையம் இயற்கையுடன் உங்களை இணைக்கிறது. நீங்கள் பால் மையத்திலேயே கட்டுண்டு கிடந்தால் உங்களால் வளர்ச்சியடைய முடியாது. நீங்கள் இருந்த இடத்திலேயேதான் இருப்பீர்கள். உங்கள் தொடர்பு கடந்த காலத்துடனேயே இருக்கும். எதிர்காலத்துடன் இணைக்கப்பட மாட்டீர்கள். நீங்கள் பால்சார்ந்த மையத்திலேயே ஒட்டிக் கொண்டிருப்பீர்கள்.

பாலுறவு பற்றிய அத்தனை விஷயங்களும் தங்களுக்கு அத்துப்படி என்று மக்கள் நினைத்துக் கொள்கிறார்கள். அப்படி யொன்றும் பெரிய அளவில் அவர்கள் அறிந்து கொண்டுவிடவில்லை. உளவியல் நிபுணர்கள் எண்ணிக் கொள்கிறார்கள் தங்களுக்குத் தெரியும் என்று. ஆனால் அடிப்படையான ஒன்றையே அவர்கள் சரிவர அறிந்து கொண்டபாடில்லை. பால்சார்ந்த சக்தியை மேல்நோக்கிச் செலுத்த முடியும் என்பதும், அதைக் கீழ்நோக்கியே செலுத்த வேண்டிய அவசியமில்லை என்பதுந்தான். அந்த அடிப்படை அறிவு. கீழ்நோக்கிச் செலுத்தும் இயக்க நுட்பம் (mechanism) மனிதனுக்குள் ஏற்கெனவே இருப்பதுதான். அது விலங்குகளிடத்தும் இருக்கிறது, அது மரங்களிலும்கூட இருக்கிறது. மனிதனில் இருப்பதால் அதற்கென்று தனிச்சிறப்பு எதுவும் வந்துவிடாது. செடி கொடிகளிலும், பறவைகளிலும், விலங்குகளிலும் இருப்பதைக் காட்டிலும் மனிதனிடம் அதிகம் இருக்கிறது என்பதுதான் சிறப்பு. அவை கீழ்நோக்கிச் செல்லுமாறு பிணைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுக்குள் மாடிப்படிக்கட்டு ஏதுமில்லை.

ஏழு மையங்களின் மூலம் நாம் அறிந்து கொள்வதும் - குறிப்பிடுவதும் அதைத்தான். வளர்ச்சிக்கான படிக்கட்டு. அது உங்களுக்குள் இருக்கிறது. நீங்கள் தேர்வு செய்து கொண்டால், மேல்நோக்கிச் செல்வதென்பது உங்களுக்கு முடிகிறதுதான். நீங்கள் தேர்வு செய்யாவிடில் தொடர்ந்து கீழ்நோக்கிப் போய்க்கொண்டே இருப்பீர்கள்.

ஆக, மனிதனுடைய வளர்ச்சி என்பது உணரக் கூடியதா யிருக்கிறது. இதுவரைக்கும் நீங்கள் உதவப் பெற்றீர்கள். இயற்கை இந்த முனை வரைக்கும் உங்களைக் கொண்டு வந்தது. இப்போதிருந்து உங்களுடைய சொந்தப் பொறுப்பில் நீங்கள் மேற்கொள்ளும்படி இருக்கும். நீங்கள் பொறுப்புடையவராய் இருக்க வேண்டும். மனிதன் முழு வளர்ச்சி அடைந்து விட்டபடியால் தற்போது இனியும் உங்களுக்காக இயற்கை கவலைப்பட்டுக் கொண்டிருக்க முடியாது. எனவே, நீங்கள் உணர்வுடன் செயல்படவில்லை என்றால், பொறுப்பேற்கவில்லை என்றால் இருந்த நிலையிலேயே இருக்க வேண்டியதுதான்.

இந்தப் 'பசையொட்டுத்தன்மை'யை மிகப்பலரும் உணர்ந்தே யிருக்கிறார்கள். ஆனால் அது எங்கிருந்து வந்தது என்பதுதான் அவர்களுக்குத் தெரியவில்லை. தாங்கள் இருந்த இடத்திலேயே இருப்பதை - ஒட்டிக்கிடப்பதை ஆயிரக்கணக்கானவர்கள் என்னிடம் வந்து சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ஏதோவொன்று சாத்தியம் என்பதை அவர்கள் அறிவார்கள். ஆனால், அது என்னவென்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை. தாங்கள் இடம் பெயர வேண்டும் என்பது அவர்களுக்குத் தெரியும். ஆனால், எங்கே எப்படி என்பது தெரியாது. தாங்கள் போதும் போதும் என்கிற அளவுக்கு அங்கேயே இருந்தாயிற்று என்பதையும், புதிய பரிமாணங்களில் புகுந்தாக வேண்டும் என்பதையும் அவர்கள் அறிவார்கள். ஆனாலும் இருந்த இடத்திலேயே ஒட்டிக்கொண்டு கிடக்கிறார்கள்.

இந்த நிலைத்திருத்தல் மூலாதாரத்தில் இருந்து, பால் சார்ந்த மையத்தில் இருந்து சூரிய மையத்தில் இருந்து வந்தது.

இதுவரைக்கும் உங்களுக்கு எந்தப் பிரச்சினையும் இருந்திருக்க வில்லை. இயற்கை உங்களுக்குத் துணையாயிருந்தது. இயற்கை ஒரு தாயாய் உங்களைச் சீராட்டியது. ஆனால், இனியும் நீங்கள் குழந்தையில்லை. இயற்கை அன்னை தொடர்ந்து உங்களுக்குத் தாய்ப்பால் ஊட்டிக் கொண்டிருக்க முடியாது. அந்தத் தாய் தற்போது

சொல்கிறாள் 'என்னுடைய மார்பகத்தை விட்டுவிடு. உன்னை நீயே பராமரித்துக் கொள்' என்று. ரொம்ப காலமாகவே அந்தத் தாய் அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கிறாள். அதைப் புரிந்து கொண்டவர்கள் பொறுப்பேற்கிறார்கள். சித்தர்களாகவும், புத்தர்களாகவும் மாறி ஞானம் பெறுகிறார்கள்.

பாதை நீங்கள் எடுக்கும் முடிவைப்பொறுத்தது. தற்போது உங்களுடைய சொந்தப் பொறுப்பில் நீங்கள் செயல்பட வேண்டி யிருக்கும். மூலாதார மையத்தில் இருந்து மேல்நோக்கிச் செல்ல வேண்டும். இன்று நீங்கள் முதலில் அறிந்துகொள்ள வேண்டியது இதுதான்: பாலுறவு பற்றி உங்களுக்கு முழுமையாய் தெரியும் என்று எண்ணிக் கொள்ளாதீர்கள். நீங்கள் அதைத் தெரிந்து கொண்டிருக்க வில்லை.

நான் கேள்வியுற்ற ஒரு குட்டிக்கதை:

தன்னுடைய மகனை வகுப்பறையில் கொண்டுவிடச் சென்ற ஒருவன், தன் மகன் பறவைகளைப் பற்றியும், தேனீக்களைப் பற்றியும் அறிந்து கொள்ள விரும்புவதாய் ஆசிரியரிடம் சொன்னான்.

'பால் சார்ந்த அடிப்படை அறிவை நீ பெற்றிருக்கிறாயா?' ஆசிரியர் கேட்டார்.

பையனின் தந்தை சொன்னார். 'சேச்சே, அதெல்லாம் பையனுக்குத் தெரியும். அவனுக்குப் பறவைகளையும், ஈக்களையும் பற்றித்தான் தெரிய வேண்டுமாம்' என்று.

ஆனால், பாலுறவு பற்றி யாருமே முழுமையாய் தெரிந்து கொண்டிருக்கவில்லை என்றுதான் சொல்ல விரும்புகிறேன். கடவுளைப் பற்றித் தெளிவாகப் புரிந்து கொண்டாலன்றி உங்களால் பாலுறவைப் பற்றித் தெரிந்து கொள்ள முடியாது. காரணம், கடவுளே பாலுறவு சக்தியின் முடிவான (final) சாத்தியம். நீங்கள் யார் என்பது உங்களுக்குத் தெரிந்தாலன்றி, பாலுறவு அதன் முழுமையில் எப்படி இருக்கும் என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள முடியாது. அதைப் புரிந்துகொள்ள உங்களால் முடியாது. அதனுடைய ஒரு பகுதி - சூரிய பகுதி மட்டுமே அறியப்பட்டிருக்கும். சந்திரப்பகுதி கூட இன்னமும் அறியப்படாததாயிருக்கும். பெண் சக்தி குறித்த உளவியல் இனிமேல்தான் உருவாக வேண்டும். ஃப்ராய்டு, ஜங், ஆட்லர் போன்றவர்களின் ஆராய்ச்சியெல்லாம் ஏறக்குறைய ஆணை மையமாய்க் கொண்டு செய்யப்பட்டவைதாம். பெண் இன்னமும்

விவரமாக அறியப்படாத நிலப்பகுதியாகவே இருக்கிறாள். சந்திர மையம், சந்திர மையம் கூட இதுவரைக்கும் அறியப்படாத செய்தியாகவே இருக்கிறது.

ஒருசிலருக்கு மட்டும் ஒருசில காட்சிகள் கிடைத்திருக்கும். உதாரணமாக ஜங் ஒருசில கண்ணோட்டங்களைப் பெற்றிருநதார். ஃப்ராய்டு முற்றிலும் சூரிய மையத்தில் ஒரு முகப்பட்டவராகவே இருந்தார். ஜங் சிறிதளவு சந்திரனை நோக்கிச் சென்றார். அதுவும் தயக்கத்துடன். காரணம் மனதின் முழுப் பயிற்சியும் அறிவியல் சார்ந்ததாயிருப்பதுதான். அத்துடன் சந்திரனை நோக்கிச் செல்வது, அறிவியலில் இருந்து முற்றிலும் மாறுபட்ட ஓர் உலகில் செல்வ தாகும். அது கற்பனையான உலகில் செல்வது. அது கவிதைக்குரிய உலகில் செல்வது. அது முகாந்தரமற்ற, அறிவிற்குப் புறம்பான உலகில் செல்வதாகும்.

சில விஷயங்களை நான் உங்களுக்குச் சொல்லியாக வேண்டும். ஃப்ராய்டு சூரியனில் ஒருமுகப்பட்டவர். ஜங் சிறிதளவே சந்திரனின் பக்கம் சாய்ந்தவர். அதனால்தான் ஃப்ராய்டு தம்முடைய சீடரான 'ஜங்'கின் மீது மிகுந்த கோபம் கொண்டிருந்தார். ஃப்ராய்டின் அடியொற்றிச் செல்பவர்களும் ஜங்கினால் கோபத்துக்குள்ளானார்கள். அவர் தன்னுடைய குருவிற்கு துரோகம் செய்து விட்டார் என்றே தெரிகிறது.

சூரியனில் ஒருமுகப்பட்ட நபர், சந்திரனில் ஒருமுகப்பட்ட நபரை ஆபத்தானவர் என்று எண்ணிக் கொள்கிறார். சூரியனில் ஒருமுகப் பட்ட நபர் அறிவின் அப்பழுக்கற்ற மேலான நெடுஞ்சாலையில் செல்கிறார். சந்திரனில் ஒருமுகப்பட்ட நபரோ சிக்கலான வழியில் செல்லத் தொடங்குகிறவர்.

அவர் காட்டுப்பக்கம் செல்கிறார். அங்கே எதுவும் தெளி வாகவோ, தடையற்றதாகவோ இல்லை. எல்லாமே உயிரோட்டத்துடன் இருந்தாலும் எதுவுமே குழப்பமற்றதாய், எளிதில் விளங்கு வதாயில்லை.

ஆணின் மிகப்பெரிய அச்சம் பெண். மரணம் ஏதோ ஒரு வகையில் பெண்ணால் விளையப் போகிறது என்றே அவன் சந்தேகப்படுகிறான். காரணம், உயிர் அவளிடமிருந்தே வந்தது. ஒவ்வொருவரும் பெண்ணிடம் இருந்தே பிறக்கிறார்கள். வாழ்தல் அவளிடம் இருந்து வந்தது என்கிறபோது மரணமும ஏதோ ஒரு

வகையில் அவளால் நேரிடும் என்றே தோன்றுகிறது. காரணம், முடிவு எப்போதுமே தொடக்கத்தைச் சந்திக்கிறது இல்லையா. அந்நிலையில் மட்டுமே வட்டம் பூர்த்தி செய்யப்படுகிறது.

இந்தியாவில், இந்திய புராணங்களில் நாம் அதைத் தெளிவாகப் புரிந்து கொண்டிருக்கிறோம். காளி மாதாவின் சிலைகளை அல்லது படங்களை நீங்கள் கட்டாயம் பார்த்திருப்பீர்கள். அவள் பெண் மனத்தின் குறியீடு, தன்னுடைய கணவனான சிவனது சரீரத்தின் மீது அவள் நடனமாடுகிறாள். சிவன் மடிந்து விடுவதுபோல் அவள் மிகவும் பயங்கரமாக ஆடுகிறாள். பெண் மனம் ஆண் மனதைக்கொன்று போடுகிறது. அந்தப் புராணக் கதையின் பொருள் அதுதான்.

அவள் ஏன் கறுப்பு வண்ணத்தில் தீட்டப்பட்டிருக்கிறாள்? அவள் 'காளி'. 'காளி' என்றால் கறுப்பு. ஏன் ரொம்பவும் ஆபத்தானவளாய் காட்சியளிப்பது? தன்னுடைய கைகளிலொன்றில் அப்போதுதான் துண்டித்த, இரத்தம் சொட்டுகிற தலையை வைத்துக் கொண்டிருக் கிறாள். கிட்டத்தட்ட மரணத்தின் வடிவமாகவே அவள் காட்சி யளிக்கிறாள். அவள் பயங்கரமாய் ஆடுகிறாள். கணவன் மடிந்துவிட்ட களிப்பில் அவனது மார்பின்மீது ஆடுகிறாள். அவள் ஏன் கறுப்பாக இருக்கிறாள்? காரணம் மரணம் எப்போதுமே இருண்ட இரவின் கருமையாகவே கருதப்பட்டு வந்தது.

அவள் தன்னுடைய கணவனைக் கொன்றது ஏன்? சந்திரன் எப்போதுமே சூரியனைக் கொன்று விடுகிறது. உங்கள் இருப்புணர்வில் (being) சந்திரன் எழுகிறபோது தர்க்கம் (logic) மடிந்துவிடும். பிறகு தர்க்க சாஸ்திரம் இருக்காது, பொது அறிவும் (reason) எஞ்சியிருக்காது. தற்போது முற்றிலும் மாறுபட்ட ஒரு பரிமாணத்தை நீங்கள் அடைந்து விடுகிறீர்கள்.

ஒரு கவிஞனிடமிருந்து நீங்கள் தர்க்கத்தை எதிர்பார்க்க முடியாது. ஓர் ஓவியனிடமிருந்தோ, நடனக் கலைஞரிடமிருந்தோ, இசைக்கலைஞனிடமிருந்தோ தர்க்கத்தை ஒருபோதும் நீங்கள் எதிர்பார்க்க முடியாது. அவர்கள் முற்றிலும் இருண்ட உலகில் சென்று கொண்டிருப்பவர்கள். அவர்கள் இருட்டில் இயக்கம் பெறுகிறவர்கள்.

அறிவு எப்போதுமே அஞ்சத்தக்கதாயிருக்கிறது. மனிதன் எப்போதுமே அச்சத்தில் உறைகிறான். காரணம் மனிதன் அறிவில் ஒருமுகப்பட்டவன். பெண்ணையும் அவளுடைய மனதையும் ஆணுக்கு எத்தனை கடினமாயிருக்கும் என்பதை நீங்கள்

கருத்தூன்றிக் கவனித்ததில்லையா? அதே எண்ணம் - உணர்வு பெண்ணுக்கும் இருக்கும். அவளால் ஆண்களைப் புரிந்து கொள்ள முடிவதில்லை. தாங்கள் ஒரே இனத்தின் அங்கமல்ல, வெவ்வேறான வர்கள் என்கிற மாதிரி ஓர் இடைவெளி இருக்கிறது.

ஒரு சின்னக் கதை சொல்கிறேன் உங்களுக்கு.

ஓர் இத்தாலியன் யூதன் ஒருவனுடன் வாதம் செய்தான். 'யூதர்களாகிய நீங்கள் ரொம்பவும் பெருமையடித்துக் கொள்கிறவர்கள். உலகிலேயே நீங்கள்தாம் பெரிய அறிவாளிகள் என்று பீற்றிக் கொள்கிறீர்கள். முழுக்க முழுக்க முட்டாள்தனமான பேச்சு. இத்தாலியில் அகழ்வாராய்ச்சி மேற்கொள்ளப்பட்ட போது, இரண்டாயிரம் ஆண்டுப் பழைமையான நில அடுக்குப் பாளங்களில் கம்பி (wire) கண்டெடுக்கப்பட்டிருக்கிறது. அந்தக் காலத்திலேயே எங்களுடைய ரோமானிய மூதாதைகள் தந்திக் கம்பியைப் பயன்படுத்தியதற்கு அதுவே நிரூபணம்' என்று.

யூதன் பதிலளித்தான்: 'இஸ்ரேலில் நிலத்தைத் தோண்டியபோது அது நாலாயிரம் ஆண்டுப் பழைமையுடையதாய் இருந்தது. அதில் எதுவும் கண்டெடுக்கப்படவில்லை. நீங்கள் தந்திக்கம்பியைப் பயன்படுத்துவதற்கு முன்பே நாங்கள் கம்பியில்லாத் தந்தியைப் பயன்படுத்தினோம் என்பதையே இது குறிக்கிறது' என்று.

தர்க்கம் இப்படித்தான் செயல்படுகிறது. மயிரிழைப் பிளவு எனறாலும் அது தொடர்ந்தபடி இருக்கும். காதலில் கூட மனிதன் அறிவுக்கு ஏற்புடைய விதத்தில், எதையும் விவாதிப்பவனாக இருக்கிறான். அவன் எப்போதும் எதையாவது நிரூபிக்க முயன்று கொண்டிருக்கிறான்.

பெண்ணானவள் எதையும் நிரூபித்துக் காட்டினால்தான் உண்மை எனக் கொள்கிறாள். அத்துடன் ஆணும் எதையாவது நிரூபிக்க முயன்றபடி இருக்கிறான். தற்காத்துக் கொள்கிற முயற்சி. அதன் மூலகாரணம் அவர்களுடைய பாலுணர்வின் அடியாழத்தில் எங்கோ இருக்கிறது. ஓர் ஆணும் பெண்ணும் உறவு கொள்ளும்போது பெண் எதையும் நிரூபிக்க வேண்டியிருக்காது. அவள் இணக்கமாய் நடந்து கொண்டாலே போதும். ஆனால் ஆண்தான் தன்னுடைய ஆண்மையை நிரூபிக்க வேண்டியிருக்கும். தன்னுடைய ஆண்மையை நிரூபிக்கும் முயற்சியில் ஆண் தற்பாதுகாப்பாக நடந்து கொள்வதோடு, எப்போதும் ஏதோவொன்றை நிரூபிக்க முயல்கிறான்.

தத்துவம் முழுவதும் கடவுளுக்கான நிரூபணங்களைக் கண்டறிவதே ஆகும். அறிவியல் என்பது கொள்கைகளுக்கு நிரூபணங்களைத் தேடுவது. பெண்களுக்குத் தத்துவத்தில் ஆர்வம் இல்லை. அவர்கள் வாழ்க்கையைச் சீர்தூக்கிப் பார்க்காமல் 'சரிதான்' என எடுத்துக் கொண்டு விடுகிறார்கள். அதை அப்படியே ஏற்றுக் கொள்கிறார்கள். தங்களை முன்பே நிரூபித்துக் கொண்டவர்களைப் போல, அவர்கள் தற்காப்பை மேற்கொள்வதில்லை. அவர்களுடைய இருப்புணர்வு பூர்த்தியாயிருக்கிறது ஒரு வட்டத்தைப்போன்று. அவர்களுடைய உடம்பு உருண்டையாயிருப்பதற்கு அதுதான் காரணம் போலும். அது உருண்டை வடிவில் இருக்கிறது. மனிதனுக்கு இக்கட்டுகள் இருப்பதால் அவன் எப்போதுமே சண்டையிடவும், வாதம் பண்ணவும் தயாராயிருக்கிறான், காதல் விளையாட்டுக்கான கணங்களில் கூட

சாமர்ஸெட் மாம் பற்றி நான் படித்தது:

எழுத்தாளர் சாமர்ஸெட் மாமிற்கு அப்போது வயது தொண்ணூறு. இன்ஃப்ளுயன்சாவினால் தாக்கப்பட்டிருந்தார். ஒருசமயம் அவருடைய வாசக நேயரான பெண்மணி ஒருத்தி அவரைத் தொலைபேசியில் அழைத்து, பழங்களும் பூக்களும் அனுப்பி வைக்கவா என்று கேட்டாள்.

'பழங்களுக்கென்றால் காலம் கடந்து விட்டது. பூக்களுக்கென்றால், அதற்கான காலம் இன்னும் வரவில்லை' என்று மாம் பதிலளித்தார்.

நேசத்தின் அத்தகைய சின்ன அசைவிலும்... தர்க்கம் உடனே நுழைந்து விடுகிறது.

ஆட்டத்திலும், அழகிலும் சிறந்த பிரபல நடிகை ஒருத்தி பெர்னார்ட்ஷாவிடம் கேட்டாள். 'என்னைக் கல்யாணம் செய்து கொள்ள விருப்பமா?' என்று.

ஷா கேட்டார், 'எதற்காக?'

அந்தப் பெண் சொன்னாள், 'நான் எப்போதுமே என்னுடைய அழகை - என்னுடைய அழகான முகத்தை, கண்களை, உடம்பைப் பற்றிச் சிந்திப்பதோடு உங்கள் அறிவுத்திறனையும் எண்ணிப் பார்ப்பேன். இரண்டும் சேர்ந்தால் அழகும் அறிவும் மிக்க ஒரு குழந்தை பிறக்கும். இந்த உலகத்துக்கு ஓர் அருமையான வெகுமதி கிடைக்கும் அல்லவா' என்று.

பெர்னார்ட்ஷா சிரித்தபடி சொன்னார். 'பொறு. அது வேறு மாதிரியாகி விடவும் கூடும். அது (குழந்தை) உன்னுடைய அறிவையும், என்னுடைய அழகையும் கொண்டு பிறந்து விட்டால் என்ன செய்வது' என்று.

ஆண் மனம் எப்போதுமே பிளப்பாய்வு செய்யும்.

தம்முடைய வாழ்க்கைக் குறிப்பில் ஜங் இப்படிக் கூறுகிறார் - தாம் ப்ராய்டுடன் அமர்ந்திருந்ததாகவும், அன்று தனக்கு வயிற்றில் திணறல் (அழுத்தம்) ஏற்பட்டதாகவும், ஏதோவொன்று நிகழப் போவதாகவும் அவர் உணர்ந்திருக்கிறார். அந்நிலையில் கதவுள்ள அலமாரியில் ஏதோவென்று வெடித்த மாதிரி இருந்தது. இருவரும் எச்சரிக்கை யானார்கள். என்ன ஆயிற்று? ஜங் சொன்னார். 'எனது சக்திக்கும் அதற்கும் ஏதோ தொடர்பு இருக்கிறது' என்று... ஃப்ராய்டு சிரித்து ஏளனம் செய்தார். 'என்ன முட்டாள்தனமா இருக்கு. உங்கள் சக்தியுடன் அதற்கு எப்படித் தொடர்பு இருக்க முடியும்? என்று. ஜங் சொன்னார், பொறுங்கள், இன்னும் ஒரு நிமிடத்தில் அது மறுபடியும் நிகழும்' என்று. காரணம். அவருக்கு மீண்டும் வயிற்றில் திணறல் ஏற்பட்ட உணர்வு. சரியாக ஒரு நிமிடத்துக்கெல்லாம் மறுபடியும் அதே வெடிச் சத்தம்.

இதுதான் பெண்ணுக்கான மனம். ஜங் தம்முடைய வாழ்க்கைக் குறிப்பில் எழுதுகிறார். 'அன்றில் இருந்து ஃப்ராய்டு ஒருபோதும் என்னை நம்பியதில்லை. இது ஆபத்தானது. காரணம் இதில் முரண்பாடு இருக்கிறது - இது அறிவிற்குப் புறம்பானது. அத்துடன் ஜங், 'சம காலத்திய நிகழ்வு' (synchronicity) என்கிற ஒரு புதிய கோட்பாட்டைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினார்.

அத்தனை அறிவியல் முயற்சிக்கும் அடிப்படையான அந்தக் கோட்பாடு 'காரண காரியத் தொடர்பைப் பற்றியது (casuality) எது நடந்தாலும் அதற்கொரு காரணம் இருக்கும் என்கிறபோது அதைத் தொடர்ந்து ஒரு விளைவும் இருக்கும். நீங்கள் தண்ணீரைக் கொதிக்க வைத்தால் அது ஆவியாக மாறும். கொதிக்க வைப்பது வினை முதல் (cause). அதை 100 டிகிரி கொதிநிலைக்குக் கொண்டு வரும்போது அது ஆவியாகி விடுகிறது. ஆவியாதல் விளைவு (effect). இது அறிவியல் சார்ந்தது அடிப்படை.

ஜங் கூறுகிற இன்னொரு கொள்கை 'சமகாலத்திய நிகழ்வு' (synchronicity). அதை விளக்குவது கடினம். காரணம் எல்லா விளக்கங்களுமே அறிவியல் சார்ந்த மனதில் இருந்தே வருகிறது. ஆனால், அவர் எதைக் கருத்தில் கொள்கிறார் என்பதை நீங்கள்

முயன்று உணர முடியும். ஒரே மாதிரியான இரண்டு கடிகாரங்களை ஒத்த காலத்தைக் காட்டுவதாய் வைத்திடுங்கள். ஒரு கடிகாரத்தில் முள் பன்னிரண்டைத் தொடும்போது மற்றொரு கடிகாரம் பன்னிரண்டு முறை மணி அடித்து ஓய்கிறது. ஒரு கடிகாரம் நகர்ந்து மணி காட்டுவதோடு சரி. மற்றொரு கடிகாரமோ பதினொன்று, பன்னிரண்டு, ஒன்று, இரண்டு என்றுமணியோசை செய்கிறது. அதைக் கேட்டுக் கொண்டிருக்கிற எவரும் ஆச்சரியப்படவே செய்வார்கள். ஏனெனில் இரண்டாம் கடிகாரம் எழுப்பும் மணியொளிக்கு முதல் கடிகாரம் காரணமில்லை. அவை எவ்வகையிலும் ஒன்றோடொன்று தொடர்புடையதல்ல. அவை எந்தவொரு வினை முதலோடும், விளைவோடும் இணைக்கப்படவில்லை.

ஜங் சொல்கிறார், காரண காரியத் தொடர்பின் பக்கமாய் மற்றொரு கொள்கையும் இருக்கிறது என்று. உலகைப் படைத்தவன், அப்படியொருவன் இருந்தானாகில் 'வினை முதலும் விளைவும்' இல்லாத எத்தனையோ பொருள்களை இவ்வுலகில் படைத் திருக்கிறான். நீங்கள் ஒரு பெண்ணைப் பார்க்கிறீர்கள். அத்துடன் எதிர்பாராத விதமாய் பூக்களையும் விரும்புகிறீர்கள். தற்போது இது வினை முதல் விளைவாலோ அல்லது சமகாலத்திய நிகழ்வுக் கொள்கையாலோ விளக்கப்பட வேண்டுமா? உண்மைக்கு வெகு நெரக்கமாய், துல்லியமாய் இருக்கிறதே. உங்கள் மனதில் விருப்பம் தோன்றுவதற்குக் காரணம் பெண்ணல்ல. பெண்ணின் மனதில் விருப்பம் தோன்றுவதற்குக் காரணம் நீங்களல்ல. ஆனால், ஆணும் பெண்ணும் அல்லது சூரிய சக்தியும் சந்திர சக்தியும் தாங்கள் நெருக்கமாகிற போது பூக்களை விரும்பும் விதமாய் படைக்கப் பட்டிருக்கிறார்கள். இதுவே சமகாலத்திய நிகழ்வு.

ஆனால் ஃப்ராய்டு அச்சமுற்றார். அவர்கள் மறுபடியும் நெருக்கமாய் - நம்பிக்கைக்குகந்தவர்களாய் இருக்கவில்லை.

ஜங்கைத் தம்முடைய வாரிசாகத் தெரிவு செய்திருந்தார் ஃப்ராய்டு; ஆனால், அன்று தம்முடைய மனதை அவர் மாற்றிக் கொண்டார். அதன்பிறகு அவர்கள் விலகி, ரொம்ப தூரம் விலகிப் போய்விட்டனர்.

ஆனால் பெண்ணைப் புரிந்துகொள்ள முடியவில்லை, பெண்ணாலும் ஆணைப் புரிந்துகொள்ள முடியவில்லை. அது கிட்டத்தட்ட சூரியனும் சந்திரனும் போன்றதாகும். சூரியன் இருக்கும் போது சந்திரன் மறைந்து விடுகிறது. சூரியன் அஸ்தமனமானதும் சந்திரன் தோன்றுகிறது. அவை ஒருபோதும் சந்தித்துக் கொள்வ

தில்லை. உங்கள் உள்ளுணர்வு செயல்படத் தொடங்கியதும் உங்களுடைய அறிவும், விவேகமும் மறைந்து விடுகிறது. பெண்கள் ரொம்பவும் உள்ளுணர்வு சார்ந்தவர்கள். அவர்கள் எந்த ஒன்றுக்கும் முகாந்தரம் (reason) வைத்திருப்பதில்லை. ஆனால் அவர்களிடம் நடக்கப்போவதை முன்கூட்டியே உணரும் எச்சரிக்கை உணர்வு இருக்கும். அவர்களுடைய எச்சரிக்கை உணர்வுகள் கிட்டத்தட்ட எப்போதுமே உண்மையாகி விடுகின்றன.

ஆண்களில் பலர் என்னிடம் வந்து, 'இது ரொம்ப ஆச்சரியமா இருக்கு. நாங்கள் யாருடனாவது கள்ளத்தொடர்பு வைத்திருந்து அதை மனைவியிடம் சொல்லாமல் மறைத்து விட்டாலும் அவளுக்கு எப்படியோ தெரிந்து விடுகிறது. ஆனால், அவள் அப்படி ஏதேனும் தொடர்பு வைத்திருக்கிறாளா இல்லையா என்பதை எங்களால் தெரிந்து கொள்ளவே முடியவில்லை' என்று சொல்கிறார்கள்.

ஷீலா, சின்மயா இடையேயும் அப்படியொரு நேர்வு (case) இருக்கிறது. சின்மயாவுக்கு வெளித்தொடர்பு (affair) இருந்தது. அவர்களிருவரும் என்னிடம் வந்தனர். சின்மயா சொன்னான். 'இது வினோதமாயிருக்கிறது. நான் வேறொரு பெண்ணுடன் தொடர்பு வைக்கிற போதெல்லாம், ஷீலா உடனே அங்கு வந்து விடுகிறாள். அப்படியில்லாத போது அவள் தன்னுடைய அலுவலக வேலையைக் கவனித்துக் கொண்டோ வேறு ஏதாவது செய்தபடியோ இருந்து விடுவாள். ஆனால், எனக்கு எந்தப் பெண்ணிடமாவது விருப்பம் ஏற்பட்டு அவளை என்னுடைய அறைக்குக் கொண்டு வந்து விட்டால் அவளுடன் சும்மா பேசிக் கொண்டிருந்தால்கூட அப்போது ஷீலா வந்து விடுகிறாள். இப்படிப் பலமுறை நடந்திருக்கிறது' என்று. நான் விசாரித்தேன், 'வேறு விதமாக நடந்திருக்கிறதா?' என்று. 'ஒருபோதும் இல்லை' என்றான் அவன்.

பெண் எச்சரிக்கை உணர்வுகளோடு வாழ்கிறாள். அவள் அறிவைப் பயன்படுத்தி விவாதிப்பதில்லை. அவள் உணர்வதோடு சரி, அதுவே உண்மை என்கிற அளவிற்கு அதை ஆழமாய் உணர்கிறாள். அதனால்தான் எந்தப் பெண்ணையும் கணவன்மார்களால் தோற்கடிக்க முடிவதில்லை. அவர்கள் உங்களுடைய வாதத்தைக் காது கொடுத்துக் கேட்க மாட்டார்கள். 'இதுபோலத்தான்' என்று அழுத்தமாய் கூறுவார்கள். நீங்கள் எத்தனைக்கு மறுக்கப் பார்க்கிறீர்களோ அத்தனைக்கு 'அது அப்படித்தான்' என்று அழுத்தந்திருத்தமாய் சொல்லிக் கொண்டே இருப்பார்கள்.

நீதிமன்றத்தில் நடந்த ஒரு வழக்கு:

வழக்கு விசாரணைக்கு வந்த நாளில் பிரதிவாதி தன்னுடைய மன அமைதியை இழந்து விட்டிருந்தான். சான்றாயர் குழுவில் பன்னிரண்டு பெண்கள் கொண்டு வரப்பட்டிருந்தார்கள்.

நான் 'ஒரு பெண் ஜூரி (Jury) என்னுடைய வழக்கைப் பரிசீலனை செய்யப் போகிறாரா?' என்று தன் வழக்கறிஞரிடம் கேட்டான் அவன்.

'பேசாமல் இரு' என்றார் வழக்கறிஞர்.

'எதையும் பேசாம இருக்கிறதற்கில்லை. என்னுடைய மனைவியை என்னால் முட்டாளாக்க முடியாதென்றால், பன்னிரண்டு பெண்களை முட்டாளாக்குவது பற்றி எனக்கு எப்படி நம்பிக்கை உண்டாகும்? நான் குற்றவாளி என்றே வாதாடுங்கள்' என்றான் அவன்.

அது நடவாத காரியம். அவர்கள் வேறொரு வழியில் அறிந்து கொண்டு விடுவார்கள். அறிதலில் ஒரு தனி வழி, சந்திரனின் வழியில் அறிந்து கொள்ளுதல்.

பெண்பாலுக்குரிய உளவியல் இனிமேதான் வளர்ச்சி பெற்றாக வேண்டும். சந்திர உளவியல் வளர்ச்சி பெறாவிடில் உளவியலால் அறிவியல் அந்தஸ்தைப் பெற முடியாது. அது ஒரு தப்பெண்ண மாகவே (prejudice) நின்றுவிடும். அது மனித உயிர்களைப் பற்றி இருக்கிறபடிக்கு சொல்லவியலாது போய்விடும்.

ஃப்ராய்டின் உளவியல் சூரிய உளவியல் ஆகும். ஜங்கினுடைய உளவியல் சற்றே சந்திரனின் பக்கம் சாய்ந்ததாகும். ரொபர்ட்டோ அஸ்ஸாகியோலி என்றொருவர். அவருடைய உளவியல் சூரிய சந்திர கூட்டிணைப்பாகும். சொல்லப்போனால் அதன் தொடக்கம். தன்னுடைய உளவியலை அவர் 'உளவியல் நிலைகளின் தொகுப்பு' (Psychosymthesis) என்று அழைத்தார். ஃப்ராய்டு தன்னுடைய உளவியலை, 'உளப்பகுப்பியல் (Psychoanalysis) என்று அழைத்தார். பகுப்பு (analysis) சூரியனிடமிருந்து வருகிறது. இணைப்பு (moon) சந்திரனிடமிருந்து வருகிறது. கருத்தூன்றிக் கவனியுங்கள், வெளிச்சம் உள்ளபோதெல்லாம் பொருள்கள் வெவ்வேறாயிருக்கின்றன. அந்நிலையில் இங்கொரு மரம், அங்கொரு மரம் என்று எல்லாமும் தனித்தனியே இருக்கும். அதன்பிறகு வரும் இரவின் இருட்டில் பிரித்தல் - பிரித்தறிதல் மறைகிறது. அப்போது எல்லாமும் ஒன்றாகிவிடும். இருண்ட இரவில் பிரிவுகள் (divisions) மறைகின்றன.

கூட்டிணைவாயிருப்பது சந்திர உளவியல். பாகுபடுத்தல் (analytical) சார்ந்தது சூரிய உளவியல். அது துண்டு துண்டாய் வெட்டி சோதனை செய்யும், வாதிடும், நிரூபிக்கும். ஆனால் அதைவிட மேம்பட்ட உளவியல்களுக்கான சாத்தியமும் இருக்கவே செய்கிறது. நான் சில குறிப்புகளை – புத்தர்களின் உளவியல் என்று நான் கருதும் குறிப்புகளை உங்களுக்குத் தர விரும்புகிறேன். ஃப்ராய்டு சூரியன், ஐங் சந்திரன். சூரியனும் சந்திரனும் இணைந்தது அஸ்ஸாகியோலி. ஒரு புத்த சூரிய சந்திரருடன் அவற்றுக்கப்பாற்பட்டதும் இணைந்திருக்கிறது. 'அப்பாற்பட்டது' என்று நான் சொல்வதை பிற்பாடு உங்களுக்கு விளக்குகிறேன். அதன்பிறகு அந்த அப்பாற்பட்டதும் பல வழிகளில் அறியக்கூடியதாயிருக்கும்.

சூரியனுடன் அதற்கு அப்பாற்பட்டதும்: நீங்கள் பதஞ்சலியையும், மகாவீரரையும், யோகாவையும் கொண்டிருக்கிறீர்கள். கருத்து வெளியிடும் முறை சூரியனுடையது, அனுபவம் மதிப்பில் உயர்ந்த, தன் வலிமைக்கு அப்பாற்பட்ட ஒன்றினுடையது. அப்போது, சூரியனுடன் சந்திரனும் அப்பால் உள்ளதும் உடன் சேர்ந்து கொள்கிறது: நீங்கள் தந்த்ராவை, சிவனை அடையப் பெறுகிறீர்கள். அனுபவம் அப்பாற்பட்ட ஒன்றினுடையது. வெளியிடும் முறை சூரிய சந்திரருடையது. அதன்பிறகு சந்திரனின் உடன் சேர்க்கையாய் அப்பாற்பட்ட ஒன்றையும் பெறுகிறீர்கள். நாரதர், சைதன்யர், மீரா, இயேசு. அனுபவம் அப்பாற்பட்டவைகளுடையது. வெளியிடும் மொழி சந்திரனுடையது. அதன்பிறகு அப்பாற்பட்டவையே: போதி தர்மர், லாவோட்சு, சுவாங்சு, ஜென். அவர்கள் சொற்களில் நம்பிக்கை வைக்கவில்லை. அதனால் அவர்களுக்கு சந்திர சூரிய முறைகள் (விளக்கமாய் சொல்லும்) தேவைப்படவில்லை. அவர்கள் அதை வார்த்தையால் சொல்ல முடியாது என்கின்றனர். லாவோட்சு சொல்கிறார். 'வார்த்தையில் சொல்லப்பட்ட தாவோ (Tao) அதன்பிறகும் 'தாவோ'வாயிருக்காது' என்று. 'வாய்விட்டுச் சொல்லக்கூடிய உண்மை ஏற்கெனவே ஒரு பொய்யாயிருக்கிறது. அதை (உண்மை) வார்த்தையால் விளக்க முடியாது' என்கிறார் அவர்.

இவையெல்லாம் சாத்தியங்களே. இன்னும் மெய்யாக்கப்பட வில்லை. இங்குமங்குமாய் யாரோ ஒருவர் முயன்று அடைந்திருக் கலாம். ஆனால் அந்த ஞானமும், புரிதலும் தொகுக்கப்பட்ட மனித உணர்வின் ஒரு பகுதியே.

எழும்போது நாசியின் எந்தப்பக்கம் செயல்பாட்டில் இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்வது யோக ஒழுக்கத்தில் ஒரு பகுதியாகும். இடது பக்கம் செயல்பாட்டில் இருக்கிறதா ரொம்ப சரி, அதுவே படுக்கையில் இருந்து எழுவதற்குச் சரியான நேரம். அது செயல்படவில்லை என்றால் மறுபக்கம் திரும்பி, உங்களுடைய வலது நாசியை அடைத்துக்கொண்டு இடது பக்கத்தால் சுவாசியுங்கள். மெள்ள மெள்ள இடது நாசி பொறுப்பேற்றுக் கொண்டு விடும், பிறகு எழுந்து கொள்ளலாம்.

எப்போதுமே இடது நாசிச் செயல்பாட்டுடன் எழுந்திருங்கள். உங்களுடைய ஒட்டுமொத்த நாளின் செயற்பாடடிலும் முழுமையான வேறுபாட்டைக் காண்பீர்கள். கோபம், எரிச்சல் இவை குறைந்து ரொம்ப நிதானமுடன் அமைதியாய் இருப்பீர்கள். உங்களுடைய சிந்தனை ஆழ்ந்ததாயிருக்கும், நீங்கள் சண்டையிட விரும்பினால் வலது நாசி (வழிச்சுவாசம்) தகுதியாயிருக்கும். நீங்கள் காதல் விளையாட்டில் ஈடுபட விரும்பினால் இடது நாசியே அதற்குச் சாதகமாயிருக்கும்.

இந்தச் சுவாசிப்பு தொடர்ந்து மாறிக்கொண்டேயிருப்பது. நீங்கள் அதைக் கவனியாமல் இருந்திருக்கலாம். ஆனாலும், கவனியுங்கள். நவீன மருத்துவம் அதைப் புரிந்து கொள்ளும் நிலைக்கு வந்திருக்கிறது. காரணம், அது சிகிச்சையளிப்பதில் வெகு சிறப்பாகப் பயன்படுகிறது. சந்திரனைத் துணையாய் கொண்ட நோய்கள் இருக்கின்றன. சூரியனைத் துணையாகக் கொண்ட நோய்களும் இருக்கின்றன. நீங்கள் மிகச் சரியாகத் தெரிந்து கொண்டால் மூச்சுக்காற்றை கொண்டு ஒருவருக்குச் சிகிச்சையளிக்க முடியும். உங்கள் சுவாசம் தொடர்ந்து மாறிக்கொண்டேயிருக்கிறது. நாற்பது நிமிடங்களுக்கு ஒருபக்க நாசி செயல்படுகிறது. அடுத்த நாற்பது நிமிடங்களுக்கு மற்றொரு நாசி செயல்படுகிறது. உங்களுக்குள் தொடர்ந்து சூரியனும் சந்திரனும் மாறிக்கொண்டே இருக்கும். நீங்கள் சூரியனுக்கும் சந்திரனுக்கும் இடையே ஊசலைப்போல் ஆடிக் கொண்டிருப்பீர்கள்.

அதனால்தான் உங்கள் மனநிலைகளை நீங்கள் அடிக்கடி மாற்றிக் கொண்டிருப்பது. திடீரென எந்தக் காரணமும் இல்லாமலே உங்களுக்கு எரிச்சல் ஏற்பட்டு விடுகிறது. எல்லாம் இருக்கிறபடிதான் இருக்கிறதே யன்றி எதுவும் மாறிவிடவில்லை. நீங்கள் அதே அறையில் அமர்ந்திருக்கிறீர்கள், எதுவும் நடந்துவிடவில்லை - ஆனாலும் சற்று எதிர்பாராதவிதமாய் சீற்றத்துக்குள்ளாகி விடுகிறீர்கள். உங்கள் கையை நாசிக்குச் சமீபமாய் கொண்டு வந்து உணருங்கள். உங்களுடைய,

சுவாசம் இடது பக்கத்தில் இருந்து வலது பக்கமாய் மாறியிருக்கும். ஒரு நொடிக்கு முன் வரை நீங்கள் நன்றாக உணர்ந்தீர்கள், ஒரு நொடிக்குப் பிறகு நீங்கள் ரொம்ப மோசமாய் உணர்கிறீர்கள். சண்டையிடவோ வேறு எதைச் செய்யவோ தயாராகி விடுகிறீர்கள்.

உங்கள் உடம்பு முழுதும் பிரிக்கப்பட்டிருப்பதை நினைவில் கொள்ளுங்கள். உங்களுடைய மூளையும் இரண்டு மூளைகளாய் பிரிக்கப்பட்டுள்ளது. உங்களுக்கிருப்பது ஒரு மூளையல்ல – இரண்டு அரையுருண்டை வடிவங்கள். இடதுபக்க மூளை சூரிய மூளையாகவும், வலதுபக்க மூளை சந்திர மூளையாகவும் இருக்கிறது. உங்களுக்குக் குழப்பம் வரலாம் – காரணம் இடது பக்கமுள்ள எல்லாமும் சந்திரனுக் குரியதாய் இருக்கும்போது, ஏன் வலதுபக்க மூளை சந்திரனாயிருப்பது என்று. உங்களுடைய வலப்பக்க மூளை உடம்பின் இடப்பக்கத்துடன் சேர்க்கப்பட்டிருக்கிறது. உங்கள் இடது கை வலப்பக்க மூளையுடனும், வலது கை இடப்பக்க மூளையுடனும் இணைக்கப்பட்டிருக்கிறது. அதனால்தான் சிலுவைக்குறி போன்று குறுக்காக.

வலப்பக்க மூளை கற்பனை, கவிதை, காதல், உள்ளுணர்வு இவற்றின் இருப்பிடமாயுள்ளது. இடப்பக்க மூளை பொது அறிவு (reason), தர்க்கம், விவாதம், தத்துவம், அறிவியல் இவற்றின் இருப்பிடமாயுள்ளது.

சூரிய, சந்திர சக்திகளுக்கிடையே ஒரு சமநிலையை நீங்கள் அடையாவிடில், உங்களால் மனித சாத்தியத்திற்குமப்பால் செல்ல முடியாது. உங்களுடைய இடதுபக்க மூளை வலதுபக்க மூளையை எதிர்கொண்டு இணையாவிடில் நீங்கள் சஹஸ்ராரத்தைச் சென்றடைய முடியாது. சஹஸ்ராரத்தையடைவதற்கு நீங்கள் ஒன்றாக (one) வேண்டும். காரணம் சஹஸ்ராரம் உங்களுடைய இருப்புணர்வில் கடைசி எழுத்தாக (omega) இருப்பதுதான். நீங்கள் ஓர் ஆணாக அங்கே சென்றடைய முடியாது. நீங்கள் ஒரு பெண்ணாகவும் அங்கே சென்றடைய முடியாது. நீங்கள் ஒற்றையாய், முழுமையாய், சுத்த பிரக்ஞை (Pure consciousness)யாகத்தான் அங்கே சென்றடையும்படி இருக்கும்.

ஆணின் பாலுணர்வு சூரியனுக்குத் தகவாயும் (sun-oriented), பெண்ணின் பாலுணர்வு சந்திரனுக்குத் தகவாயும் அமைந்துள்ளது. அதனால்தான் பெண்களுக்கு இருபத்து எட்டு நாட்களில் மாதவிலக்கு ஏற்படுகிறது. காரணம் சந்திரன் ஓர் இருபத்து எட்டு நாள் மாதத்தைக் கொண்டிருக்கிறது. அவை சந்திரனின் பாதிப்பிற்குள்ளாகிறவை.

எழும்போது நாசியின் எந்தப்பக்கம் செயல்பாட்டில் இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்வது யோக ஒழுக்கத்தில் ஒரு பகுதியாகும். இடது பக்கம் செயல்பாட்டில் இருக்கிறதா ரொம்ப சரி. அதுவே படுக்கையில் இருந்து எழுவதற்குச் சரியான நேரம். அது செயல்படவில்லை என்றால் மறுபக்கம் திரும்பி, உங்களுடைய வலது நாசியை அடைத்துக்கொண்டு இடது பக்கத்தால் சுவாசியுங்கள். மெள்ள மெள்ள இடது நாசி பொறுப்பேற்றுக் கொண்டு விடும். பிறகு எழுந்து கொள்ளலாம்.

எப்போதுமே இடது நாசிச் செயல்பாட்டுடன் எழுந்திருங்கள். உங்களுடைய ஒட்டுமொத்த நாளின் செயற்பாடடிலும் முழுமையான வேறுபாட்டைக் காண்பீர்கள். கோபம், எரிச்சல் இவை குறைந்து ரொம்ப நிதானமுடன் அமைதியாய் இருப்பீர்கள். உங்களுடைய சிந்தனை ஆழ்ந்ததாயிருக்கும், நீங்கள் சண்டையிட விரும்பினால் வலது நாசி (வழிச்சுவாசம்) தகுதியாயிருக்கும். நீங்கள் காதல் விளையாட்டில் ஈடுபட விரும்பினால் இடது நாசியே அதற்குச் சாதகமாயிருக்கும்.

இந்தச் சுவாசிப்பு தொடர்ந்து மாறிக்கொண்டேயிருப்பது. நீங்கள் அதைக் கவனியாமல் இருந்திருக்கலாம். ஆனாலும், கவனியுங்கள். நவீன மருத்துவம் அதைப் புரிந்து கொள்ளும் நிலைக்கு வந்திருக்கிறது. காரணம், அது சிகிச்சையளிப்பதில் வெகு சிறப்பாகப் பயன்படுகிறது. சந்திரனைத் துணையாய் கொண்ட நோய்கள் இருக்கின்றன. சூரியனைத் துணையாகக் கொண்ட நோய்களும் இருக்கின்றன. நீங்கள் மிகச் சரியாகத் தெரிந்து கொண்டால் மூச்சுக்காற்றை கொண்டு ஒருவருக்குச் சிகிச்சையளிக்க முடியும். உங்கள் சுவாசம் தொடர்ந்து மாறிக்கொண்டேயிருக்கிறது. நாற்பது நிமிடங்களுக்கு ஒருபக்க நாசி செயல்படுகிறது. அடுத்த நாற்பது நிமிடங்களுக்கு மற்றொரு நாசி செயல்படுகிறது. உங்களுக்குள் தொடர்ந்து சூரியனும் சந்திரனும் மாறிக்கொண்டே இருக்கும். நீங்கள் சூரியனுக்கும் சந்திரனுக்கும் இடையே ஊசலைப்போல் ஆடிக் கொண்டிருப்பீர்கள்.

அதனால்தான் உங்கள் மனநிலைகளை நீங்கள் அடிக்கடி மாற்றிக் கொண்டிருப்பது. திடீரென எந்தக் காரணமும் இல்லாமலே உங்களுக்கு எரிச்சல் ஏற்பட்டு விடுகிறது. எல்லாம் இருக்கிறபடிதான் இருக்கிறதே யன்றி எதுவும் மாறிவிடவில்லை. நீங்கள் அதே அறையில் அமர்ந்திருக்கிறீர்கள், எதுவும் நடந்துவிடவில்லை – ஆனாலும் சற்று எதிர்பாராதவிதமாய் சீற்றத்துக்குள்ளாகி விடுகிறீர்கள். உங்கள் கையை நாசிக்குச் சமீபமாய் கொண்டு வந்து உணருங்கள். உங்களுடைய

சுவாசம் இடது பக்கத்தில் இருந்து வலது பக்கமாய் மாறியிருக்கும். ஒரு நொடிக்கு முன் வரை நீங்கள் நன்றாக உணர்ந்தீர்கள், ஒரு நொடிக்குப் பிறகு நீங்கள் ரொம்ப மோசமாய் உணர்கிறீர்கள். சண்டையிடவோ வேறு எதைச் செய்யவோ தயாராகி விடுகிறீர்கள்.

உங்கள் உடம்பு முழுதும் பிரிக்கப்பட்டிருப்பதை நினைவில் கொள்ளுங்கள். உங்களுடைய மூளையும் இரண்டு மூளைகளாய் பிரிக்கப்பட்டுள்ளது. உங்களுக்கிருப்பது ஒரு மூளையல்ல - இரண்டு அரையுருண்டை வடிவங்கள். இடதுபக்க மூளை சூரிய மூளையாகவும், வலதுபக்க மூளை சந்திர மூளையாகவும் இருக்கிறது. உங்களுக்குக் குழப்பம் வரலாம் - காரணம் இடது பக்கமுள்ள எல்லாமும் சந்திரனுக் குரியதாய் இருக்கும்போது, ஏன் வலதுபக்க மூளை சந்திரனாயிருப்பது என்று. உங்களுடைய வலப்பக்க மூளை உடம்பின் இடப்பக்கத்துடன் சேர்க்கப்பட்டிருக்கிறது. உங்கள் இடது கை வலப்பக்க மூளையுடனும், வலது கை இடப்பக்க மூளையுடனும் இணைக்கப்பட்டிருக்கிறது. அதனால்தான் சிலுவைக்குறி போன்று குறுக்காக.

வலப்பக்க மூளை கற்பனை, கவிதை, காதல், உள்ளுணர்வு இவற்றின் இருப்பிடமாயுள்ளது. இடப்பக்க மூளை பொது அறிவு (reason), தர்க்கம், விவாதம், தத்துவம், அறிவியல் இவற்றின் இருப்பிடமாயுள்ளது.

சூரிய, சந்திர சக்திகளுக்கிடையே ஒரு சமநிலையை நீங்கள் அடையாவிடில், உங்களால் மனித சாத்தியத்திற்குமப்பால் செல்ல முடியாது. உங்களுடைய இடதுபக்க மூளை வலதுபக்க மூளையை எதிர்கொண்டு இணையாவிடில் நீங்கள் சஹஸ்ராரத்தைச் சென்றடைய முடியாது. சஹஸ்ராரத்தையடைவதற்கு நீங்கள் ஒன்றாக (one) வேண்டும். காரணம் சஹஸ்ராரம் உங்களுடைய இருப்புணர்வில் கடைசி எழுத்தாக (omega) இருப்பதுதான். நீங்கள் ஓர் ஆணாக அங்கே சென்றடைய முடியாது. நீங்கள் ஒரு பெண்ணாகவும் அங்கே சென்றடைய முடியாது. நீங்கள் ஒற்றையாய், முழுமையாய், சுத்த பிரக்ஞை (Pure consciousness)யாகத்தான் அங்கே சென்றடையும்படி இருக்கும்.

ஆணின் பாலுணர்வு சூரியனுக்குத் தகவாயும் (sun-oriented), பெண்ணின் பாலுணர்வு சந்திரனுக்குத் தகவாயும் அமைந்துள்ளது. அதனால்தான் பெண்களுக்கு இருபத்து எட்டு நாட்களில் மாதவிலக்கு ஏற்படுகிறது. காரணம் சந்திரன் ஓர் இருபத்து எட்டு நாள் மாதத்தைக் கொண்டிருக்கிறது. அவை சந்திரனின் பாதிப்பிற்குள்ளாகிறவை.

சந்திரன் இருபத்து எட்டு நாள் வட்டத்தின் வெவ்வேறு நிலைகளைக் கொண்டவை.

பவுர்ணமி இரவில் கொஞ்சம் மனக்கிளர்ச்சியையும் கொஞ்சம் வன்முறையையும் பெண்களில் பலரும் உணர்கிறார்கள். பவுணர்மி யன்று உங்கள் மனைவி அல்லது சிநேகிதி விஷயத்தில் எச்சரிக்கை யாயிருங்கள். சந்திர சக்தியால் பாதிக்கப்பட்டு கட்டுக்கடங்காமல் ஆர்ப்பரிக்கும் கடலைப் போன்று அவளும் கட்டுக்கடங்காத நிலையை அடையலாம்.

நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? ஆண் கண்களைத் திறந்தபடி காதல் விளையாட்டுகளில் ஈடுபட விரும்புவான். அத்துடன் அறை வெளிச்சமாக இருக்க வேண்டும் அவனுக்கு. வேறு இடர்ப்பாடுகள் எதுவும் இல்லாவிடில் அவன் பகலில் உறவு கொள்வதை விரும்புவான். அமெரிக்காவில் அப்படித்தான். மக்கள் இரவைவிட பகலிலேயே அதிகம் உறவு கொள்கிறார்கள். பெண்களுக்கோ இருட்டில் உறவு கொள்ளப் பிடிக்கும், அப்போதும் அவர்கள் கண்களை மூடிக்கொண்டு விடுவார்கள்.

சந்திரனுக்கு இருட்டு பிடித்திருக்கிறது, இருட்டில் பிரகாசிக்கிறது. அதனால்தான் பெண்களுக்கு நிர்வாண இலக்கியங்கள் பிடிப்பதில்லை. தற்போது தன்னுரிமை இயக்கத்தின் காரணமாய் 'ப்ளேபாய்' வகை இதழ்களுக்கு (magazines)ப் போட்டியாக 'ப்ளேகேர்ள்' போன்றவை வந்திருக்கின்றன. ஆனால் பெண்களுக்கு அடிப்படையில் நிர்வாண இலக்கியங்களிலெல்லாம் ஆர்வம் இல்லை. உண்மையில் ஆண்கள் எதற்காகப் பெண்களின் நிர்வாணப் படங்களைப் பார்க்க விரும்புகிறார்கள் என்பதே அவர்களுக்குப் புரிவதில்லை. அந்தச் சங்கதியை அறிந்துகொள்வதில் அவர்களுக்கு ஏதேனும் இடர்ப்பாடு இருக்க வேண்டும்.

ஆண் சந்திரனுக்குத் தகவாயும், வெளிச்சத்துடன் ஒருமுகப் படுகிறவனாயும் இருக்கிறான். கண்கள் சூரியனின் அங்கம், அதனால்தான் கண்களால் பார்க்க முடிகிறது. அவை சூரிய சக்தியுடன் எதிர்ச்செயல் புரிகின்றன. அதனால்தான் ஆண் கண்களுடன் மிகவும் ஒருமுகப்பட்டவனாயிருப்பது. அதனால் ஆண் பாலுணர்வூட்டுகிற வற்றைக் கண்டு பாலின்பம் அடைகிறவனாயும் (voyeur), பெண் உடலுறுப்புகளைக் காட்டி பாலின்பம் அடைகிறவளாயும் (exhibitionist) இருப்பது. பெண்கள் ஏன் தங்களை இந்த அளவு அலங்கரித்துக் கொள்கிறார்கள் என்பதை ஆணால் புரிந்துகொள்ள முடியவில்லை.

நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஒரு கணவனும் மனைவியும் தேனிலவு கொண்டாட மலைப்பிரதேசத்துக்குச் சென்றிருந்தனர். அந்த இளைஞன் மனைவியின் வருகைக்காக, படுக்கையில் சாய்ந்தபடி காத்திருந்தான். அவள் தனது உடலெங்கும் பவுடர் பூசி, தலைமுடியை அலங்கரித்துக் கொண்டு, நகப்பூச்சி செய்து கொண்டு, வாசனைத் திரவியத்தை சில துளிகள் தெளித்துக் கொண்டு வந்தாள். அந்த இளைஞன் படுக்கையில் இருந்து எகிறிக் குதித்தான். மனைவி கேட்டாள், 'என்ன விஷயம், எங்கே போறீங்க?' என்று கேட்டாள். அவன் தன்னுடைய கைப்பெட்டியிடம் ஓடினான். 'இது சம்பிரதாய சமாசாரம் என்றால், குறைந்தபட்சம் என்னுடைய உடைகளையாவது நான் அணிந்துகொள்ள வேண்டுமல்லவா' என்றான்.

பெண்களுக்குத் தங்களுடைய அழகை வெளிக்காட்டிக் கொள்வதில் விருப்பம். தாங்கள் பார்க்கப்படுவதை அவர்கள் விரும்புவார்கள். அவள் வெளிக்காட்டுவதை விரும்புகிறாள், அவன் பார்த்து ரசிப்பதை விரும்புகிறான். ரொம்ப சரி, அவ்விதமாக அவர்கள் பொருந்திக் கொள்கிறார்கள். பெண்கள் தங்களுடைய அழகை வெளிக்காட்ட விரும்பாவிடில், அப்போது அவர்களால் தொல்லைதான். அத்துடன், ஆண் பாலுணர்வூட்டுகிறவற்றைக் கண்டு பாலின்பம் அடைகிறவனாயில்லாவிடில், பெண் யாருக்காகத்தான் அத்தனை அலங்காரம் செய்து கொள்கிறாள் - யாரும் அவர்களைத் திரும்பிக்கூட பார்க்க மாட்டார்கள். இயற்கையில் ஒவ்வொன்றும் மிகச்சரியான முறையில் பொருந்திக் கொண்டு விடுகிறது. அது சமகாலத்திய நிகழ்வு கொண்டது.

ஆனால் சஹஸ்ராரத்தை அடைவதற்கு நீங்கள் இருமைத் தன்மையுடன் கூடிய செயல்பாட்டை விடவேண்டியிருக்கும். ஓர் ஆணாகவோ அல்லது பெண்ணாகவோ இருந்து கடவுளை நீங்கள் அடைய முடியாது. ஓர் எளிமையான, தூய இருப்புணர்வுடன் தான் நீங்கள் கடவுளை அடையும்படி இருக்கும்.

'உச்சந் தலைக்குக் கீழேயுள்ள ஒளியில் சிந்தனையைச் செயற்படுத்தும்போது சித்தர்களுடன் தொடர்பு கொள்ளும் திறன் கிடைக்கும்.' சக்தியை மேலேற்றுவதற்குச் சிந்தித்திருப்பதே செய்முறை. முதலில் நீங்கள் ஆண் என்றால் உங்களுடைய சூரியனை, சூரிய சக்தி மையத்தைப் பற்றி முழுமையாய் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். அதுவே உங்கள் பாலுணர்வு மையமும் கூட மூலாதாரத்தில் உங்களுடைய உணர்வை வர்ஷித்துக் கொண்டு,

மூலாதாரத்திலேயே இருக்கிறீர்கள். மூலாதாரம் உணர்வால் வர்ஷிக்கப்படுகிறபோது ஒரு சக்தியானது எழுந்து ஹரா மையத்தை நோக்கி சந்திரனுக்குள் செல்வதை நீங்கள் கவனிக்கவும், புரிந்து கொள்ளவும் வேண்டும்.

சக்தியானது சந்திர மையத்துள் நுழைகிற போது ஒரு பரமசுகத்தை உணர்வீர்கள். உங்களுடைய பால்சார்ந்த உச்சகட்ட இன்பங்கள் (orgasms) எதுவும், அதனுடன் ஒப்பிடும்போது ஒன்றுமே இல்லை எனலாம். அப்போது இயல்பான ஆணும், இயல்பான பெண்ணும் சந்தித்துக் கொள்கிறார்கள். வெளியில் ஒரு பெண்ணை நீங்கள் சந்திக்கிறபோது, நீங்கள் எவ்வளவுதான் நெருங்கியிருந்தாலும் தனித்தனியானவரே. அது ஒரு மேலோட்டமான சந்திப்பு - இரண்டு புறத்தோற்றங்கள் (surfaces) சந்தித்துக் கொள்கின்றன, அவ்வளவே. ஆனால், உங்களுடைய சூரிய சக்தி சந்திர சக்தியினுள் செல்கிறபோது அந்நிலையில் இரண்டு சக்தி மையங்கள் சந்தித்துக் கொள்கின்றன. யாருடைய சூரிய சக்தியும், சந்திர சக்தியும் சந்தித்துக் கொள் கின்றனவோ அந்த மனிதன் தொடர்ந்து உவகையிலும் பரம சுகத்திலும் இருக்கிறான். காரணம், இந்த உச்சகட்ட இன்பத்தை இழப்பதற்கு அவசியமில்லை. இது நிரந்தரமான உச்சநிலை.

நீங்கள் ஒரு பெண்ணாயிருந்தால் உங்களுடைய உணர்வை ஹரா மையத்துக்குக் கொண்டு செல்லுங்கள். அப்போது உங்கள் சக்தி சூரிய மையத்தை நோக்கிச் செல்வதை நீங்கள் கண்டு கொள்வீர்கள். ஒன்று செயல்படவில்லை, ஒன்று செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. செயல்படுவதும், செயல்படாததும் ஒன்றாய் இணைந்து கொள்கிறது. அதுவரை செயல்படாதிருந்தது உடனடியாகச் செயல்படத் தொடங்கி விடும்.

சக்தியானது சந்தித்துக் கொள்கிறபோது சூரியனும் சந்திரனும் ஒன்றாகி விடுகின்றன. தற்போது அந்தச் சக்தி மேலேறிச் செல்வதை நீங்கள் புரிந்து கொள்விர்கள். நீங்கள் கீழ்நோக்கி விழத் தொடங்கு வீர்கள்.

நான் கேட்டறிந்த ஒன்று:

பைத்தியக்காரன் ஒருவன் தன்னுடைய தூரத்து உறவினன் ஒருவன் வீட்டுக்கு விருந்தாளியாய் சென்றிருந்தான். வீட்டுக்காரன் நிலவறையில் அவனுக்குப் படுக்க வசதி செய்து கொடுத்தான். நள்ளிரவில் விருந்தாளி சிரிப்பது மேல் தளத்திலிருந்து கேட்டது. வீட்டுக்காரன் விழித்துக் கொண்டான்.

'அங்கே நீ என்ன செய்யறே? நீ நிலவறையில் படுத்திருக்கிறாய் என்றல்லவா நினைத்தேன்' என்று கேட்டான்.

'என்னுடைய படுக்கையில் இருந்து புரண்டு, விழுந்து விட்டேன்' என்றான் விருந்தாளி.

'ஆனால் எப்படி மேல் தளத்தில் விழுந்தது?' வீட்டுக்காரன் கேட்டான்.

'அட, அதை நெனச்சுதான் இப்போ நான் சிரிச்சிட்டிருக்கேன்' என்றான் விருந்தாளி.

ஆம், இப்படித்தான் ஆகிவிடுகிறது. சூரியனும் சந்திரனும் சந்தித்துக்கொண்ட நிலையில் நீங்கள் பைத்தியக்காரனைப் போலாகி விடுகிறீர்கள். நீங்கள் மேல்நோக்கி விழுகிறீர்கள். அந்நிலையில் நீங்கள் சிரிக்கும்படியாகி விடும். காரணம், உண்மையிலேயே அது நகைக்கத்தக்க ஒன்றாயிருப்பதுதான். மேல்நோக்கி விழுவது? யாரும் கேள்விப்படாத ஒன்று.

உங்களுக்குத் தெரிந்திருக்கும், நியூட்டன் தோட்டத்தில் உட்கார்ந்திருந்த போது ஆப்பிள் விழுந்த கதை. இந்த ஆப்பிள் மனித குலத்துடன் ரொம்பவே நெருங்கிய ஒன்றாகத் தோன்றுகிறது. பாம்பின் பொறியில் ஆதாம் சிக்கிக்கொண்ட போதும் அதே ஆபபிள்தான் அங்கே இருந்திருக்கிறது. இந்தப் பரிதாபத்துக்குரிய நியூட்டன் அமர்ந்திருந்த போதும் ஓர் ஆப்பிள் விழுந்து, அவர் புவியீர்ப்பு விதியைக் கண்டபிடிக்கக் காரணமாயிற்று. ஆனால், சூரியனும் சந்திரனும் சந்தித்துக்கொள்கிற போது, நீங்கள் முற்றிலும் வேறான தொரு நடைமுறைக்குள் சென்று, மேல்நோக்கி விழத் தொடங்கு கிறீர்கள்.

நீங்கள் நியூட்டனுக்கு எதிர்ப்பாகி விடுகிறீர்கள். புவியீர்ப்பு (gravitation) பொருளற்றதாகி விடுகிறது. உண்மையில் ஒட்டுமொத்த படிப்பிற்சியும் இதுதான் - நீங்கள் ஒரு பொருளைத் தூக்கியெறிந்தால் அது கீழ்நோக்கி விழுகிறது - எல்லாமும் கீழ்நோக்கி விழுகின்றன. அப்போது சிரிப்பு அறிவுக்கு ஏற்புடையதாகிறது.

இது ஹோடெய் என்கிற ஜென் துறவி பற்றியது. தாம் ஞானம் பெற்றதும் அவரால் சிரிப்பை அடக்க முடியவில்லை. அவர் சாகிறவரை தொடர்ந்து சிரித்துக் கொண்டிருந்தார். அவர் சிரித்தபடியே ஒரு கிராமத்தில் இருந்து மற்றொரு கிராமத்துக்குச் செல்வார். அவரைப்பற்றி இப்படிச் சொல்வார்கள், அவர் தூங்கும் போதும்

சிரிப்பதை நீங்கள் கேட்க முடியும் என்று. 'தாங்கள் ஏன் சிரித்தபடி இருக்கிறீர்கள்?' என்று மக்கள் அவரைக் கேட்பார்கள். அவர் கூறுவார். 'நான் எப்படிச் சொல்ல முடியும்? ஏதோவொன்று நடக்கிறது. அது எள்ளி நகையாடும்படி இருக்கிறது. எது நடக்கக் கூடாதோ, எதை நடக்கக் கூடாதென்று நாம் நினைக்கிறோமோ அது நடந்து விடுகிறது' என்று.

ஆம். அந்தப் பைத்தியக்காரன் சரியானதையே செய்திருக்கிறான். ஒருநாள் நீங்கள் படுக்கையில் இருந்து புரண்டு விழுந்ததும், மேல் தளத்தில் நீங்கள் இருப்பதை பார்க்கிறீர்கள், சிரிப்பு வரத்தானே செய்யும். அந்தப் பைத்தியக்காரன் சாதாரண பைத்தியக்காரனாக இருக்க முடியாது. இது ஒரு சூஃபி கதை. அந்தப் பைத்தியக்காரன் ஒரு குருவாக இருக்க வேண்டும்.

இந்தச் சூத்திரம் சொல்கிறது 'மூர்த்த ஜ்யோதிஷ் சித்த தர்ஸனம்' என்று. உங்களுடைய உணர்வும் சஹஸ்ராரமும் சந்தித்துக் கொள்ளும் கணத்தில் அப்பாற்பட்ட உலகம் உங்களுக்கு அடையக் கூடியதாகி விடுகிறது. சித்தர்களின் உலகம்.'

யோகாவில் மூலாதாரம், பால் மையம் ஒரு சிவந்த தாமரையின் நான்கு இதழ்களை குறியீடாக்கி இருக்கிறார்கள். நான்கு இதழ்களும் நான்கு திக்குகளை உருப்படுத்தும். பூவின் சிவப்பு வெம்மையை உருப்படுத்தும், காரணம் அது ஒரு சூரிய மையம். சஹஸ்ராரம் அத்தனை வண்ணங்களுடனும், ஆயிரம் இதழ்த் தாமரையாய் உருப்படுத்தப்பட்டிருக்கிறது. காரணம் அது முழுமையை உள்ளடக்கி யிருக்கிறது. பால் மையம் ஒரே சிவப்பு. சஹஸ்ராரம் வானவில் - அத்தனை வண்ணங்களையும் முழுமையையும் அது உள்ளடக்கியிருக்கிறது.

சாதாரணமாக ஆயிரம் இதழ் தாமரை என்கிற சஹஸ்ராரம் உங்களுடைய தலையில் கீழ்நோக்கித் தொங்கியிருக்கும். சக்தியானது அதன் வழியே செல்லும்போது அதை மேல் நோக்கச் செய்துவிடும். அந்தத் தாமரை சக்தியில்லாத நிலையில் கீழ்நோக்கியிருக்கும். தன்னுடைய பளுவைத் தாங்க முடியாமல் அது கீழ்நோக்கித் தொங்கும் - பிறகு சக்தியின் பாய்ச்சலில் அது உயிரோட்டம் பெறும். அது மேல்நோக்கி நகர்ந்து, அப்பாற்பட்ட ஒன்றை நோக்கி வழி திறக்கிறது.

இந்தத் தாமரை மேல்நோக்கி நகர்ந்து இதழ் விரிப்பதை யோக நூல்கள் இப்படிக் கூறும்: 'ஒரு கோடி சூரியர்களையும், ஒரு கோடி சந்திரர்களையும் போன்று அது பிரகாசிக்கிறது' என்று. ஒரு சந்திரனும் ஒரு சூரியனும் உங்கள் இருப்புணர்வில் சந்தித்துக் கொள்கின்றன.

அதுவே பத்து கோடி சூரிய சந்திரர்களின் சந்திப்பிலும் சாத்திய மாகிறது. உச்ச இன்பத்துக்கான சாதனத்தை நீங்கள் கண்டடைந்திருக் கிறீர்கள். அங்கே ஒரு கோடி சூரியன்களும் ஒரு கோடி சந்திரன்களும் சந்தித்துக் கொள்கின்றன - ஒரு கோடி பெண்கள், ஒரு கோடி ஆண்கள். அந்தச் சந்திப்பின் பரவசத்தை நீங்கள் சிந்தித்துக் கொள்ளுங்கள்.

சிவன் தன்னுடைய தேவியுடன் நடத்திய காதல் விளையாட்டில் அதே பரவசத்தைக் கண்டு கொண்டிருப்பார். அவர் சஹஸ்ராரத்தில் இருந்திருக்க வேண்டும். அவருடைய காதல் விளையாட்டு பால்சார்ந்ததாய் இருந்திருக்காது - அது மூலாதாரத்தில் இருந்து வந்திருக்காது. அது அவருடைய இருப்புணர்வின் ஒமேகா முனையில் இருந்து வந்திருக்க வேண்டும். அதனால்தான் தங்களைச் சுற்றி யார் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள், யார் நின்று கொண்டிருக்கிறார்கள் என்பதே அவருக்கு மறந்து போய்விட்டது. அவர் காலத்தில் இல்லை, அவர் இட வகையிலும் இருந்திருக்கவில்லை. அவர் காலத்துக்கப் பாற்பட்டவர், இடத்துக்கப்பாற்பட்டவர். இதுவே யோகா, தந்த்ரா மற்றும் ஆன்மா சார்ந்த அத்தனை முயற்சிகளின் குறிக்கோள் ஆகும்.

ஆண் மற்றும் பெண் சக்தியின் சந்திப்பு முடிவான சிவசக்தி சேர்க்கையைச் சாத்தியமாக்கிற்று. இந்த வகையில் இந்துக் கடவுளர்கள் வெகு நேர்த்தியாய் மனிதர்களுக்கே உரிய அன்புள்ளத்துடன் இருந்திருக்கிறார்கள். ம்... ம்... ஒரு துணையில்லாமல், பெண்ணில்லாமல் இருக்கிற கிறிஸ்தவக் கடவுளைப் பற்றிச் சிந்தித்துப் பாருங்கள். பார்ப்பதற்கு கொஞ்சம் விரைப்பாக, தனிமையில் ஒதுக்கி வைக்கப்பட்ட மாதிரி, கொஞ்சம் சூன்யமாய், கொஞ்சம் கூடுதல் ஆண் தன்மையுடன், சூரியத் தொடர்புடையதாய் இருக்கும். கடவுள் பற்றிய யூதர்களின் கருத்தமைவும், கிறிஸ்தவர்களின் கருத்தமைவும் ரொம்பப் பயங்கரமாய் தெரிவதில் வியப்பில்லை.

யூதர்கள் சொல்கிறார்கள், 'கடவுளுக்குப் பயந்து நட, அவர் உன்னுடைய மாமா அல்ல'. ஆனால் இந்துக்கள் சொல்கிறார்கள், 'கவலைப்படாதே, அவர் உன்னுடைய தாய்' என்று. எப்போதும் தீயை உமிழ்ந்து கொண்டு, இடியின் பேரொலியோடு கொன்று தீர்க்கிற கொடிய அழிவு சக்தியாய் யூதர்கள் கடவுளைப் படைத்தார்கள். மிகச்சிறிய அளவில் மீறப்பட்ட இறையாணையும், அறியாமல் செய்த சிறிய பாவமும் அவரைக் கலக்கத்துக்குள்ளாக்கி விடும். கிட்டத்தட்ட நரம்பியக்கச் சீரழிவுக்குள்ளானவராய் (neurotic) தெரிவார்.

கிறிஸ்தவர்களின் *மும்மைக்கோட்பாடு எவ்வகையிலும் பெண்ணுக்கு இடமளிக்கவில்லை. கிறிஸ்தவர்களுக்கு சந்திர சக்தியிலும், பெண்ணிடத்திலும் அச்சம். எப்படியோ பிற்பாடு கன்னி மரியாவைச் சேர்த்து தங்களுடைய கோட்பாட்டை அபிவிருத்தி செய்து கொண்டார்கள். தங்களுடைய ஒட்டுமொத்த கருத்தியலுக்கு மாறாகவே அவர்கள் அதைச் செய்தார்கள் என்று சொல்ல வேண்டியிருக்கிறது.

சூரிய சந்திர சக்தியின் சந்திப்புக்கு அவர்கள் இடமளிக்கவில்லை.

புறவுலகில் ஆண், பெண் சந்திப்பு குறித்து நீங்கள் அச்சப்பட்டால், அகவுலகில் அதே சந்திப்புக்கு நீங்கள் எப்படி ஆயத்தமாவீர்கள்?

இந்துக்கடவுள்கள் ரொம்பவே மனித இனத்துக்குரியவர்களாய் மன இரக்கம் கொண்டவர்களாய் உலகியலுக்கேற்றவாறு காட்சியளிக்கிறார்கள். அவர்களிடமிருந்து அன்பு வழிந்தோடுகிறது தங்கு தடையில்லாமல்,

*'பிரதிபத் வஸர்வம்'*

தூய வாழ்வின் மூலம் அனைத்து அறிவும், உள்ளுணர்வுத் திறனும் பெறப்படுகிறது. பிரதிபா - ஒரு கடினமான சொல். அதை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்க முடியாது. உள்ளுணர்வு (intuition) என்கிற வார்த்தை ரொம்பவும் மோசமான பதிலியாகவே (substitute) இருக்க முடியும், அத்துடன் நான் அதை உங்களுக்கு விளக்க வேண்டும். அதை அப்படியே மொழி பெயர்க்க முடியாது. என்னால் விவரணை மட்டும் தரமுடியும்.

சூரியன் அறிவாக இருக்கிறது. சந்திரன் உள்ளுணர்வாக இருக்கிறது. அவையிரண்டையும் நீங்கள் கடந்தால் பிரதிபா அடையப்படுகிறது. சூரியன் அறிவாக, பகுப்பாய்வாக, தர்க்கமாக இருக்கிறது. சந்திரன் உள்ளுணர்வாக, நடக்கப்போவதை முன்கூட்டியே உணர்வதாக, மனதில் இருந்து திடீரென வெளிப்படும் ஓர் ஒளிக்கீற்றாக இருக்கிறது. அறிவு வகைப்பாட்டு முறை (method), செயல் முறை (process), **முக்கூற்று முடிவு இவற்றின் வழியே செல்கிறது. உள்ளுணர்வு - எவ்வித செயல்முறையும், வகைப்பாடும், வாத

---

* *மும்மைக் கோட்பாடு: தந்தை, மகன், புனித ஆவி என்கிற மூன்றின் தொகுதியில் (trinity) நம்பிக்கை.*

** *முக்கூற்று முடிவு (syllogism) - முடிவை இரண்டு மெய்க்கோள்களில் இருந்து அடையும் வாத மறை.*

முறையும் இல்லாமல் உடனடியாய் ஒரு தீர்மானத்துக்கு வந்து விடுகிறது. நீங்கள் ஏன் அப்படியென்று உள்ளுணர்விடம் கேட்க முடியாது. உள்ளுணர்வில் 'ஆகையால்' என்பது இல்லை. மின்னலடிக்கிற மாதிரி சற்றும் எதிர்பாராத வகையில் ஒரு வெளிப்பாடு இருக்கும். நீங்கள் ஏதோ ஒன்றைக் கண்டு கொள்கிறீர்கள். அதன்பிறகு அந்த மின்னல் மறைந்து விடுகிறது. அது எப்படி நிகழ்ந்தது என்பதையோ, எதற்காக நிகழ்ந்தது என்பதையோ நீங்கள் அறிவதில்லை. ஆனால், அது நிகழ்ந்தது நீங்களும் ஏதோ ஒன்றைப் புரிந்து கொண்டீர்கள். பழங்காலச் சமூகங்கள் உள்ளுணர்வு சார்ந்தவை, பெண்களனைவரும் உள்ளுணர்வால் காண்கிறவர்கள், எல்லாக் குழந்தைகளும் உள்ளுணர்வால் காண்கிறார்கள். கவிஞர்களும் உள்ளுணர்வைப் பயன்படுத்துகிறவர்கள் தாம்.

பிரதிபா என்பது முற்றிலும் வேறானது. பதஞ்சலியின் யோக சூத்திரங்களின் ஆங்கில மொழிபெயர்ப்புகள் அனைத்திலும் அது 'உள்ளுணர்வு' என்றே மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. ஆனால், நான் அவ்விதமாய் மொழிபெயர்க்க விரும்பவில்லை. ஆற்றலானது, அறிவு உள்ளுணர்வு என்கிற இரட்டைத் தன்மைகளைக் கடந்து, அதற்குமப்பால் செல்வதையே 'பிரதிபா' என்கிற சொல் குறிக்கிறது.

அது இரண்டுக்கும் அப்பாற்பட்டது. உள்ளுணர்வு என்பது அறிவைக் கடந்ததாகும். பிரதிபா அவ்விரண்டையும் கடந்தது. தற்போது அதில் தர்க்கம் இல்லை, கவனித்துக் கேட்டல் இல்லை - ஒவ்வொன்றும் காலத்தால் மாற்றம் அடையாத வெளிப்பாட்டைக் கொண்டிருக்கிறது. பிரதிபாவில் ஒருவர் அனைத்தையும் படைக்கிறவராய், முழு வல்லமையும் உடையவராய், எவ்விடத்தும் ஒரே நேரத்தில் பரவியிருப்பவராயும் இருக்கிறார். எல்லாமும் - கடந்த காலம், நிகழ் காலம் எதிர் காலம் என்கிற எல்லாமும் ஏக காலத்தில் வெளிப்படுகின்றன. பிரதிபா என்பதற்கு அதுதான் பொருள் - பிரதிபாவின் வழியே சகலமும் (பிரதிபாத் வஸர்வம்).

உங்களுடைய ஆற்றல் சஹஸ்ரதளத்தின் வழியே செல்கிற போது ஒரு கோடி சூரியன்களும் ஒரு கோடி சந்திரன்களும் உங்களுக்குள் சந்தித்துக் கொள்கின்றன. அந்நிலையில் கடல்போன்ற உச்சகட்ட இன்பானுபவமாகவே நீங்கள் மாறி விடுகிறீர்கள். அந்த அனுபவம் மேலும் மேலும் தொடர்ந்து அது சாசுவதமாகிறது. அதற்கொரு முடிவேயில்லை. அங்கேயிருக்கிறது பிரதிபை. எல்லாவற்றையும் நீங்கள் ஒருமுனையில் இருந்து மறுமுனை

வரைக்கும் அறிந்து கொள்கிறீர்கள், புரிந்து கொள்கிறீர்கள். அந்நிலையில், காலமும் இடமும் அவற்றின் எல்லைகளும் மறைகின்றன.

ஆக, ஓர் உளவியல் சூரியத் தொடர்பிலும், மற்றொன்று சந்திரத் தொடர்பிலும் இருக்கின்றன. ஆனால் உண்மையான உளவியல், இருப்புணர்வின் உண்மையான உளவியல் பிரதிபாவில் ஒருமுகப் பட்டதாயிருக்கிறது. அதனை ஆணாகவோ, பெண்ணாகவோ பிரிப்பதற்கில்லை. அது உயர்ந்த, மிகச்சிறந்த கூட்டிணைவாகவும், எல்லை கடந்து செல்வதாகவும் இருக்கும்.

அறிவுத்திறன் ஒரு பார்வையற்றவனைப் போன்றது. அது இருட்டில் துழாவி வழி கண்டுபிடிப்பது. அதனால்தான் விவாதம் பெருமளவில் தேவைப்படுவது. உள்ளுணர்வு குருடல்ல. ஆனால், அது ஒரு முடவனைப் போன்றது. அது நிலைமாற முடியாமல் இருப்பது. பிரதிபா ஆரோக்கியமான ஒருவரைப் போன்றது. எல்லா உறுப்புகளும் ஆரோக்கியத்துடன் இருக்கும்.

காடு தீப்பற்றிக் கொண்டது பற்றிய ஓர் இந்தியக் கதை. பார்வையற்ற ஒரு மனிதனும், முடமான ஒருவனும் அந்தக் காட்டில் இருந்தனர். பார்வையற்றவனால் பார்க்க முடியாதே தவிர, ஓட முடியும். ஆனால், சுற்றிலும் தீப்பற்றி எரியும் போது எந்தப்பக்கம் ஓடுகிறோம் என்பதை அறியாமலேயே ஓடுவது ஆபத்து. முடவனால் நடக்க முடியாது, ஆனால், பார்க்க முடியும். அவர்கள் மவுனமாய் (கூறாமல் உணர்த்துகிற) ஒரு புரிதலுக்கு வந்தார்கள். குருடன் தன்னுடைய முதுகில் முடவனைச் சுமந்துகொள்ள வேண்டும். முடவன் குருடனுக்கு வழிகாட்ட வேண்டும் என்கிற ஏற்பாடு. தங்களுடைய கூட்டிணைவின் மூலம் அவர்கள் காட்டில் இருந்து, காட்டுத்தீயில் இருந்து வெளியேற முடிந்தது.

அறிவு ஒரு பாதி, உள்ளுணர்வு மறுபாதி. உள்ளுணர்வால் ஓட முடியாது – அது வெளிச்சக்கீற்று, தொடர்ந்து வெளிப்பாட்டின் மூலமாய் இருப்பதற்கில்லை. அறிவு இருட்டில் கைகளால் தடவுவது, தொடர்ந்து இருட்டில் துழாவியபடி வழி கண்டுபிடிப்பது.

பிரதிபா ஒரு கூட்டிணைவு என்பதோடு, எல்லை கடந்து செல்வதும் ஆகும்.

நீங்கள் மிகவும் அறிவு சார்ந்தவராயிருந்தால் வாழ்க்கையின் வெகு நேர்த்தியான சில விஷயங்களை நீங்கள் தவற விட்டு விடுவீர்கள். உங்களால் கவிதையை அனுபவிக்க முடியாது, ஆட்டம்

பாட்டம் என்று கொண்டாட முடியாமல் உவகையற்றவராகி விடுவீர்கள். அவையெல்லாம் உங்களுடைய தகுதிக்குச் சற்றே குறைவாய், கொஞ்சம் முட்டாள்தனமாய் படலாம். நீங்கள் இறுக்கமுற்றவராய், உங்களைப் பின்னுக்கிழுத்துக் கொண்டவராய், உணர்ச்சி வகையில் அடக்கி வைத்தவராய் இருப்பீர்கள். உங்களுடைய சந்திர மையம் அவதிக்குள்ளாகும்.

உங்கள் உள்ளுணர்வைப் பயன்படுத்தி நீங்கள் மகிழ்ச்சியாக இருக்க முடியும். ஆனால் அதைக் கொண்டு மற்றவர்களுக்கு உங்களால் உதவ முடியாது. காரணம், போதிய தகவல் தொடர்பு இல்லை என்பதுதான். உங்கள் வரைக்கும் அழகான வாழ்க்கையை நீங்கள் வாழ முடியலாம். ஆனால் உங்களைச் சுற்றியிருக்கும் உலகத்தை அழகானதாக்க உங்களால் முடியாது. காரணம் அறிவின் (புரிந்து கொள்ளும் திறன்) மூலமே அது சாத்தியம்.

அறிவியலும், கவிதையும் சந்தித்துக் கொள்ளும்போது, அந்நிலையில் குறைவற்ற ஒரு முழுமையான உலகம் சாத்தியமாகும். இல்லையே அறிவு உள்ளுணர்வை நிந்தித்துக் கொண்டே இருக்கும். உள்ளுணர்வும் அறிவைக் கண்டனம் செய்தபடி இருக்கும்.

நான் கேட்டறிந்தது.

ஒரு பெண் தனக்குப் புதிதாய் பழக்கமான பெண்ணொருத்தி யிடம், 'உங்களுக்குத் திருமணமாகி எவ்வளவு காலம் ஆச்சு?' என்று கேட்டாள்.

'விசித்திரமான இருபது ஆண்டுகள்' என்று பதிலளித்தாள் மற்றொருத்தி.

'நீங்கள் ஏன் 'விசித்திரமான' என்கிறீர்கள்?'

'என்னுடைய கணவரைப் பார்க்கும் வரை கொஞ்சம் பொறுத் திருங்கள்' என்றாள் அந்தப் புதியவள்.

உள்ளுணர்வு எண்ணிக் கொள்கிறது அறிவு விசித்திரமானது என்று. அறிவு எண்ணிக் கொள்கிறது உள்ளுணர்வு விசித்திரமானது என்று. தனித்தனியே இருக்கும் வரை அவை விசித்திரமானவைதாம். இரண்டும் சேர்ந்து விட்டால் மிகப்பெரிய இணக்கம் உண்டாகி விடும், மிகச்சிறந்த இசைக்குழு உருவாகி விடும்.

மோசஸ் பற்றி ஓர் அருமையான கவிதையை பெர்ஸிய மறைஞானியான ரூமி எழுதியிருக்கிறார். இறை தூதரான மோசஸ்

ஒருநாள் மேய்ப்பன் ஒருவனைப் பார்க்கிறார். அவன், 'பெருமானே, தாங்கள் எங்கிருக்கிறீர்கள்? நான் தங்களுக்குப் பணிவிடை செய்ய ஆவல் கொண்டிருக்கிறேன். தங்களுடைய தலைமுடியைச் சீவி, தலையில் உள்ள பேன்களைக் கொன்று, தங்களுடைய உடைகளைத் துவைத்துப் போட விரும்புகிறேன். தங்களுக்குப் பால் கொண்டு வரவும், தங்களுடைய சிறிய கைகளை முத்தமிட்டு, தங்களுடைய பாதங்களைத் தேய்த்து, தாங்கள் ஓய்வெடுப்பதற்கு முன் உங்களுடைய அறையைச் சுத்தம் செய்ய விரும்புகிறேன்' என்று உரத்து கூவிக் கொண்டிருந்தான்.

இந்த வார்த்தைகளைக் கேட்ட மோசஸ் கோபமுற்று, அந்த ஆட்டிடையன் மீது கடுமையான வார்த்தைகளைப் பிரயோகிக்கிறார். 'முட்டாளே, இத்தகைய அபத்தமான வார்த்தைகளை நீ யாரிடம் பேசிக் கொண்டிருக்கிறாய், எத்தகைய ஒரு நிந்தனையை நீ செய்து கொண்டிருக்கிறாய்? மேலோனாகிய இறைவனிடம் நீ இப்படிப் பேசுவதைவிட ஊமையாக இருந்திருப்பதே நல்லது. உன்னுடைய வார்த்தைகள் குற்றமுடையவை. ஆட்டிடையனே, உன்னுடைய வாயில் பஞ்சை வைத்து அடைத்துக் கொள், இதற்குமேல் ஒரேயொரு புனிதமற்ற வார்த்தையை நீ பேசினாலும் இறைவன் உன்னைப் பொசுக்கிச் சாம்பலாக்கி விடுவார்' என்று.

அந்த ஆட்டிடையன் அளவற்ற துயரத்துடன் தன்னுடைய ஆடையை இரண்டாகக் கிழித்துப் போட்டான். நீண்ட பெருமூச்சு விட்டபடி காட்டுக்குள் விரைந்து சென்று விட்டான்.

அன்றிரவு மோசஸ், ஒரு தெய்விகக் காட்சியைக் கண்டார். மோசஸிடம் கடவுள் பேசினார். 'உன்னை உலகத்துக்கனுப்பியது ஒன்று சேர்ப்பதற்காகத்தானேயன்றி, பிரித்து வேறாக்குவதற்கல்ல.' ஆனால், நீ என்னுடைய ஊழியனை, பக்தனை என்னிடமிருந்து பிரித்து விட்டாய். அந்த இடையன் எனக்குப் பிரியமானவன். மோசஸ், எவ்வகை வழிபாடும் எனக்குரியதே என்பதை நீ மறந்து விடாதே. முறைகள் பலவாயிருக்கலாம், மதங்கள் பலவாயிருக்கலாம். ஆயினும், எல்லாமும் எனக்குரியதே. ஒவ்வொருவரும் தனக்கென்று ஒரு பாதையை வைத்திருக்கிறார், அவருடைய சொந்த வழி, சொந்தச் சடங்கு முறை, சொந்த மொழி மரபு (idiom). நான் அந்த ஆர்வத்தை, உள்ளார்ந்த உணர்வைக் கவனிக்கிறேன்' என்று.

மோசஸ் அந்த இடையனைத் தேடிச்சென்று, அவனிடம் சொன்னார், 'நடந்ததற்காக நான் வருந்துகிறேன், என்னை மன்னித்து விடும்' என்று.

அறிவு எப்போதுமே தன்னுடைய மொழி மரபில்தான் சிந்திக்கிறது. உள்ளுணர்வு அதற்கு அறியக்கூடாததாய் இருக்கிறது. உள்ளுணர்வுக்கும் அறிவை நம்ப முடியவில்லை. அது மேலோட்ட ஆழமற்றதாய் தெரிகிறது.

உங்களுக்குள் ஒரு கூட்டிணைவை நீங்கள் அடைந்தாக வேண்டும். பதஞ்சலி, 'ப்ரதிபாத் வ ஸர்வம்' என்கிறபோது அதையே கருத்தில் கொள்கிறார். உங்களுக்குள் ப்ரதிபை எழுமளவிற்கு ஓர் ஆழ்ந்த கூட்டிணைவை நீங்கள் அடைய வேண்டும். அந்த ஒன்றில்தான் தர்க்கமும், பிரார்த்தனையும் சந்தித்துக் கொள்கின்றன. அங்கேதான் உழைப்பும், வழிபாடும் சந்தித்துக் கொள்கின்றன. அங்கே விஞ்ஞானம் கவிதைக்கு விரோதியாயிருப்பதில்லை. கவிதையும் விஞ்ஞானத்திடம் பகைமை கொள்வதில்லை.

அதனால்தான் நான் சொல்கிறேன் 'மனிதன் இன்னும் ஒழுங்கு செய்யப்பட வேண்டிய நிலையில், படிப்படியாய் தோற்றுவித்துக் கொள்ளும்படியாய் இருக்கிறான்' என்று. மனிதன் இன்னமும் உள்ளுறை (content) இல்லாத ஒரு வடிவமாகவே இருக்கிறான். உள்ளுறை அடையப்பட வேண்டியது. பரிணாம வளர்ச்சியில் உங்களை மிகப்பெரிய ஓர் ஆய்வுக்கூடமாக நீங்கள் ஆக்கிக்கொள்ள வேண்டும். மூலாதாரத்தில் இருந்து - பால் மையத்தில் இருந்து உங்களுடைய சக்தியை நீங்கள் மேல்நோக்கி, சஹஸ்ராரத்திற்குக் கொண்டு செல்ல வேண்டும்.

'ஹ்ருதயே சித்த ஸம்வித்'

இதயத்தின்பேரில் செய்யப்படுகிற சிந்தனை மனதின் இயல்பு பற்றிய விழிப்புணர்வைக் கொடுககும்.

அதுகூட போதுமான மொழிபெயர்ப்பாக இருக்காது. ஆனால், அது கடினந்தான். மொழி பெயர்ப்பாளர்கள் இடர்ப்பாட்டில் சிக்கிக் கொண்டு விடுகிறார்கள்.

'ஹ்ருதயே சித்த ஸம்வித்' முதலாவது, பதஞ்சலி 'ஹ்ருதய' என்ற சொல்லைப் பயன்படுத்தியபோது அவர் உடல்சார்ந்த இருதயத்தைக் கருத்தில் கொள்ளவில்லை. யோகாவின் சொற்பாங்கில் உடல்சார்ந்த இருதயத்துக்குப் பின்னாடி உண்மையான இதயம் ஒளிந்திருக்கிறது. அது உடலமைப்பில் ஒரு பகுதியல்ல. உடல்சார்ந்த இருதயம் ஆன்மா சார்ந்த இதயத்துடன் தொடர்புடையதாயிருக்கிறது. அவ்வளவே. அவற்றுக்கிடையே இருப்பது சமகாலத்திய

நிகழ்வேயன்றி (synchronicity) காரண காரியத் தொடர்பு (causalrelation) அல்ல. அத்துடன் நீங்கள் உச்சிட்ட தளத்தை அடைந்தால்தான் அந்த இதயத்தை நீங்கள் அறிந்துகொள்ள முடியும். உங்களுடைய சக்தி சஹஸ்ராரத்தின் ஒமேகா முனைக்கு வந்து சேர்கிறபோதுதான், உண்மையான இதயத்தை, கடவுளின் இருப்பிடத்தை நீங்கள் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியும்.

'ஹ்ருதயே சித்த ஸம்பித்' - இதயத்தின் பேரில் செய்யப்படுகிற சிந்தனை மனதின் இயல்பு பற்றிய விழிப்புணர்வைக் கொடுக்கும். அதுகூட உண்மையாகாது. சித்த ஸம்வித் என்றால் உணர்வு நிலையின் இயல்பு என்றுதான் பொருள், அது மனதின் இயல்பல்ல. மனம் போய்விடுகிறது, விடப்படுகிறது. காரணம், மனம் என்பது சூரிய மனமோ சந்திர மனமோ அல்ல. நீங்கள் சூரியனையும், சந்திரனையும் கடந்தவுடன் மனம் விடப்பட்டு விடுகிறது. உண்மையில், 'சித்த ஸம்வித்' என்பது மனம் இல்லாது (no-mind) இருக்கும் நிலை ஆகும். நீங்கள் 'ஜென்' மார்க்கத்தில் உள்ளவர்களிடம் கேட்டால் மனமிறந்த நிலை பற்றிச் சொல்வார்கள். மனம் போய்விடுகிறது. காரணம், அது பகுப்புகளுடன் (divisions) இடம் பெற்றிருப்பது. பகுப்பு போனதும் மனமும் போய்விடுகிறது. அவை ஒன்றாயிருந்தன, ஒரு தோற்ற நிலையின் இரண்டு கூறுகளாயிருந்தன. மனம் பகுத்துப் பார்க்கிறது, பகுப்பின் மூலம் உளதாயிருக்கிறது. அவை ஒன்றையொன்று சார்ந்திருப்பவை. பகுப்பு நீங்கியதும் மனமும் நீங்கி விடுகிறது. மனம் போனால் பகுத்தலும் போய்விடுகிறது.

இந்த மனமற்றிருக்கும் நிலையை அடைவதற்கு இரண்டு வழிகள். ஒன்று, தாந்த்ரீக மார்க்கம்: நீங்கள் மனதை விடுகிறீர்கள், பகுப்பு மறைகிறது. மற்றொன்று யோக மார்க்கம்: நீங்கள் பகுத்தலை விடுகிறீர்கள், மனம் மறைந்து விடுகிறது. நீங்கள் இரண்டில் எதை வேண்டுமானாலும் செய்ய முடியும். முடிவான பலன் ஒன்றுதான். நீங்கள் ஒன்றாகிறீர்கள், ஓர் ஒத்திசைவு (unison) ஏற்படுகிறது.

ஹ்ருதய சித்த ஸம்வித: அந்நிலையில் நீங்கள் உணர்வின் இயல்பு என்னவென்பதை அறிகிறீர்கள். உணர்வு நிலை (consciousness) என்கிற சொல் ஆங்கிலத்தில் உணர்வற்றிருத்தல் (unconscious) என்பதற்கு எதிர்மாறான பொருள் கொண்ட மற்றொரு சொல்லாகவே சுட்டிக்காட்டப்படுகிறது. 'சித்த ஸம்வித்' என்பது 'உணர்வற்றிருத்தல்' என்பதற்கு எதிர்மாறான பொருள் கொண்ட ஒரு சொல் அல்ல. உணர்வு நிலை என்பது எல்லாவற்றையும்

உள்ளடக்கியதாயிருக்கிறது. உணர்வற்றிருபபது என்பது உணர்வின் உறக்க நிலையும் ஆகும். எனவே அதில் எதிர்மாறான பொருள் இல்லை. உணர்வோடிருப்பது, உணர்வற்றிருப்பது இவை உணர்வின் இயல்பு - ஒருவர் விழிப்புணர்வை, சிந்தனையை இதயத்துக்குக் கொண்டு வரும்போது இது வெளிப்படுகிறது.

யோகாவில் ஹ்ருதய சக்ரத்தை 'அனாகத சக்ரம்' என்கிறார்கள். ஜென்னில் புகழ்பெற்ற 'கோன்' (Koan) என்கிற சொல்லை நீங்கள் அறிந்திருக்க வேண்டும். ஒரு சீடன் குருவைச் சென்றடைகிறபோது, அந்த குரு அபத்தமான ஒன்றை தியானப் பொருளாக அவனிடம் வழங்குவார். 'மிகவும் பிரசித்தி பெற்ற ஓர் அபத்தம் (அறிவுக்கு ஏற்புடைமை அற்றது), 'போ, ஒரு கை ஓசையைத் தியானித்திரு' என்பதாகும். இது நகைக்கத்தக்க ஒரு விஷயந்தான். ஒரு கையைக் கொண்டு கரவொலி செய்ய முடியாது. கை தட்டுவதற்கு இரண்டு கைகள் தேவை. அப்போதுதான் அவை ஓசையெழுப்ப முடியும். அஹத் - முரண்படுதல், அனஹத் - முரண்பாடற்றிருத்தல். அனஹத் என்பது ஒரு கையால் தட்டி எழுப்பப்படும் ஓசை.

எல்லா ஓசைகளும் உங்களில் மறைகிறபோது, இடைவிடாமல் அங்கே இருந்து கொண்டிருக்கும் ஒலியை - எது இயற்கையின் உள்ளார்ந்ததோ, எது பிரபஞ்ச இருப்பின் இயல்பானதோ - அந்த அமைதியின் ஒலியை - ஒலியற்றதன் ஒலியை நீங்கள் கேட்பீர்கள். இதயம் - அனாகத சக்ரம் எனப்படுகிறது. அங்கே இடைவிடாமல் ஓர் ஓசை கேட்டபடி இருக்கிறது. அது முரண்பாடற்றது, நிலைபேறுடையது. இந்துக்கள் அந்த ஓசையை ஓங்காரம் - ஓம் என்கிறார்கள். இது கேட்கப்படுவதுதான். ஓம், ஓம், ஓம் ... என்பதைத் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருப்பவர்கள் அறிவற்ற ஒரு செயலையே செய்கிறார்கள் எனலாம். உங்களுடைய கூறியதுகூறலின் (repetition) மூலம் நீங்கள் உண்மையான ஓங்காரத்தை அடைவதில்லை, உண்மையான ஒலியை அடைவதில்லை.

எல்லாச் சிந்தனைகளையும் விட்டு, எவ்வித அசைவும் இல்லாமல் முற்றிலும் அமைதியாயிருங்கள். சற்றும் எதிர்பாராத விதமாய் அது காணப்படும். அது எப்போதுமே அங்கு இருந்து கொண்டிருப்பதுதான், ஆனால் அதைக் கேட்பதற்கு நீங்கள்தான் அங்கே இருந்திருக்கவில்லை. அது ஒரு நுட்பமான ஓசை. உங்கள் மனதில் இருந்து ஒட்டுமொத்த உலகையும் நீங்கள் கைவிடுகிறபோது, மெள்ள மெள்ள அதை நீங்கள் வரவேற்கும் பண்புடையவராகி

விடுவீர்கள். போகப் போக நீங்கள் அதைக் கேட்கத் தொடங்கி விடுவீர்கள்.

ஒரு கை ஓசையை நீங்கள் கேட்க முடிகிறபோது நீங்கள் கடவுளை அறிகிறீர்கள், சகலத்தையும் பற்றி அறிந்து கொள்கிறீர்கள்.

பதஞ்சலி படிப்படியாக உங்களை ஒமேகா முனைக்குக் கொண்டு செல்கிறார். இம்மூன்று சூத்திரங்களும் தனிச்சிறப்பு வாய்ந்தவை. மீண்டும் மீண்டும் அதைச் சிந்தியுங்கள், அவற்றின் பேரில் தியானியுங்கள். உங்கள் இருப்புணர்வில் அவற்றை உணரப் பாருங்கள். அவையே கடவுளின் வாசலைத் திறப்பதற்கான திறவுகோல்கள்.

*பிரியமுள்ள பகவானே! நீங்கள் பெருமளவு உயர் மதிப்புடைய வராயும், அதேசமயம் நிராயுதபாணியாகவும் இருக்கிறீர்கள். நீங்கள் எப்போதேனும் ஒரு சிக்கலில் அகப்பட்டுக் கொண்டதுண்டா?*

இக்கட்டுக்குள்ளாவதற்கு ஒருவர் முதலில் தர்க்கம் பண்ணுகிறவராயிருக்க வேண்டும். நான் தர்க்கம் சார்ந்தவனல்லன். நான் ரொம்பவும் முரண்பாடான பேர்வழி என்பதால் என்னைச் சிக்க வைப்பது சாத்தியமில்லை. இதனை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் அறிவைப் பற்றிக் கொண்டிருந்தால் உங்களை எந்த நேரத்திலும் பொறியில் அகப்படுத்த முடியும். காரணம் எதையாவது பற்றிக்கொள்வது உங்கள் இயல்பு. அது தவறானது. தர்க்கத்துக்கு ஒவ்வாதது என்று நிரூபிக்கப்பட்டால் நீங்கள் சிக்கலுக்குள்ளாகிறீர்கள். உங்களுடைய தவறான எண்ணத்தை (prejudice) தர்க்கரீதியாக உங்களால் நிரூபிக்க முடியாவிட்டால் நீங்கள் இக்கட்டு நிலைக்குத் தள்ளப்படுகிறீர்கள். நானே முற்றிலும் தர்க்கம் சாராதவன். என்னிடம் நிரூபிக்கும்படியாய் எந்தவொரு தப்பெண்ணமும் இல்லை. நான் எதையும் நிரூபிக்க வேண்டியதில்லை. என்னை எப்படி நீங்கள் இக்கட்டுக்கு உட்படுத்த முடியும்?

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு:

தன்னைக் கடவுள் என்று ஒருவன் வலியுறுத்திக் கொண்டிருந் தான். அவனை கலீபாவிடம் கொண்டு சென்றார்கள். அவர் கேட்டார். 'போன வருஷம் ஒருவன் தன்னைத் தீர்க்கதரிசி என்று அறிவித்துக் கொண்டதற்காகத் தூக்கிலிடப்பட்டான். உனக்கு அதைப்பற்றித் தெரியுமா?' என்று.

'சரியான தண்டனைதான் வழங்கப்பட்டிருக்கிறது. ஆனால், நான் அவனை அனுப்பி வைக்கவில்லையே' என்றான் அந்த மனிதன்.

அத்தகைய ஒருவனை எப்படி நீங்கள் கட்டுப்படுத்த முடியும்? அது சாத்தியமல்ல. காரணம், தர்க்கம் சாராத அணுகுமுறை என்பது வெளிப்படையான அணுகுமுறை. அங்கே சுவர்கள் இல்லை

என்கிறபோது அறை எப்படி இருக்கும்? அறை இல்லை என்கிறபோது மூலை எப்படி இருக்கும்? அது வெளிப்படையான ஆகாயம். ஒருவர் எங்கு வேண்டுமானாலும் செல்ல முடியும். நீங்கள் ஓர் அறையில் இருந்தால்தான் அறையின் மூலைக்கு உங்களைத் தள்ள முடியும். அறையில் இல்லாமல், ஆகாயத்துக்குக் கீழே இருக்கிற ஒருவரை எப்படி மூலைக்குத் தள்ளுவீர்கள்? அங்கு எவ்வகையிலும் மூலை என்பதே இல்லை.

ஏன் தவறான எண்ணங்கள் - ஊகங்களை நீங்கள் பற்றிக் கொண்டிருப்பது? நீங்கள் ஓர் இந்துவாகவோ, கிறிஸ்துவராகவோ, அல்லது இஸ்லாமியராகவோ இருக்கக் கொண்டுதான் மூலைக்குத் தள்ளப்படுகிறீர்கள். ஆனால், நீங்கள் அவர்களில் யாராகவும் இல்லாவிடில் - மூலைகள் மறைந்து போயிருப்பின் - உங்களை எங்கேயும் கட்டாயப்படுத்தித் தள்ள முடியாது. அப்போது ஒட்டு மொத்த ஆகாயமும் உங்களுடையதாகி விடுகிறது. முழு ஆகாயத்தின் சுதந்திரத்தை, அழகை நீங்கள் புரிந்து கொள்ளும் தருணத்தில் எல்லா தப்பெண்ணங்களையும், கருத்தியல்களையும் நீங்கள் விட்டு விடுவீர்கள்.

என்னிடம் எந்தக் கருத்துத் தொகுதியும் இல்லை. நிரூபிக்கும் படியாய் எதுவும் இல்லை. என்னைப்பற்றிய ஒரு கணநேரக் கண்ணோட்டத்தை வழங்குவதற்காகவே நான் இங்கிருப்பது.

நான் ரொம்பவும் முரண்பாடானவன்.

உண்மையில், முன்பே இங்கிருந்து போயிருக்க வேண்டும். அனுராக் கேட்டான். 'நேற்று காலையில் ஏன் திடீரென நின்று, உங்களுடைய தலையில் கைவைத்துக் கொண்டீர்கள்? எதற்காக அப்படி?' என்று. சில சமயம் அப்படி ஆகிவிடுகிறது. என்னுடைய சரீரத்துடனான தொடர்பை நான் இழந்து விடுகிறேன். உண்மையில் நான் போய்விட்டிருக்க வேண்டும். நான் தர்க்கத்துக்கு ஒவ்வாத வகையில் இங்கிருக்கிறேன். இன்னும் கொஞ்ச நாள் உங்களுக்கு உதவலாம் என்பதற்காகவே பாரம் சுமக்க முயல்கிறேன். உங்களுக்கு அது தெரியாமல் இருக்கலாம். ஆனால், இதற்கு முன் பலமுறை அப்படி ஆகியிருக்கிறது. மனம் ஓர் இயக்கநுட்பம் (mechanism). நான் அதைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறேன். சிலசமயம் தொடர்பற்றுப் போகிறது. உடல் ஓர் இயக்கநுட்பம். நான் அதைப் பயன்படுத்துகிறேன். சிலசமயம் தொடர்பை இழந்து விடுகிறேன்.

சிலசமயம் ஒரு கணமாவது நின்றால் தேவலை என்கிற அளவுக்கு நான் நரகப் படுகுழியை நோக்கி கன வேகத்தில் செல்லத் தொடங்கியிருக்கிறேன்.

நான் தர்க்கவாதத்துக்கு ஒவ்வாதவன் என்பதோடு, ஒவ்வாத வகையிலேயே இங்கு இருந்து கொண்டிருக்கிறேன். யார் என்னுடன் விவாதிக்க விரும்பினாலும் இழப்பு அவர்களுக்குத்தான். அவர்களால் என்னைத் தோற்கடிக்க முடியாது. காரணம் நான் எதையும் நிரூபிக்க முயலவில்லை. எதையும் அவர்களுக்கு நம்ப வைக்க முயலவில்லை. உங்களை மாற்றுவதை நான் விரும்பவில்லை. நான் விருப்பம் காட்டுகிறேன் என்றால் என்னிடம் இருக்கிற ஏதோ ஒன்றை உங்களுக்கு வழங்க வேண்டும் என்பதால்தான். நீங்கள் ஏற்பதற்கு இசைவாயிருந்தால் என்னுடன் தொடர்பு கொண்டு அதை ஏற்றுக்கொள்ள முடியும். இல்லையேல் உங்கள் தவறுக்காக பிற்பாடு நீங்கள் வருந்த வேண்டியிருக்கும்.

இப்படி நடந்தது.

மதுக்கடையின் கூட்ட நெரிசலைத் தள்ளிக்கொண்டு, ஒரு குடிகாரன் தடுமாறியபடி உள்ளே சென்றான். வழியில் ஓர் ஆணையும் பெண்ணையும் கண்டவன், அந்தப் பெண்ணை முரட்டுத்தனமாய் ஒரு பக்கம் தள்ளிவிட்டு கவுண்ட்டரை (counter) நோக்கி முன்னேறினான். அந்தப் பெண்ணின் கணவன் கோபத்துடன் திரும்பி, 'உனக்கு என்ன தைரியம் இருந்தால் என் பெண்டாட்டியை இடித்ததோடு, அவளுக்கு முனனால் வாந்தி எடுபபாய்?' என்று கேட்டான்.

குடிகாரன் தான் செய்த குற்றத்தை வருத்தத்துடன் ஒப்புக் கொள்வதைப் போல், 'உம்முடைய பிரியமான சீமாட்டி முன் வாந்தியெடுத்ததற்கு மன்னிக்க வேண்டும். இது அவளுடைய முறை என்பது எனக்குத் தெரியாமல் போயிற்று' என்றான்.

நான் அந்தக் குடிகாரனைப் போன்றவன். என்னைச் சிக்க வைக்க முடியாது.

உங்களுடைய கேள்விகளைப் பொறுத்தவரை நான் அதைத்தான் செய்கிறேன். நான் அளிக்கிற விடை முக்கியமில்லை. உங்களுடைய கேள்விகளை எப்படி சர்வ நாசப்படுத்துகிறேன் என்பதைக் கவனியுங்கள். என்னுடைய விடை ஒரு விடையே அல்ல. அது உங்கள் கேள்வியைப் பயனற்றதாக்குகிற உத்தியாகும். உங்களுடைய கேள்விக்கு விடையளிக்க வேறு ஆசாமிகள் இருக்கிறார்கள்.

அவர்கள் சில யோசனைகளை உங்களுக்கு வழங்குவார்கள். சில கருத்தியல்களை, கோட்பாடுகளை, சமய மரபுகளைக் கொண்டு உங்களை நிரப்புவார்கள் - நான் அவ்விதமாய் உங்களுக்குப் பதிலளிப்பதில்லை.

நீங்கள் கவனித்திருந்தால், உணர்வுடன் இருந்தால் உங்கள் கேள்வியை நான் பயனற்றதாக்குவதை உங்களால் புரிந்துகொள்ள முடியும். நீங்கள் பதிலைப் பெறாததோடு, விடையையும் இழந்து விடுகிறீர்கள்.

என்றாவதொரு நாள் நீங்கள் கேள்வியற்றவராவீர்கள். அதுவே தெளிவாகப் புரிந்து கொள்கிற முனை (point) ஆகும். நீங்கள் எந்தக் கேள்வியும் இல்லாமல் இருக்கிறீர்களா என்பதுதான் முக்கியம். அதையே நீங்கள் விடையாய் கொள்ளலாம், கேள்வியற்றிருக்கும் நிலையை.

புத்தர் எல்லாவற்றுக்கும் விடைகளை வைத்துக் கொண்டிருக்க வில்லை. அவர் கேள்விகளற்றவராயிருந்தார். கேளவிகள் மறை கின்றன. கேள்வி கேட்பதென்பது அறிவின்பால் ஒத்திராமை (absurdity)யே ஆகும். அது பொருத்தமற்றதும் கூட அவர் எந்தக் கேள்வியும் இல்லாமல் அங்கே எளிமையாயிருந்தார். அவர் மனமற்றவர் (no-mind) என்பதைச் சொல்லும்போது நான் அதையே கருத்தில் கொள்கிறேன். மனம் எப்போதுமே கேள்வி கேட்கும். மரத்தில் தோன்றும் இலைகளைப் போல் மனத்தில் கேள்விகள் தோன்றுகின்றன. பழுத்த இலைகள் உதிர்ந்து புதிய இலைகள் வரு கின்றன. பழைய கேள்விகள் மறைந்து புதிய கேள்விகள் எழுகின்றன.

நான் இந்த மரத்தையே வேரொடு பிடுங்கியெறிய விரும்பு கிறேன்.

நான் ஒரு விடையை உங்களுக்குத் தந்தால், அதில் இருந்து பல கேள்விகள் தோன்றும். உங்கள் மனம் அந்த விடையைப் பல கேள்விகளாக மாற்றும்.

நான் முற்றிலும் அறிவுக்குப் பொருந்தாதவன்தான். நான் ஒரு தத்துவ மேதை அல்லன். ஒரு கவிஞனாகவோ, குடிகாரனாகவோ இருக்கலாம். உங்களால் என்னை நேசிக்க முடியும். உங்களால் என்னைப் பின்பற்ற முடியாது. என்னை நீங்கள் நம்ப முடியும். என்னை நீங்கள் போலி செய்ய முடியாது (imitate). உங்கள் அன்பு மற்றும் நம்பிக்கையின் வழியே மதிப்புமிக்க ஒன்று உங்களிடம்

ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. நான் என்ன சொல்கிறேன் என்பதைவிட நான் எப்படியானவன் என்பதுதான் அதற்கு முக்கியம். இது புனித நூல்களுக்கு அப்பாற்பட்ட விதத்தில் செய்யப்படுகிற மாற்றம்.

ஆக என்னுடைய வாழ்வில் நான் ஒருபோதும் சிக்கலில் அகப்பட்டுக் கொண்டதில்லை. உங்களால் ஒரு பைத்தியக்காரனைக் கட்டுப்படுத்த முடியாது.

*அறிவு, உள்ளுணர்வு மற்றும் பிரதிபை இவற்றின் முக்கியத் துவத்தை முறையான கண்ணோட்டத்தில் தாங்கள் கருணை கூர்ந்து விளக்க வேண்டும். வாழ்க்கை எப்படி, எதற்காக பிரதிபையுடன் ஒருமுகப்படுத்தப்பட்டிருக்கிறது என்பதைப் பிரத்தியேகமாய் விளக்கும்படி வேண்டுகிறேன். அத்துடன் அந்த ஒருமுகப்படுதல் எந்த அளவு வாழ்விற்கும் வளர்ச்சிக்கும் அதன் உயர்ந்த, மிகச்சிறந்த நிலையினை எட்டப் போதுமானதாயிருக்கும் என்பதையும் சேர்த்து விளக்குங்கள்.*

அறிவு என்பது உங்கள் இருப்புணர்வின் மிகத்தாழ்ந்த செயல்பாடு. ஆனால், அது தாழ்வாக இருப்பதாலேயே அதிகத் திறமை உடையதாயும் இருக்கிறது. அது தாழ்நிலையில் இருப்பதாலேயே பெருமளவு வளர்ச்சியுற்றதாயும் இருக்கிறது. அது கீழ்ப்பட்டிருக்கும் காரணத்தால்தான் கற்பிக்கக் கூடியதாயும், ஒழுங்குப்பாட்டுக்கு உட்பட்டதாயும் இருக்கிறது. அது அடிமட்டத்தில் இருப்பதாலேயே (அதை மேம்படுத்த) பல்கலைக் கழகங்களும், கல்லூரிகளும், பள்ளிக் கூடங்களும் அதன் பொருட்டு ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. சற்று கூடுதலாகவோ குறைவாகவோ எல்லாரும் அதைப் பெற்றிருக் கின்றனர்.

வெளியுலகில் அது பெருமளவு பயன்படக் கூடியதாய் இருக்கிறது. அறிவு இல்லாமல் பயனுறு தன்மை (utility)யை அடைவது கடினம். லாவோட்சு தமது சீடர்களிடம் சொல்வார், 'பயனற்றவராகி விடுங்கள்' என்று. நீங்கள் பயனற்றவராவதற்குத் தயாராயில்லாவிடில், அறிவை விடுவதற்கும் தயாராயிருக்க மாட்டீர்கள். காரணம் அறிவு உங்களுக்குப் பயன் தருகிறது. நீங்கள் ஒரு மருத்துவராகிறீர்கள் - சமூகத்துக்குப் பயன்படக்கூடியவராகி விடுகிறீர்கள். நீங்கள் ஒரு பேராசிரியராகிறீர்கள், பொறியாளராகிறீர்கள். அறிவின் மூலம் நீங்கள் குறிப்பிடத்தக்க ஒருவராகிறீர்கள் - சமூகத்தால் உங்களைப் பயன்படுத்திக்கொள்ள முடிகிறது. நீங்கள் எந்த அளவு பயனுறு

தன்மையைக் கொண்டிருக்கிறீர்களோ அந்த அளவு சமூகம் உங்களை மதிக்கிறது. இது காரணத்தினாலேயே - அந்தணர், சத்ரியர், வைசியர், சூத்ரர் என்று கீழ்நிலையில் இருந்து மேல்நிலை வரையில் பலதரப்பட்ட படிகள் உருவாக்கப்பட்டது.

மிக உயர்ந்த நிலையில் இருப்பவர் கற்றறிந்தவர் - அந்தணர். தூய அறிவுடையவர் இவர். அதற்கடுத்த நிலையில் இருப்பவர் போர் புரியும் தொழிலைச் செய்யும் சத்ரியர். காரணம் இவர் நாட்டைக் காப்பவர். அவருக்கும் குறைந்த நிலையில் இருப்பவர் வணிகர். காரணம் இவரே சமூகத்தின் இரத்த ஓட்ட அமைவாயிருப்பவர். மிகத்தாழ்ந்த நிலையில் இருப்பவர் சூத்ரர். இவர் தீண்டத்தகாதவராய், ஊழியம் பண்ணுகிற வராய் இருப்பவர். இவருடைய வேலை உடலுழைப்பைக் கொண்டது. அறிவு அதிக அளவில் தேவைப்படுவதில்லை. சூத்ரனுக்குக் குறைந்த அளவு அறிவு. அந்தணனுக்கு உயரளவிலான அறிவு. ஆனால் மொத்தப் பிரிவுகளும் அறிவின் பாற்பட்டவையே.

அறிவு தன்னளவில் பயனுறு தன்மையைக் கொண்டிருக்கிறது. ஆனால், நீங்கள் அறிவைக் காட்டிலும் பெரியவர், பரந்த அளவிலானவர். நீங்கள் அறிவுடனேயே உங்களை ரொம்பவும் அடையாளப்படுத்தி ஒரு மருத்துவராகவோ, பொறியாளராகவோ, பேராசிரியராகவோ, வியாபாரியாகவோ, போர் வீரராகவோ வந்துவிட முடியும். ஆனால், உங்களுடைய இருப்புணர்வை இழந்து விடுவீர்கள். நீங்கள் நீங்களாக இருக்கமாட்டீர்கள். உங்கள் இருப்புணர்வை மறந்து விடுமளவுக்கு நீங்கள் வேலையுடன் உங்களை அடையாளங் காட்டிக்கொள்ள முடியும். நீங்கள் ஒரு மனிதன் என்பதையே மறந்து விடக் கூடும். நீங்கள் ஒரு மனிதன் என்பதையே மறந்து விடுமளவுக்கு ஒரு பொறியாளராகவோ, நீதிபதியாகவோ, அரசியல்வாதியாகவோ மாறிவிடக் கூடும். நீங்கள் மிகுதியாய் இழக்க நேரிடும். பிறகு ஒரு செய்நுட்பமாக (mechanism) மட்டுமே இருப்பீர்கள. சமூகம் உங்களைப் பயன்படுத்திக் கொள்ளும், முடிந்தவரை. பிறகு சமூகத்தில் இருந்து நீங்கள் ஓய்வு பெற்று விடுவீர்கள். பிறகு சமூகம் காத்திருக்கும். இவன் எப்போதடா சாகப் போகிறான் என்று.

பணியில் இருந்து ஓய்வு பெறுகிறவர்கள், ஓய்வு பெறாமல் இருந்தால் எப்போது சாவார்களோ அதைவிட முன்கூட்டியே செத்து விடுகிறார்கள். செயலாற்றும் எல்லையினின்றும் விலகியவர்களுக்கு சீக்கிரமே முதுமை வந்துவிடுகிறது. அவர்களுடைய ஆயுளில் கிட்டத்தட்ட பத்து வருடம் குறைந்து விடுகிறது. என்னதான் நடக்கிறது?

அவர்கள் எதற்கும் பயனற்றவராகி விடுகிறார்கள். தாங்கள் எங்கு சென்றாலும் தங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுவதில்லை என்கிற உணர்வு அவர்களுக்கு. மனிதனுக்குள் இருக்கும் மிகப்பெரிய தேவை தான் இன்றியமையாதவராய் இருக்க வேண்டும் என்பதே.

உங்களைத் தேவையற்றவராய் (superfluous) நீங்கள் உணர்கிறபோது, 'நம்மைக் குப்பைத் தொட்டியில் வீசி விடுவார்கள்' என்று நீங்கள் உணர்கிறபோது, 'சமூகத்துக்குப் பயன்படுகிற விதத்தில் நாம் செயல்படவில்லை' என்று நீங்கள் வருந்துகிற போது நீங்கள் சாகத் தொடங்கி விடுகிறீர்கள். பணியில் இருந்து ஓய்வு பெறுகிற நாளே சாகத் தொடங்குகிற நாளாகி விடுகிறது - நீங்கள் விரைந்து சாகத் தொடங்குகிறீர்கள். உங்களுக்கு நீங்களே சுமையாய் தெரிவீர்கள். மக்கள் உங்களைச் சகித்துக் கொள்ளலாம், உங்கள் மீது இரக்கம் காட்டலாம். ஆனால் யாரும் உங்களைத் தீவிரமாய் எடுத்துக்கொள்ள மாட்டார்கள். யாரும் உங்களை நேசிக்கப் போவதில்லை, மதிக்கப் போவதில்லை. நீங்கள் ஒதுக்கப்பட்டு விடுகிறீர்கள்.

நீங்கள் அறிவுடன் உங்களை ரொம்பவே அடையாளப்படுத்திக் கொண்டால் ஓர் எந்திர நுட்பத்தைப் போலாகி விடுவீர்கள். நல்ல கார்தான், ஆனால் பயன்படுத்தித் தீர்ந்ததும் காயலான் கடைக்குத் தள்ளப்பட்டு விடும். உங்களைப் பயன்படுத்திய பின் வீசியெறிகிற வர்கள், உங்களுடைய உள்ளார்ந்த மையப்பகுதியோ வெகுநாளாய் நிறைவேற்றப்படாத தேவையுடன் (unfulfilled) இருக்கிறது. காரணம் நீங்கள் பயன்படுத்தித் தீர்ந்தவரல்லர். ஓர் உயிரைப் போல் நீங்கள் மலர வேண்டியவர். அப்படித்தான் உங்களுக்கு விதிக்கப்பட்டிருக்கிறது.

அறிவை விட உயர்ந்தது உள்ளுணர்வு (intuition). உள்ளுணர்வு உங்கள் வாழ்வில் கொஞ்சம் கற்பனையையும், கவிதையையும் கொடுக்கிறது. ஒரு பொருளாக இல்லாமல் ஒரு நபராக உங்களைக் கருதச் செய்கிறது. யாரேனும் ஒருவர் உங்களை நேசிக்கிறபோது அந்த நேசம் உங்கள் சந்திர மையத்தைத் தாக்குகிறது; உங்களுடைய உள்ளுணர்வைப் பாதிக்கிறது. தம்முடைய கவர்ச்சியான கண்களைக் கொண்டு ஒருவர் உங்களை ஈர்க்கிறபோது உங்களுக்குள் இருக்கும் சந்திர சக்தி மகிழ்ச்சிக்குள்ளாகிறது. நீங்கள் அழகாயிருப்பதாக ஒருவர் சொல்லிவிட்டால் உங்களுடைய இருப்புணர்வு உயர்வாக உணர்கிறது. நீங்கள் ரொம்ப உபயோகமானவர் என்று யாராவது சொல்லிவிட்டால் காயப்பட்டதாய் உணர்கிறீர்கள். உபயோகமானவரா? ஒரு குறிப்பிட்ட நோக்கத்துக்காக அடுத்தவர் உங்களை இயக்கி ஆள முடிகிறது

என்றால் அது எப்படி பாராட்டாக இருக்க முடியும்? உங்களைப் பயன்படுத்தித் தீர்ந்ததும் அந்த இடத்துக்கு வேறொருவரைக் கொண்டு வந்து விடுவார்கள். ஆனால் நீங்கள் அழகானவர் என்றால் அப்போது இணையற்றவராகிவிடுவீர்கள். உங்களுடைய இடத்துக்கு வேறு யாரும் வரமுடியாது. பிறகு இந்த உலகில் இருந்து நீங்கள் சென்று விட்டால் அந்த இடம் வெற்றாகவே இருக்கும். ஏதோ ஒன்று குறைந்து விட்டிருக்கும் எப்போதைக்குமாய்.

அதனால்தான் நீங்கள் காதலைப் பெரிதும் விரும்புவது. காதல் உள்ளுணர்வுக்கு உணவாயிருக்கிறது. நீங்கள் நேசிக்கப்படவில்லை என்றால் உங்களுடைய உள்ளுணர்வு வளர்ச்சி அடைவதில்லை. உள்ளுணர்வு வளர்ச்சியடைய வேண்டுமென்றால் ஒரே வழி நீங்கள் அன்பால் வர்ஷிக்கப்படுவதுதான். ஆக, ஒரு தாய் தனது குழந்தையிடம் அன்பு காட்டி வளர்க்கிறபோது அந்தக் குழந்தை உள்ளுணர்வு மிக்கதாகிறது. அந்தத் தாய் அன்பு காட்டாவிடில், அறிவுத்திறன் மட்டுமே அதிகரித்திருக்கும் அந்தக் குழந்தையிடம். அன்பும், அரவணைப்பும், பரிவும் உள்ள சூழலில் அந்தக் குழந்தை வளருமாயின், பயன் கருதாமல் அதன் சுயத்துக்காகவே அந்தக் குழந்தை ஏற்கப்படுமாயின் அவனுடைய அக வளர்ச்சி மிகப்பெரிய அளவில் இருக்கும். அவனுடைய சக்தி சந்திர மையத்தை நோக்கிச் செல்லும்.

நீங்கள் நேசிக்கப்படாவிடில் உங்களுடைய சந்திர மையம் கிட்டத்தட்ட செயலிழந்து விடும்.

பாருங்கள், ஒரு பெண்ணிடம் நீங்கள், 'உன்னுடைய அழகான கண்களுக்காகவே நான் உன்னை விரும்புகிறேன்' என்று சொன்னால் அவள் மகிழ்ச்சியடைய மாட்டாள். காரணம், நாளையே தன்னுடைய கண்களை அவள் இழக்க நேரிடலாம். கண்களின் அழகு தற்செயலானது. எதிர்பாராமல் எதுவும் நடக்கலாம். கண் உபாதை காரணமாய் அவளுடைய கண்கள் பார்க்கும் திறனை இழக்கலாம் அல்லது கண்கள் அழகில்லாமல் போய்விடலாம். 'உன்னுடைய அழகான முகத்துக்காகவே உன்னை நான் காதலிக்கிறேன்' என்று நீங்கள் சொன்னாலும் அவளுக்குச் சந்தோஷமாயிருக்காது. காரணம் முக அழகு எப்போதும் அப்படியே இருந்துவிடாது. முதுமை வந்து கொண்டிருக்கிறது ஒவ்வொரு நாளிலும், ஒவ்வொரு கணத்திலும். ஆனால், 'நான் உன்னை விரும்புகிறேன்' என்று நீங்கள் சொன்னாலே போதும், அவள் அளவற்ற மகிழ்ச்சி அடைவாள். காரணம், 'உன்னை'

(நீ) என்பது மாறாமல் நிலைத்திருப்பது. அது தற்செயலானதல்ல. அதற்கு எதுவும் நேர்ந்து விடாது.

'நான் உன்னைக் காதலிக்கிறேன், ஏனெனில்...' என்று ஒரு பெண்ணிடம் நீங்கள் சொன்னால் அவள் ஒருபோதும் அதற்காக மகிழ்ச்சியடைய மாட்டாள். காரணம், அந்த 'ஏனெனில்...' அறிவை உள்ளே கொண்டு வந்து விடுகிறது. 'ஏன்னே எனக்குத் தெரியலை. ஆனால் உன்னை நான் காதலிக்கிறேன்' என்று சும்மா தோள்களைக் குலுக்கிக் கொண்டு நீங்கள் சொன்னாலே போதும். சந்திர மையம் செயல்படத் தொடங்கி விடும் – பெண் மலர்ந்து போவாள்.

ஒரு பெண்ணை யாரும் காதலிக்காதபோது அவளைக் கவனியுங்கள். யாரோ ஒருவர் 'நான் உன்னைக் காதலிக்கிறேன்' என்று சொன்ன மறு கணத்திலேயே அவளை கவனமாய் பாருங்கள். அவளுடைய அழகிலும், நடையுடை தோற்றத்திலும் பெரிய அளவில் மாறுதல் இருக்கும். பெரிய அளவில் மாற்றம் – அவளுடைய முகத்தில் ஒரு புத்தொளி பரவும். என்னவாயிற்று? சந்திர மையம் தன்னுடைய சக்தியை விடுவித்திருக்கும்.

டச்சு நாட்டின் புகழ்பெற்ற ஓவியரான வின்செண்ட்வான் காக் பற்றி நீங்கள் கட்டாயம் கேள்விப்பட்டிருப்பீர்கள். எந்தப் பெண்ணும் 'உன்னைக் காதலிக்கிறேன்' என்று அவரைப் பார்த்துச் சொல்ல மாட்டாள். அத்தனை அவலட்சணமாய், அருவருக்கும்படியாய் இருந்தார் – சந்திர மையம் செயல்படவில்லை. அவர் வெறுப்பு நிறைந்தவராய் காணப்பட்டார். மக்கள் அவரைக் கண்டதும் நழுவிச் சென்று விடுவார்கள். அவர் கலைப்பொருள்கள் விற்கும் வியாபாரி ஒருவரிடம் வேலை பார்த்து வந்தார். அந்த முதலாளி இரவும் பகலும் அவரைக் கவனித்துக் கொண்டிருப்பார். வான் காக் ரொம்பவும் தெளிவற்றவராய், தேகத்தில் படிந்த அழுக்கை சட்டை செய்யாதவராய், எதிலும் ஆர்வமற்றவராய் இருந்தார். வாடிக்கையாளர்கள் வந்தால் ஓவியங்களை எடுத்துக் காண்பிப்பார். ஆனால் அக்கறையிருக்காது. தொடர்ந்து துயர் மிக்கவராய், விருப்பமற்றவராய் எதிலும் அலட்சியமாய் இருந்தார் அவர். ஒரு நடைப்பிணமாய் – நடக்க வேண்டுமே என்பதற்காக நடந்தார். பெருமகிழ்ச்சியோ, ஊக்கமோ, தீவிரமோ, கட்டுக்கடங்காத உணர்ச்சியோ அவரிடம் இருந்திருக்க வில்லை.

ஒருநாள் கடை உரிமையாளருக்கு அவருடைய கண்களையே அவரால் நம்ப முடியாமல் போயிற்று.

வான் காக் பல மாதங்களாக ஏன் பல ஆண்டுகளாய் குளிக்காமல் இருந்து, குளித்துவிட்டு வந்தது போல் காட்சியளித்தார். மனிதர் ரொம்பவும் சுத்தமாய், தலைமுடியை வாரிக்கொண்டு முற்றிலும் மாறுபட்ட தோற்றத்தில் இருந்தார். அவருடைய நடையில் ஒரு துள்ளல் இருந்தது. ஏதோ ஒரு ட்யூனை (tune) அவர் முணுமுணுத்துக் கொண்டிருந்தார். ரொம்பவும் நேர்த்தியாக உடையணிந்து, நறுமணப் பூச்சுடன் இருந்தார். நடக்க முடியாத ஒன்று!

உரிமையாளர் அவரிடம் கேட்டார். 'வான்காக், உமக்கு என்ன ஆயிற்று?' என்று. வான்காக் சொன்னார். 'ஒரு பெண் என்னைக் காதலிப்பதாய் சொன்னாள். அவள் ஒரு பாலியல் தொழிலாளிதான் என்றாலும், அவள் பணத்துக்காகவே அதைச் சொல்லியிருந்தாலும், ஒரு பெண் என்னைக் காதலிப்பதாய் சொல்லி விட்டாளே.'

அந்தப் பாலியல் தொழிலாளியிடம் வான்காக் கேட்டார். 'நீ என்னைக் காதலிப்பது எதற்காக?' என்று. காரணம் அது எப்போதுமே அவருடைய மனதை அவதிக்குள்ளாக்கி வந்த ஒன்று. யாரும் அவரைக் காதலித்ததில்லை. தன்னுடைய அவலட்சணத்தை அவர் அறிந்தவர்தான். 'நீ ஏன் என்னைக் காதலிக்கிறாய்?' அவரை அவருக்காகவே ஒரு பெண் காதலிப்பாள் என்பதை ஏற்றுக்கொள்வது அவருக்கு முடியாத காரியம். "ஏன்?" அந்தப் பாலியல் தொழிலாளிக்கு அவரைப் பற்றிச்சொல்ல எதுவும் இருந்திருக்கவில்லை. 'உன்னுடைய கண்களின் காரணமாக' என்று அவளால் சொல்ல முடியாது. 'ஏனெனில் உன்னுடைய முகம்' என்று சொல்லவும் முடியாது. 'உன்னுடைய உடம்பின் காரணமாக' என்றும் அவள் சொல்வதற்கில்லை. ஒவ்வொன்றிலும் ஏதோவொரு குறை இருந்தது. அவள் சொன்னாள். 'உன்னுடைய காதுகளின் காரணமாக. அவை ரொம்பவும் அழகானவை' என்று. அந்த வார்த்தைகள் அவரைக் கவர்ந்து மயக்கமூட்டியது. வீட்டுக்கு வந்தவர் உடனே தன்னுடைய காதுகளில் ஒன்றை அறுத்து, ஒரு சிப்பத்தில் பொதிந்து, அந்தப் பெண்ணுக்கு அன்பளிப்பாய் வழங்கினார். 'இதுவரை என்னிடம் விரும்பத்தக்க ஒன்றை யாரும் கண்டதில்லை. இந்த ஏழையின் பரிசை ஏற்றுக்கொள்' என்றார் அவர். அந்தப்பெண் அப்படியே அச்சத்தில் உறைந்து போனாள். இது பைத்தியத்தில் எந்த வகை? நம்ப முடியாமல் திகைத்தாள்.

ஆனால் அவரோ ரொம்பவும் தகுதியாய் உணர்ந்தார். தம்முடைய கடிதங்களுள் ஒன்றில் இப்படி எழுதினார்: 'என்னுடைய வாழ்வின்

உச்சம் அது. எனக்குள்ளும் ஒன்றை யாரோ ஒருவர் விரும்பியிருக்கிறார்கள். என்னுடைய இருப்புணர்வை நான் பகிர்ந்து கொள்ள முடிந்தது' என்று.

கவனியுங்கள், கருத்தூன்றிக் கவனியுங்கள். எப்போதாவது ஒருவர் உங்களிடம் 'நீங்கள் நீங்களாகவே இருப்பதால் உங்களை நேசிக்கிறேன்' என்று சொல்கிறபோது, அவர் எவ்வித நிபந்தனையுமின்றி உங்களை நேசிக்கிறபோது உங்களுடைய ஆற்றல்களில் என்ன நிகழ்கிறது? சூரியன் சந்திரனை நோக்கிச் செல்கிறது. தற்போது சூரியன் அத்தனை வெப்பமாயில்லை, சந்திரன் அதைக் குளிர்ச்சிப் படுத்தியிருக்கிறது. சந்திர ஒளியின் தன்மை உங்கள் இருப்புணர்வு முழுதும் பரவுகிறது.

இந்த உலகம் அன்புடன் மிகவும் இசைவாகி இருக்குமெனில் மக்களின் அறிவு குறைந்து உள்ளுணர்வு அதிகரித்திருக்கும். அவர்கள் இன்னும் நேர்த்தியானவர்களாகி இருப்பார்கள். அவர்கள் உணர்ச்சியற்ற சடப்பொருளைப் போல் இருக்க மாட்டார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் உயிரோட்டத்துடனும் பேரார்வத்துடனும் இருப்பார்கள். கட்டுக்கடங்காத உணர்ச்சியும், தீவிரமும் கொண்டு விடுவார்கள். அவர்களுடைய கிளர்ந்தெழுகிற மனம் வாழ்க்கையை ஒரு கொண்டாட்டமாக்கி விடும்.

உள்ளுணர்வு முற்றிலும் வேறானது. அது எந்தவொரு செயல்முறையும் இல்லாமல் செயல்படுகிறது. அது உடனே எதையும் தீர்மானித்து விடுகிறது. உண்மையில் உள்ளுணர்வு என்பது மெய்ம்மை (reality) நோக்குச் செல்வதற்கான ஒரு தொடக்கம். ஒரு தொலைநோக்கை அது கொண்டு விடுகிறது. தர்க்க அறிவு இருளில் தள்ளாடும், உள்ளுணர்வு ஒருபோதும் தள்ளாடுவதில்லை. ஒரு தொலைநோக்கு. அது காண்கிறது.

உள்ளுணர்வு சார்ந்தவர்கள் சமய நம்பிக்கை கொண்டவர்களாயுமிருப்பதுண்டு. அறிவுசார்ந்த மக்கள் இயல்பாகவே சமய நம்பிக்கை கொள்வதில்லை. அவர்களுடைய அறிவு சமயத்தைவிட சமயக் கோட்பாடுகளுடனேயே தன்னைத் தொடர்புப்படுத்திக் கொள்ளும். அவர்கள் சமயத்தைவிட இறைமையியலில் (Theology) தங்களை அதிகம் உட்படுத்திக் கொள்வார்கள். அவர்கள் கடவுள் பற்றி நிருபணங்களைப் பற்றிப் பேசுவார்கள். அது கடவுளைப் பற்றிப் பேசுவதாகாது. 'பற்றி' (about) என்கிற போதே இலக்கு தவற விடப்படுகிறது. 'பற்றி' தொடர்கிற போது ஒரு வட்டத்துக்குள்ளேயே

சுற்றி வருவதாகி விடும். அவர்கள் மையத்தை விட்டுவிட்டு புறத்தே தேடிக் கொண்டிருப்பார்கள். அவர்கள் ஒருபோதும் தங்கள் இலக்கை வீழ்த்துவதில்லை.

அறிவாளிகள் சமய நம்பிக்கைக்கான போக்கை இயல்பிலேயே கொண்டிருப்பதில்லை. அதனால்தான் ஆலயங்களிலும், 'சர்ச்'சுகளிலும் நீங்கள் பெண்களை அதிகம் பார்க்க முடிவது. சந்திரன் சமயத்துடன் இய்ல்பாகவே பொருந்திக் கொண்டு விடுகிறது. புத்தருடைய சீடர்களில் ஆண்களைவிட பெண்கள் மூன்று மடங்கு அதிகமிருந்தார்கள். மகாவீரரிடத்தும் அதே விகிதந்தான். அவருடைய ஆண் துறவிகளின் எண்ணிக்கை பத்தாயிரமாகவும், பெண் துறவிகளின் எண்ணிக்கை முப்பதாயிரமாகவும் இருந்தது. இயேசுவிடமும் அதே அளவில் இருந்ததை நீங்கள் கண்டு கொள்ளலாம். அவர் சிலுவையில் அறையப்பட்ட போது ஆண்கள் அனைவரும் ஓட்டம் பிடித்தார்கள்.

சிலுவையிலிருந்து இயேசுவின் உடல் இறக்கிக் கீழே கொண்டு வரப்பட்ட போது, மூன்று பெண்கள் மட்டுமே அங்கிருந்தது. காரணம் ஆண்கள் ஏதேனும் அற்புதம் நிகழும் என்று கூட்டத்தோடு கூட்டமாய் நின்று கவனித்தார்கள். 'ஆம், இவரே இறைவனின் ஒரே குமாரன்' என்று தங்கள் சூரிய மையத்துகது நம்பிக்கையூட்டிக் கொண்டிருந்தார்கள். ஆனால் எதுவும் நிகழவில்லை. அவர்களுக்கு நிரூபணம் வேண்டியிருந்தது. அவர்கள் இறைவனிடமும், இயேசுவிடமும் 'நாங்கள் நம்பிக்கை பெறும்படியாய் ஓர் அற்புதத்தை நிகழ்த்த வேண்டும்' என்று மன்றாடினார்கள். இயேசுவானவர் ரொம்பச் சாதாரணமாக, தமது பக்கத்தில் சிலுவையிடப்பட்ட இரண்டு கள்வர்களைப் போலவே சாதாரணமாக இறந்தார் என்பதைக் கண்டவுடன் அவர்கள் நம்பிக் கையற்றவர்களாயினர். 'ஓ, இவர் போலியான ஆள், உண்மையில் தேவகுமாரனல்லர்' என்று எண்ணிக் கொண்டார்கள், நழுவிச் சென்றார்கள்.

ஆனால் இப்படியோர் எண்ணம் பெண்களிடம் எழவில்லை. அவர்கள் அற்புதத்தை எதிர்பார்த்திருக்கவில்லை. அவர்கள் இயேசுவையே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது அற்புதம் நிகழ்ந்தது. இயேசு வெகு சாதாரணமாய் மரித்தார். அதுவே அற்புதமாகும். அவர் எதையும் நிரூபிக்க முயலவில்லை. காரணம், தற்பாதுகாப்பு செய்து கொள்கிறவர்கள் தாம் நிரூபிக்க முயல்பது. அவர் தன்னை தற்காப்பு செய்து (defensive) கொள்ள விரும்பவில்லை. அவர்

கடவுளிடம் சொன்னார். ‘தேவனே, உம்முடைய ராஜ்யம் எம்மை வந்தடைவதாக. நீர் எண்ணியபடியே ஆகட்டும்’ என்று. அதுதான் அற்புதம். அவர் கடவுளிடம் மேலும் சொல்வார். ‘இந்த பாவப்பட்ட ஜீவன்களை மன்னியும். தாங்கள் என்ன செய்கிறோம் என்பதை இவர்கள் அறிந்திருக்கவில்லை’ என்று. தம்மைக் கொல்ல முனைந்தவர்கள் மீதும் கருணை காட்டும்படி இறைவனிடம் அவர் இறைஞ்சினாரே அது அற்புதம். அவர் கடவுளிடம் சொன்னார். ‘தீர்ப்பு செய்யாதிரும். உம்முடைய தீர்ப்பு செய்கிற மனோபாவத்தை ஒதுக்கி வையும். என் வார்த்தைக்குச் செவிமடுப்பீராக. இவர்கள் ஏதுமறியாதவர்கள், தாங்கள் செய்கிற காரியத்தை இவர்கள் அறிந்திருக்கவில்லை. இவர்கள் மாசற்றவர்கள், அறியாமையின் பாற்பட்டவர்கள். இவர்களிடம் சீற்றம் கொள்ளாதிரும், இவர்களைப் பொறுத்தருளும்’ என்று. அதுவே அற்புதம்.

பெண்களால் அதைப் புரிந்துகொள்ள முடிந்தது. அவர்கள் எந்தவோர் அற்புதத்தையும் எதிர்பார்த்திருக்கவில்லை. அறிவு எப்போதுமே ஏதேனும் ஒன்றை எதிர்நோக்கியிருக்கும். உள்ளுணர்வு எவ்வித வரையறையுமின்றி ஏற்றுக்கொள்ள இசைவாயிருக்கும். அது குறிப்பாக எதையும் காண முயற்சிப்பதில்லை. சும்மா பார்த்துக் கொண்டிருக்கும் – அது ஒரு பார்வை. அதுவே உள்ளுணர்வின் பொருள்.

இயேசு மூன்று நாட்களுக்குப் பிறகு காட்சியளித்த போது, அவர் முதலில் அணுகிச் சென்றது ஆண் சீடர்களைத்தான். அவர்களோடு அவர் நடந்தார், அவர்களோடு பேசினார், ஆனாலும் அவர்களால் அவரை இனங்காண முடியவில்லை. அவர் மரித்து விட்டார் என்று அவர்கள் கருதியிருந்தனர். உண்மையில் அதுகுறித்த வருத்தம் அவர்களுக்கு இருந்திருக்கும். அவர் போய் விட்டாரே என்பதற்காகவல்ல, ‘இந்த ஆளுடன் இத்தனை வருஷங்களை வீணடித்து விட்டோமே’ என்று எண்ணி வருத்தப்பட்டிருப்பார்கள். தற்போது அற்புதம் நிகழ்த்தக்கூடிய வேறொருவரை எதிர்நோக்கி அவர்கள் ஆவலுடன் காத்திருப்பார்கள். அற்புத வியாபாரம் செய்யும் செப்பிடு வித்தைக்காரர்கள்தான் அவர்களுக்கு வேண்டும். இயேசு அந்தச் சீடர்களுடன் நடந்தார், பேசினார். அவர்களோ அவரை அடையாளம் கண்டுகொள்ளவில்லை. அதன்பிறகே அவர் பெண்களை நோக்கிச் சென்றது. அவர் நெருங்கி வந்தபோது மேரி மக்தெலனா அவரைத் தழுவிக்கொள்ள விரும்பினாள். அவரை நோக்கி ஓடினாள். “அது எப்படி நடந்தது? மூன்று நாட்களுக்கு

முன்னால் உங்களைச் சிலுவையில் அறைந்தார்களே" என்று அவள் கேட்கவில்லை. ஏன், எப்படி என்பதை எல்லாம் உள்ளுணர்வு கேட்பதில்லை. அது அப்படியே ஏற்றுக்கொண்டு விடுகிறது. அது ஆழ்ந்த, முழுமையான ஏற்பு ஆகும்.

நீங்கள் அன்பார்ந்த சூழலில் வசிப்பீர்களாயின், அந்தச் சூழல் உங்களால்தான் தோற்றுவிக்கப்பட வேண்டியிருக்கும். உங்களுக்காக வேறொருவர் அதைத் தோற்றுவிப்பதில்லை. மனிதர்களை நேசியுங்கள். அவர்களும் உங்களை நேசிப்பார்கள். மனிதர்களை நேசியுங்கள், அவ்விதமாய் அன்பு பிரதிபலிப்பு செய்யும், எதிரொலிக்கும். மனிதர்களை நேசியுங்கள், அன்பால் வர்ஷிக்கப்படுவீர்கள். உங்கள் உள்ளுணர்வு செயல்படத் தொடங்கும். நீங்கள் முன்பு ஒருபோதும் கண்டிராதவற்றைக் காணத் தொடங்குவீர்கள். உலகம் அப்படியே இருக்கிறதென்றாலும் பல புதிய அர்த்தங்களை அது தோற்றுவித்துக் கொண்டிருக்கிறது. பூக்கள் அப்படியே இருந்தாலும் புதிரான சில புதிய விஷயங்களை அவை உங்களுக்கு வெளிப்படுத்திக் கொண்டிருக்கின்றன. பறவைகள் ஒரே மாதிரி பாடிக் கொண்டிருந்தாலும் தற்போது உங்களால் அதன் மொழியைப் புரிந்துகொள்ள முடிகிறது. சற்றும் எதிர்பாராத தகவல் தொடர்பு, சற்றும் எதிர்பார்த்திராத தோழமை.

அறிவைவிட உண்மைக்கு வெகு நெருக்கமாயிருக்கிறது உள்ளுணர்வு. காரணம் அது உங்களைத் தனிப்பட்ட முறையில் ஒரு மனிதராக்குகிறது, அறிவின் செயல்பாட்டை விடவும்.

அவையிரண்டுக்கும் அப்பால் இருக்கிறது பிரதிபை, அதீத உள்ளுணர்வு (supra-intuition). அதைப்பற்றி வேறெதுவும் சொல்வதற்கில்லை. எதைச் சொன்னாலும் ஒன்று சூரிய மொழியில் அல்லது சந்திரமொழி (கருத்து வெளியிடும் முறை)யில்தான் சொல்ல வேண்டியிருக்கும். ஒன்று விஞ்ஞானபூர்வமாய் விவரிக்கக் கூடும். அல்லது கவிதாபூர்வமாய் பாடப்படக் கூடும். ஆனால், பிரதிபையை எவ்வழியிலும் விவரிப்பதற்கில்லை. அது அப்பாற்பட்டதாகும். ஒருவர் அதை உணர்ந்தாக வேண்டும். அதைத் தெரிந்து கொள்வதெனில் அதை வாழ்ந்தாக வேண்டும்.

கவுதம புத்தரிடம் மக்கள் வந்து, 'கடவுளைப் பற்றி எங்களுக்குக் கூறுங்கள்' என்று கேட்கலாம். 'அமைதியாயிருங்கள், தொல்லையற்று இருங்கள், என்னோடு இருங்கள் - அது உங்களுக்கு நிகழக்கூடும்' என்று அவர் சொல்வார்.

அது கேட்டு, விடை காணக்கூடிய கேள்வியல்ல. அது தர்க்கப்பட வேண்டிய ஒரு பிரச்சினை அல்ல. அது வாழப்பட வேண்டிய இரகசியம். அது ஒரு பரவசம். மிகப்பெரிய அனுபவம் அது.

அறிவின் வழி.

ஒருநாள் முல்லா கிராமத்து ஆலையில் இருந்தார். அடுத்தவர்களுடைய கோதுமையை கொஞ்சம் கொஞ்சமாய் எடுத்து தம்முடைய பையை நிரப்பிக் கொண்டிருந்தார்.

'நஸ்ருத்தீன், ஏன் இப்படிச் செய்து கொண்டிருக்கிறீர்கள்?' யாரோ கேட்டார்கள்.

'ஏன்னா நான் ஒரு முட்டாள்' முல்லா பதிலளித்தார்.

'அப்படியானால் உங்களுடைய கோதுமையைக் கொண்டு மற்றவர்களுடைய பையை நிரப்புவது தானே?'

'அப்போது நான் அடிமுட்டாளாகி விடுவேன்' என்று முல்லா பதிலளித்தார்.

அறிவு தந்திரமானது. அறிவு கணக்கிடுவது. அறிவு எப்போதுமே அடுத்தவர்களைச் சுரண்டப் பார்க்கும். உள்ளுணர்வு நேர் எதிரிடையானது. அது தன்னுடைய நலனுக்காகப் பிறரைப் பயன்படுத்திக் கொள்ளாது.

இப்போது ஒரு விஷயம் சொல்கிறேன். என்றாவதொரு நாள் இந்த உலகம் சமுதாயப் பிரிவுகளற்ற, ஏழை பணக்காரர் என்கிற படிநிலைகளற்ற ஒரு புள்ளியை வந்தடையும் என்று மக்கள் எண்ணுகிறார்கள். இந்தக் கனவு பற்றி அதிகம் சந்தித்து தங்கள் கற்பனையிலேயே புதிய சமுதாயம் படைத்தவர்கள் மார்க்ஸ், ஏங்கல்ஸ், லெனின் மற்றும் மாவோ ஆவர். அவர்கள் அறிவு சார்ந்தவர்கள். அறிவு ஒருபோதும் இத்தகைய செயல்களைச் செய்வதில்லை. உள்ளுணர்வு சார்ந்த உலகில் மட்டுமே சமுதாயப் பிரிவுகள் (classes) மறைவது சாத்தியம். ஆனால், அவர்களோ உள்ளுணர்விற்கெதிரானவர்கள். மார்க்சிய சிந்தனையாளர்கள் அறிவே சகலமும் என்று எண்ணுகிறவர்கள், அதற்கப்பால் ஏதுமில்லை என்று நம்புகிறவர்கள். அது அவ்வாறெனில் அவர்களுடைய கற்பனை ஒருபோதும் நிறைவேற்றப்படப் போவதில்லை – காரணம், அந்த அறிவு தன்னலம் பேணுவதாயும், தந்திரமானதாயுமே இருக்கும். அறிவு வன்முறை கொண்டது, சண்டை பிடிக்கும், தீங்கு விளைவிக்கும்.

சூரிய சக்தி வன்முறையும், கிளர்ச்சியும் கொண்டது. அது சுட்டெரிக்கும், கொன்று தீர்க்கும்.

உண்மையிலேயே சமுதாயப் பிரிவுகளற்ற ஓர் உலகம் - உண்மையிலேயே பொதுவுடைமை நோக்குடைய உலகம் - பிரிவுகளற்ற கம்யூன் போன்றவற்றை மட்டுமே கொண்டதாயிருப்பின் அந்த உலகம் அப்போது முற்றிலும் மார்க்சிய எதிர்ப்புடைய தாகவே இருக்கும். அது உள்ளுணர்வு சார்ந்ததாகவே இருக்கும். அந்த உலகை உருவாக்கும் சிற்பிகள் அரசியல்வாதிகளாய் இருக்க மாட்டார்கள் - அவர்கள் கவிஞர்களாகவும், கனவு காண்பவர்களாகவும், கற்பனை செய்பவர்களாகவுமே இருப்பார்கள்.

ஆண் உலகைப் படைக்கிறவனாயிருக்க முடியாது. பெண்களால் மட்டுமே அது முடியும் என்று நான் சொல்ல விரும்புகிறேன். சமத்துவம் நிறைந்த ஓர் உலகைச் சந்திரனால் தோற்றுவிக்க முடியும், சூரியனாலல்ல.

அந்தக் கற்பனைச் சமுதாயத்திலும் அதன் நிறைவேற்றத்திலும் ஒரு புத்தர், ஓர் இயேசு உதவி புரியலாம். உதவி புரியக்கூடும். ஆனால் மார்க்ஸ்? இல்லை, முற்றிலும் இல்லை. அவர் ரொம்பவும் கணக்கிடுகிறவர், திறமையுள்ளவர், அறிவு சார்ந்தவர். ஆனால், உலகம் இன்றளவும் சூரியனின் ஆளுகைக்குட்பட்டதாகவே இருந்து வருகிறது. அதுவும் இயல்பாகத்தான் இருந்தது. காரணம் சூரியன் வலுத்தாக்குதலை மேற்கொள்வது.

தற்போது சூரியன் களைத்து, சோர்ந்து, விரக்தி அடைந்து விட்டதோ என்னவோ அல்லது மனிதர்கள்தான் மற்றொரு மையத்தில் இருந்து செயல்பட விரும்புகிறார்களோ என்னவோ தற்போது சாத்தியம் தெரிகிறது. சந்திரன் எழுமாயின் அதுவே உலகில் உள்ள பெண்களின் உண்மையான எழுச்சியாயிருக்க முடியும். ஆனால், மேற்கத்தியப் பெண்களிடம் பெரிய அளவிலான கிளர்ச்சியை, இயக்கத்தை, புரட்சிகரமான சிந்தனையை, மாற்றங்கள் சார்ந்த கருத்தை, விடுதலை வேட்கையை நான் காண முடிகிறது. ஆனால் அவர்கள் அறிவு சார்ந்தவர்களாயிருப்பதால், அவை எல்லாமே வீழ்ச்சியடைந்து கொண்டிருக்கின்றன. அவர்கள் ஆண்களைப் போலாகி விட்டார்கள். ஆண்களிடம் எதிர்வினை புரிகிறபோது (react) பெண்களும் ஆண்களைப் போலாகி விடுகிறார்கள். அது ஆபத்து.

பெண் என்பவள் பெண்ணாகவே இருக்க வேண்டும். அப்போதுதான் ஒரு மாறுபட்ட உலகம், மாறுபட்ட சமுதாயம்

அமைவது சாத்தியம் - அதனைச் சந்திரனில் ஒருமுகப்படுகிற சமுதாயம் என்லாம். ஆனால், பெண் தானும் வலுத்தாக்குதலை மேற்கொள்கிற போது ஆணுடைய அறிவற்ற செய்கையைக் கற்றுக்கொண்டு விடுகிறாள். அவனுடைய வன்முறையையுந்தான். அவள் வெற்றி பெறலாம் - ஆனால் அது அவளுக்குள் இருக்கும் சூரியனின் மறு வெற்றி என்றே சொல்ல வேண்டும்.

பெரும் மாற்றங்கள் ஏற்படும் சமயங்களில் ஒருவர் மிகுந்த விழிப்புடன் இருக்க வேண்டும். மனிதனுடைய உணர்வு நிலையில் மாற்றம் ஏற்படுகிறபோது அவர் ரொம்பவே எச்சரிக்கையாய் இருக்க வேண்டும். எடுத்து வைக்கிற ஒரு தவறான அடியில் எல்லாமும் தவறாகி விடக்கூடும். சந்திரன் செயல்படக்கூடிய, அதிகாரம் செலுத்தக் கூடிய ஒரு சாத்தியம் உள்ளது. ஆனால் பெண் வலுச்சண்டைக் காரியாகி விட்டால் தவற விட்டுவிடுவாள், ஆண் மீண்டும் வெற்றி பெற்று விடுவான். சூரியனின் அதிகாரமே தொடர்ந்து இருந்து கொண்டிருக்கும்.

அறிவில் இருந்து உள்ளுணர்வுக்கு, உள்ளுணர்வில் இருந்து அதற்கும் அப்பாற்பட்ட நிலைக்கு. இதுதான் வளர்ச்சிக்கு சரியான போக்காயிருக்கும். ஆணில் இருந்து பெண்ணுக்கு, பெண்ணில் இருந்து அதற்கும் அப்பாற்பட்ட ஒன்றிற்கு.

தற்போது ஒரு கேள்வி எழுப்பப்பட்டிருக்கிறது. ஆணைப் பொறுத்தவரை இது புரிந்துகொள்ளக் கூடியதுதான், ஆனால் பெண் என்கிறபோது? அவர்கள் சந்திர மையத்தில் இருக்கிறார்கள். அவர்கள் என்ன செய்ய வேண்டியிருக்கும்?

அவர்கள் சூரிய மையத்தை எதிர்த்தாக்கின்றி ஏற்றுக்கொள்ள வேண்டும். ஆண்கள் சந்திர மையத்தில் தங்களை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும் என்பது போலவே, பெண்களும் சூரிய மையத்தில் தங்களை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும். இல்லையேல், ஏதோவொன்று அவர்களுக்குள் மறுக்கப்பட்டதாகவே இருக்கும். அந்நிலையில் அவர்கள் முழுமையான பெண்களாய் இருக்க மாட்டார்கள். அவ்வாறே ஒர் ஆணும் சூரிய மையத்தில் இருந்து சந்திரனுக்கு, அறிவில் இருந்து உள்ளுணர்விற்குச் செல்ல வேண்டும். பெண் புரிந்து கொள்ளும் திறனை (intellect)யும் கற்க வேண்டும், வாழ்வின் தர்க்கத்தையும் (logic) கற்றுணர வேண்டும். பெண் வாழ்வின் நேசிப்பை அறிவாள், ஆண் வாழ்வின் தர்க்கத்தை அறிவான். ஆண் வாழ்வின் நேசிக்கும் தன்மையை அறிய வேண்டும். பெண்

வாழ்விலுள்ள தர்க்க நியாயங்களை அறிந்துகொள்ள வேண்டும். அந்நிலையில் உணர்வின் நடுநிலை அமைதி (balance) தோன்றும்.

பெண் சூரிய மையத்தைக் கிரகித்துக் கொள்ள வேண்டும் - அவளால் அது எளிதில் முடிகிறதுதான் காரணம் அவளுடைய சந்திரன் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. சூரியப்பாதையில் சந்திரன் செல்ல வேண்டும். அந்தப் பாதை கொஞ்சம் வேறுபட்டதாய் தெரியலாம். ஆணைப் பொறுத்தவரை சூரிய சக்தி சந்திரனுக்குக் கொண்டு செல்லப்பட்டாக வேண்டும். பெண்கள் விஷயத்திலோ சூரியப் பாதையில் தங்களுடைய சந்திரனை அவர்கள் செலுத்த வேண்டும், சக்தி பாயத் தொடங்கும்.

ஆனால் இருவருமே முழுமையை அடைந்தாக வேண்டும். உணர்வுநிலை உணர்வற்ற நிலையை உள்ளடக்குவதுடன், பிரிவு (division) கைவிடப்பட வேண்டும்.

இயேசு கூறுகிறார். 'ஓர் ஆண் பெண்ணாகிறான், ஒரு பெண் ஆணாகிறாள்' என்று. உங்கள் முழுமையை நீங்கள் ஏற்கிறபோது, உங்கள் இருப்புணர்வின் எந்தவொரு பகுதியையும் மறுப்பின்றி ஏற்கிறீர்கள் என்பதால் எல்லாமும் சமநிலையில் இருக்கிறது. உங்களுக்குள் ஆணும், பெண்ணும் சமநிலையில் இருக்கிறபோது அவர்கள் ஒருவரை ஒருவர் இல்லையென்றாக்கி விடுவார்கள். சற்றும் எதிர்பாராத விதத்தில் நீங்கள் தடையற்றவராகி விடுகிறீர்கள். இரண்டு சக்திகள் ஒன்றையொன்று காலி செய்கிற நிலையில் நீங்கள் அதன் பிறகும் தளையுண்டிருப்பதில்லை.

ஒன்று மற்றொன்றைவிட அதிகாரம் பெற்று விடுகிற நிலையில்தான் நீங்கள் அடிமைத்தளையில் அகப்பட்டிருப்பது. சூரியன் சந்திரனைவிட அதிகாரத்துடன் இருந்தால் உங்களுக்குள் இருக்கும் ஆணுடன், ஆண் மனதுடன் நீங்கள் தளையுண்டிருப்பீர்கள். சந்திரன் வலுவாக இருந்தால் அந்நிலையில் உங்களுக்குள் இருக்கும் பெண்ணுடன் பெண் மனதுடன் தளையுண்டிருப்பீர்கள். இரண்டுமே சமமாக, சமநிலையில் இருப்பின், அவை ஒன்றையொன்று இல்லையென்றாக்கி விடும், உடனே உங்களுடைய சக்தி தடையற்றதாகி விடும். தற்போது நீங்கள் எந்த வடிவிலும் இல்லை, நீங்கள் வடிவற்றவராகி விடுகிறீர்கள். வடிவற்றிருப்பதே பிரதிபை. அந்நிலையில் நீங்கள் மேலும் மேலும் உயரத் தொடங்குகிறீர்கள் - அந்த வளர்ச்சிக்கு ஒரு முடிவேயில்லை.

கடவுளை எல்லையற்றவர் - முடிவற்றவர் என்கிறபோது நாம் இதனையே கருத்தில் கொள்கிறோம். நீங்கள் தொடர்ந்து வளர்ச்சி காண்கிறீர்கள், நிறைவுற்றவராகிறீர்கள். குறைவற்றவராய் மேலும் மேலும் நிறைவுற்றவராகி விடுகிறீர்கள். ஒவ்வொரு கணமும் முழுமையாயிருக்கிறது. அடுத்து வரும் ஒவ்வொரு கணமும் அதைவிட முழுமையாகி விடுகிறது.

***பகவானே! 'யோகிகள் மற்றும் சாதுக்களின் மோசமான கூட்டுறவில்...' என்கிற சொற்றொடருக்கு விரிவாக விளக்கம் சொல்ல வேண்டுகிறோம்.***

- ஸ்வாமி யோக சின்மயா

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு.

அந்த இளைஞன் சிறியதோர் நகரத்தைச் சேர்ந்தவன். ஏதோவொன்றை தவறாகச் செய்த காரணத்தால் அவனுடைய மூக்கு வெட்டுப்பட்டிருக்கிறது. மக்கள் அவனுடைய மூக்கைப் பற்றி கேலி பேசவும் அவன் ரொம்பவே இழிவாக உணர்ந்தான். எல்லாரும் அவனை அவமதிப்பாக நடத்தினர். தன்னை மற்றவர்கள் மதிக்கவும், மரியாதையாக நடத்தவும் ரொம்ப சிந்தித்து ஒரு வழியைக் கண்டு பிடித்தான் அவன்.

அவன் ஒரு சாதுவைப் போல் உடையணிந்து மற்றோர் ஊருக்குச் சென்றான். ஒரு சாதுவிடம் இருக்கக்கூடிய அத்தனை துணைப் பொருள்களும் (accessories) அவனிடம் இருந்தன. ஒரு மரத்தடியில் தியானத்தில் அமர்ந்தான் அவன். ஆண்களும், பெண்களுமாய் அவனைச் சூழ்ந்து கொண்டனர். கடைசியில் அவன் கண்களைத் திறந்தபோது, 'தாங்கள் யார், எங்களுக்கு நீங்கள் என்ன செய்ய முடியும்?' என்று கேட்டனர்.

'என்னால் நிறையவே செய்ய முடியும். உங்களுடைய மூக்கை நீங்கள் அறுத்துக் கொண்டால் கடவுளை உங்களுக்குக் காட்டுவேன். மூக்கை அறுத்துக் கொண்டதால்தான் நான் எங்கும் கடவுளைத் தெளிவாகக் காண முடிகிறது. கடவுளை மட்டுமே' என்றான் அவன்.

உங்களைவிட முட்டாள்களை நீங்கள் நிறையவே காண முடியும் - அவர்கள் உங்களைப் பின்பற்றுகிறவர்களாகி விடுவார்கள்.

அவன் சற்று தொலைவில் இருந்த மரத்துப்பக்கம் அவர்களை அழைத்துச் சென்று அவர்களுடைய மூக்கை வெட்டினான். இரத்தம் வடியாமல் இருக்க மருந்து தடவினான். அவர்களுடைய காதில்,

'பாருங்கள், தற்போது கடவுளை நீங்கள் காணவில்லை என்று மற்றவர்களிடம் சொல்வதில் அர்த்தமில்லை. மற்றவர்கள் உங்களைப் பார்த்துச் சிரிப்பார்கள். உங்களை அவமதிப்பார்கள். ஊர் முழுதுக்கும் சிரிப்பை விநியோகிக்கிற பொருளாகி விடுவீர்கள். எனவே, கவனமாய் கேட்டுக் கொள்ளுங்கள், நீங்கள் இப்போது ஊருக்குள் போய் உங்களுடைய மூக்கு வெட்டுப்பட்டதால், கடவுளை உங்களால் காண முடிகிறது என்று சொல்லுங்கள்' என்று முணுமுணுத்தான்.

தங்களுடைய மடத்தனத்தால் அவமானத்துக்குள்ளான அவர்கள் அந்த யோசனையை ஏற்றார்கள். ஊரிலுள்ளவர்களிடம் சென்று ஆர்வத்துடன் சொன்னார்கள். 'எங்களால் கடவுளைக் காண முடிகிறது. கடவுள் எங்கு இருக்கிறார்' என்று.

ஊரில் உள்ளவர்கள் எல்லாரும் தங்களுடைய மூக்கை அறுத்துக் கொண்டு கடவுளை அறியும் முயற்சியை நிறைவேற்றினார்கள்.

இந்தியாவில் பல்வேறு சாதுக்களை நீங்கள் காண முடியும். ஏதோ ஒருவகையில் அவர்களுடைய மூக்கு வெட்டுப்பட்டிருக்கும். 'சாதுக்கள் மற்றும் யோகிகளின் மோசமான தோழமையில்...' என்று நான் சொல்கிறபோது இவர்களையே குறிப்பிடுகிறேன். அவர்கள் மூக்கு வெட்டுப்பட்டிருக்கிறது என்று நான் சொல்கிறபோது தங்களுடைய இருப்புணர்வின் ஒரு பகுதியை அவர்கள் மறுத்தார்கள் என்றே நான் கருதுகிறேன். தங்களுடைய முழு இருப்புணர்வை அவர்கள் ஏற்கவில்லை. ஒருவர் தன்னுடைய பாலுறவை மறுத்திருப்பார், ஒருவர் தன்னுடைய கோபத்தையும், இன்னொருவர் தன்னுடைய பேராசையையும் மறுத்திருப்பார். வேறொருவர் வேறொன்றை மறுத்திருக்கலாம். ஆனால், மறுக்கப்பட்ட பகுதி பழிவாங்க முற்படுகிறது. இவர்கள் உங்களுடைய மூக்கையும் அறுக்கப் பார்க்கிறவர்கள்.

நான், 'சாதுக்கள் மற்றும் யோகிகளின் மோசமான கூட்டுறவில்...' என்று சொல்கிறபோது யார் எதையுமே அறியாமல் இருந்துகொண்டு பலவற்றையும் சோதித்தறிய முற்படுகிறார்களோ அவர்களைத்தான் கருத்தில் சொள்கிறேன். அவர்கள் பலவழியிலும் தங்களை முடமாக்கிக் கொள்பவர்கள். நீங்கள் அவர்களோடு இருந்தால், நீங்களும் முடமாக்கப்பட்டு விடுவீர்கள்.

சின்மயா முடமாக்கப்பட்டவர். நான் அவரைக் கூர்ந்து நோக்குகிற போது, அவர் எங்கே முடமாக்கப்பட்டார் என்பதை என்னால் உணர முடிகிறது. அவர் அதைப் புரிந்து கொண்டுவிட்டால், அவரால் உடனே

அதை விடமுடியும். அதிலொன்றும் பிரச்சினை இருக்காது. மூக்கு மறுபடியும் வளர்ந்து விடும். அது ஒரு பிரச்சினையில்லை. அது நீங்கள் உண்மையாக வெட்டிக்கொள்வது போலல்ல. அவர் புரிந்து கொண்டதும் அது வளர்ந்து விடும்.

எடுத்துக்காட்டாக, தம்முடைய நகைச்சுவையை அவர் இழந்து விட்டார். அவரால் சிரிக்க முடிவதில்லை. அப்படியே சிரிக்க முயன்றாலும் - கடுமையாய் முயன்று - அவருடைய பொய்யான முகத்தைத்தான் நீங்கள் பார்க்க முடியும். அவர் ரொம்பவும் நேர்மையானவர். அதற்காக முகத்தைக் கடினமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்பதில்லை. நேர்மை என்பது உண்மையாயிருப்பது. கடுமையாய் இருப்பது (serious) என்பது ஒரு நோய். கடுமையையும் நேர்மையையும் ஒன்றாக எண்ணிக்கொண்டு விடக்கூடாது. நீங்கள் நீண்ட முகமுடையவராயிருக்கலாம். அது தொடர்பாய் எதுவும் செய்வதற்கில்லை. உண்மையில் நீங்கள் அறவே நகைச்சுவையுணர்வு அற்றவராயிருந்தால் உங்களுடைய வாழ்க்கை வறண்டு விடும். அது சாற்றினை இழந்து விடும். நகைச்சுவை சாறு போன்றது. அது உங்களைத் தடையின்றி தொடரச் செய்யும்.

ஆனால், இந்திய சாதுக்கள் கடுமையாயிருக்கிறார்கள். அவர்கள் தீவிரத்தன்மையோடு, சிரிக்காமல் இருப்பதற்குக் காரணம் எங்கே சிரித்து விட்டால் மக்கள் நம்மைச் சாதாரண ஆளாய் எண்ணிக்கொண்டு விடுவார்களோ என்பதுதான்.

ஒரு சாது எப்படிச் சிரிக்க முடியும். அவர் தம்மை வழக்கத்துக்குப் புறம்பானவராய் (extraordinary) காட்டிக்கொள்ள வேண்டியிருக்கிறதே. அது ஓர் அகந்தையின் பயணம்.

நான் உங்களைச் சாதாரணமாய் (ordinary) இருக்கும்படிச் சொல்கிறேன். அதை எல்லாரும் விரும்புவார்கள். நீங்கள் வழக்கத் துக்குப் புறம்பானவராய் உங்களைக் காட்டிக்கொள்ள முயன்றால் அதை யாரும் விரும்ப மாட்டார்கள். சாதாரணமாயிருப்பதில் ஒரு சவுகரியம், 'இவர் இன்னார்' என்று உங்களைக் குறிப்பாக யாரும் அடையாளம் கண்டுகொள்ள முடியாது. நீங்கள் எளிதாய் கூட்டத்தோடு கலந்து கொண்டுவிட முடியும். இருப்புணர்வின் முழுமையான சுதந்திரம் உங்களுக்குக் கிடைத்து விடுகிறது. இல்லையேல் நீங்கள் தொடர்ந்து உங்களை உயர்த்திப் பிடிக்க வேண்டியிருக்கும். அந்நிலையில் நீங்கள் ஒரு காட்சிப் பொருளாகி விடுகிறீர்கள். அதுவே

மன இறுக்கத்தைத் தரும், கடுமையை உண்டுபண்ணும், கனமான சுமையாகி விடும்.

தொடர்ந்து காட்சி மாடத்தில் இருக்க வேண்டிய அவசியமில்லை. உங்களால் தளர்வு நிலையில் இருந்து, சிரிக்க முடியும்.

மனிதனுக்குரிய எல்லாவற்றையும் பெற உங்களுக்கு நான் இடமளிக்கிறேன். அத்தனை மனிதப் பண்புகளும் உங்களுக்கு உரியவைதாம். மனிதர்களைப் போலவே சிரியுங்கள், அழுங்கள், புலம்புங்கள், வழக்கம் போலிருங்கள்.

நீங்கள் சாதாரணமாயிருந்தால் அகந்தை தோன்றாது. தான் அசாதாரணமானவர் - குறிப்பிடத்தக்கவர் என்கிற எண்ணமே அகந்தையைத் தோற்றுவிக்கிறது. எனவே மற்றவர்கள் எதைச் செய்தாலும் நீங்களும் அதைச் செய்ய வேண்டும் என்பதில்லை. அவர்கள் கால்களால் நடக்கும்போது, நீங்கள் தலையால் நடந்தால், 'உங்களைக் குறிப்பிடத்தக்கவர்' என்று அவர்கள் சொல்வார்கள். அவர்களுடைய புகழ்ச்சியை நீங்கள் பெரிதுபடுத்திக் கொள்ளாதீர்கள். ஒருமுறை புகழ்ச்சிக்கு மயங்கினால் நீங்கள் சிக்கிக்கொண்டு விடுவீர்கள் - பிறகு உங்கள் வாழ்க்கை நெடுகிலும் நீங்கள் தலைகீழாகவே நின்று கொண்டிருப்பீர்கள். தலைகீழாய் நின்றுகொண்டு நடனமாட முடியுமா என்ன? வாழ்க்கையின் ஒட்டுமொத்த அழகையும் நீங்கள் இழந்து விடுவீர்கள். அதிகபட்சம் சிரசாசனம் செய்துகொண்டு சடமாய் நிற்பீர்கள்.

'மோசனமான கூட்டுறவு' என்று நான் சொல்கிறபோது அகந்தையில் ஆழ்ந்திருப்பவர்களிடம் இருந்து அகந்தையின் சூழ்ச்சிகளை நீங்கள் கற்றுக் கொள்கிறீர்கள் என்பதையே நான் கருத்தில் கொள்கிறேன். யார் அகந்தையின் பயணத்தை மேற் கொண்டிருக்கிறாரோ அவரைத் தவிர்த்து விடுங்கள். அவரிடம் இருந்து விலகியிருங்கள். காரணம், ஏதோ ஒன்றை அவர் உங்களிடம் தொற்றச் செய்து விடுவார்.

மக்கள் அடுத்தவரைப் பின்பற்றுவதன் மூலம் கற்றுக் கொள்கிறார்கள். அப்படி ஒருவரைப் பற்றி நான் கேள்விப்பட்டது.

இத்தாலியில் தம்முடைய பயணத்தை நிறைவாக முடித்துக் கொண்டு, நியூயார்க் திரும்பிய ஒரு நிர்வாக அதிகாரி தம்மைச் சந்திக்க மதிய உணவுக்கு வருமாறு ஒரு நண்பனை அழைத்திருந்தார்.

'நீ இத்தாலியில் இருக்கும்போது கிளர்ச்சியூட்டக்கூடிய எதையேனும் செய்தாயா?' என்று நண்பர் கேட்டார்.

'ஓ. ஒரு பழமொழி உனக்குத் தெரியுமோ.' தோள்களைக் குலுக்கியபடி நிர்வாக அதிகாரி சொன்னார். 'ரோமில் இருக்கும்போது ரோமானியனாக இரு' என்பது.

'நல்லது. மிகச்சரியாகச் சொல். நீ என்னதான் செய்தாய்?'

'வேறென்ன, ஒரு அமெரிக்கப் பள்ளி ஆசிரியையை கற்பிழக்கச் செய்தேன்' என்றார் அந்த அதிகாரி.

அமெரிக்காவில் இருந்து இத்தாலிக்குச் சென்றது ஒரு பெண்ணைக் கெடுக்கத்தான். ஆனால், அது எப்படி 'ரோமில் இருக்கும்போது ரோமானியனாக இருப்பதாகும்?' இத்தாலியர்கள் அதைத்தான் செய்கிறார்கள் என்றாகிறது.

நான் 'மோசமான கூட்டுறவு' என்கிறபோது மனதின் பின்பற்றலை - போலித்தனத்தை (imitative)யே குறிப்பிடுகிறேன். மனம் தன்னையறியாமலே பின்பற்றுகிறது. நீங்கள் ஏமாற்று வேலைகளைக் கற்றுக் கொள்கிறீர்கள. அவற்றைக் கற்றுக் கொண்டு விட்டால் விடுவது கடினம். அதுவே இலாபம் தரும் பெரிய முதலீடாகி விடுகிறபோது விடுவது கடினமாகத்தான் இருக்கும்.

மக்கள் உங்களுடைய சிரிப்பில்லாத நகைச்சுவை உணர்வற்ற முகத்தைக் கண்டு இவர் ரொம்பக் கட்டுப்பாடானவர், ஒழுக்கமானவர் என்று உங்களைப் பாராட்டி மதிக்கத் தொடங்கலாம். அவர்கள் உங்கள் காலைத் தொட்டுக் கும்பிடலாம். அப்போது உங்களுக்குப் பழக்கமாகி விட்ட கடுமையை விடுவதென்பது உங்களுக்குச் சிரமமாய் தெரியும் - காரணம் அது உங்களை மகிழ்ச்சியடையச்செய்கிறதே. தற்போது உங்கள் பிணியை நீங்கள் இலாபகரமான முதலீடாக்கி விட்டீர்கள்.

அதை விடுங்கள். உங்கள் வாழ்க்கை வெளிப்புறத்தில் இருந்து வாழப்பட வேண்டியதல்ல, உள்ளார்ந்து வாழப்பட வேண்டியது. மக்களின் வெற்றான புகழ்ச்சியைப் பொருட்படுத்தாதீர்கள். நீங்கள் யார் என்பதில் கவனமாயிருங்கள். உங்கள் இருப்புணர்வில் நீங்கள் உவகையும், மகிழ்ச்சியும் அனுபவிக்கிறவராயிருந்தால், உள்ளே ஆனந்தமாய் நடமிடும் ஓர் ஆன்மாவை நீங்கள் கொண்டிருந்தால் அதுவே போதுமானது. அப்போது எல்லாருமே உங்களை வெறுத்தாலும், கண்டனம் செய்தாலும் அவற்றை ஏற்றுக் கொள்ளுங்கள். ஆனால் ஒருபோதும் உங்கள் உள்ளொளியுடன்

இணக்கத் தீர்வு (compromise) கொண்டு விடாதீர்கள். காரணம் நீங்கள் யார் என்பதை முடிவாக அதுதான் தீர்மானிக்கப் போகிறது. மக்கள் எதைச் சொன்னாலும் தொடர்பற்றதாகவே இருக்கும். 'நீங்கள் யார்?' என்பதே தொடர்புடையதாய் இருப்பது. உங்களுக்கு நீங்கள் என்னை செய்கிறீர்கள் என்பதை, உட்சென்று, ஆராய்ந்து பாருங்கள்.

நீங்கள் மகிழ்ச்சியாயிருந்தால் எந்தப் பிரச்சினையும் இல்லை. உங்களுடைய கடுமையில் – தீவிரத்தன்மையில் (seriousness) நீங்கள் மகிழ்ச்சியடைவீர்கள் என்றால் அப்போதும் பிரச்சினை இல்லை. அது உங்களுடைய தேர்வு. ஆனால், மகிழ்ச்சியாகவும் அதே சமயத்தில் கடுமையாகவும் இருக்கக்கூடிய ஒரு மனிதனை நான் பார்த்த தில்லை.அவன் மகிழ்ச்சியில் திளைக்கலாம், கொண்டாடலாம், தன்னுடைய மகிழ்ச்சியை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளலாம், அவன் சிரித்துக்கொண்டே இருக்கலாம்.

சிரிப்பு ஆன்மா சார்ந்தது. நீங்கள் உள்ளார்ந்து சிரிக்கிறபோது எல்லா இறுக்கங்களும் மறைந்து விடுகின்றன. நீங்கள் கவனித்தது உண்டா? நீங்கள் ஆழ்ந்து சிரிக்கிறபோது சற்றும் எதிர்பாராத விதமாய் உங்களைச் சுற்றியுள்ள சுவர்கள் மறைந்து, திறந்த வெளியில் இருக்கிற உணர்வைப் பெறுவீர்கள். உங்களால் சிரிக்க முடிந்தால், தணிவு நிலை அடைய முடியும்.

'ஜென்' (Zen) மடாலயங்களில் துறவிகளுக்குப் போதிக்கப்படுகிற முதல் செய்கை காலையில் எழுந்ததும் சிரிக்க வேண்டும் என்பதுதான். சிரிப்புடன் நாளை தொடங்க வேண்டும் என்று அவர்கள் அறிவுறுத்தப்படுகிறார்கள். அது நமக்கு நகைப்பை உண்டுபண்ணலாம் - என்ன இது காலையில் படுக்கை விட்டு எழும்போதே எந்தக் காரணமும் இல்லாமல் முதல் காரியமாய் சிரித்து வைக்க வேண்டுமா என்று. தொடக்கத்தில் சிரமமாகத்தான் இருக்கும். காரணம், சிரிக்கும்படியாய் எதுவும் இல்லையே. ஆனால், அது ஒரு தியானம், கொஞ்சம் கொஞ்சமாய் ஒருவர் அதனுடன் இசைவாகி விட முடியும், சிரிப்பதற்குக் காரணம் தேவையில்லை என்பதை அப்போது அவர் அறிவார். சிரிப்பு தன்னளவில் ஒரு சிறந்த உடற்பயிற்சியாகவும் இருக்கிறது. ஏன் காரணத்துக்காகக் காத்திருப்பது? அது நாள் முழுவதையும் பொழுதுபோக்காய் உணரச் செய்கிறதே!

நான் சூரிய, சந்திர வரையறைகளுடன் (terms) சொல்கிறேன். சூரியனுக்குரியவர் கடுமையானவராயிருப்பார்; சந்திரனுக்குரியவர் கடுமையற்றவராயிருப்பார்.சூரிய நபரால் சிரிக்க முடியாது. அது

கடினமாயிருக்கும். சந்திர நபரோ எளிதில் சிரித்து விடுவார். அந்தச் சிரிப்பு இயல்பானது, தன்னிச்சையாய் வருவது. சந்திரனுக்குரிய நபருக்கு எந்தச் சூழ்நிலையிலும் சிரிப்பு தோன்றும். அவர் சிரித்தபடி இருப்பார். ஆனால், சூரிய நபரோ இறுக்கமானவர். நீங்கள் ஒரு 'ஜோக்' சொன்னால்கூட, அவர் சிரிப்பதற்கு சிரமப்படுவார். நீங்கள் ஏதோ ஒரு கணக்குப் புதிரைக் கொடுத்துவிட்டது போல், அந்த ஜோக்கை கூர்ந்து கவனித்துக் கொண்டிருப்பார்.

அதனால்தான் ஜெர்மானியர்களால் நகைச்சுவைகளை (jokes)ப் புரிந்துகொள்ள முடிவதில்லை. ப்ரியா ஒரு 'ஜோக்'கை ஹரிதாஸிடம் சொன்னாள். ஹரிதாஸிற்கு அது இன்னும் பிடிபடவில்லை.

சிற்றுண்டி விடுதியில் நுழைந்த ஒருவன், காபி வேண்டும் என்று கேட்டான்.

விடுதியின் மேசைப்பணியாள், 'உங்கள் காபி எப்படி இருக்கணும்?' என்று வினவினான்.

அந்த ஆள் சொன்னான், 'நான் விரும்புகிற சூடான (உணர்ச்சித் துடிப்பு) பெண்களைப்போல், காபியும் சூடா இருந்தாத்தான் எனக்குப் பிடிக்கும்' என்று.

பணியாள் கேட்டான். 'கறுப்பாகவா அல்லது வெள்ளையாகவா?' என்று.

அதைப்பற்றி நீங்கள் சிந்திக்கத் தொடங்கினாலே அது கடினமாகி விடும், வேறு மாதிரி என்றால் ரொம்ப எளிமை. நீங்கள் வேதங்களைப் படிக்கிறார் போல் கருத்தூன்றியவராய் (serious) இருந்து விட்டால் அப்போது அதைத் தவறவிட்டு விடுவீர்கள்.

தீவிரத்தன்மையுடன் கூடிய மனிதர்களைத் தவிர்த்து விடுங்கள், குறிப்பிடத்தக்கவராய் தங்களைக் காட்டிக்கொள்ள முயல்பவர்களையும் தவிர்த்து விடுங்கள். குறிப்பிடத்தக்க ஒருவராய் ஆகிவிட எண்ணாமல், தங்கள் வாழ்க்கையை எளிமையாய் வாழ்பவர்களோடு இசைவாயிருங்கள். உலகில் அவர்கள்தாம் உண்மையிலேயே ஆன்மா சார்ந்த மனிதர்கள். சமயம் சார்ந்த தலைவர்கள் உண்மையான ஆன்மா சார்ந்தவர்களல்லர் – அவர்கள் அரசியல்வாதிகள். அவர்கள் அரசியலில் இருந்திருக்க வேண்டியவர்கள். அவர்கள் மதத்தைத் தங்களுடைய சொந்த நலனுக்காகப் பயன்படுத்திக் கொள்பவர்கள். தேவாலயங்கள் மருத்துவமனைகளாக அல்லது இடுகாடுகளாகத் தெரியுமளவிற்கு மதத்தை அவர்கள் கடுமையானதாக்கி விட்டார்கள்.

மகிழ்ச்சியும் இன்பமும் ஒரேயடியாய் தொலைந்து போயிற்று. ஒரு தேவாலயத்தில் நீங்கள் நடனமாட முடியாது. ஒரு தேவாலயத்தில் நீங்கள் சிரிக்க முடியாது. தேவாலயங்களில் இருந்து சிரிப்பு வெளியேறி விட்டது – ஆனால் ஒன்றை நினைவில் கொள்ளுங்கள் – தேவாலயத்தை விட்டு சிரிப்பு வெளியேறிய அன்றே கடவுளும் அதைவிட்டுப் போயாயிற்று.

பிரசித்தமான கதையொன்றைச் சொல்கிறேன் உங்களுக்கு.

சாம்பர்ன்ஸ் ஒரு தென் அமெரிக்க நீக்ரோ இனத்தவர். வெள்ளையர்களுக்கான தேவாலயத்தில் அவருடைய நுழைவு மறுக்கப்பட்டது. அவருக்குரிய தேவாலயத்துக்குச் சென்று பிரார்த்தனை செய்தால் அவர் அதிக நன்மையடையலாம் என்று அந்தத் தேவாலயத்தைப் பராமரிப்பவர் (sexton) சொன்னார்.

மறு ஞாயிற்றுக்கிழமையும் அவர் அங்கே வந்தார். அந்த ஆலயப் பராமரிப்பாளரிடம் சொன்னார். ‘கலக்கமடைய வேண்டாம். நான் அடாவடியாக உள்ளே நுழைந்து விடமாட்டேன். தங்களுடைய ஆலோசனை எனக்கு நல்ல பயனை அளித்தது என்பதைத் தங்களிடம் சொல்வதற்காகவே வந்தேன். நான் கடவுளிடம் பிரார்த்தித்தபோது அவர் என்னிடம் சொன்னார். ‘சாம், அதைப்பற்றி வருத்தம் கொள்ளாதே. அந்த தேவாலயத்தில் நுழைவதற்கு நானே வருஷக்கணக்காய் முயற்சி பண்ணிட்டிருக்கேன். இன்னும் எனக்கே முடிந்தபாடில்லை’ என்று.

ஆலயத்தில் இருந்து சிரிப்பு போய்விட்டது. இனி சிரிப்பை உங்கள் ஆலயமாக்குங்கள். கடவுள் தன்மையுடன் ஆழ்ந்து தொடர்பு கிடைக்கப்பெற்றதாய் உணர்வீர்கள்.

***சாத்தியப்படுகிற ஒவ்வொரு நிலை (situatioin) யையும் இந்த அகந்தை தனக்கு இரையாக்கிக் கொள்வதாய் தெரிகிறது. அத்துடன், எந்த நிலை அதற்கு அதிக வலிமையையும் ஊட்டத்தையும் தருகிறதோ அது ஆன்மா சார்ந்த நிலைகளாய் கருதப்படுகிறது. நான் சந்நியாசத்தை மேற்கொள்ள விரும்புகிறேன். ஆனால் ஒட்டுமொத்த அகந்தையும் மிகக் கடுமையான முறையில் நேரிட்டிருப்பதை என்னால் முன்கூட்டியே உணர முடிகிறது. உண்டாலும் பட்டினி கிடந்தாலும், பின்வாங்கினாலும் மோதினாலும் அது எந்த வழியிலும் ஊட்ட உணவைப் பெற்று விடுகிறது. என்ன செய்யட்டும்?***

இந்தக் கேள்வி மைக்கேல் வைஸ் கேட்டது.

மதிநுட்பமுடையவராயிருங்கள். என்னைக் கவனித்திருங்கள். அகந்தையை என்னிடம் தந்துவிடுங்கள். அதுவே சந்நியாசம் என்பது. நீங்கள் சந்நியாசம் மேற்கொண்டு விட்டால் அகந்தை அப்போது தன்னைத்தானே உண்டு தீர்க்கும். நான் சந்நியாசத்தை வழங்குகிறேன். நீங்கள் அதை ஏற்றுக்கொண்டு விடுங்கள். அதற்கான துணிவு அந்த அளவு உங்களிடம் இருந்து விட்டால் அதன்பிறகு அகந்தை இருக்காது. நீங்கள் அதற்காக எதையும் செய்ய வேண்டியதில்லை.

என்னிடம் நீங்கள் வரும்போதெல்லாம் நான் உங்களுக்கு சந்நியாசத்தை வழங்க முயற்சிக்கிறேன். ஆனால் அவர்கள் ரொம்பவும் முட்டாள்தனமுடையவர்களாய் இருக்கிறார்கள். 'நாங்க யோசிக்கணுமே' என்கிறார்கள். தங்களை சாமர்த்தியக்காரர்களாய் அவர்கள் எண்ணிக் கொள்கிறார்கள். அதைப்பற்றி அவர்கள் சிந்திக்கத் தொடங்கியிருக்கிறார்கள். 'என்றாவதொரு நாள் அவர்கள் வருவார்கள்' - அவர்கள் வருவார்கள். சந்நியாசம் வேண்டுகிறார்கள், நானும் வழங்குகிறேன். நான் அவர்களுக்கு முற்றிலும் வித்தியாசமான ஒன்றையே கொடுக்கிறேன். அது ஒரு வெகுமதி. நான் கொடுக்கிற போது வாங்காமல் இருந்துவிட்டு, பிறகு வந்து யாசிக்கிறார்கள். அந்நிலையில் அதன் நேர்த்தியே போய் விடுகிறது. நீங்கள் சந்நியாசத்தை மேற்கொள்வதற்குக் காரணம் அது நீங்கள் எடுக்கிற முடிவு. அந்நிலையில் அகந்தை உள்ளே நுழைந்து விடக்கூடும். நீங்கள் அதை என்னிடம் விட்டுவிட்டால் பிறகு அது என்னுடைய பிரச்சினை யாகி விடும். அதைப்பற்றி நீங்கள் கவலைப்படும்படி இருக்காது.

உங்கள் அகந்தையை என்னிடம் விட்டுவிடுங்கள், அதுபற்றிய எல்லாவற்றையும் மறந்துவிட்டு வாழத் தொடங்குங்கள்.

ஆக, மைக்கேல் வைஸ், 'வைஸ்' (மதிநுட்பத்துடன்)ஸாக இருங்கள்.

> ***'உங்கள் அறிவுரைகளின் சுவாரசியமான சங்கதிகளைக் கொண்டு இந்த மனதில் அடைசலை நீங்கள் உண்டு பண்ணுகிறீர்கள். பிறகெப்படி நாங்கள் அந்த மனதை விட வேண்டும் என்று எண்ணுகிறீர்கள்?'***

நீங்கள் அதை விடவில்லை என்றால் தன்னுடைய சொந்த இசை வில் தானே கழன்று கொண்டு விடும்படி நான் அதைக் கனமானதாக்கி விடுவேன் - அப்போது உங்களால் அதை வைத்திருக்க முடியாது.

என்னுடைய அறிவுரைகள் எல்லாம் அதைப் பற்றியதுதான். நான் மேலும் மேலும் பளுவை ஏற்றுகிறேன். சுமக்கிற ஒட்டகத்தைக் கீழே தள்ளும் கடைசி வைக்கோலுக்காக நான் காத்திருக்கிறேன்.

உங்களுக்கும் எனக்கும் இடையிலான போட்டி இது.

நீங்கள் வெல்லப்போவதில்லை என்று நம்பலாம்.

*என் பிரியத்துக்குகந்த பகவானே, நான் ஞானம் பெற்றதாக உணரும்போது:*

*1. நான் உங்களிடம் சொல்லவா?*

*2. தாங்கள் என்னிடம் சொல்கிறீர்களா?*

*3. என்னுடைய அகந்தைதான் இந்தக் கேள்வியைக் கேட்கிறதா?*

இம்மூன்று கேள்விகளுக்குமே இல்லை என்பதுதான் பதிலாக இருக்கும். நீங்கள் ஞானமடையும் போது அந்த ஞானமே எல்லாவற்றையும் சொல்லி விடுகிறது. வெளிக்காட்டி விடுகிறது. நீங்களாக என்னிடம் சொல்ல வேண்டும் என்கிற அவசியம் இல்லை. நானாக உங்களிடம் சொல்கிற அவசியமும் இல்லை. ஞானம் சுய நிரூபணமுடையது அதற்குச் சான்றிதழ் தேவைப்படாது. இரவில் சற்றும் எதிர்பாராத விதமாய் வெளிச்சக்கீற்று ஒன்று பிரவேசிப்பதைப் போல அது வருகிறது. அதற்கு விளக்கம் தேவைப்படுவதில்லை. அதைப்பற்றி எதுவும் சொல்ல வேண்டியது இல்லை. உங்களால் எதுவும் சொல்ல முடியாதபடிக்கு உங்களுடைய எண்ண ஓட்டம் தடைப்பட்டு விடும். அது பெருமளவில் அமைதியானது. எவரும் எதையும் கேட்கத் தேவையில்லாத அளவுக்கு அது நம்பகமானது, உறுதியானது. ஆக என்னுடைய தரப்பில் இருந்தோ, உங்களுடைய தரப்பில் இருந்தோ எதுவும் சொல்ல வேண்டியிருக்காது.

'என்னுடைய அகந்தைதான் இந்தக் கேள்வியைக் கேட்கிறதா?' இல்லை. அகந்தை ஒருபோதும் ஞானத்தைப் பற்றிக் கேட்பது கிடையாது. அது ஞானத்தைப் பற்றிக் கேட்க முடியாது. காரணம், ஞானமே அதன் மரணமாய் அமையப் போவது.

நீங்கள் தியானிக்கவும், நேசிக்கவும், சிரிக்கவும் முனைகிறபோது, அதற்குமப்பால் உள்ள பரிமாணத்தை எட்டுகிறபோது 'அது நடந்து விட்டால். அதை யார் எனக்குச் சொல்வது?' என்கிற எண்ணம் இயல்பாகவே தோன்றும். காரணம் இதுவரையில் எது நடந்தாலும் அதை யாராவது உங்களுக்கு வந்து சொல்ல வேண்டியிருக்கும். இந்தக்

கேள்வி மாப்ரேம் ஜீவனுடையது. இது சந்திரனில் ஒருமுகப்பட்ட ஒரு நபருக்கு ரொம்பவே அதிகம்.

ஒரு பெண் காதல் வயப்படுகிறபோது, அந்த ஆண் அவளைக் காதலிப்பதை அவனாகச் சொல்லட்டுமென்று காத்திருக்கிறாள். 'நான் உன்னைக் காதலிக்கிறேன்' என்பதைக்கூட அவள் சொல்ல மாட்டாள். அறிவு சார்ந்த மையத்தைப் போல் சந்திர மையம் அத்தனை உறுதியானதில்லை. சந்திர மையம் மங்கலானது, தெளிவற்றது. தான் உணர்வதை இன்னதென்று சொல்ல முடிவதில்லை ஒருவருக்கு. ஆண் வந்து சொல்கிற வரை தன்னுடைய காதலைப்பற்றி நிச்சயமற்றவளாகவே பெண் இருப்பாள். 'ஆம், அது நிகழ்ந்திருக்கிறது' என்று அவன்தான் அவளுக்கு உறுதிப்படுத்த வேண்டியிருக்கும். அதனால்தான் பெண்கள் காதலை முந்திக்கொண்டு சொன்னதாய் தெரியவில்லை. அவள் தன் காதலை முன்மொழிவாளாயின் சம்பந்தப்பட்ட ஆண் உடனடியாய் அவளைவிட்டு ஓட முற்படுகிறான். காரணம் இவளிடம் பெண்மையைவிட ஆண்மை அதிகம் இருக்குமோ என்கிற எண்ணம். பெண்ணின் கோரிக்கை அறிவீனமாய் கருதப்படுகிறது. சந்திரன் ஒருபோதும் முன்மொழிவதில்லை, அது, காத்திருக்கிறது.

ஆக, இந்தக் கேள்வி எதற்காக எழுந்தது என்று எனக்குப் புரிகிறது. உங்கள் காதலைப்பற்றிக் கூட நீங்கள் உறுதியாயில்லை என்றால் கடவுளின் வருகையை யார் உங்களிடம் தெரிவிக்கப் போவது? யாரேனும் வந்து உங்களுக்கு நம்பிக்கையூட்ட வேண்டியிருக்கும்தானே? இல்லை, தேவைப்படாது.

கடவுள் சூரிய மையத்திலோ சந்திர மையத்திலோ வந்து நிகழ்த்துவதில்லை. அது இரண்டுக்குமப்பால் நிகழ்கிறது. அது பிரதிபையில் நிகழ்கிறது. முற்றிலும் மறைபொருளான, அதே சமயத்தில் முற்றிலும் நிச்சயமான அறிவுக்குமப்பாற்பட்ட நிலையில் அது நிகழ்கிறது.

உங்களுடைய ஞானத்தால் ஒட்டுமொத்த உலகே மாறிவிடுகிறது. நீங்கள் மட்டுமல்ல, உங்களுடைய பழைய உலகமும் மறைந்து விடும். முற்றிலும் புதியதோர் அனுபவம், முற்றிலும் புதியதோர் பிரபஞ்ச இருப்பு.

***பகவானே, அது எவ்வகையிலும் சாத்தியம் என்பதை நான் முதலில் நம்பவில்லை. ஆனால் எப்படியோ உங்களைப் பின்பற்றி இருந்தேன். அதன்பின், அத்தனை துரிதமாய்***

*அது நிகழும் என்று நான் நினைக்கவில்லை. ஆனால் எப்படியோ உங்களைத் தொடர்ந்திருந்தேன். அந்நிலையில் சாத்தியமற்றதும் உங்கள் வழியே சாத்தியமாயிற்று. நெருக்கமற்றிருந்ததும் நெருக்கமாயிற்று.*

*நான் சில அடிகள் மட்டுமே எடுத்து வைத்தேன் என்பதை அறிந்திருந்தும், இது பயணத்தின் முடிவென்பதை உணரும்போது மேலும் மேலும் முககியத்துவம் கூடுகிறது. அதில் வேதனையும் இருக்கிறது, இனிமையும் இருக்கிறது. உங்களை இனியும் பார்க்க முடியாதோ என்பதால் வேதனை. உங்களை எங்கும் உணர முடியும் என்பதால் இனிமை. எங்கே உங்களுக்கு நன்றி சொல்லாமல் போய்விடுவேனோ என்றிருக்கிறது. நான் தற்போது அதை உங்களுக்குச் சொல்லலாம்தானே... எனக்காக நீங்கள் இன்னும் இருக்கிறீர்கள் அல்லவா?*

இது ஸ்வாமி அஜீத் சரஸ்வதியிடமிருந்து. இது உங்கள் ஒவ்வொருக்குமானதுதான் - உங்கள் ஒவ்வொருவருடைய விருப்பமும் இதில் உணர்த்தப்படுகிறது. நீங்கள் எப்படியோ (somehow) என்னை வந்தடைந்திருக்கிறீர்கள். இந்த 'எப்படியோ' என்பது முக்கியம். நீங்கள் தெரிந்தே என்னுடன் இருப்பதில்லை. காரணம், நீங்கள் எங்கே விடப்படுவீர்கள் என்பது உங்களுக்குத் தெரியாது. நீங்கள் ஆழ்ந்து சிந்தித்தோ, தர்க்கரிதியாகவோ, அறிவின்பாற்பட்டோ என்னுடன் இருக்க முடியாது. காரணம் அறிந்திராத ஒன்றினுள் உங்களை நான் அழைத்துச் செல்கிறேன். நீங்கள் ஒருபோதும் இருந்திராத ஏதோவோர் இடத்துக்கு உங்களை இட்டுச் செல்கிறேன். 'எப்படியோ' என்பது சரியான வார்த்தை - எப்படியோ நீங்கள் - என்னுடன் வருகிறீர்கள். ஒரு பித்துக்குளித்தனமான அன்பில் நீங்கள் என்னுடன் வருகிறீர்கள். அந்நிலையில் மெள்ள மெள்ள செயல்கள் நிகழத் தொடங்குகின்றன. உண்மையில் அத்தனை சீக்கிரம் நிகழுமென்று நீங்கள் எதிர் பார்த்திருக்க மாட்டிர்கள்.

எப்போதேனும் வெளிச்சம் வருமா என்று நம்ப முடியாத அத்தகையதொரு இருட்டில் நீங்கள் இருந்து கொண்டிருக்கிறீர்கள். அது நிகழத் தொடங்குகிறபோது கிட்டத்தட்ட நடக்க முடியாத ஒன்று நடப்பதாவே தோன்றும். உங்கள் கண்களையே உங்களால் நம்ப முடியாமல் போகும். ஏதோ கனவுலகில் நடக்கிற மாதிரி இருக்கும். ஆனால் கொஞ்சம் கொஞ்சமாய் அந்தக் கனவு நிஜமாகி விடுகிறது, நிஜம் கனவாகி விடுகிறது.

அஜீத்திற்கு நடந்ததுதான் மிகச் சரியாக உங்கள் எல்லாருக்கும் நடக்கவிருக்கிறது.

மீண்டும் சொல்கிறேன்: 'இதுவெல்லாம் நடக்குமா என்று முதலில் நான் நம்பவில்லை. ஆனால் எப்படியோ உங்களை நான் பின்பற்றுகிறேன்.' என்னைப் பின்பற்றுகிறவர்களெல்லாம் ஏதோ ஒருவகையில் துணிச்சல்காரர்கள்தாம். என்னோடு வாருங்கள் என்று நான் உங்களுக்கு நம்பிக்கையூட்ட முடியாது. காரணம், நீங்கள் ஒருபோதும் அறிந்திராத ஒன்றுபற்றி உங்களுக்கு நம்பிக்கையூட்ட எந்த வழியும் இல்லை. நீங்கள் ஒருபோதும் கேள்விப்பட்டிராத ஒன்று பற்றி எப்படி உங்களுக்கு நம்பிக்கையூட்டுவது? அதற்கு வழியில்லை. நீங்கள் என்னை நம்ப வேண்டும், எப்படியோ நீங்கள் என்னுடன் வந்தாக வேண்டும்.

நான் வாதிக்கப்போவதில்லை. காரணம், நான் உங்களிடம் பேசப்போகிற அனுபவம், உங்களிடம் கையளிக்கப்போகிற அனுபவம் விவாதிக்கக் கூடியதல்ல. அது விவாதத்துக்கு அப்பாற்பட்டது. நீங்கள் நம்பவில்லை என்றால் நான் உங்களுக்கு நம்பிக்கையூட்ட முடியாது. உங்களால் நம்ப முடிந்தால் நான் உங்களை மேலும் அழைத்துச் செல்வேன். அந்நிலையில் உங்களை நான் உண்மையாகவே எனது ஆளுகையில் கொண்டிருப்பேன்.

ஆக, மகிழ்ச்சி வெறி கொண்டவர்கள் (mad) மட்டும் என்னுடன் வாருங்கள். யார் திறமைசாலிகளோ அவர்களுக்கு நான் அனுகூலப்பட மாட்டேன். அவர்கள் இன்னும் கொஞ்சம் அலைந்து திரிந்து, இருட்டில் தடுக்கி விழுந்து, தள்ளாட வேண்டியிருக்கும்.

அறிந்திராத ஒன்றின் வெகுமதியை நான் உங்களுக்கு வழங்குகிறேன். ஆனால், அதைப் பெறுவதற்கு நீங்கள் தயாராயிருக்க வேண்டும். ஏதோ ஒருவகையில் நீங்கள் தயாராக முடிகிறது என்பதும் உண்மைதான். அது ஓர் அற்புதம், என்னோடு இருக்க முடிவது ஓர் அற்புதம். அது தர்க்க ரீதியாய் நிகழ முடியாது, ஆனால் அது நிகழ்கிறது. அதனால் தான் மக்கள் உங்களிடம் சொல்கிறார்கள். நீங்கள் மனவசியம் செய்யப்பட்டீர்கள் என்று. ஒருவகையில் அவர்கள் சொல்வது சரிதான். நீங்கள் மனோவசியம் செய்யப்படவில்லை. ஆனால் ஒருவகை மயக்கத்தில் (drunkenness) இருக்கிறீர்கள்.

'அதன்பின் அத்தனை துரிதமாய் அது நிகழும் என்று நான் நினைக்கவில்லை. ஆனால் எப்படியோ உங்களைத் தொடர்ந்

திருந்தேன். சாத்தியமற்றதும் உங்கள் மூலம் சாத்தியமாயிற்று. நெருக்கமற்றதும் நெருக்கமாயிற்று.'

நான் சில அடிகளே எடுத்து வைத்தேன் என்பதை அறிந் திருந்தும், இது பயணத்தின் முடிவென்பதை உணரும்போது மேலும் மேலும் முக்கியத்துவம் கூடுகிறது. அது வேதனையாகவும், இனிமையாகவும் இருக்கிறது. உங்களை இனியும் பார்க்க முடியாதோ என்ற வேதனை...'

'உங்களை நீங்கள் பார்க்கிற கணத்தில், என்னை அதற்கு மேலும் பார்க்க மாட்டீர்கள். காரணம், அப்போது இரண்டு வெறுமைகள் ஒன்றையொன்று எதிர்கொள்ளும்படி இருக்கும், இரண்டு நிலைக் கண்ணாடிகள் ஒன்றையொன்று எதிர்கொள்ளும்படி இருக்கும். அவை முடிவின்றிப் பிரதிபலிப்பவை. ஆனால் எதுவும் பிரதிபலிக்கப்பட வில்லை.

'அது வேதனையாயும், இனிமையாயும் இருக்கிறது; உங்களை இனியும் பார்க்க முடியாதோ என்பதால் வேதனை, எங்கும் உங்களை உணர முடியும் என்பதால் இனிமை. 'ஆம், இந்த ஆசனத்தில் என்னை நீங்கள் பார்க்க முடியாமல் போகிற கணத்தில், உங்களால் எங்கும் என்னைப் பார்க்க முடியும்'.

எங்கே 'உங்களுக்கு நன்றி' என்று நான் நன்றி சொல்ல முடியாமல் போய்விடுமோ என்று இருக்கிறது. நான் அதை இப்போது உங்களுக்குச் சொல்லலாம்தானே. எனக்காக நீங்கள் இன்னும் இருக்கிறீர்கள் அல்லவா?

அதற்கு அவசியமே இல்லை. அஜீத்தினுடைய முழு இருப்புணர்வுமே என்னை நோக்கி நன்றி கூறுவதாயிருக்கிறது. அதை வார்த்தையால் சொல்ல வேண்டும் என்பதில்லை... நீங்கள் சொல்வதற்கு முன்பாகவே அதை நான் காது கொடுத்துக் கேட்டாயிற்று.

*சூத்திரம் - 36* *'ஸத்வ புருஷயோ அத்யந்தா ஸங்கீர்ணயோ ப்ரத்யா விசேஷாத் போக: பரார்த்தத் வாத்ஸ்வார்த்த ஸம்யமாத் புருஷஞானம்'*

அனுபவம் என்பது ஆத்மனையும் சத்வத்தையும் வேறுபடுத்திக் காண இயலாததன் விளைவேயாகும். இருப்பினும் அவை முற்றிலும் வேறுபட்டவையாகவே இருக்கின்றன.

சுய அக்கறையின் பேரில் சிந்தனையைச் செலுத்த ஆத்மனைப் பற்றிய அறிவு உண்டாகும். அது மற்றவற்றைப் பற்றிய அறிவில் இருந்து பிரித்து வேறாக்கப்பட்டதாகும்.

( ஆத்மன் - சுத்த பிரக்ஞை
சத்வம் - சுத்த அறிவு )

*சூத்திரம் - 37* *'தத ப்ராதிப, ச்ராவண, வேதனா ஆதர்ச ஆர்வாத, வார்த்தா, ஜாயந்தே'*

அதிலிருந்து பிரதிபா அறிவும், ஒலி கேட்டல் (அமானுஷ்யமான) தொட்டுணர்வு, சுவை, வாசனை முதலியவையும் உண்டாகின்றன.

*சூத்திரம் - 38* *'தே ஸமாதா உபசர்கா வினுாயத்தானே சித்தய'*

இதுவரை கூறப்பட்டவை உலக வாழ்வில் அற்புத சக்திகள் என்றாலும் அவை சமாதிக்குப் பெரிய இடையூறுகளாகும்.

---

* *சமாதி - நிலைத்த மனத்தால் தொடர்ந்து இடையீடு இன்றிப் பெறும் இருப்புணர்வு.*

பதஞ்சலியின் யோக சூத்திரத்தின் கடைசி பாகமான கைவல்ய பாதம் - பதஞ்சலி சூத்திரங்களிலேயே மிகவும் முக்கியமானது. கைவல்யம் முடிவான விடுதலையைக் குறிக்கிறது. அது உணர்வு நிலையின் ஒட்டுமொத்த சுதந்திரம். அதற்கு எவ்விதக் கட்டுப்பாடும் இல்லை. அது மாசு என்றால் என்னவென்றே அறியாதது. கைவல்யம் ஓர் அழகான வார்த்தை. அதன் பொருள் முழுமையான தனிமை.

தனிமை (aloneness) என்கிற வார்த்தை புரிந்து கொள்ளப்பட வேண்டியது. அது துணையற்றிருத்தல் (loneliness) என்பதாகாது. துணையற்றிருப்பது என்பது நீங்கள் வேறொருவரின் துணையை எதிர்பார்த்திருக்கிற, விரும்புகிற நிலையைக் குறிப்பது. தனிமை என்பது ஏகாந்தம் - ஒருவர் தன்னை உணர்ந்து கொள்ளும் நிலை. தனிமை ரொம்ப நேர்த்தியானது. வேறு யாரும் தேவைப்படாத அளவுக்கு நீங்கள் நிறைவாயிருக்கும் நிலை தனிமை. மற்றவர்கள் உங்கள் உணர்வில் இருந்து முற்றாய் மறைந்து விட்டிருப்பார்கள். வேறு யாரும் மறைமுகமாகக் கூட உங்களைப் பின்தொடர்வதில்லை. யாருடைய நிழலும் உங்கள் மீது விழாது. உங்களுக்குள் கனவைத் தோற்றுவிக்கவோ உங்களை வெளியே இழுக்கவோ யாரும் இருக்க மாட்டார்கள்.

மற்றொருவர் எப்போதுமே உங்களை மையத்தில் இருந்து இழுப்பவர்தாம். 'மற்றொன்று என்றாலே நரகம்' என்பார் சார்த்தர் (Sartre). பதஞ்சலி இதனை நன்றாகவே புரிந்து கொண்டிருக்க வேண்டும். மற்றொன்று நரகமாகாது. மற்றொன்றின் மீது நீங்கள் கொள்ளும் விருப்பமே நரகத்தைத் தோற்றுவிப்பது. மற்றொன்றின் மீதான விருப்பம் நரகம்.

எதிலும் விருப்பமற்றிருப்பது உங்கள் இருப்புணர்வு ஆதியான ஒன்று பற்றிய தெளிவை அடைவதற்காகும். அந்நிலையில் நீங்கள் இருக்கிறீர்கள், நீங்கள் முழுமையாயிருக்கிறீர்கள். அங்கே உங்களையன்றி வேறு யாரும் இருப்பதில்லை. பதஞ்சலி இதனை கைவல்யம் என்கிறார்.

கைவல்யத்தை நோக்கிய பாதையில் முதல் படி முக்கியமான படி விவேகம் ஆகும் (பிரித்தறிதல்). இரண்டாவதாய் முக்கியம் பெறுவது வைராக்கியம் (துறத்தல்). மூன்றாவது கைவல்யத்தை மெய்யாக உணர்தல் (தனிமை).

நீங்கள் எதற்காக மற்றதை விரும்புவது? ஏன் இந்த ஆசை - மற்றொன்றின் மீது பைத்தியமாகவே ஆகிவிடுவது? எங்கே தவறாகிப் போனது? உங்களிடத்தில் நீங்கள் ஏன் திருப்தி கொள்ளவில்லை? நீங்கள் ஏன் நிறைவாக உணரவில்லை? எப்படியோ ஏதோ ஒன்று உங்களிடம் இல்லை, குறைவாக இருக்கிறது என்று ஏன் நினைக்கிறீர்கள்? நீங்கள் முழுமையடையாதவர் என்கிற தவறான கருத்து உங்களிடம் எங்கிருந்து வந்தது? உடம்புடன் உங்களை அடையாளப்படுத்திக் கொள்வதால் இது தோன்றுகிறது. உடம்பு வேறானது. உங்கள் முதல் படியே தவறாகி விட்டால் தொடர்ந்து அப்படியேதான் போய்க் கொண்டிருக்கும்.

உங்கள் உடம்பில் இருந்து உங்களைப் பிரித்தறியவும், உடம்பில் இருந்தாலும் உடம்பு நீங்களல்ல என்பதைப் புரிந்து கொள்ளவும், நீங்கள் மனதில் இருந்தாலும் மனம் நீங்களல்ல என்பதைப் புரிந்து கொள்ளவும் விவேகம் தேவை என்கிறார் பதஞ்சலி. விவேகத்தின் மூலம் நீங்கள் எப்போதுமே சாட்சியாயிருப்பதை, காண்பவரா யிருப்பதை (த்ருஷ்டா)ப் புரிந்து கொள்ளுங்கள். நீங்கள் ஒருபோதும் காணப்படுவதல்ல, காணப்படுகிற பொருளல்ல. நீங்கள் தூய அகவுணர்வாய் (subjectivity) இருக்கிறீர்கள்.

பிரபஞ்சக் கோட்பாட்டின் புகழ்பெற்ற மேற்கத்திய சிந்தனை யாளரான ஸாரன் கியர் கெக்கார்ட் சொல்கிறார்: 'கடவுள் அகவுணர்வாய் இருக்கிறார்' என்று. அவர் பதஞ்சலிக்குப் பக்கமாய் வருகிறார். கடவுள் அகவுணர்வாய் இருக்கிறார் என்கிறபோது அவர் எதைக் குறிக்கிறார்? புறப்பொருள்கள் அனைத்தும் நம்மில் இருந்து வேறானவை என்பதை நாம் அறிகிறபோது அவை மறையத் தொடங்குகின்றன. அவை உங்களுடைய ஒத்துழைப்பில் இடம் பெறுகின்றன. உடல்தான் நீங்கள் என்று நீங்கள் நினைத்தால் அந்நிலையில் உடம்பு தொடர்கிறது. உங்களுடைய சக்தியும் உதவும் அதற்குத் தேவைப்படும். 'மனமே நாம்' என்று நீங்கள் நினைத்துக் கொண்டால் மனம் செயல்படுகிறது. உங்கள் உதவியும், ஒத்துழைப்பும், சக்தியும் அதற்குத் தேவைப்படும்.

இது உள்ளார்ந்த இயக்க நுட்பங்களுள் ஒன்று. உங்கள் இருப்பில் இயற்கை உயிரோட்டமுடையதாகிறது. உங்களுடைய இருப்பில் உடம்பு உயிரோட்டத்துடன் வேலை பார்க்கிறது. உங்களுடைய இருப்பின் மூலமே மனம் செயல்படத் தொடங்குகிறது.

இது, எஜமானன் வெளியில் செல்கிறான், பின்பு வீடு திரும்பு கிறான் என்பதைப் போன்றது என்று யோகாவில் சொல்கிறார்கள். வேலைக்காரர்கள் அரட்டையடித்துக் கொண்டும், வீட்டுப்படிகளில் அமர்ந்து புகைத்துக் கொண்டும் வீட்டைப் பற்றியே கவலைப்படாமல் இருக்கிறார்கள். எஜமானன் வீட்டில் பிரவேசிக்கிற கணத்தில் அவர்களுடைய அரட்டை நின்று விடுகிறது. அதன்பிறகும் அவர்கள் புகைப்பதில்லை, தங்களுடைய சிகரெட்களை அவர்கள் மறைத்து வைக்கிறார்கள், வேலை பார்க்கத் தொடங்குகிறார்கள், தங்களுடைய வேலையில் ரொம்பவும் ஈடுபட்டிருப்பதாய் தங்களைக் காட்டிக் கொள்கிறார்கள். ஒரு கணத்துக்கு முன் இவர்கள்தான் அரட்டை யடித்தது, படிக்கட்டில் சோம்பேறித்தனமாய் உட்கார்ந்திருந்தது என்று நீங்கள் எண்ணிப்பார்க்கவே முடியாது. எஜமான் வந்ததும் எல்லாம் அமைதியாகி விட்டன. வகுப்பில் இருந்து ஆசிரியர் வெளியே சென்றதும் அந்த இடமே கிளர்ச்சியுற்று குழப்ப நிலையை அடைந்து விடுகிற மாதிரிதான் அது. ஆசிரியர் திரும்ப வந்ததும் குழந்தைகள் தங்களுடைய இருக்கைகளில் அமர்ந்து எழுதவும் படிக்கவும் தொடங்குகிறார்கள். அந்த இடமே நிசப்தமாயிருக்கிறது. இருத்தலின் துல்லியம்.

தற்போது அறிவியலார் அதற்கு இணைவான (parallel) ஒன்றைப் பெற்றிருக்கிறார்கள். அவர்கள் அதனை வினையூக்கி (catalyst)யின் இருப்பு என்கிறார்கள். அது எந்த வகையிலும் செயல்படுவதில்லை. எந்தச் செயலிலும் பிரவேசிப்பதில்லை. ஆனால் அதன் இருப்பு மற்றொன்றைச் செயல்படத் தூண்டும். அது இல்லையெனில் அங்கே எதுவும் செயல்படுவதில்லை. அந்த இருத்தல் எங்கோ எதிலோ செயலைத் தோற்றுவிக்கிறது. இருத்தலின் ஆற்றல் *catalytic எனப்படுகிறது.

பதஞ்சலி சொல்கிறார், உங்களுடைய உள்ளார்ந்த இருப்புணர்வு செயல்திறனோடு இருப்பதில்லை, அது செயலற்றதாகவே இருக்கிறது என்று.

---

* *Catalytic – தான் மாறாமல் மற்ற பொருள்களை வேதியியல் முறையில் மாற்றும் ஆற்றல்.*

யோகாவில், உள்ளார்ந்த இருப்புணர்வு புருடன் எனப்படுகிறது. (ஆத்மன்) உங்களுடைய சுத்த பிரக்ஞை வினையூக்கியாய் இருக்கிறது. அது அங்கே எதையும் செய்யாமல், எல்லாவற்றையும் பார்த்தபடி இருக்கும், எல்லாவற்றையும் கண்காணிக்கும். ஆனால் எதிலும் தன்னை உட்படுத்திக் கொள்ளாது. புருடனின் முழுமையான இருப்பைக் கொண்டு பஞ்சபூதங்களும், உடலும், மனமும் எல்லாமும் செயல்படத் தொடங்குகின்றன.

ஆனால், நாம் உடலுடன் அடையாளப்படுத்திக் கொள்கிறோம், நாம் மனதுடன் அடையாளப்படுத்திக் கொள்கிறோம். சாட்சியாளன் (witness) என்கிற நிலையில் இருந்து நழுவி நடத்துபவர் (doer) ஆகிவிடுகிறோம். மனிதனின் ஒட்டுமொத்த பிணியே அதுதான். எப்படி இருப்பிடத்துக்குத் திரும்புவது, நாமே கர்த்தா (doer) என்கிற தவறான எண்ணத்தை எப்படி விடுவது, சாட்சியாயிருப்பதால் கிடைக்கக்கூடிய தெளிவை எப்படிப் பெறுவது என்பதற்கு உதவும் செய்முறையே விவேகம் எனப்படுவது.

நீங்கள் செய்பவர் அல்லர், சாட்சி என்பதை நீங்கள் புரிந்து கொண்டவுடன் வைராக்கியம் (துறத்தல்) என்கிற இரண்டாம் செயல் தானே நடந்து விடுகிறது. இரண்டாவது இதுதான். நீங்கள் முன்பு எதைச் செய்திருந்தாலும் தற்போது உங்களால் செய்ய முடியாது. நீங்கள் பலவற்றில் உங்களை உட்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். காரணம், உடம்புதான் நீங்கள் என்று நினைத்துக் கொண்டிருந்தீர்கள், காரணம் மனம்தான் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருந்தீர்கள். தற்போது நீங்கள் அந்த உடம்பும் அல்ல, மனமும் அல்ல என்பதைத் தெரிந்து கொண்டீர்கள். நீங்கள் பின்பற்றியவற்றையும், துரத்திச் சென்ற வற்றையும் விட்டுவிட்டீர்கள். கைவிடுதல் வைராக்கியம், சந்நியாசம், துறத்தல் ஆகும்.

உங்களுடைய தொலைநோக்கு, விவேகம், புரிதல் இவை ஒரு மாற்றத்தைக் கொண்டு வருகின்றன. வைராக்கியம் பூர்த்தியானதும் மற்றொரு உச்சம் தோன்றுகிறது. அது கைவல்யம். முதல் முறையாக நீங்கள் யார் என்பது உங்களுக்குத் தெரிய வருகிறது.

ஆனால், அடையாளம் கண்டுகொள்ளும் முதல் நடவடிக்கை உங்களை வழிதவறச் செய்கிறது. உங்களுடைய வேறான நிலையை நீங்கள் பொருட்படுத்தவில்லை என்றதுமே உங்களுடைய அடையாளத்தை நிரூபிப்பதில் (identity) சிக்கிக் கொள்கிறீர்கள். அது தொடர்கிறது. மேலும் மேலும் தொடர்கிறது. ஒரு படி இன்னொரு

படிக்கு இட்டுச் செல்கிறது. ஒன்றில் இருந்து இன்னொன்று அதில் இருந்து மற்றொன்று என நடவடிக்கைகள். நீங்கள் சதுப்பு நிலத்தில் அமிழ்ந்து எல்லாம் குளறுபடியாகி விடுகிறது.

சின்னதாய் ஒரு கதை:

இரண்டு நண்பர்கள். சமூகத்தில் எப்படியாவது உயரத் துடிக்கும் இளைஞர்கள் அவர்கள். அவர்களுள் கோஹன் என்பவன் ஒரு செல்வந்தரின் மகளை மணக்க நம்பிக்கை கொண்டிருந்தான். அந்தப் பெண்ணின் பெற்றோர்களைக் காணச் செல்லும்போது உதவியா யிருக்குமே என்று நண்பன் லெவியையும் தன்னுடன் அழைத்துச் சென்றான். பெண்ணின் பெற்றோர்கள் கோஹனை புன்னகையுடன் வரவேற்றனர்.

'நான் கேள்விப்பட்டேன் நீங்கள் துணி வியாபாரம் செய்கிறீர்கள்தானே?' என்று கேட்டனர்.

கோஹன் கூச்சத்துடன் தலையசைத்து, 'ஆமாம், சிறிய அளவில் பண்றேன்' என்றான்.

லெவி அவனுடைய முதுகில் ஓங்கி அறைந்துவிட்டு, சொன்னான். 'இவன் ரொம்ப அடக்கமானவன் சார். சொந்தமா இருபத்தியேழு கடைகள் இருக்கு. இன்னும் வாங்கிப் போடறதுக்கு பேச்சுவார்த்தை நடக்குது' என்று.

பெண்ணின் பெற்றோர் கேட்டனர் 'உங்களுக்கு அடுக்கு மனையகம் இருக்கிறதுதானே?'

கோஹன் புன்னகைத்தான். 'இருக்கு, இரண்டு அறைகள் கொண்டது.'

லெவி சிரிக்கத் தொடங்கினான். 'அடக்கம் சார் அடக்கம்! பார்க் லேனில் ஒரு பென்ட் ஹவுஸ் இருக்கு.

பெற்றோர் தொடர்ந்தனர். 'உங்கள்ட்ட கார் இருக்கு இல்லையா?'

கோஹன் சொன்னார். 'இருக்கு, ஒரு அருமையான கார் இருக்கு.'

லெவி குறுக்கிட்டான். 'சார், இவன்ட்ட மூணு ரோல்ஸ்ராய் கார் இருக்கு. எல்லாம் நகரத்துல யூஸ் பண்றது.'

கோஹன் தும்மினான்.

'என்ன ஜலதோஷம் பிடிச்சிருக்கா?' அவர்கள் கவலையுடன் கேட்டனர்.

'ஆமா, கொஞ்சமா' என்றான் கோஹன்.

'கொஞ்சமா, நீங்க வேற. இவனுக்கு காச நோயே இருக்கு' என்று கூவினான் லெவி.

ஓர் அடி (step) இன்னோர் அடிக்கு இட்டுச் செல்கிறது. நீங்கள் எடுத்து வைக்கிற அடி தவறாகி விட்டால் உங்கள் வாழ்க்கை ஒரு மிகையான தவறாகி விடும். அது இலட்சோப லட்சம் வழிகளில் பிரதிபலிக்கும்.

நீங்கள் உடனே அதை சரிசெய்யாவிட்டால், உலகத்தையே திருத்தக்கூடியவரானாலும் - உங்கள் தவறை திருத்திக்கொள்ள முடியாமல் போகும்.

குருட்ஜீவ் தன்னுடைய சீடர்களுக்குச் சொல்வார். முதலில் நீங்கள் அடையாளமற்றவராகி விடவேண்டும். அத்துடன் நீங்கள் ஒரு சாட்சிதான் என்பதைத் தொடாந்து நினைவில் வைத்திருங்கள். ஒரு செயலோ எண்ணமோ இல்லாமல் வெறும் உணர்வாக மட்டுமே இருங்கள்' என்று. இந்த நினைவு ஒரு திடமான தோற்ற நிலையாகி விடும் உங்களுக்குள். நீங்கள் பாகுபடுத்தி அறியும் விவேகத்தை அடைகிறீர்கள். பிறகு வைராக்கியம் தன்னால் வந்து விடுகிறது. நீங்கள் பிரித்தறிய (discriminate)த் தவறினால் எவ்வித புறத் தூண்டுதலுமின்றி (spontaneously) சம்சாரம் - உலகப் பிணைப்பு வந்து விடும். உங்கள் உடம்புடனும் மனதுடன் உங்களை அடையாளப்படுத்திக் கொண்டால் நீங்கள் வெளியே சென்று உலகியலில் நுழைந்து விடுகிறீர்கள். ஏடன் தோட்டத்தில் இருந்து வீசியெறியப்படுகிறீர்கள். நீங்கள் பிரித்தறிவதுடன் இந்த உடலும் மனமும் ஒரு வசிப்பிடம் என்பதை நினைவில் கொண்டால் நீங்கள் உரிமையுடையவராவீர்கள். உங்கள் மனம் ஓர் உயிருள்ள கணினியாகும். நீங்கள் எஜமானனாயிருப்பீர்கள். உங்கள் மனம் ஓர் அடிமையாகி விடும். பிறகு உள்ளே ஒரு மாற்றம் உண்டாகும். அந்நிலையில் நீங்கள் உலகினுள் நுழைய மாட்டீர்கள். காரணம் முதல் படியே அகற்றப்பட்டு விடுகிறது. தற்போது உலகுடன் இணைக்கப்படவில்லை என்பதால், அகவெளியில் விழுந்து விடுவீர்கள். இதுவே வைராக்கியம் - உரிமைகள் தகுதிகள் இவற்றைத் துறப்பதென்பது.

நீங்கள் அங்கே விழுந்து கொண்டே இருப்பீர்கள். அடி யாழத்துக்குச் செல்வீர்கள், அதற்குமேல் போவதற்கில்லை என்கிற நிலையை - கடைசி முனையை அடைவீர்கள். அதுவே கைவல்யம்

எனப்படுவது. நீங்கள் இணையற்றவராகி விடுகிறீர்கள். உங்களுக்கு எவருடைய துணையும் அவசியப்படுவதில்லை. ஏதோவொன்றைக் கொண்டு உங்களை நிரப்பிக் கொள்ளும் நிலையான முயற்சி தேவைப்படாது. தற்போது, உங்களுடைய சூன்யத்துடன் நீங்கள் இசைவாகி விடுகிறீர்கள். அந்தச் சூன்யத்துடன் நீங்கள் பொருந்திக் கொண்டதால் அந்தச் சூன்யம் – வெற்றிடம் முழுமை பெற்று விடுகிறது. அது நிறைவடைகிறது. இருப்புணர்வின் பயனாகிறது.

தொடக்கத்தில் புருடன் (ஆத்மன்) இருக்கிறான், முடிவிலும் புருடன் இருக்கிறான். இடையில் இருப்பது ஒரு பெருங்கனவு.

முதல் சூத்திரம்:

அனுபவம் என்பது ஆத்மனையும், சத்வத்தையும் வேறுபடுத்திக் காண இயலாததன் விளைவேயாகும். இருப்பினும் அவை முற்றிலும் வேறுபட்டவையாகவே இருக்கின்றன.

சுய அக்கறையின் பேரில் சிந்தனையைச் செலுத்த ஆத்மனைப் பற்றிய அறிவு உண்டாகும். அது மற்றவற்றைப் பற்றிய அறிவில் இருந்து பிரித்து வேறாக்கப்பட்டதாகும்.

இதில் ஒவ்வொரு வார்த்தையும் புரிந்து கொள்ளப்பட வேண்டியது. காரணம் ஒவ்வொரு வார்த்தையும் பெரிய அளவில் சிறப்பு வாய்ந்தது ஆகும்.

'அனுபவம் என்பது வேறுபடுத்தி அறிய இயலாததன் விளைவு...' எல்லா அனுபவமும் ஒரு தவறாகவே இருக்கிறது. 'நான் பரிதாபத்துக்குரியவனாய் இருக்கிறேன்' அல்லது, 'நான் மகிழ்ச்சியாய் இருக்கிறேன்' என்று நீங்கள் சொல்கிறீர்கள். அல்லது, 'நான் பசியாயிருக்கிறேன்' என்கிறீர்கள். அல்லது, 'நான் தகுதியாகவும் ஆரோக்கியத்துடனும் இருக்கிறேன்' என்கிறீர்கள். அத்தனை அனுபவமும் தவறுதாம், தவறாகப் புரிந்து கொள்ளப்படுகிறவைதாம்.

'எனக்குப் பசியாயிருக்கிறது' என்கிறபோது நீங்கள் உண்மையில் எதைக் குறிப்பிடுகிறீர்கள்? 'உடம்பு பசித்திருப்பதை நான் உணர்கிறேன்' என்றுதான் நீங்கள் சொல்லியிருக்க வேண்டும். 'நான் பசியாயிருக்கிறேன்' என்று சொல்லக்கூடாது. நீங்கள் பசியாயில்லை. உடம்புக்குத்தான் பசி. அந்த உண்மையை நீங்கள் உணர்ந்திருக்கிறீர்கள். அனுபவமல்ல உங்களுடையது, அது விழிப்புணர்வு மட்டுமேயாகும். அனுபவம் உடம்பினுடையது, விழிப்புணர்வு உங்களுடையது. நீங்கள் மகிழ்ச்சியற்றவராய்

உணரும்போது அந்த அனுபவம் உடம்பினுடையதாகவோ அல்லது மனதினுடையதாகவோ இருக்கலாம்.

உடம்பும் மனமும் ஒரே செய்நுட்பத்தைக் கொண்டுள்ளது. உடம்பு அதே பொருளின் நிகரப் பெருநுட்பத்தை (gross mechanism)யும், மனம் நுண்ணிய செய்நுட்பத்தையும் கொண்டவை. ஆனால் இரண்டும் ஒரே மாதிரியானவைதாம். நீங்கள் கவனித்தால் தெரியும் உடம்பும் ஒரு மனதைப் போல் செயல்பட்டுக் கொண்டிருப்பது. நீங்கள் அயர்ந்து உறங்கிக் கொண்டிருக்கிறீர்கள், ஓர் ஈ வந்து உங்கள் முகத்தை மொய்த்தபடி இருக்கிறது. நீங்கள் எழுந்து கொள்ளாமலோ விழித்துக் கொள்ளாமலோ உங்கள் கையால் அதை விரட்டியடிக்கிறீர்கள். உடம்பு செயல்பட்டது ரொம்பவும் சிந்தனையுடன். ஏதோ ஒன்று உங்கள் காலில் ஊர்கிறமாதிரி இருக்கிறது. நீங்கள் அதைத் தூக்கியெறிகிறீர்கள். அயர்ந்து உறங்குகிறீர்கள். காலையில் எதுவும் நினைவில் இருக்காது. ஒரு மனதைப் போல் செயல்படுகிறது உடம்பு, அத்தனை நறுவிசாக இல்லா விட்டாலும் மனதைப்போல.

ஆக உடல் - மனம் நல்லது கெட்டது, மகிழ்ச்சி மகிழ்ச்சியின்மை என்று எந்த வேறுபாடுமின்றி அத்தனை அனுபவங்களையும் பெறுகிறது. நீங்கள் ஒருபோதும் அனுபவிப்பவராயில்லை, எப்போதுமே அனுபவம் பற்றிய விழிப்புணர்வாய் இருக்கிறீர்கள். ஆக, பதஞ்சலி ஒரு விவரவுரை (statement)யில் - 'வேறுபடுத்தி அறிய இயலாததன் விளைவே அனுபவம்' என்று தெரிவிக்கிறார். அனுபவம் முழுமையுமே ஒரு தவறுதான். நீங்கள் பிரித்தறியாத காரணத்தால் தவறு ஏற்படுகிறது. நீங்கள் எவரெவர் என்று அறிந்திருப்பதில்லை.

பல நேரங்களில் இப்படி நடந்திருக்கிறது. அமேஸான் காடுகளில் வாழும் ஆதிவாசிகளில் ஒரு சிறிய மரபுக்குழு (tribe). மனைவி பிள்ளை பெறுகிறபோது கணவனும் பக்கத்தில் இன்னொரு கட்டிலில் படுத்திருப்பான். மனைவி வலியில் வீறிட்டலறுவாள், கூச்சலிடுவாள், கணவனும் அவ்வாறே அலறி, கூச்சலிடுவான். முதல் முறையாய் இது கண்டறியப்பட்டபோது, அது நம்ப முடியாததாய் இருந்தது. அந்தக் கணவன் என்ன செய்கிறான், எதற்காக? மனைவியோ வலியில் துடிக்கிறாள். ஆனால் இந்தக் கணவன் எதற்காக அப்படிச் செய்வது? அவன் நடிக்கிறானா? அதுபற்றி நிறையவே ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

கணவன் நடிக்கவில்லை என்பது ஆராய்ச்சியில் தெரிய வந்தது. அவளுக்கு வலித்தால் இவனுக்கும் வலிக்கிறது. அது

இருவருக்கிடையே இயல்புகள் பண்புகள் இவற்றின் நுட்பமான ஒத்திசையில் நிகழ்வது. ஆயிரமாயிரம் ஆண்டுகளாகவே அந்தப் பழங்குடி மக்களின் மனம் குழந்தையின் பெற்றோர்கள் என்கிற முறையில் கணவன்-மனைவி இருவருமே துன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்று கட்டுப்பாடு செய்ப்பட்டிருக்கிறது.

ரொம்ப சரி. பெண்ணுரிமை இயக்கத்தினர் கண்டிப்பாய் அதை ஒத்துக் கொள்வார்கள். ஏன் பெண்கள் மட்டும்? இந்தக் கணவன்மார்கள் மட்டும் வலிப்படாமல் அப்படியே போய்க் கொண்டிருப்பார்களாக்கும்? அவர்கள் குழந்தையைக் கருவில் ஒன்பது மாதங்கள் சுமக்காமல் இருக்கலாம். ஆனால் குழந்தை பிறந்த பிறகாவது... ஊகூம், முழுப்பொறுப்பும் மனைவியின் தலையில்தான் விழுகிறது. ஏன் இப்படி?

ஆனால் அந்தப் பழங்குடியினரின் வாழ்க்கையிலோ அப்படி இருக்கிறது. உளவியலாரும், மருத்துவ ஆராய்ச்சியாளரும் அந்த மனிதன் உண்மையிலேயே வலி அனுபவிப்பதை ஊன்றிக் கவனித்தார்கள். நாம் அவ்விதமாய் ஒத்திருக்கவில்லை என்பதால் நமக்கு அது நம்ப முடியாததாய் தெரிகிறது. அந்தக் கணவனோ தன் மனைவியுடன் ரொம்பவும் ஒத்திருப்பதால் அவள் வலியை அனுபவிக்கிறபோது அவனும் வலியை உணர்கிறான்.

நீங்கள் இதுபோன்ற ஒரு நிலையில் எப்போதாவது இருந்திருப் பீர்கள். உங்கள் நேசத்துக்குரிய ஒருவர் துன்பப்படுகிறபோது நீங்களும் அதுபற்றி வருந்துவீர்கள். அதுதான் 'மாற்றார் உணர்வறிதல்' (empathy) என்பது. உங்கள் நேசத்துக்குரியவர் துயறும்போது நீங்களும் அந்தத் துயரத்தை அனுபவிக்கத் தொடங்குகிறீர்கள். உங்கள் அன்புக் குரியவர் மகிழ்ச்சியாயிருந்தால், நீங்களும் மகிழ்ச்சியை உணரத் தொடங்குகிறீர்கள். உங்களுக்குப் பிரியமான ஒருவர் நடனமாடும் போது உங்களுக்குள் குதூகலிப்பீர்கள் நீங்களே ஆடுகிற மாதிரி. உங்கள் அன்புக்குரியவருடன் இசைவாகி விடுகிறீர்கள். அவரில் உங்களை அடையாளப்படுத்திக் கொள்கிறீர்கள்.

அந்தச் சமூகம் அதே நிலையைத் தொடர்வதும், தன் மனைவியின் அளவுக்குக் கணவனும் வலியை அனுபவிக்கிறான் என்பதும் நகைப்புக்கிடமாய் தெரியலாம். பெண்கள் துயருறுவதில்கூட ஒரு புதிய விளக்கமும் இப்போது கொடுக்கப்படுகிறது. பிரான்ஸ் நாட்டு உளவியல் நிபுணர் ஒருவர் அதுகுறித்து ஆழமாய் ஆராய்ந்து தெரிவிக்கிறார். 'பெண்கள் அவ்வாறு நம்புவதாலேயே

துயருறுகிறார்கள்' என்று. சில பழங்குடிகளில் மனைவிகூட வலியை அனுபவிப்பதில்லை.

இந்தியாவிலும் பழங்குடியினர் இருக்கிறார்கள். ஆதிவாசி சமூகங்களில் மனைவியானவள் வயற்காட்டில் வேலை செய்யவும், விறகு வெட்டவும், விறகைச் சுமந்து வரவும் செல்கிறாள். அங்கே வழியில் குழந்தை பிரசவித்து விட்டால் அப்படியே கூடையில் சுமந்து கொண்டு வீடு திரும்பி விடுவாள். வயல் வேலை செய்யும்போது குழந்தை பிறந்து விட்டால் குழந்தையை மரத்தடியில் கிடத்திவிட்டு, தான் பார்த்துக் கொண்டிருந்த வேலையைத் தொடர்வாள். வேலை முடிந்தபின், மாலையில் குழந்தையுடன் வீடு திரும்புவாள். வலி இல்லை. என்னவாயிற்று? அதுவும் ஒரு நம்பிக்கை, கட்டுப்பாட்டில் வைத்தல் அவ்வளவுதான்.

தற்போது இலட்சோபலட்சம் பெண்கள் மேற்கத்திய உலகில் வலியில்லாமல் குழந்தை பெற்றுக் கொள்கிறார்கள். வலியில்லாத பிரசவம். நம்பிக்கை அமைவு மாறிவிட்டது. அவர்கள் அறிதுயிலில் ஆழ்த்தப்படுகிறார்கள். 'உண்மையில் வலி என்பது இல்லை. வலி என்பது ஓர் எண்ணந்தான்' என்று அவர்களுக்கு வலியுறுத்தப் படுகிறது. ஓர் எண்ணத்தை நீங்கள் உருவாக்கிக் கொள்கிறீர்கள். அந்த எண்ணம் நடப்பாகிறது – அதுவே வெளிப்பாடான மெய்ம்மையாகத் தெரியும் கருத்துரு (projection).

அனுபவம் முழுதுமே தவறு என்கிறார் பதஞ்சலி. தவறு உங்கள் பார்வையில் இருக்கிறது. நீங்கள் புறப்பொருளுடன் உங்களை அடையாளப்படுத்திக் கொள்கிறீர்கள். ஆனால் அதுவே (அடையாளப் படுத்திக் கொள்ளல்) பொருளாகி விடாது. நீங்கள் பசியுணர்வை அடைகிறீர்கள். ஆனால் பசி உங்களுக்கில்லை, உங்கள் உடம்புக்கு. நீங்கள் வலியை உணர்கிறீர்கள். ஆனால், வலி உங்களுக்கில்லை, உங்கள் உடம்புக்கு.

அடுத்த முறை உங்களுக்கு ஏதாவது நேரிடும்போது – ஒவ்வொரு கணத்திலும் ஏதோவொன்று நடந்து கொண்டிருக்கிறதுதானே – கவனியுங்கள். 'நான் சாட்சியாயிருக்கிறேன்' என்பதைத் தொடர்ந்து நினைவில் வைத்திருங்கள். எந்த அளவு மாற்றம் ஏற்படுகிறது என்பதைக் கண்டு கொள்ளுங்கள். நீங்கள் சாட்சியாயிருப்பவர் என்பதைப் புரிந்து கொண்டதும் பல பொருள்களும், செய்கைகளும் அப்படியே மறையத் தொடங்குகின்றன. ஒருநாள் வருகிறது, அறியாமை அகன்று அறிவு பெறும் அந்த நாளில் அனுபவம் முழுதும்

விளைவற்று விழுந்து விடும். சற்றும் எதிர்பாராத விதமாய் நீங்கள் அனுபவத்துக்கு அப்பாற்பட்டவராகி விடுவீர்கள். நீங்கள் உடம்பில் இருக்கவில்லை, மனதிலும் இருக்கவில்லை. இரண்டுக்கும் அப்பாற பட்டவராய் இருக்கிறீர்கள். திடீரென்று நீங்கள் எல்லாவற்றுக்கும் மேலாய், எல்லாவற்றையும் கடந்து மேகம் போல் மிதக்கத் தொடங்கி விடுகிறீர்கள். அந்த அனுபவம் ஏதுமற்ற நிலையே கைவல்யம்.

அதுபற்றிய இன்னொன்று. ஆன்மா சார்ந்த நிலையையும் அனுபவம் என்று கருதிக் கொள்பவர்களும் இருக்கிறார்கள். அவர்கள் அறிந்திருக்க மாட்டார்கள். என்னிடம் வந்து, 'நாங்கள் ஆன்மா சார்ந்த அனுபவத்தைப் பெற வேண்டும்' என்று கேட்பவர்கள் உண்டு. தாங்கள் இன்னது சொல்கிறோம் என்பது அவர்களுக்குத் தெரிந்திருக்காது. அனுபவம் என்பது உலகம் பற்றியதுதான். ஆன்மா சார்ந்த அனுபவம் என்று எதுவும் இல்லை - எதுவும் அப்படி இருக்க முடியாது. ஆன்மா சார்ந்தது என்றாலே விழிப்புணர்வுதான் - ஆத்மனை உணர்ந்து கொண்டிருப்பதுதான்.

யோகாவின் சொற்பாங்கில் மெய்ம்மை (ultimate-truth) என்பது மூன்று சொற்கூறுகளை அடிப்படையில் கொண்டுள்ளது. சத்-சித்-ஆனந்தம்-சச்சிதானந்தம். சத்-இருத்தல், நிலைத்திருத்தல். சித்-தன்னுணர்வு. அதுவே சக்தி, இயக்கம், செயல்முறையாய் இருக்கிறது. ஆனந்தம்-பரமசுகம். இம்மூன்றும் முடிவான ஒன்றின் பகுதிகள். இது யோகாவில் மூன்றின் தொகுதி (trinity) எனப்படும். இது உண்மையில் கிறிஸ்தவ *முக்கூட்டைவிட மிகவும் அறிவியல்பூர்வமானது. காரணம் யோகா தந்தை, மகன், ஆவி பற்றிப் பேசுவதில்லை. அது மெய்யாக உணர்தல் பற்றியே பேசுகிறது. ஒருவர் பிரபஞ்ச இருப்பின் உச்சநிலையை அடைகிற போது மூன்று விஷயங்களைப் புரிந்து கொண்டு விடுகிறார். ஒன்று சத்-இருத்தல். இரண்டாவது சித்-இருத்தலை உணர்ந்திருப்பது. மூன்றாவது ஆனந்தம்-இருப்பதை உணர்ந்ததால் ஏற்படும் ஆனந்தம். அதுவே பேரின்பம், பரம சுகம்.

இது சுகத்தை அனுபவித்தல் ஆகாது. சுகமாகவே இருப்பது. இன்பத்தை அனுபவிப்பதல்ல இன்புருவாயிருப்பது. இது ஆனந்தத்தைத் துய்ப்பதல்ல. ஆனந்த வடிவாகவே இருப்பது. ஒன்று 'சத்' ஆக இருக்கிறது. ஒன்று 'சித்' ஆக இருக்கிறது. ஒன்று

---

* *கிறிஸ்தவ முக்கூட்டு (Trinity) - தந்தை, மகன், புனித ஆவி என்கிற மூவகைச் செயற்பாடுகளில் கடவுள் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறார். தூய ஆவி மனித மீட்புக்குக் காரணமாகிறது என்றொரு கோட்பாடு உண்டு.*

ஆனந்தமாயிருக்கிறது. ஒன்றுதான் இம்மூன்றாகவும் இருக்கிறது. இருத்தலும், உணர்தலும், ஆனந்தமாவதும் ஒன்றே.

இதுவே மெய்ம்மை பற்றிய முடிவான உணர்தல் ஆகும். இம்மூன்று பகுதிகளும் *பிரகிருதியில் மூன்று பண்புகளைத் தோற்றுவிக்கின்றன என்கிறார் பதஞ்சலி. அவை வினையூக்கிகளாய் (Catalytic agents) செயல்படுகின்றன. அவை எதுவும் செய்வதில்லை. அவற்றின் இருப்பு மட்டுமே பிரகிருதியில் பெரிய அளவிலான செயற்பாட்டைத் தோற்றுவித்து விடுகிறது. அந்தச் செயல் மூன்று குணங்களில் - பண்புகளில் தொடர்பு கொண்டிருக்கின்றன. அவை சத்துவம், ராஜஸம், தாமசம் என்பனவாம்.

சத்துவம் ஆனந்தத்துடன் தொடர்புடையது. சத்துவம் என்றால் சுத்த அறிவு. நீங்கள் சத்துவத்துக்குச் சமீபமாய் வந்ததும் பரம சுகத்தை உணர்வீர்கள். சத்துவம் ஆனந்தத்தின் பிரதிபலிப்பு. நீங்கள் ஒரு முக்கோணத்தைக் கருத்தில் கொள்வீர்களாயின் அதில் அடிப்பகுதி ஆனந்தம், பக்கக் கோணங்கள் சத், சித் என்றும் கொள்ளலாம். அது பருப்பொருளின் (matter) உலகில் - பிரகிருதியில் பிரதிபலிக்கிறது. உண்மையில் அந்தப் பிரதிபலிப்பில் அது தலைகீழாகி விடுகிறது. எனினும் அதே முக்கோணந்தான்.

ஆனால், முடிவான மெய்ம்மை எதையும் செய்து கொண்டிருப்பதில்லை - அதுவே பதஞ்சலியின் அழுத்தமான கருத்து. காரணம் எதையாவது செய்து கொண்டிருந்தால் அந்தப் பரம்பொருள் செய்பவராகி விடுவார். பதஞ்சலியைப் பொறுத்தவரை கடவுள் கர்த்தா (creator) அல்லர், அவர் வினையூக்கி மட்டுமே. இது பெருமளவில் அறிவியல் சார்ந்தது. காரணம் கடவுள் படைப்பவராயிருந்தால் அந்நிலையில் அந்தப் படைப்புக்கான நோக்கத்தை நீங்கள் கண்டறிய வேண்டியிருக்கும். அவர் எதற்காகப் படைத்தார் என்பதை நீங்கள் கண்டுபிடிக்க வேண்டியிருக்கும். அந்நிலையில் அவருக்குள் படைப்புக்கான விருப்பம் ஒன்று இருந்ததா என்பதையும் நீங்கள் கண்டுபிடிப்பீர்கள். அப்போது மனிதனைப் போல் அவரும் சாதாரணமாகி விடுவார். இல்லை, பதஞ்சலியின் கருத்தில் கடவுள் முழுமையானவர். வெறும் இருத்தலை மட்டுமே கொண்டவர். அவர் எதையும் செய்வதில்லை. ஆனால் அவருடைய இருப்பின் மூலம் செயல்கள் நடந்தேறுகின்றன. இயற்கை (பிரகிருதி)யின் ஆடல் தொடங்குகிறது.

---

* *பிரபஞ்ச மூலமாயிருக்கும் மாயையே பிரகிருதி.*

பழங்கதை ஒன்று உண்டு.

அரசன் ஒருவன் மாளிகை கட்டினான். அந்த மாளிகைக்குக் கண்ணாடி மாளிகை என்று பெயர். சின்னச் சின்னதாய் இலட்சசோப லட்சம் கண்ணாடிகளைக் கொண்டு தரையும், சுவர்களும், கூரையும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. அந்த மாளிகையில் வேறெதுவும் இல்லை, கண்ணாடியைத் தவிர. அது கண்ணாடி மாளிகை. ஒருசமயம் இப்படி ஆயிற்று. அரசனுடைய நாய் தவறுதலாய் உள்ளே விடப்பட்டு, வெளிப்புறத்தில் மாளிகை பூட்டப்பட்டு விட்டது. அது இரவு நேரம். தன்னைச் சுற்றிலும் லட்சக்கணக்கான நாய்களைக் கண்டு அந்த நாய் அச்சமுற்றது. கீழேயும், மேலேயும், எல்லாப் பக்கங்களிலும் லட்சக்கணக்கில் நாய்கள். எல்லாம் அதன் பிரதிபிம்பங்கள்தாம். அது ஒன்றும் சாதாரண நாயல்ல, அரசனுடைய நாய் - ரொம்பத் துணிச்சலானது - ஆனாலும்கூட தனியாக இருந்ததே. அது ஓர் அறையில் இருந்து இன்னோர் அறைக்கு என்று ஓடியது, ஆனாலும் தப்பிக்க வழியேயில்லை. அது ரொம்பவும் பயந்துவிட்டது. வாசல் பூட்டியிருந்ததால் வெளியே வரமுடியவில்லை.

சுற்றியிருந்த நாய்களைப் பயமுறுத்துவதற்காக அது குரைக்கத் தொடங்கியது. மற்ற நாய்களும் அதே சமயத்தில் குரைத்தன. காரணம் அவை பிரதிபிம்ப்ங்கள்தாமே. பிற்பாடு அது ரொம்பவும் பயந்து போயிற்று. மற்ற நாய்களைப் பயமுறுத்த சுவர்களைத் தட்டியது. மற்ற நாய்களும் அதன்மீது பாய்ந்து மோதின. காலையில் பார்த்தால் அரசனுடைய நாய் செத்துக் கிடந்தது.

ஆனால் அந்த நாய் செத்துப்போன நொடியிலேயே மற்ற நாய்களும் செத்துப் போயின. அந்த மாளிகையே வெறிச்சோடிக் கிடந்தது. இருந்தது ஒரு நாயும், அதன் இலட்சக்கணக்கான பிரதிபலிப்புகளும்.

பதஞ்சலியின் நோக்கும் கோணம் இதுதான். ஒன்று மட்டுமே நிஜம், மற்றவை - இலட்சக்கணக்கானாலும் பிரதிபிம்பங்கள் தாம். நீங்கள் ஒரு பிரதிபிம்பமாகவே என்னில் இருந்து வேறாகியிருப்பது. நான் உங்களிடமிருந்து விலகியிருப்பதும் ஒரு பிர்திபிம்பத்தைப் போலத்தான். ஆனால் நாம் நிஜத்தை நோக்கிச் செல்வோமாயின் விலகல் போய்விடும், நாம் ஒன்றாகி விடுவோம். ஒரு பிரதிபிம்பம் மற்றொரு பிரதிபிம்பத்தில் இருந்து வேறானதுதான். நீங்கள் ஒரு பிம்பத்தை அழித்து மற்றொன்றைக் காக்க முடியும்.

அப்படித்தான் ஒருவர் இறக்கிறார்... 'இருப்பது ஒரு பிரமன் - கடவுள் என்றால், ஒன்றே எங்கும் பரவியிருக்கிறதென்றால், பிறகு ஏன் ஒருவர் சாகிறபோது மற்றவர்களும் சாவதில்லை?' என்று உலகில் வாதம் பண்ணுகிற பலரும் கேட்பார்கள். இது ரொம்ப எளிது. ஆயிரத்தியோர் கண்ணாடிகள் இருக்கிற அறையில் ஒரு கண்ணாடியை நீங்கள் உடைக்கிறீர்கள், ஒரு பிரதிபிம்பம்தான் மறையும். மற்றவை அப்படியேதான் இருக்கும். நீங்கள் மற்றொன்றை உடைத்தெறிகிறீர்கள். மற்றொரு பிரதிபிம்பம் மறைகிறது - எல்லாமும் மறைந்து விடுவதில்லை. ஆனால் எது பிரதிபிம்பங்களை ஏற்படுத்திக் கொண்டிருந்ததோ அது சாகாமல் இருக்கும், மரணமற்றதாயிருக்கும். அப்போது இன்னொரு குழந்தை பிறக்கிறது - அதாவது இன்னொரு கண்ணாடி தோன்றுகிறது, மறுபடியும் இன்னொரு பிரதிபிம்பம்.

இந்தக் கதை தொடர்ந்தபடி இருக்கும். அதனால்தான் இந்துக்கள் இந்த உலகை ஒரு மாயை என்கிறார்கள். மாயை என்றால் மாயாஜாலக் காட்சி. அங்கே எதுவும் நிஜமாயிருக்காது. எல்லாமும் அங்கே இருப்பது போல் தோற்றமளிக்கும். இந்த மாய உலகம் ஒரே ஒரு தவறைச் சார்ந்திருக்கிறது. அந்தத் தவறு அடையாளம் (identity) பற்றியது.

சுத்த உணர்வையும் சுத்த அறிவையும் வேறுபடுத்திப் பார்க்க இயலாததன் விளைவே அனுபவம். பிரகிருதியில் புருடன் சத்துவமாய் பிரதிபலிக்கிறான். உங்களுடைய அறிவு நிஜமான அறிவின் (சுத்த அறிவாகிய சத்துவம்) பிரதிபலிப்பு. இது நிஜமான அறிவாகாது. நீங்கள் திறமையும், விவாதிக்கிற திறனும் உடையவராயிருக்கிறீர்கள், இருட்டில் தள்ளாடுகிறீர்கள், எண்ணமிடுகிறீர்கள், சிந்திக்கிறீர்கள், சிந்தனா முறைகளையும், கோட்பாடுகளையும் உருவாக்குகிறீர்கள் - இது வெறும் பிரதிபலிப்புதான். இந்த அறிவு நிஜமான அறிவு ஆகாது. காரணம் நிஜமான அறிவுக்கு எதையும் கண்டுபிடிக்கிற அவசியம் இல்லை. நிஜ அறிவைப் பொறுத்தவரை எல்லாமும் முன்பே கண்டறியப்பட்டு விட்டது.

தற்போது சமயம் மற்றும் தத்துவத்தின் வெவ்வேறு பாதைகளைக் கூர்ந்து கவனியுங்கள். தத்துவம் பிரதிபலிக்கும் அறிவில் நுழைந்து மேலும் மேலும் சிந்தித்து சிந்தனையின் மிகப்பெரிய மாளிகையை உருவாக்குகிறது. சமயம் புருடனுக்குள் செல்கிறது. அது தியானத்தின் வற்புறுத்தலில் சிந்தனையை விட்டு விடுகிறது.

ஒரு காலத்தில் இப்படி நடந்ததாய், நான் கேள்விப்பட்டேன். சந்தைப்பேட்டையில் கூட்டம். ஒரு சிறிய பறவையைச் சுற்றி கூட்டம்

கூடி பலரும் அதற்கு அதிக விலைவைத்துக் கொண்டிருப்பதை முல்லா நஸ்ருத்தின் கண்டார். 'பறவைகளின் விலை ரொம்பத்தான் கூடிப்போச்சு' என்று அவர் தமக்குள் சொல்லிக் கொண்டார். அவர் வீட்டுக்குச் சென்று, தம்முடைய கிழட்டு வான்கோழியைத் துரத்திப் பிடித்தார். சந்தையில் அதற்கு இரண்டு வெள்ளி நாணயங்களைத்தான் விலையாகத் தந்தார்கள்.

முல்லா சொன்னார், 'இது நியாயமில்லை. என்னுடைய வான்கோழி அந்தச் சின்னப் பறவையைவிட பலமடங்கு பெரிசு. ஆனா, அந்தப் பறவை பல தங்க நாணயங்களுக்கு ஏலத்தில் போச்சு' என்று.

'அந்தப் பறவை பேசுமாக்கும்' பக்கத்தில் யாரோ சொன்னார்கள்.

முல்லா தன்னுடைய வான்கோழியைப் பார்த்தார். அது அவருடைய தோளில் குட்டித்தூக்கம் போட்டிருந்தது. "என்னோடது தியானம் பண்ணுமாக்கும்' என்றார் அவர்.

சிந்திப்பதென்பது தர்க்கரீதியாய் கனவு காண்பது. அது சொற்களாலான மாளிகைகளை உருவாக்குகிறது. சில நேரங்களில் ஒருவர் சொற்களிடையே வெகுவாய் அகப்பட்டுக் கொண்டு விடக்கூடும். சொல் ஒரு பிரதிபலிப்பு.

சொல் சார்ந்த வகையில் நாம் சிக்கிக் கொள்வதற்கு மொழியும் ஒரு காரணம். உதாரணமாக, ஆங்கிலத்தில் 'நான்' (I) என்கிற வார்த்தையை விடுவது கடினம். அது ஆங்கிலத்தில் ரொம்பவும் முக்கியமானது. 'I' செங்குத்தாய் நிற்கிறது. படைப்பாற்றல் குறியீடு போன்று. நீங்கள் எழுதும்போது அது நிமிர்ந்து நிற்பதோடு, 'I' என்று சொல்லும்போது தற்பெருமையும் அதில் தொனிக்கிறது. எத்தனை முறை 'I' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறோம் என்பதைக் கவனியுங்கள். நீங்கள் எந்த அளவு அதைப் பயன்படுத்துகிறீர்களோ அந்த அளவு தற்பெருமை வெளிப்படும் – ஆங்கில மொழி 'I' என்ற சொல்லையே பெரிதும் சார்ந்திருப்பதாய் தோன்றுகிறது.

ஆனால், ஜப்பானிய மொழியில் அது முற்றிலும் மாறுபட்டிருக்கிறது. 'நான்' (I) என்கிற வார்த்தையைப் பயன்படுத்தாமலே நீங்கள் மணிக்கணக்கில் பேசமுடியும். 'நான்' என்கிற வார்த்தையைப் பயன்படுத்தாமலே ஒரு புத்தகம் எழுதுவதும் சாத்தியம். அந்த மொழி முற்றிலும் வேறானதோர் ஏற்பாட்டைக் கொண்டிருக்கிறது. 'நான்' என்கிற சொல்லை எளிதாய் விட்டுவிட முடியும்.

ஜப்பான் உலகிலேயே தியானத்தில் சிறந்த நாடாயிருப்பதில் வியப்பில்லை. 'ஜென்'னில் உயர்ந்த நிலைகளை - ஞானம் (Satori) சமாதி நிலை இவற்றை எட்டியிருக்கிறது. அது ஏன் ஜப்பானில் நிகழ்ந்தது? அது ஏன் பர்மாவிலும், தாய்லாந்திலும், வியட்நாமிலும் நிகழ்ந்தது. புத்தமதச் செல்வாக்குடைய நாடுகளில் எல்லாம், அவற்றின் மொழி, மற்ற நாடுகளுடையதில் இருந்து (புத்தமதத் தாக்கமில்லாத) வேறுபட்டிருக்கிறது. புத்தர் சொன்னார் 'நான்' என்பது இல்லை யென்று. அந்த முக்கியத்துவம் மொழிகளில் இடம் பெற்று விட்டது.

புத்தர் சொன்னார், 'எதுவும் நிலையானதல்ல' என்று. பைபிளை முதல்முறையாக புத்த மொழிகளில் மொழி பெயர்த்தபோது அதை மொழிபெயர்ப்பது ரொம்ப சிரமமாயிருந்தது. 'கடவுள் இருக்கிறார்' (God Is) என்பதை எப்படி வைப்பது? ரொம்பவும் அடிப்படையான பிரச்சினைதான். புத்த மதம் பரவியுள்ள நாடுகளில் 'இருக்கிறது' (Is) என்ற சொல்லே தூய்மையற்றதாய் கருதப்படுகிறது. எல்லாமும் 'பொருந்துகிறது' (becoming), எதுவும் 'இருப்பதில்லை' (nothing is). பர்மிய மொழியில் 'மரம் இருக்கிறது' என்று நீங்கள் சொல்ல விரும்பினால் 'மரம் உண்டாகிறது', 'மரம் வளர்கிறது' என்றுதான் சொல்ல முடியும். ஆறு இருக்கிறது என்று பர்மிய மொழியில் நீங்கள் சொல்ல விரும்பினால் ஆறு உண்டாகிறது, ஆறு நிகழ்கிறது (river is becoming) என்றுதான் சொல்ல வேண்டியிருக்கும். அது உண்மைதான், காரணம் ஆறு இருப்பதில்லை, ஆறு உண்டாகிறது. அது ஒரு செயல்முறையைக் கொண்டிருக்கிறது. அது பெயர்ச்சொல் அல்ல, வினைச்சொல். அது புகைப்படமல்ல, திரைப்படம் தொடரும் செயல் முறையைக் கொண்டது.

புத்த மொழிகள் அவற்றுக்கு ஒரு மாறுபட்ட அமைப்பைக் கொடுத்திருக்கின்றன, அந்நிலையில் ஒரு மாறுபட்ட மனதையும் அவை உருவாக்கின. மனம் பெருமளவில் மொழியைச் சார்ந் திருக்கிறது. அதன் ஒட்டுமொத்த ஆட்டமும் மொழிசார்ந்ததாகவே இருக்கிறது. அதுபற்றி எச்சரிக்கையாயிருங்கள்.

சின்னதாய் ஒரு கதை. அது சூஃபி மார்க்கத்தைக் கடைப்பிடிக்கும் இனத்தாரின் சிறிய கூட்டத்தில் நடந்தது.

தான் கற்ற கல்வியை அகந்தையோடு வெளிக்காட்டிக் கொள்ளும் இலக்கணக்காரன் (grammarian) ஒருவன், சூஃபி கூட்டமொன்றைக் கடந்து செல்லும் போது, குலமரபுத் தலைவர் 'உண்மையாகவே நாம் அவரிடமிருந்து (கடவுள்) வந்தோம், அவரிடமே திரும்புவோம்' என்று உரைப்பதைக் கேட்டான்.

அதைக் கேட்டதும் அந்த இலக்கணக்காரன் தன்னுடைய ஆடைகளைக் கிழித்துக்கொண்டு, விசித்திரமான ஒலியுடன் அழுது புலம்பலானான். அவனைச் சுற்றியிருந்தவர்கள், இவனுக்கு என்ன ஆயிற்று, இவன் மதச்சார்பு உடையவனோ அல்லது இறைவனைக் கண்டறியும் திறனுடையவனோ அல்லவே என்று திகைத்தனர்.

குர்-ஆனில் இருந்த சொல்லப்பட்ட அந்த வாசகம்தான் அவனைக் கிளர்ச்சியுறச் செய்தது என்பதைப் புரிந்து கொண்ட அந்தக் குலமரபுத் தலைவர், மறுபடியும், 'உண்மையாகவே நாம் அவரிட மிருந்து வந்தோம், அவரிடமே திரும்புவோம்' என்றார். அந்த இலக்கணக்காரன் மறுபடியும் தன்னுடைய ஆடைகளைக் கிழித்துக் கொண்டு, காலால் வேகமாய் உதைத்துக்கொண்டு, வேதனைக்குரல் எழுப்பினான்.

அந்தக் கூட்டத்தொடர் முடிந்தபோது இலக்கணக்காரனின் உடம்பில் பொட்டுத்துணிக்கூட இல்லை. குலமரபுத் தலைவர், அவனை ஒருபக்கமாய் அழைத்துச் சென்று, அவனுடைய முகத்தில் தண்ணீர் அடித்துவிட்டு, 'சொல்லுங்கள் ஐயா, குர்-ஆனில் இருந்து நான் அந்த வாசகத்தைச் சொன்னபோது நீங்கள் ஏன் அப்படி நடந்து கொண்டீர்கள்?' என்று கேட்டார்.

'பின்னே என்ன, என்னுடைய வாழ்க்கை நெடுகிலும் என்னுடைய அத்தனை உரைகளிலும் எழுத்துகளிலும், ஏன் சிறந்த பண்டிதர்களின் எழுத்துகளிலும் பழசோ புதுசோ எல்லாவற்றிலும் பன்மைகுறித்த தன்மை படர்க்கை வகையில் உறுதியைக் குறிக்கும் சொல்லாக 'shall'ஐத்தான் பயன்படுத்தியிருக்கிறோம். நீர் சொல்வது போல 'To him we will return', எதிர்காலக் குறிப்புத் துணைவினையான 'will'-ஐப் பயன்படுத்தக்கூடாது' என்றான் அவன்.

தன்மை வகையில் வெற்றெதிர்காலச் சொல்லான 'shall'-ஐப் பயன்படுத்துவதா, எதிர்காலக் குறிப்புத் துணைவினையான 'will'-ஐப் பயன்படுத்துவதா என்பதுதான் பிரச்சினை. எத்தனை நகைப்பிற் கிடமான பேச்சு பாருங்கள்! ரொம்பவும் பித்துக்குளித்தனமாக இருக்கிறதல்லவா. ஆனால் இதுதான் நடந்தது. புத்தர் உங்களிடம் வந்து 'கடவுள் இல்லை' என்றால் நீங்கள் உடனே பதற்றமும், கவலையும் கொண்டு விடுகிறீர்கள். அவர் அப்படி என்னதான் சொல்லி விட்டார்? உங்களுடைய மொழி வகையில் கொஞ்சம் மாறான ஒன்றைச் சொன்னார். அவர் 'நான்' என்பது இல்லை 'சுயம்' என்பது இல்லை' என்று சொன்னால் நீங்கள் அமைதிக் குலைவுக்குள்ளாகிறீர்கள். அவர்

என்னதான் செய்தார்? உங்களுடைய அகந்தையின் உத்தியை அகற்றினார் அவ்வளவே. உங்களுடைய மொழி சார்ந்த அமைப்பை – கருத்தை வெளியிடும் முறையை அடித்து நொறுக்கினார்.

இங்கே ஒவ்வொரு நாளும் இப்படி நடக்கிறதுதான். நான் ஒன்றைச் சொல்கிறபோது உங்களுடைய மொழிசார்ந்த அமைப்பை (linguistic pattern) நான் தூளாக்கி விடுகிறேன், நீங்கள் சீற்றமடைகிறீர்கள், கோபப்படுகிறீர்கள். நீங்கள் ஓர் இந்துவாக இருந்தால் இந்துக்களின் வழக்கு மொழியைப் பெற்றிருப்பீர்கள். நான் எதுவும் இல்லாதவன் (neither) என்பதால் உங்களுடைய அத்தனை மொழி அமைப்புகளையும் அழிப்பவனாயிருக்கிறேன். நீங்கள் கோபாவேசமாகி, என்ன செய்யலாம் என்று சிந்திக்கத் தொடங்குகிறீர்கள்.

ஆனால், நான் என்ன செய்கிறேன்? உங்களிடம் இருந்து நான் எதை எடுத்துக்கொள்ள முடியும்? நீங்கள் கடவுளை அறிந்திருப்பவராயின் புத்தர் உங்களிடமிருந்து கடவுளை எடுத்துச் செல்ல முடியுமா? அந்நிலையில் எதுவும் பிரச்சினையாயிருக்காது. ஆனால், மொழி சார்ந்த கோட்பாட்டை அவரால் எடுத்துச் செல்ல முடியும். தற்காலிக ஆதாரமாய் கொள்ளப்படும் கருத்தை (hypothesis) உங்களிடமிருந்து அவரால் எடுத்துச் செல்ல முடியும்.

சுத்த பிரக்ஞை (புருடன்)க்கும், சுத்த அறிவு (சத்துவம்)க்கும் உள்ள வேறுபாட்டை அறிய இயலாததன் விளைவே அனுபவம். மொழி சத்வத்துக்குரியதாய் இருக்கிறது. கோட்பாடுகள் சத்வத்துக்குரியதாய் இருக்கின்றன, தத்துவங்கள் சத்வத்துக்குரியதாய் இருக்கின்றன. சத்வம் உங்கள் அறிவையும், உங்கள் மனதையும் குறிக்கிறது. மனம் நீங்களாகாது.

கிறிஸ்தவம், இந்து மதம், சமண மதம், புத்த மதம் இவை மனதுக்குரியவை. அதனால்தான் புத்தத் துறவிகள் சொல்கிறார்கள், 'நீங்கள் புத்தரை எங்காவது வழியில் கண்டால் கொன்று விடுங்கள்' என்று. புத்தத் துறவிகளா அப்படிச் சொல்கிறாக்ள்? அவர்கள் சொல்கிறார்கள் 'நீங்கள் புத்தரைக் கண்டால் உடனே கொன்று விடுங்கள்' என்று. அவர்கள் சொல்வது இதுதான். 'மனதைக் கொன்று விடுங்கள், புத்தரைப் பற்றிய ஒரு கோட்பாட்டைச் சுமந்துகொண்டு திரியாதீர்கள். இல்லையேல் நீங்கள் ஒருபோதும் புத்தராவதற்கில்லை. நீங்கள் புத்தராக விரும்பினால், புத்தரைப் பற்றிய எல்லா கருத்துகளையும் விட்டு விடுங்கள் – ஆம், எல்லா கருத்துகளையும்'. அவர்கள் சொல்கிறார்கள், 'புத்தரின் பெயரை நீங்கள் வாய்விட்டுச்

சொன்னாலே உங்கள் வாயைக் கழுவி விடுங்கள். அந்த சொல் மாசடைந்து விடுகிறது' என்று. புத்தத் துறவிகளா அப்படிச் சொன்னது? அவர்கள் வியப்படையச் செய்வார்கள்... உண்மையிலேயே வியத்தற்குரியவர்கள்தாம் அவர்கள். அவர்கள் அதைத்தான் கருத்தில் கொள்கிறார்கள்.

அவர்களுடைய கருத்தை உங்களால் புரிந்து கொள்ள முடியுமெனில், உங்களால் மேலும் பலவற்றைப் புரிந்து கொள்ள முடியும்.

போதி தர்மர் கூறுகிறார், 'அத்தனை புனித நூல்களையும் எரித்து விடுங்கள், புத்தருடையது உட்பட' என்று. வேதங்களை மட்டுமல்ல, தம்மபதம் உட்பட எல்லா நூல்களையும் எரிக்கச் சொல்கிறார். புனித நூல்களை எரித்துக் கொண்டிருக்கும் லின்-சியின் ஓவியம் புகழ் பெற்றது. அவர்கள் மெய்ம்மையின் அடியாழத்துக்குச் செல்கிறவர்கள். அவர்கள் என்னதான் செய்கிறார்கள்? உங்களுடைய மனதை உங்களிடமிருந்து நீக்கி விடுகிறார்கள். உங்களுடைய வேதம் எங்கிருக்கிறது? நூலில் அல்ல, உங்கள் மனதில் இருக்கிறது. அவற்றைக் கைவிடுங்கள், அவற்றில் இருந்து வெளியேறுங்கள்.

அறிவு, மனம் என்பது இயற்கையின் ஒரு பகுதி. அது ஒரு பிரதிபலிப்பு. அது நிஜத்தைப் போல் இருக்கும் பார்ப்பதற்கு. ஆனால் இதை ஞாபகத்தில் வையுங்கள். 'கிட்டத்தட்ட நிஜம் போல்' இருந்தாலும் அது நிஜமாகி விடாது. அது பவுர்ணமி இரவில் தண்மையும் அமைதியும் நிறைந்த ஏரியின் நீர்ப்பரப்பில் நிலவைப் பார்ப்பது போன்றதாகும். அது பிரதிபலிப்பாகவே இருக்கும். சிற்றலைகள் இல்லாத நீரில் நிலவு முழுமையாய் பிரதிபலிக்கிறது. பிரதிபலிப்பு அழகாயிருந்தாலும் நிஜத்தைச் சிந்தியுங்கள். பிரதிபலிப்பிலேயே சிக்கிக்கொண்டு விடாதீர்கள். புத்தர் எதைச் சொன்னாலும் அது பிரதிபலிப்பாகவே இருக்கும். பதஞ்சலி எதை எழுதினாலும் அது பிரதிபலிப்புதான், நான் எதைச் சொன்னாலும் அது பிரதிபலிப்பே. அதில் அகப்பட்டுக் கொள்ளாதீர்கள். பிரதிபிம்பம் அழகாயிருந்தாலும் நிஜத்தைச் சோதித்தறியப் பாருங்கள். நிலவின் பிரதிபிம்பத்தில் இருந்து நிலவை நோக்கிச் செல்லுங்கள்.

அந்தப் பாதை பிரதிபிம்பத்துக்கு நேர் எதிராகவே இருக்கும். நீங்கள் தொடர்ந்து பிம்பத்தையே பார்த்துக் கொண்டிருந்தால் பிம்பத்திலேயே வசியமாகி விடுவீர்கள். நீங்கள் ஒருபோதும் வானத்து நிலவைப் பார்க்க இயலாமல் போகும். காரணம் விட்ட அளவில் (diametrically) எதிரிடையாயிருப்பதுதான். நீங்கள் நிஜமான நிலவைப்

பார்க்க விரும்பினால், பிம்பத்தில் இருந்து நீங்கள் விலகிச் சென்றாக வேண்டும் - புனித நூல்களை எரிக்கவும், புத்தர்களைக் கொல்லவும் வேண்டியிருக்கும். விட்டம் சார்ந்த வகையிலும், பரிமாணத்திலும் நீங்கள் நேர் எதிரிடையாகச் செல்லும் படியாகும். அந்நிலையில் உங்கள் தலை நிலவின் பக்கம் இருக்கும். உங்களால் பிம்பத்தைப் பார்க்க முடியாது. பிம்பம் மறைந்து விடும்.

எல்லாப் புனித நூல்களும் பெருமளவில் உங்களுடைய அறிவுக்குப் பயிற்சியளித்து, ஒழுங்கு செய்வதாகவே இருக்கும். எந்தவொரு புனித நூலும் சுத்த பிரக்ஞை (புருடன்)யை, சாட்சி பாவத்தை, விழிப்புணர்வை நோக்கி உங்களை இட்டுச் செல்வதில்லை. "... சுத்த பிரக்ஞை (புருடன்)க்கும் சுத்த அறிவு (சத்வம்)க்கும் வேறுபாடு கண்டறிய இயலாமை..." அதுவே அறியாமையில், இருண்ட இரவில், உலகில் பருப்பொருளில் நுழையாமலிருக்கவும், உங்களுடைய சொந்தக் கருத்துகளுக்கும் வெளிப்பாடுகளுக்குமே நீங்கள் இரையாகவும் காரணம்.

'......... அவை முற்றிலும் வேறுபாடுள்ளதாயிருந்தாலும்....' நீங்கள் அதைப் புரிந்து கொள்ள முடியும். மிகச் சிறந்தவொரு கருத்து உங்களிடம் வேறுபட்டாலும் - அது உங்களுக்குள் புலனால் அறியக்கூடிய ஒரு பொருளாய் தோன்றுவதை நீங்கள் காண முடியும். மிகச் சிறந்தவொரு கருத்து உங்களுக்குள் ஒரு பொருளாய் இருந்தாலும் நீங்கள் அதில் இருந்து வெகு தொலைவு விலகியிருக்க முடியும். ஒரு குன்றின் மீது இருந்து நோக்குபவரைப் போல் நீங்கள் அந்தக் கருத்தை நோக்க முடியும். எந்தவொரு பொருளுடனும் உங்களை அடையாளப்படுத்திக் கொள்ளாதீர்கள்.

'சுய அக்கறையின் பேரில் சிந்தனையைச் செலுத்த ஆத்மனைப் பற்றிய அறிவு உண்டாகும். அது மற்றவற்றைப் பற்றிய அறிவில் இருந்து வேறாக்கப்பட்டதாகும்' - ஸ்வர்த்த சம்யமா புருஷ ஞானம்'. பதஞ்சலி சொல்கிறார், 'சுயநலம் கொண்டிருப்பதே ஆன்ம அறிவைத் தரும்' என்று. ஸ்வார்த்தம். தன்னலமுற்றிருப்பது - அதுவே சமயத்தின் மையப்பகுதியாய் இருக்கிறது. உங்களுடைய மெய்யான சுய விருப்பம் என்னவென்பதைக் கண்டறிய முயலுங்கள். உங்களுடைய மெய்யான சுயவிருப்பம் என்னவென்பதைக் கண்டறிய முயலுங்கள். உங்களுடைய உண்மையான சுயம் எங்கிருக்கிறதென்பதைக் கண்டறிய முயலுங்கள். உங்களை மற்றவற்றில் இருந்து வேறுபடுத்திக் காண முயலுங்கள்.

உங்களுக்கு வெளியில் இருப்பவர்களை மட்டுமே மற்றவை என்று எண்ணிக் கொள்ளாதீர்கள். அவர்கள் மற்றவர்கள்தாம், ஆனால் உங்களுடைய உடம்புங்கூட உங்களுக்கு மற்ற ஒன்றுதான். அது ஒருநாள் மண்ணுக்குத் திரும்பும், அது மண்ணின் ஒரு பகுதி. உங்களுடைய மூச்சுகூட உங்களில் இருந்து வேறானதுதான்; அது வாயு மண்டலத்துக்குத் திரும்பும். அது கொஞ்ச காலத்துக்கு மட்டுமே உங்களிடம் கொடுக்கப்பட்டது. நீங்கள் அதை இரவலாகப் பெற்றீர்கள். அது திருப்பித் தரப்பட வேண்டியது. நீங்கள் இங்கிருக்க மாட்டீர்கள், உங்களுடைய மூச்சு காற்றில் கலந்திருக்கும். நீங்கள் இங்கிருக்க மாட்டீர்கள், உங்களுடைய உடல் மட்டும் இம்மண்ணில் உறங்கிக் கொண்டிருக்கும். எதை உங்களுடைய குருதியாய் எண்ணிக் கொண்டீர்களோ அது நதிகளாய் ஓடிக்கொண்டிருக்கும். எல்லாமும் திரும்பி விடும். ஒவ்வொன்றும் திரும்பிச் சென்று விடும்.

ஆனால் ஒன்றை நீங்கள் எவரிடமிருந்தும் இரவலாய் பெற்றுவிடவில்லை. அது உங்களுடைய சாட்சிபாவம் - விழிப்புணர்வு.

அறிவு மறையும், தர்க்கம் செய்யும் திறன் மறையும். அவை வானில் வடிவம் கொண்ட மேகங்கள் போன்றவை. அவை ஒன்றாக வந்தன, உருவின்றிச் சென்றன. ஆனால் அந்த வானம் இருந்தபடியே இருக்கிறது. நீங்கள் விரிந்து பரந்த அண்டவெளியாய் இருக்க முடியும். அண்ட வெளியே புருடன் - அகவெளியில் புருடன்.

அதை எப்படி அறிந்து கொள்வது? தெரிந்து கொள்ள வேண்டும் என்கிற சுய விருப்பத்தின் பேரில் சிந்தனை செய்வது. உங்களுடைய கவன ஒருமை (தாரணை), ஆழ்ந்த சிந்தனை (தியானம்), பரவசம் (சமாதி) இவை மூன்றையும் உங்களுடைய சுயவிருப்பத்துக்குக் கொண்டு வரவேண்டும். மேற்கத்திய மக்கள் மேல்நோக்கித் திருப்புகிறார்கள். நீங்கள் உள்நோக்கித் திருப்புங்கள். நீங்கள் யார் என்கிற குவிமையத்துக்கு உங்களுடைய உணர்வைக் கொண்டு செல்லுங்கள். பொருள்களுக்கிடையே வகைப்படுத்துங்கள், வேறுபடுத்திக் காணுங்கள். பசி ஒரு நோக்கம். நீங்கள் நன்றாக உணவுண்டதும் அந்த நோக்கம் நிறைவேறி விடுகிறது. பசி நீங்கியதும் ஒரு திருப்தி அடைகிறீர்கள். இரண்டுமே புலனால் அறியக்கூடியது தான். காலை வருகிறது. மாலை வருகிறது. இரண்டுமே புலனால் அறியக்கூடியவை (objects)தாம். பசி இருந்ததோ, இல்லையோ நீங்கள் ஒரே மாதிரிதான் இருக்கிறீர்கள். வாழ்க்கையோ மரணமோ, துயரமோ மகிழ்ச்சியோ அதே கண்காணிப்பாளராய் இருங்கள்.

ஒரு திரைப்படத்தைப் பார்க்கும்போது கூட நீங்கள் அதில் வசீகரிக்கப்பட்டு விடுகிறீர்கள். ஒரு வெள்ளைத் திரையில் நிழல்கள் அசைவதைத் தவிர வேறில்லை என்பதை நீங்கள் நன்றாகவே அறிவீர்கள். ஆனால், திரைப்பட அரங்கில் பார்வையாளர்களாய் அமர்ந்திருப்பவர்களை நீங்கள் கவனித்ததுண்டா? திரையில் சோகமாய் ஏதேனும் நிகழும்போது சிலர் அழுது விடுகிறார்கள். கண்ணீர் விடுகிறார்கள். பாருங்கள் அந்தத் திரையில் நிஜமாய் எதுவும் நிகழ்ந்திருக்கவில்லை. ஆனால் அவர்கள் விடுகிற கண்ணீர் நிஜம். உண்மையற்ற – வெறும் மாயத்தோற்றம் கண்ணீரை வரவழைத்து விடுகிறது. புத்தகத்தில் ஒரு கதையைப் படிக்கிறவர்கள் ரொம்பவே மனக்கிளர்ச்சியடைகிறார்கள். ஆடையில்லாத ஒரு பெண்ணின் படத்தைப் பார்த்து பால் சார்ந்த விதத்தில் எழுச்சி பெற்று விடுகிறார்கள். பாருங்கள் அங்கே எதுவும் இல்லை. சில கோடுகள் தவிர்த்து வேறு எதுவும் இல்லை. கொஞ்சம் மைதான் காகிதத்தில் பரவியிருக்கிறது. ஆனால் அவை ஏற்படுத்தும் பால்சார்ந்த எழுச்சி நிஜம்.

மனதின் போக்கு – பொருள்களின்பால் வசீகரிக்கப்படுவதாய் அவற்றுடன் தன்னை அடையாளப்படுத்திக் கொள்வதாய் இருக்கிறது.

முடிந்தபோதெல்லாம் உங்களைக் கையும் களவுமாய் பிடிக்கப் பாருங்கள். மீண்டும் மீண்டும் உங்களைக் கையும் களவுமாய் பிடித்து, பொருளைக் கைவிடுங்கள். சற்றும் எதிர்பாராத விதமாய் ஓர் அமைதியை அடைவீர்கள், மனக்கிளர்ச்சி போயே போய்விட்டிருக் கும். திரை மட்டுமே அங்கிருக்கிறது, வேறு எதுவுமில்லை என்பதை நீங்கள் உணரும்போது, இதற்குத்தானா இத்தனை கிளர்ச்சியுற்றோம் என்பதைப் புரிந்து கொள்ளும்போது... உலகமே ஒரு வெள்ளித்திரை, அங்கே நீங்கள் காண்பதெல்லாம் உங்கள் ஆசைகளின் வெளிப்பாடுகளே. நீங்கள் விரும்புவதையெல்லாம் படமாகப் பார்த்து, நம்பவும் செய்கிறீர்கள். இந்த உலகமே ஒரு கற்பனைதான்.

நீங்கள் எல்லாரும் ஒரே மாதிரி உலகில் வாழ்ந்து கொண்டிருக்க வில்லை என்பதை நினைவில் வையுங்கள். ஒவ்வொருவரும் தனக்கென்று ஓர் உலகைப் படைத்துக் கொண்டிருக்கிறார்கள். காரணம் அவரவர் கற்பனையில் இருந்து வேறுபடுகிறது. உண்மை ஒன்றுதான். ஆனால் கற்பனைகள் மிகப்பல. மனங்களைப் போல.

நீங்கள் ஒரு கற்பனையில் மூழ்கியிருக்கும் போது உங்களால் அடுத்தவருடன் உரையாட முடியாது. அவர் தன்னுடைய கற்பனையில் இருப்பார். அதுதான் நடக்கிறது. மக்கள் தொடர்புகொள்ள

விரும்பும்போது அவர்களால் தொடர்பு கொள்ள முடியாமல் போகிறது. ஏதோ ஒரு வகையில் அவர்கள் ஒருவரையொருவர் தவறவிட்டு விடுகிறார்கள். காதலர்களும், மனைவியரும், நண்பர்களும், கணவர்களும் ஒருவரையொருவர் தவறவிட்டபடி இருக்கிறார்கள். தாங்கள் ஏன் ஒருவரோடொருவர் பேச முடியாமல் போகிறது என்று அவர்கள் கவலைப்படுகிறார்கள். அவர்கள் ஏதோ ஒன்றைச் சொல்ல விரும்புவார்கள். அடுத்தவரோ அதை வேறுவிதமாய் புரிந்து கொள்வார். 'நான் இதனைக் குறிப்பிடவில்லை' என்று இவர்கள் சொல்லிக்கொண்டே இருக்க, அடுத்தவரோ வேறொன்றைக் காதில் போட்டுக் கொண்டிருப்பார்.

என்னதான் நடக்கிறது? அடுத்தவர் தன்னுடைய கற்பனையில் வாழ்ந்து கொண்டிருப்பார். உங்களுடைய கற்பனையில் நீங்கள் வாழ்ந்து கொண்டிருப்பீர்கள். ஒரே திரையில் அவர் ஒரு படத்தையும், நீங்கள் ஒரு படத்தையும் போட்டுப் பார்த்துக் கொண்டிருப்பீர்கள். அதனால்தான் உறவு என்பது அத்தகையதொரு வருத்தத்தையும், வேதனையையும் அளிப்பதாகி விடுகிறது. தனித்திருப்பது ஒருவருக்கு விரும்பத்தக்கதாயும், மகிழ்ச்சியளிப்பதாயும் தெரிகிறது. மற்றவர்களுடன் பழகும்போது ஏதோ சதுப்பு நிலத்தில் சிக்கிக்கொண்ட மாதிரி, நரகத்தில் இருப்பது போல் உணர்வார்.

சார்த்தர் அனுபவர் சொல்கிறார். 'மற்றது என்றாலே நரகம்தான்' என்று. ஆனால், அந்த நரகத்தைத் தோற்றுவிப்பது அடுத்தவர் அல்ல. இரண்டு கற்பனைகள் மோதிக்கொள்கின்றன. இரண்டு கனவுலகங்கள் மோதிக் கொள்கின்றன.

உங்கள் கற்பனை உலகை விட்டு நீங்கள், தம்முடைய கற்பனை உலகைவிட்டு அடுத்தவரும் வெளியே வந்தால்தான் தகவல் தொடர்பு சாத்தியம். அந்நிலையில் இரண்டு இருப்புணர்வுகள் (beings) ஒன்றையொன்று எதிர்கொள்கின்றன - அவை இரண்டல்ல, காரணம் இரட்டைத்தன்மை கற்பனை உலகுடன் நழுவி விடுகிறது. பிறகு அவை ஒன்றேதான்.

ஒரு புத்தர், புத்தராயிருக்கும் மற்றொருவரை எதிர்கொள்ளும் போது அவர்கள் இருவர் அல்லர். அதனால்தான் இரண்டு புத்தர்கள் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டதாய் தெரியவில்லை. அங்கே பேசிக்கொள்வதற்கு இரண்டு பேர் இல்லை. அவர்கள் சந்தடியின்றி, அமைதியாயிருக்கிறார்கள். மகாவீரரும், புத்தரும் வாழ்ந்தது பற்றிக் கதைகள் உண்டு. அவர்கள் சமகாலத்தில் வாழ்ந்தவர்கள்.

சின்னஞ்சிறிய பீகார் மாநிலத்திலேயே அங்குமிங்குமாய் சுற்றி, இடம் மாறிக் கொண்டிருந்திருக்கிறார்கள். அது பீகார் என்று அழைக்கப்படுவதற்கு இவர்கள் இருவருமே காரணம். 'பிகார்' என்று சொல்வதன் பொருள் 'சுற்றித்திரிவது' ஆகும். இவர்கள் இருவரும் அந்த மாநிலம் முழுதும் சுற்றியபடி இருந்திருக்கிறார்கள் - ஆனால் ஒருவரையொருவர் நேர்பட சந்தித்துக் கொண்டதில்லை. பல சமயம் ஒரே நகரத்தில் அவர்கள் இருந்திருக்கிறார்கள். அந்த நகரம் ஒன்றும் அத்தனை பெரிதாயிருக்காது. பல சமயங்களில் அவர்கள் ஒரே கிராமத்தில் ஒரே இடத்தில் தங்கியிருந்ததுண்டு. ஒரு சமயம் அவர்கள் ஒரே தர்மசாலாவில் (சத்திரம்) தங்கியிருந்தும் ஒருவரையொருவர் சந்தித்துக் கொள்ளவில்லை.

தற்போது ஒரு பிரச்சினை எழுகிறது. ஏன்? அவர்கள் ஏன் சந்தித்துக் கொள்ளவில்லை என்று புத்தமதத்தினரிடமும், சமண மதத்தினரிடமும் நீங்கள் கேட்டால் அவர்கள் கொஞ்சம் குழப்பத்துக்குள்ளாகி விடுவார்கள். காரணம், இதில் அகந்தை - தற்பெருமை இருக்கிற மாதிரி தெரிகிறது. அப்படித்தானே. யார் யாரைத் தேடிப் போவது? புத்தர் மகாவீரரிடமா அல்லது மகாவீரர் புத்தரிடமா? எனவேதான் சமணர்களும், புத்த மதத்தைச் சேர்ந்தவர்களும் இந்தக் கேள்வியைத் தவிர்க்கப் பார்ப்பது. அவர்கள் ஒருபோதும் விடையளிப்பதில்லை. ஆனால் நான் அறிவேன். அங்கே சந்திப்பதற்கு இரண்டு பேர் இருக்கவில்லை என்பதுதான் காரணம். இரண்டு வெறுமைகள் (emptinesses) ஒரே தர்மசாலாவில் தங்கியிருந்திருக்கின்றன. ஆக, என்ன செய்ய? இரண்டையும் எப்படி ஒன்று சேர்ப்பது? இரண்டையும் ஒன்று சேர்த்தாலும் அங்கே ஒரு வெறுமைதான் இருக்கும், இரண்டும் இருக்காது. நேருக்கு நேர் சந்தித்துக் கொள்ளும் இரண்டு பூஜ்யங்கள் ஒன்றாகி விடும்.

சுய விருப்பத்தின்பேரில் செயற்படுத்தப்படுகிற சிந்தனை மற்ற அறிவுகளிலிருந்து வேறான புருட அறிவை (சுத்த பிரக்ஞை)க் கொடுக்கும்.

**'ததா ப்ரிதிபா ஸ்ரவணவேதன் ஆதர்ஷ் அஸ்வதா வர்த்தா ஜயந்தே'**

இதிலிருந்து தொடர்கிறது உள்ளுணர்வு சார்ந்த கேட்டலும், தீண்டலும், காணலும், சுவைத்தலும், முகர்தலும்.

ப்ரிதா என்ற சொல்லை மறுபடியும் புரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. யார் பரிசுத்தமான கவனத்தையும், தூய

விழிப்புணர்வையும், புனிதமான அகத்தெளிவையும், கள்ளம் கபடற்ற தன்மையையும் கொண்டிருக்கிறாரோ அவர் பிரதிபாவை அடைகிறார். அறிவு சூரியத் தொடர்புடையதாயும், உள்ளுணர்வு சந்திரத் தொடர்புடையதாயும், பிரதிபா அவ்விரண்டினைக் கடந்ததாயும் இருக்கின்றன. ஆண் அறிவு சார்ந்தவனாயும், பெண் உள்ளுணர்வு சார்ந்தவளாயும் இருக்கின்றனர். ஆனால், ஞானமுற்ற புத்த புருஷரோ ஆணுமல்லர், பெண்ணுமல்லள்.

நீங்கள் அறிவுசார்ந்தவராயின் வலுச்சண்டை போடுவீர்கள். அறிவு வலுத்தாக்குதலுக்குத் தயாராயிருப்பது. சூரிய சக்தி சண்டைக்குணமுடையது. அதனால்தான் ஒரு பெண் ஓர் ஆணைக் கற்பழித்தாள் என்று நாம் ஒருபோதும் கேள்விப்பட்டதில்லை. ஓர் ஆண் மட்டுமே ஒரு பெண்ணைக் கற்பழிக்க முடிகிறது. சூரிய சக்தி தாக்கக்கூடியதாய் இருக்கிறது. சந்திர சக்தியோ வரவேற்கும் பண்பினைக் கொண்டது. அறிவு எதிர்க்கிறது. உள்ளுணர்வு வரவேற்கிறது. நீங்கள் வரவேற்கும் பண்புடையவராயின் நீங்கள் உள்ளுணர்வு சார்ந்தவராகி விடுவீர்கள். அறிவாளி ஒருபோதும் புரிந்துகொள்ள முடியாத பலவற்றையும் நீங்கள் புரிந்து கொள்வீர்கள். காரணம், அவர் ஏற்றுக்கொள்ள இசைவானவராய் இருப்பதில்லை. அறிவாளி காண முயற்சித்தும் கண்டுகொள்ள முடிவதில்லை, உள்ளுணர்வு சார்ந்தவரோ காண முயற்சிக்காமலே கண்டு கொள்கிறார்.

மிகச்சிறந்த கண்டுபிடிப்புகளெல்லாம் அறிவு சார்ந்தவர்களால் நிகழ்த்தப்பட்டிருந்தாலும் அவர்களுடைய உள்ளுணர்வு சார்ந்த மனநிலைகளில் அவை கண்டுபிடிக்கப்பட்டன என்பதே உண்மை. உள்ளுணர்வு சார்ந்தவர்கள் எதையும் காண முயற்சிப்பதில்லை என்பதனால் அவர்களால் கண்டுபிடிப்புகள் நிகழ்த்தப்படவில்லை. அவர்கள் பக்கமாய் வர நேர்ந்தாலும், நேர்பட எதிர் கொண்டாலும்கூட அவற்றை மறந்து விடுகிறார்கள். அதனால்தான் பெண்கள் கண்டுபிடிப்புகளை நிகழ்த்தவில்லை என்று படுகிறது. அவர்களுக்கு நிகழாது என்றில்லை, ஆண்களைவிட அதிகமாகவே நிகழ்கிறது. ஆனாலும் பாருங்கள், சமையற்கலையில் கூட பெண்களைவிட ஆண்களே அபிவிருத்தி அடைந்திருக்கிறார்கள். மிகச்சிறந்த சமையற்கலைஞர்கள் எல்லாருமே ஆண்கள்தாம். குறைந்தபட்சம் இதிலாவது அப்படி இருந்திருக்க வேண்டாம். உயர்தர ஓட்டல்களிலும், பெரிய ஓட்டல்களிலும், புகழ்பெற்ற ஓட்டல்களிலும் எந்தவொரு பெண்ணையும் உணவு தயாரிக்கும் பணியில் அமர்த்திக் கொள்வதில்லை. பெண்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய்

சமைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் கண்டுபிடிப்புகளை நிகழ்த்துவதும் புதுமைகளைப் புகுத்துவதும் என்னவோ ஆண்கள்தாம். பெண்கள் வரவேற்கும் பண்புடையவர்கள். அவர்கள் வழியில் வாய்ப்புகள் வரவில்லை என்றாகாது. அவை வந்து போகின்றன. அவர்கள் அவற்றைப் பற்றிக் கொள்வதில்லை.

அறிவாளிகள் எல்லாப் பக்கமும் நோட்டம் விடுகிறார்கள். ஒரு மூலை முடுக்கையும் அவர்கள் விடுவதில்லை. ஆண்களின் பால்சார்ந்த ஆற்றலே அத்தனை அறிவியல் ஆய்வுகளுக்கும் காரணம் என்று உளவியல் நிபுணர்கள் சொல்கிறார்கள். சிறுவனிடம் ஒரு விளையாட்டுப் பொருளைக் கொடுக்கிறீர்கள். சில நிமிடங்களுக்குள் அது வீணாகி விடுகிறது. அவன் அதைத் திறந்து பார்க்கிறான், உள்ளே என்ன இருக்கிறது என்று ஆராய்கிறான். நீங்கள் ஒரு சிறுமியிடம் விளையாட்டுப் பொம்மை ஒன்றைக் கொடுத்துப் பாருங்கள். அவள் ஆண்டுக்கணக்கில் அதைப் பாதுகாப்பாய் வைத்திருப்பாள். கதவுள்ள அலமாரியில் பத்திரமாய் பூட்டி வைத்து விடுவாள். அவள் பொம்மைக்கு அலங்காரம் செய்வாள். பையனோ அதை உடனடியாய் நாசம் பண்ணிவிடுவான். அது எங்கிருந்து இயக்கம் பெறுகிறது என்பதை அவன் அறிய விரும்புவான். அவன் அடியாழத்துக்குச் சென்று கவனமாய் தேட விரும்புவான்.

அறிவியல் முழுதுமே ஒருவகையில் ஆணின் பாலுணர்வுதான். தேடல், கவனமாய் தேடல், திறந்து பார்த்தல்.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு.

கடற்படைப் பிரிவு ஒன்று கடுமையான பணிக்குப்பின் ஓய்வுக்காகத் திருப்பி அனுப்பப்பட்டது. தளத்தில் அவ்வப்போது பல்வேறு நிலைகளுக்கு அனுப்பப்பட வேண்டிய பெண் மாலுமிகள் காத்திருந்தனர். கடற்படை கர்னல் பெண்களின் கமாண்டரைப் பார்த்து, தம்முடைய படையாட்கள் நடைமுறைப்படி இருந்து ரொம்ப நாளாயிற்று. பெண்களிடம் அவர்களுக்குக் கவனமாய் நடக்கத் தெரியாது' என்றார்.

'எந்தத் தொல்லையும் கூடாது என்று நீங்கள் விரும்பினால் அவர்களைப் பூட்டி வையுங்கள்' என்று அவர் எச்சரித்தார்.

'தொல்லையா?' அந்தப் பெண் கமாண்டர் வெடுவெடுத்தாள். 'எங்க பெண்கள் எல்லாத்தையும் மனசுல வச்சிருக்காங்க' என்று நெற்றியில் தட்டிக்கொண்டாள் அவள்.

'மேடம்' கர்னல் கூவினார். 'அவங்க அதை எங்க வச்சிருந் தாலும் பெரிய வித்தியாசமில்லை. எங்க பையங்க அதைக் கண்டுபிடிச்சிருவாங்க. அவங்களைப் பூட்டி வையுங்க' என்று.

ஒட்டுமொத்த மனித குலத்தின் பாலுணர்வும் இரண்டு வகையாய் பகுக்கப்பட்டிருக்கிறது. 'வலுத்தாக்குதல் தொடுப்பது, இணக்கமாய் இருப்பது' என்று. அதனால்தான் ஆணைவிட பெண் பலம் மிக்கவளாய் இருந்தும் எப்போதுமே கொடுமைக்குள்ளாவது. பெண் பலவிதத்திலும் ஆணைவிட பலமானவள் என்பதை நினைவில் வையுங்கள். ஆணைவிட அவள் நீண்டகாலம் வாழ்கிறாள், சராசரியாக ஐந்து ஆண்டுகள் கூடுதல். ஓர் ஆண் எழுபத்தைந்து வயது வரை வாழ்ந்தால் பெண் எண்பது வயது வாழ்கிறாள். ஆணைவிட பெண் மிகுந்த ஆரோக்கியத்துடன் வாழ்கிறாள், குறைந்த அளவே நோய்வாய்ப்படுகிறாள், நோயுற்றாலும் சீக்கிரமே குணமடைந்து விடுகிறாள். ஆனாலும் அவள் அடக்கி ஒடுக்கப்படுகிறாள். அவள் அதிகம் எதிர்ப்பு காட்டுகிறவள், அதிகம் வளைந்து கொடுக்கிறவள், அதிக சுறுசுறுப்பானவள், குழந்தைகளைப் பெற்று வளர்க்கிறாள். தன்னுடைய வாழ்க்கையைப் பகிர்ந்து கொள்கிறாள், மற்றவர்களுக்கு வாழ்க்கை கொடுக்கிறாள். அத்தனைக்குப் பிறகும் வாழ்கிறாள், வெகு நேர்த்தியாக. அவள் வலுவானவள், ஆனாலும், அவள் கொடுமைப்படுத்தப் படுவதற்குக் காரணம், அவளுடைய ஏற்கும் பண்பும், இணக்கத்தன்மையுந்தான். அவளுடைய ஆற்றலின் செயல்பாடு தாக்குதல் தொடுப்பதாயில்லை, தழைந்து போவதாய் இருக்கிறது.

அறிவு ஆண்களுக்கு எளிதாய் நேரிட்டு விடுகிறது. வலுத்தாக்குதல், வாதிடுதல் இவற்றின் போக்கையே அறிவும் கொண்டிருக்கிறது. பெண்கள் ரொம்பவே உள்ளுணர்வு சார்ந்தவர்கள்; அவர்கள் எதையும் முன்கூட்டியே உணரக்கூடியவர்களாய் இருக்கிறார்கள். முன் உணர்தல்கள் (hunches) மூலமே அவர்கள் வாழ்கிறார்கள். அவர்கள் ஒரே தாவாய் தாவி தீர்மானத்துக்கு வந்து விடுவார்கள். அதனால்தான் ஒரு பெண்ணுடன் வாதிடுவது கடினமாய் இருக்கிறது. அவள் முன்கூட்டியே முடிவு கட்டிவிடுகிறாள், விவாதம் அவசியமில்லாமல் போய்விடுகிறது. உங்களுடைய நேரந்தான் வீணாகும். அவள் அறிவிக்க (declare)க் காத்திருக்கிறாள். நீங்களோ ஒட்டியும் வெட்டியும் பேசிக்கொண்டு நேரத்தை வீணடிக்கிறீர்கள்... எல்லாமே பயனற்றவை. அவள் முடிவுக்கு வந்தாயிற்று.

உள்ளுணர்வு முடிவு கட்டுகிறது. அதனால்தான் பெண்கள் புலன்களின் தொடர்பின்றியே தங்கள் உள்ளத்தில் உள்ளதைச் செயல்படுத்துகிறவர்களாய் (telepathic) இருக்கிறார்கள். அவர்கள் தொலைநோக்கு உடையவர்கள், உள்ளுணர்வு சார்ந்த பல செயல்கள் அவர்களுக்கு நடக்கின்றன.

மிகச்சிறந்த இடையீட்டாளர்கள் (mediums) எல்லாம் பெண்களாகவே இருக்கிறார்கள். அறிதுயிலில் ஆழ்த்துதல், உளக்கணிப்பு செய்தல் (telepathy), புலன்கள் காணாதவற்றைக் காணும் திறன் (clairvoyance) இவையெல்லாம் பெண்களின் உலகத்துக்கே உரியவை. வரலாற்றுத் தொடர்பாய் ஒரு விஷயத்தை உங்களுக்குச் சொல்கிறேன்.

மந்திர வேலை பெண்களின் திறனுக்குரியதாய் இருந்திருக்கிறது. பில்லி சூன்யத்தில் அவர்கள் தேர்ந்திருந்தனர். உலகில் உள்ள மந்திரவாதிகள் அனைவரும் உள்ளுணர்வு சார்ந்தவர்கள்தாம். குருமார்கள் அதற்கு எதிரானவர்கள், காரணம் அவர்களுடைய உலகம் அறிவுசார்ந்த. மந்திரவாதிகள் எல்லாருமே பெண்களாயிருந்தனர். குருமார்கள் எல்லாருமே ஆண்களாயிருந்தனர். முதலில் குருமார்கள் மந்திரக்காரிகளை தீயிட்டு எரிக்க முயன்றனர். ஐரோப்பாவில் ஆயிரக்கணக்கான பெண்களை சூனியக்காரிகள் என்று குற்றம் சாட்டி எரிக்கப்பட்டனர். காரணம், உள்ளுணர்வு சார்ந்த உலகத்தைக் குருமார்களால் புரிந்துகொள்ள முடியிவில்லை. அவர்களுக்கு அதில் நம்பிக்கையில்லை – அது விசித்திரமாயும், ஆபத்தானதாயும் பார்க்கப்பட்டது. அவர்கள் அதை முற்றிலுமாய் துடைத்தெறிய விரும்பினார்கள்.

அவர்கள் முற்றிலுமாய் துடைத்தெறியவும் செய்தார்கள். ஏற்புத்தன்மையுள்ள, உன்னதமான அறிவுடைய, இருப்புணர்வின் சிறந்த பரப்பெல்லைகளை, மேம்பட்ட சாத்தியங்களைக் கொண்ட மிகவும் நேர்த்தியான கருவிகளை அவர்கள் அழிக்க முயன்றனர். ஆவியுலக இடையீடு சார்ந்த (mediumistic) ஒரு பெண், கண்ணில் பட்டால் போதும், அவர்கள் உடனே அழித்து விடுவார்கள். அத்தகைய பயத்தைக் கொண்ட பெண்கள் தங்களுடைய திறமைகளை இழந்தனர்.

தற்போது அதுவேதான் மறுபடியும் தொடர்கிறது. உளப் பகுப்பாய்வு செய்பவர்கள் (Psychoanalysts) எல்லோரும் ஆண்கள், அவர்கள் மந்திர விதைக்கு எதிராக உள்ளனர். குருமார்களின் இடத்தை அவர்கள் பிடித்துக் கொண்டார்கள் என்றே சொல்ல

வேண்டும். எல்லோரும் ஆண்கள். ஃப்ராய்டை பின்பற்றுகிறவர்கள், ஆட்லரைப் பின்பற்றுகிறவர்கள் என்று எல்லோருமே ஆண்கள்தாம். தற்போது அவர்கள் பெண்களுக்கு எதிராக இருக்கிறார்கள். உங்களுக்குத் தெரியுமா? அவர்களுடைய நோயாளிகளில் பலரும் பெண்கள்தாம் என்பது. சூன்யக்காரிகள் இருந்தபோது அவர்களிடம் நோயாளிகளாய் சென்றவர்கள் பெரும்பாலும் ஆண்களாகவே இருந்திருக்கிறார்கள். இது என்னை திகைப்படையச் செய்தது என்றாலும், இருக்க வேண்டியபடிதான் இருக்கிறது என்றே படுகிறது. உள்ளுணர்வின் துணையை அறிவு நாடிச் சென்றிருக்கிறது! தற்போது தலைகீழாய் நடந்து கொண்டிருக்கிறது. உளப்பகுப்பாய்வு செய் பவர்கள் ஆண்களாகவும், நோயாளிகள் பெண்களாகவும் இருக் கின்றனர். தற்போது உள்ளுணர்வு முடமாக்கப்பட்டிருப்பதுடன், அறிவின் துணையால் பிழைத்திருக்க வேண்டிய நிலைக்கு அது தள்ளப்பட்டிருக்கிறது.

உயர்ந்த ஒன்று தாழ்ந்த ஒன்றிடம் உதவி வேண்டி நிற்கிறது. இது வருந்தத்தக்க விஷயந்தான். அது இப்படி இருக்கக்கூடாது.

அறிவியலின் வரலாறு இதனைப் பல வழிகளில் நிருபித்திருக் கிறது. உள்ளுணர்வு ஒரு செய்முறையாய் பயன்படுத்தப்பட்டபோது இரசவாதம் (alchemy) இருந்திருக்கிறது. அறிவின் ஆதிக்கத்தில் வேதியியல் தோன்றியது, இரசவாதம் மறைந்தது. இரசவாதம் உள்ளுணர்வு சார்ந்தது, இரசாயனம் (வேதியியல்) அறிவு சார்ந்தது. இரசவாதம் சந்திரன், இரசாயனம் சூரியன். சந்திரன் அதிகாரத்தில் இருந்தபோது உள்ளுணர்வு அதிகாரம் பெற்றிருந்தது. அப்போது சோதிடம் இருந்தது. தற்போது விண்கோள்கள் பற்றிய அறிவியல் இருக்கிறது. சோதிடம் மறைந்துவிட்டது. சோதிடம் சந்திரன், விண்கோளியல் சூரியன். உலகம் அதனால்தான் மிக மோசமான நிலையை அடைந்து விட்டிருக்கிறது.

பெண் சந்திரப்பிராயத்தில் (moonhood) மலர்ச்சி காண வேண்டும். ஆண் சூரியப் பிராயத்தில் (sunhood) மலர வேண்டும். ஆனால், இரண்டுக்குமப்பால் பிரதிபா இருக்கிறது. அறிவு உளவியல் சார்ந்தது. உள்ளுணர்வு குறி சொல்லும் உளவியல் சார்ந்தது (parapsychological), ப்ரதிபாவும் அப்படியே – புலன்கள் காணாதவற்றைக் காண்பது.

'உள்ளுணர்வு சார்ந்த கேட்டலும், தொடுதலும், பார்த்தலும், சுவைத்தலும், முகர்தலும் இதில் இருந்து தொடர்கிறது'. இதனை நினைவில் கொள்ளுங்கள், அது இரண்டு தளங்களில் நிகழக்கூடும்.

நீங்கள் ஆணோ, பெண்ணோ சந்திரனுக்குரியவராயின் சந்திர மையத்தில் இருந்து செயல்படுபவராயின் மற்றவர்கள் கேட்காத பல விஷயங்களை நீங்கள் கேட்க முடியும். மற்றவர்களால் பார்க்க முடியாதவற்றை நீங்கள் பார்க்க முடியும். நீங்கள் மறைந்துள்ளவற்றைக் கண்டுணரக்கூடியவராவீர்கள். மறைந்துள்ள பரிமாணம் ஒரேயடியாய் உங்களிடமிருந்து மறைத்து வைக்கப்பட்டிருக்காது. இரகசியத்தில் சிறிதளவு வெளிப்படையாகும் உங்களுக்காக.

குறி சொல்லுதலைப் பற்றி ஆயும் உள நூற் பிரிவில் (parapsychology) அதுதான் கற்பிக்கப்படுகிறது. தற்போது அது உந்து விசையைப் பெற்று முன்னேறிக் கொண்டிருக்கிறது. உலகிலுள்ள பல்கலைக் கழகங்கள் சிலவற்றில் 'பாரா-சைக்காலஜி' பிரிவுகள் தொடங்கப்பட்டுள்ளன. ரஷ்யாவில்கூட அதிக அளவில் ஆராய்ச்சி கள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. காரணம், மனிதன் ஒரு வழியில் தோற்றுவிட்டிருக்கிறான். சூரிய மையம் தோல்வி கண்டது. நாம் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் சூரிய மையத்தின் வழியே வாழ்ந்திருக்கிறோம். அது வன்முறையையும், போரையும், துன்பத்தை யுமே கொண்டு வருகிறது. தற்போது மற்றொரு மையத்தைக் கொண்டு சமாளிக்க வேண்டியிருக்கிறது.

சூரிய மைய ஆதிக்கத்தில் இருந்த ரஷ்யாவில்கூட அதனை ஆராய்ந்து வருகிறார்கள். அவர்கள் நிறையவே ஆய்ந்து, நிறையவே கண்டுபிடித்திருக்கிறார்கள். உண்மையில் அவர்கள் அறிவின் சொற்பாங்கில் அதைப் பொருள் விளக்கிக் கொள்கிறார்களேயன்றி, புலன்களுக்குஅப்பாற்பட்ட (extrasensory) என்று அழைக்கவில்லை, குறி சொல்லுதலை ஆயும் உள நூற் பிரிவென்றும் (parapsychology) கொள்ளவில்லை. 'இதுவும் புலன்கள் சார்ந்தது (sensory), குறை நீக்கப்பட்டது' என்றே அவர்கள் சொல்கிறார்கள். கண்களை மேலும் தூய்மைப்படுத்திக் கொள்ளவும், சாதாரணமாகப் பார்க்க முடியாதவற்றை அவற்றின் மூலம் பார்க்கவும் முடியும். உதாரணமாக, உங்களுடைய உள்ளுறுப்புகளை எக்ஸ்ரேயால் பார்க்க முடிவது போல் கண்களாலும் பார்க்க முடியும். எக்ஸ்ரேயால் பார்க்க முடியு மெனில் கண்களாலும் பார்க்க முடியும். அதற்கான பயிற்சியைக் கண்களுக்கு அளிக்க வேண்டும்.

ஒருவகையில் பார்த்தால் அவை சரியானவைதாம். உள்ளுணர்வு புலன்களுக்கு அப்பாற்பட்டதில்லை. அது ஒரு சுத்திகரிப்பு செய்யப்பட்ட புலன். ப்ரதிபா புலன்களுக்கு அப்பாற்பட்டது. அது

புலன்கள் சாராதது. அது உடனடியானது, புலன்கள் கைவிடப்படு கின்றன. உங்களுக்குள் அனைத்தும் அறிந்தவராய் நீங்கள் இருக்கிறீர்கள். அனைத்தையும் அறிந்திருப்பது உங்கள் இயல்பு. இதுவே யோகாவின் நோக்கும் கோணம். உண்மையில் உங்கள் கண்களின் வழியே பார்ப்பதாய் நீங்கள் எண்ணிக் கொள்கிறீர்கள், யோகா சொல்கிறது உங்கள் கண்களின் வழியே நீங்கள் பார்ப்பதில்லை - உங்கள் கண்களின் மூலம் நீங்கள் பார்க்க முடியாத நிலைக்கு உள்ளானீர்கள். நான்அதை விளக்குகிறேன்.

நீங்கள் ஓர் அறையில் நின்று கொண்டிருக்கிறீர்கள், அங்கிருந்து ஒரு சிறிய துவாரத்தின் மூலம் வெளியே பார்க்கிறீர்கள். அந்தச் சிறிய துவாரம் வெளி உலகம் பற்றிய அறிவை ஓரளவேனும் வழங்குவதாய் உணர்கிறீர்கள். உங்களுடைய கவனம் அதில் ஒருமுகப்படுத்தப் பட்டிருக்கலாம். இந்தத் துவாரம் மட்டும் இல்லையென்றால் பார்க்கவே சாத்தியமில்லாமல் போயிருக்கும் என்று நீங்கள் எண்ணிக் கொள்ளலாம். நீங்கள் ஒருதவறான மனோபாவத்தைக் கொண்டிருப் பதாகவே யோகா சொல்கிறது. இந்தத் துவாரம் நீங்கள் பார்ப்பதற்கு இடமளிக்கிறது. ஆனால் இந்தத் துவாரமே நீங்கள் பார்ப்பதற்குக் காரணமாகி விடாது. துவாரத்தின் வழியே நீங்கள் பார்க்கிறீர்கள், துவாரம் பார்த்தக கொண்டிருக்கவில்லை. நீங்கள் பார்ப்பவராக இருக்கிறீர்கள். கண்களின் மூலம் இந்த உலகத்தையும், என்னையும் பார்க்கிறீர்கள். உங்களுடைய கண்கள் உடம்பில் உள்ள வெறும் துளைகள். ஆனால், உள்ளிருந்து பார்ப்பவர் நீங்கள். உடம்பில் இருந்து நீங்கள் வெளியேற முடியுமென்றால், அது வாசலைத் திறந்து கொண்டு வான வீதிக்கு உங்களால் வரமுடிவது போலத்தான்.

அந்தத் துவாரம் இல்லையென்றால் நீங்கள் குருடாகி விட மாட்டீர்கள். அந்நிலையில் அந்தத் துவாரம்தான் உங்களைக் குருடாக்கிக் கொண்டிருந்தது என்பதை நீங்கள் புரிந்து கொள்விர்கள். ஓர் அளவிற்குற்பட்ட பார்வையே அது உங்களுக்கு வழங்கிக் கொண்டிருந்தது. தற்போது ஒட்டுமொத்த உலகையும் உங்களால் காண முடிகிறது. திறந்தவெளியில் வரையறுக்கப்படாத பார்வை. காரணம், உங்கள் பார்வை ஒரு சன்னலுக்குப் பின்னால் கட்டுப்படுத்தப்பட வில்லை. நீங்கள் விரிந்து பரந்த வெளியுலகுக்கு வந்து விடுகிறீர்கள். உங்களைச் சுற்றியுள்ள எல்லாவற்றையும் உங்களால் பார்க்க முடிகிறது.

இதுபோன்றதுதான் யோகாவின் நோக்குமுறையும். உடம்பு சிறிய துவாரங்களை மட்டுமே உங்களுக்குத் தந்திருக்கிறது. காதுகளைக்

கொண்டு உங்களால் கேட்க முடியும். கண்களைக் கொண்டு உங்களால் பார்க்க முடியும், நாவினைக் கொண்டு சுவைக்கவும், நாசியைக் கொண்டு முகரவும் முடியும். சிறிய துவாரங்கள், அவற்றுக்குப் பின்னே நீங்கள் மறைந்திருக்கிறீர்கள். யோகா சொல்கிறது வெளியே வாருங்கள், தொலைவில் செல்லுங்கள் என்று இந்தத் துவாரங்களில் இருந்து வெளியேறுங்கள், நீங்கள் அனைத்தும் அறிந்தவராவீர்கள், எல்லையற்ற அறிவும், சர்வ வல்லமையும், எல்லா இடங்களிலும் ஒரே நேரத்தில் பரவியிருக்கும் நிலையையும் அடைவீர்கள். இதுவே ப்ரதிபாவாகும்.

'இதில் இருந்து தொடர்கிறது...' தொலைவில் கேட்டல். இந்தக் கேட்டல் அறிவின் மூலமாகவோ, உள்ளுணர்வின் மூலமாகவோ நிகழ்வதல்ல, ப்ரதிபாவின் மூலம் நிகழ்வது. தொடுதலும், பார்த்தலும், சுவைத்தலும், முகர்தலும் அவ்வாறே நிகழ்கிறது.

இதனை நினைவில் கொள்ளுங்கள், 'முயன்று அடைந்தவரே வாழ்க்கையை முதன்முறையாக அதன் முழுமையில் வாழ்கிறார்' என்பதை. உபநிடதம் சொல்கிறது. 'யார் மன விருப்பத்துக்கு அடிபணிந்தவரோ அவரே துறப்பவர்' என்று. கொஞ்சம் அதிகமாகவே முரண்படுகிறது இல்லையா. ஆம், யார் அறிந்தவரோ, அனுபவித்த வரோ, மகிழ்ச்சியுற்றவரோ, மனதின் விருப்பத்துக்கு அடிபணிந்தவரோ அவரே துறவியாக முடியும். சரீரத்துக்குள் உங்களைக் கட்டுப்படுத்திக் கொண்டால் உங்களுடைய வளமை குன்றும், சரீரத்துக்கு வெளியே செல்வதன் மூலம் நீங்கள் செல்வ வளம் பெற்று விடலாம். யார் முயன்று அடைந்தவரோ அவர் ஏழையல்லர். அவ்ர் மிகப்பெரிய செல்வந்தராகி விடுகிறார். அவர் கடவுளாகி விடுகிறார்.

எனவே யோகா உலகியலுக்கு எதிரானதல்ல. உண்மையில் நீங்கள்தாம் உலகத்துக்கு எதிரானவராய் இருக்கிறீர்கள். யோகா பரம சுகத்துக்கு மாறுபட்டதல்ல. நீங்கள்தாம் பரம சுகத்துக்கு மாறாக இருப்பவர். நீங்கள் உலகத்தைத் துறப்பதன் மூலம் எல்லாக் கட்டுபபாடுகளிலும் இருந்து விடுபட வேண்டும் என்று யோகா விரும்புகிறது. உங்களுடைய அனுபவத்திலும், இருப்புணர்விலும் நீங்கள் கட்டற்றவராகி விடுங்கள்.

'மனதை வெளிப்புறமாய் செலுத்தும்போது இவையே ஆற்றல்கள். சமாதி நிலையை எட்டுவதில் இவையே தடைகள்'.

உங்களுடைய இயல்பை - பூர்வத்தை நீங்கள் அடையும்வரை பதஞ்சலி திரும்பத் திரும்ப சொல்லிக்கொண்டேதான் இருப்பார்.

கேட்டலும், பார்த்தலும், சுவைத்தலும், முகர்தலும், தொடுதலும் செயல்திறன்கள் (powers) நீங்கள் புறவுலகை நோக்கிச் செல்லும்போது மட்டுமே இந்தத் திறன்கள் பயன்படும். ஆனால், நீங்கள் உள்நோக்கிச் செல்கிறபோது இவையே தடைகளாகி விடும்.

புறவுலகிற்குச் செல்கிறவர் சந்திரனின் மூலமாய் சூரியனுக்கும், உலகத்துக்கும் செல்கிறார். உள்நோக்கிச் செல்கிறபோது செல்கிறவரின் சக்தி சூரியனில் இருந்து சந்திரனுக்கும், சந்திரனில் இருந்து அப்பாற்பட்ட இடத்துக்கும் செல்கிறது. அவற்றின் நோக்கமும், அடைய விரும்புகிற முடிவும் வெவ்வேறாகும்.

சில நேரங்களில் பிரதிபாவின் முதல் கண நேரக் காட்சியே உங்களை ஆற்றல் மிக்கவராக்கிவிடும். நீங்கள் ஆற்றலால் நிரப்பப்பட்டிருப்பீர்கள், நீங்களே ஆற்றலாகி விடுவீர்கள். அந்தக் கணத்தில் நீங்கள் மறுபடியும் வீழ்ச்சியடைவீர்கள். அதிகாரம் உங்களைக் கெடுக்கும். நீங்கள் வீழக்கூடும். நீங்கள் அறிவில் நுழைவீர்கள், அகந்தையில் அகப்பட்டுக் கொள்வீர்கள், அதிகாரக் குதிரையில் சவாரி செய்ய விரும்புவீர்கள், நீங்கள் அற்புதங்களை அல்லது அபத்தமானவற்றைச் செய்ய விரும்புவீர்கள்.

அற்புதங்களை விற்கிறவர்கள் எல்லாருமே ஒருவகையில் முட்டாள்தனமானவர்கள்தாம். மக்களுக்கு உதவுவதற்காகவே இத்தகைய அற்புதங்களைத் தாங்கள் செய்வதாக அவர்கள் சொல்லிக் கொள்ளலாம். அவர்கள் யாருக்கும் துணை புரிவதில்லை. தங்களுக்குத் தாங்களே தீங்கு செய்து கொள்வதோடு அடுத்தவருக்கும் தீங்கு செய்கிறார்கள். அப்படிச் செய்வதன் மூலம் மதிப்பிலும், வலிமையும் அவர்கள் தாழ்ந்து விடுகிறார்கள். அந்த நிலையில் அவர்களுடைய ஒட்டுமொத்த செயலுமே ஒரு மோசடியாகி விடுகிறது. அமானுஷ்யமானதும், உள்ளுணர்வு சார்ந்ததும், சந்திர உலகத்துக் குரியதுமாய் பல தந்திரங்கள் இருக்கின்றன. அவற்றை நீங்கள் அறிந்து கொண்டால் பலவற்றையும் செய்ய முடியும். அவை வஞ்சனை கள் அகந்தையானது அவற்றை மறுபடியும் பயன்படுத்த முடியும்.

நான் கேட்டறிந்த அருமையான கதையொன்று:

ஒரு கத்தோலிக்க சமய குருவும், கிறிஸ்தவக் கோயிலைச் சேர்ந்த ஒரு பாதிரியாரும், யூத குரு ஒருவரும் சிறிய படகில் சென்று ஓர் அமைதியான ஏரியின் நடுப்பகுதியில் மீன்பிடித்துக் கொண்டிருந்தனர். விடியற்காலையில் இருந்து மதிய உணவு நேரம் வரை அவர்கள்

ஆடாமல் அசையாமல், பேசிக்கொள்ளாமல் அமர்ந்திருந்தனர். அப்போது கத்தோலிக்க குரு சொன்னார். 'நல்லது, சாப்பாட்டு நேரம் ஆச்சு. நான் உங்களிருவரையும் பொது விடுதியில் சந்திக்கிறேன்' என்று.

அந்த நிமிடமே அவர் எழுந்து, படகின் ஒரு பக்கமாய் காலால் தாண்டி, நீரின் குறுக்காக நடந்து ஏரிக்கரையில் இருந்த விடுதிக்குச் சென்றார்.

பிறகு பாதிரி சொன்னார். 'நானும் கொஞ்சம் சாப்பிட்டு வரலாமென்று நினைக்கிறேன்' என்று.

அவரும் ஒரு காலை படகின் பக்கவாட்டில் சாய்ந்து, நீரின் குறுக்காக நடந்து ஏரிக்கரையில் உள்ள விடுதிக்குச் சென்றார்.

அற்புதத்தில்கூட ஒற்றுமை கண்டு யூத குரு ஆச்சரியமும் திகைப்பும் அடைந்தார். தம்முடைய மத நம்பிக்கையும், மரபுகளும் இக்கட்டுக்குள்ளாகி இருப்பதை உணர்ந்து, *எகோவா (Jehvah)வைப் பிரார்த்தித்துக் கொண்டு படகின் பக்கவாட்டில் காலைச் சாய்த்தார்.

நீர் வாரி அடிக்கும் ஒலி! அவர் ஏரியின் அடியாழத்துக்கே சென்று விட்டார். எப்படியோ நீந்தி நீரின் மேற்பரப்புக்கு வந்து படகின் பக்கவாட்டில் ஏறி மேலே வந்தார். மேலும் ஆர்வமுடன் பிரார்த்தனைகளைச் சொல்லிக்கொண்டு மறுபடியும் முயன்றார். கனமான கல்லைப்போல் தொபுக்கென்று நீரில் அமிழ்ந்தார்.

கத்தோலிக்க சமய குரு இந்தக் குதியல் காட்சிகளை ஏரிக்கரையில் இருந்து பார்த்தார். கிறிஸ்தவ பாதிரியிடம் சொன்னார். 'பாவம், நாம் அவரிடம் சொல்லியிருக்கலாம் எங்கே படிக்கட்டுகள் இருக்கிறது என்பதை'.

படிக்கற்கள் எங்கும் இருக்கின்றன. உங்களுடைய சத்யசாயி பாபாக்கள் செய்வதைக் கண்டு ஒரேயடியாய் வியப்பில் மூழ்கி விடாதீர்கள். படிக்கட்டுகள் இருக்கின்றன. காண முயற்சி செய்யுங்கள். இவர்களெல்லாம் ஆன்மிகத்தைச் சார்ந்தவர்களல்லர்.

பதஞ்சலி சொல்கிறார். 'மனம் வெளிப்புறமாய் திரும்புகிறபோது இவை ஆற்றல்களாகின்றன. சமாதி அடையும் முயற்சியில் இவை தடைகளாகின்றன' என்று. நீங்கள் முடிவான குறிக்கோளை அடைவ தாயின் அனைத்தையும் நீங்கள் இழந்துவிட வேண்டியதுதான்' என்று.

---

* *எகோவா - பழைய ஏற்பாட்டில் கடவுள் பெயர்*

அனைத்தையும் நீங்கள் இழக்க வேண்டியிருக்கும். மெய்ப்பொருளைத் தேடுகிறவனின் வழி இது. அவன் பெறுவது எதுவானாலும் அதை கடவுளிடம் விட்டுக் கொடுத்து விடுகிறான் (மனமாரச் செய்கிற படையல்). அவன் சொல்கிறான், 'நீ அதை என்னிடம் கொடுத்தாய். ஆனால், நான் அதை வைத்துக்கொண்டு என்ன செய்ய? மறுபடியும் உன் காலடியிலேயே சமர்ப்பிக்கிறேன்' என்று. தான் அடைகிற எல்லாவற்றையும் அவன் விட்டுக்கொடுத்து விட்டு, எப்போதுமே வெற்றாக இருக்கிறான்.

அதுதான் ஆன்மிகம். தன் வழியில் வருகிற அனைத்தையும், வழங்கியபடி வெறுமையை எய்தியிருப்பது.

மற்றொரு கதையைச் சொல்கிறேன் உங்களுக்கு:

ஓரிடத்தில் குழுமியிருந்த குருமார்கள் தங்களுடைய கோயில்களுக்குக் கிடைத்த காணிக்கைகளை எப்படிப் பங்கிட்டுக் கொள்வது என்று விவாதித்துக் கொண்டிருந்தனர்.

மாறுபட்ட கருத்துடைய ஒருவர் சொன்னார். 'எங்களுடைய பக்தர்கள் தட்டில் போட்ட எல்லாமும் கடவுளுக்கே சென்று சேரும். ஒரு பைசாவைக்கூட எனக்காக நான் வைத்துக்கொள்ள மாட்டேன்' என்று.

கிறிஸ்தவக் கோயிலைச் சேர்ந்தவர் அவருடைய ஆர்வத்தைக் கைதட்டிப் பாராட்டியதுடன், 'நான் காணிக்கைத் தட்டில் விழும் செப்பு நாணயங்களை வைத்துக்கொண்டு, வெள்ளியை கடவுளுக்கு உரியதாக்கி விடுவேன்' என்று தான் செய்வதை ஒப்புக் கொண்டார்.

அங்கிருந்த கத்தோலிக்க பாதிரியார், 'நான் வெள்ளியை வைத்துக்கொண்டு செப்பு நாணயங்களை கடவுளுக்கு ஒதுக்கி விடுவேன். ஏழைகள் நிறைந்த சமய வட்டாரப் பகுதி (parish)யில் நிறைய செப்பு நாணயங்கள்தான் விழும், உங்களுக்குத் தெரியுமே' என்றார்.

வெகுநேரமாய் பேசாமல் இருந்த யூத குருவை அவர்கள் வற்புறுத்திப் பேச வைத்தனர். 'அவர் சொன்னார் – நான் வசூலான பணத்தை ஒரு விரிப்பில் குவித்து, காற்றில் உயரத் தூக்கி எறிவேன். கடவுள் எதை விரும்புகிறாரோ அதை வைத்துக் கொள்வார். அவர் எதை விரும்பவில்லையோ அதை நான் வைத்துக் கொள்வேன்' என்று.

யூத குருவைப்போல் தந்திரக்காரராய் இருக்காதீர்கள். காரணம், கடைசியில் இழப்பு உங்களுக்குத்தானேயன்றி கடவுளுக்கல்ல.

உங்களுடைய அக வளர்ச்சிப் பாதையில் வருவது எதுவாயினும் - நிறையவே வருகிறது. உள்ளார்ந்த பாதையில் ஒவ்வொரு கணமும் ஒரு கண்டுபிடிப்புதான். ஒவ்வொரு கணத்திலும் ஏதோவொன்று உங்கள் கைகளில் விழுந்து கொண்டிருக்கிறது - நீங்கள் ஒருபோதும் அவற்றைக் கேட்டிருக்க மாட்டீர்கள், அதுபற்றி கற்பனைகூட செய்திருக்க மாட்டீர்கள். அந்தப் பாதையில் இலட்சோபலட்சம் வெகுமதிகள். ஆனால், அத்தனை வெகுமதிகளையும் கடவுளிடமே திருப்பித் தந்துவிட்டு, தொடர்ந்து செல்கிறவர்தாம் முடிவான இலக்கை அடைகிறார். இல்லையேல், கைக்குக் கிடைக்கிற வெகுமதியை நீங்கள் கெட்டியாய் பற்றிக் கொள்கிறவராக இருந்தால் உங்களுடைய வளர்ச்சி தடைபடும். அந்தக் கணத்திலேயே உங்கள் வளர்ச்சி தடைப்பட்டு விடும்.

நீங்கள் சமாதியை, முடிவான அமைதியை, மெய்ப்பொருளை அடைய விரும்பினால் உலகாயதமாய் பெற்ற எதனுடனும் பிணைப்புற்று விடாதீர்கள். உளவியல் ரீதியாகவோ, அறிவு சார்ந்தோ, உள்ளுணர்வு சார்ந்தோ நீங்கள் முயன்று அடைகிற எதனுடனும் உங்களைப் பிணைத்துக் கொள்ளாதீர்கள். எந்த வெற்றியிலும் இணைந்து கொண்டு விடாதீர்கள். கடவுளிடம் அர்ப்பணித்து விடுங்கள். அர்ப்பணித்தபடி இருங்கள். மேலும் மேலும் வந்தபடி இருக்கும். அவற்றையும் கடவுளுக்கே அர்ப்பணியுங்கள்.

எல்லாவற்றையும் நீங்கள் வழங்கியபின் கடவுள் வருகிறார். கடைசி வெகுமதி. கடவுளே கடைசி வெகுமதி.

*மனத்துடனும் உடம்புடனும் அடையாளப்படுத்திக் கொள்ளக் கூடாது - அதை எப்படிச் செய்வதென்று எனக்குத் தெரியவில்லை. நான் எனக்குச் சொல்லிக் கொள்கிறேன், 'நீ மனமாய் இருக்கவில்லை. உன்னுடைய அச்சத்தைக் கவனிக்காதே. உன்னை நேசித்திரு. மனநிறைவோடிரு' என்று.*

*அடையாளப்படுத்திக் கொள்ளாமல் இருப்பது எப்படி என்பதைத் தயவுசெய்து எனக்கு விளக்குங்கள். அல்லது குறைந்த பட்சம் இன்னும் ஏன் உங்களை நான் புரிந்து கொள்ளவில்லை என்பதையாவது எனக்குப் புரிய வையுங்கள்.*

**நீ** உடம்பல்ல, நீ மனமல்ல என்று உங்களுக்கு நீங்களே சொல்லிக் கொள்கிறீர்களா என்பதல்ல பிரச்சினை. காரணம் அதைச் சொல்லிக் கொண்டிருப்பது மனம்தானே. அந்த முறையில் நீங்கள் ஒருபோதும் மனத்தைவிட்டு வெளியேறுவதில்லை. எல்லாவற்றையும் மனம்தான் சொல்கிறது. ஆக நீங்கள் மனதை அதிக முக்கியத்துவம் உடையதாக்கி விடுகிறீர்கள். மனம் ரொம்ப நுட்பமானது. நீங்கள் அதனிடம் எச்சரிக்கையாயிருக்க வேண்டும். அதைப் பயன்படுத்தாதீர்கள். நீங்கள் பயன்படுத்தினால் அது வலிமை பெற்றுவிடும். மனதை அழிக்க மனதைப் பயன்படுத்துவீர்களா என்ன? மனதைக் கொண்டு மனதைத் தற்கொலை செய்து கொள்ளும் நிலைக்குத் தள்ள முடியாது.

'நான் இந்த உடம்பல்ல' என்று நீங்கள் சொல்லும்போது மனம்தான் அதைச் சொல்கிறது. 'நான் இந்த மனமல்ல' என்று நீங்கள் சொல்லும்போதும், அந்த மனமே அப்படிச் சொல்கிறது. உண்மை என்னவென்று ஆராய்ந்து பாருங்கள். எதையும் நீங்களாகச் சொல்ல முற்படாதீர்கள். மொழி - சொற்களால் வெளியிடும் முறை தேவையில்லை. ஆழ்ந்த நோக்கு ஒன்று போதும். பார்வையை உள்நோக்கித் திருப்புங்கள். எதுவும் சொல்லாதீர்கள்.

உங்களுடைய இடர்ப்பாடு என்னவென்று நான் அறிவேன். தொடக்கத்தில் இருந்தே பார்க்காமல் இருக்கும்படியும் ஆனால்

சொல்லும்படியும் நாம் கற்பிக்கப்பட்டிருக்கிறோம். ஒரு ரோஜாப் பூவைப் பார்த்ததும் 'ஆகா, எத்தனை அழகு' என்கிறீர்கள். அத்தோடு தீர்ந்தது. ரோஜா மலர் போய்விடுகிறது, நீங்கள் அதைக் கொன்று போட்டீர்கள். தற்போது ஏதோ ஒன்று உங்களுக்கும் அந்த ரோஜாவுக்கும் இடையில் வந்து விடுகிறது. 'ஆகா, எத்தனை அழகாருக்கு!' என்கிற வார்த்தைகள் ஒரு சுவராய் செயல்படுகிறது.

ஒரு வார்த்தை இட்டுச் செல்கிறது இன்னொரு வார்த்தைக்கு. ஓர் எண்ணம் வழிநடத்துகிறது இன்னோர் எண்ணத்திற்கு. அவை கூட்டாகச் செல்கின்றன, தனியாகச் செல்வதில்லை. ஓர் ஒற்றை எண்ணத்தை நீங்கள் ஒருபோதும் காண்பதற்கில்லை. அவை கூட்டமாய் வாழ்கின்றன. அவை விலங்குகளைப் போல் கூட்டமாய் வாழ்கிறவை. எனவே, நீங்கள், 'ஆகா ரோஜாப்பூ எத்தனை அழகு!' என்று சொன்னவுடன் பாதைக்கு வந்தாயிற்று, வண்டி நகரத் தொடங்குகிறது. தற்போது 'அழகாருக்கு' என்கிற வார்த்தை ஒருசமயம் நீங்கள் நேசித்த பெண்ணொருத்தியை நினைவு படுத்துவதாய் இருக்கும். ரோஜாக்கள் மறந்து போகும். 'அழகாருக்கு' என்பதும் மறந்துவிடும். ஒரு பெண்ணைப் பற்றிய சிந்தனை, கற்பனை, நினைவு மட்டுமே எஞ்சியிருக்கும். அந்நிலையில் அந்தப் பெண் மேலும் பலவற்றை நோக்கி உங்களை வழிநடத்துவாள். நீங்கள் நேசித்த பெண்ணிடம் ஓர் அருமையான நாய் இருந்தது. நீங்கள் தொடர்கிறீர்கள். தற்போது அதற்கு முடிவேயில்லாமல் போய்விடுகிறது.

மனதின் இயக்க நுட்பத்தைக் கவனியுங்கள். அது எப்படி இயங்குகிறது என்பதைக் கவனியுங்கள். அந்த இயக்கத்தைப் பயன்படுத்தாதீர்கள். அதற்கான தூண்டுதலைக் கட்டுப்படுத்திக் கொள்ளுங்கள். கவர்ச்சியில் ஈர்க்கப்படுமாறு நீங்கள் பயிற்றுவிக்கப் பட்டிருக்கிறீர்கள். ஒரு தானியங்கி எந்திரம் போல் நீங்கள் செயல்படுகிறீர்கள்.

கல்வி உலகில் தற்போது ஏற்பட்டிருக்கும் புதிய புரட்சி சில பிரேரணைகளை - செயற்குறிப்புகளை (proposals)க் கொண்டிருக்கின்றன. ஒரு செயற்குறிப்பு - சின்னக் குழந்தைகளுக்கு மொழியை முதலில் கற்பிக்கக்கூடாது. தங்களுடைய பார்வையையும் அனுபவத்தையும் அவர்கள் தெளிவாக்கிக் கொள்ள அவகாசம் அளிக்கப்பட வேண்டும். உதாரணமாக ஒரு யானை இருக்கிறது. நீங்கள் குழந்தையிடம் 'யானை ஒரு பெரிய மிருகம்' என்கிறீர்கள். 'நாம் அர்த்தமற்ற ஒன்றைச் சொல்லவில்லை. முற்றிலும் அறிவிற்கு

ஏற்புடைய ஒன்றையே சொல்கிறோம். அது குழந்தைக்குச் சொல்லப்பட வேண்டிய உண்மை என்று நினைக்கிறோம். ஆனால் எந்த உண்மையும் தகவலும் சொல்லித்தான் தெரிய வேண்டும் என்பதில்லை. அது அனுபவத்தில் அறியப்பட வேண்டியது. 'யானை பெரிய மிருகம்' என்று நீங்கள் சொல்கிற கணத்தில், யானையின் பகுதியல்லாத வேறொன்றைக் கொண்டு வருகிறீர்கள். அந்த மிருகத்தைப் பெரிய மிருகம் என்று நீங்கள் ஏன் சொல்கிறீர்கள்? ஒப்பிடுதல் (comparison) அங்கே வந்து விடுகிறது. அது உண்மையின் ஒரு பகுதி அல்லவே.

யானை என்றால் அது யானைதான். பெரியதும் இல்லை, சிறியதும் இல்லை. ஒரு குதிரையின் அருகே அதை நிறுத்தினால் அது பெரிசுதான். அல்லது ஓர் எறும்புக்குப் பக்கத்தில் அதை நிறுத்தினால் ரொம்பப் பெரிசுதான். யானை மிகப்பெரிய மிருகம் என்கிறபோது எறும்பையும் அங்கே கொண்டு வந்து விடுகிறீர்கள். உண்மையின் பகுதியல்லாத ஒன்றை நீங்கள் கொண்டு வந்து விடுகிறீர்கள். நீங்கள் உண்மையை மாற்றி அமைத்து விடுகிறீர்கள், ஒப்பிடுதல் வந்து விடுகிறது.

எதுவும் சொல்லாமல் குழந்தையைப் பார்க்க விடுங்கள். அது உணரட்டும். குழந்தையைத் தோட்டத்துக்குக் கூட்டிச் சென்றால், 'மரங்கள் பச்சையானவை' என்று சொல்ல வேண்டாம். குழந்தை தானாகவே உணரட்டும், தன்னை முழுமையாய் ஈடுபடுத்திக் கொள்ளட்டும். 'புல் பச்சை நிறத்தில் இருக்கிறது' சின்ன விஷயந்தான் – அதைச் சொல்ல வேண்டாமே.

புல் பச்சையாயில்லாத போதும் நீங்கள் அதைப் பச்சையாகவே பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். பச்சையில் ஆயிரத்தியோரு சாயைகள் – வண்ண வேறுபாடுகள் இருக்கின்றன. நான் இதனைக் கூர்ந்து கவனித்திருக்கிறேன். 'மரங்கள் பச்சையாயிருக்கின்றன' என்று சொல்லாதீர்கள். காரணம் குழந்தை அதன்பிறகு தான் பார்க்கிற எந்தவொரு மரத்தையும் பச்சையாகவே பார்க்கும்.

குழந்தை உணரட்டும். ஒவ்வொரு மரத்தின் இணையற்ற தன்மையையும் அது ஈர்த்துக் கொள்ளட்டும். அவன் ஈரத்தை உறிஞ்சுகிற கடற்பஞ்சு மாதிரி உண்மையை உறிஞ்சட்டும். அவனுக்கு நல்ல அடிப்படை அமைந்து, அனுபவம் நன்றாக வேரூன்றிய பிறகு வார்த்தைகளில் சொல்லுங்கள். அந்நிலையில் அவற்றால் அவனுடைய அமைதி குலையாது. அதன்பிறகு அவற்றால்

அவனுடைய பார்வையை, தெளிவைச் சிதைக்க முடியாது. தற்போது உங்களுடைய கருத்து வெளியிடும் முறை உங்களையே பைத்தியமாக்கி விடப்போகிறது.

அப்படியென்றால் என்ன செய்வது? எந்த ஒன்றையும் பெயரிட்டு அழைக்காமல், முத்திரை குத்தாமல், 'நல்லது' 'கெட்டது' சொல்லாமல், பிரித்தறிய முற்படாமல் பார்க்கத் தொடங்க வேண்டும். வேறுமனே பாருங்கள், எவ்விதக் கருத்தோ, கண்டனமோ, புகழ்ச்சியோ இல்லாமல் உங்கள் முன்னிலையில் உண்மை மட்டுமே இருப்பதற்கு இடமளியுங்கள். அதனை ஒளிவு மறைவின்றி வெளிப்படையாய் இருக்க விடுங்கள். உங்களுடைய இருப்பு மட்டுமே போதுமானது. மொழியை எப்படிப் பயன்படுத்தக்கூடாது என்பதை மேலும் மேலும் தெரிந்து கொள்ளுங்கள். கட்டுப்பாடுகளையும், வம்பளப்புகளையும் உள்ளிருந்து அகற்றுங்கள்.

இதனை நீங்கள் திடீரென்று செய்துவிட முடியாது. கொஞ்சம் கொஞ்சமாய் நிதானமாகவே செய்ய வேண்டியிருக்கும். அதன்பிறகே உங்கள் மனதை நீங்கள் கவனிக்க முடியும். 'நான் இந்த மனமல்ல' என்று நீங்கள் சொல்லத் தேவையில்லை. நீங்கள் அப்படியில்லை என்றால் அதைச் சொல்வதில் என்ன முக்கியக்கருத்து இருக்கிறது? நீங்கள் இல்லை. நீங்கள் மனமாக இருப்பின், 'நான் மனமாக இல்லை' என்பது எப்படி முக்கியக்கருத்து ஆகும்? அதைத் திரும்பத் திரும்பச் சொல்வதால் அது மெய்யாக உணரப்பட்டு விடாது.

எதையும் சொல்லாமல் பார்த்திருங்கள். மனம் இடைவிடாத போக்குவரத்துச் சந்தடியைக் கொண்டிருக்கிறது. அதைப் பார்த்தபடி இருங்கள். பக்கமாயிருந்து கொண்டு பாருங்கள். எவ்வித முரண்பாட்டையும் கொள்ளத் தேவையில்லை. கண்காணிப்பாயிருங்கள். கண்காணிப்பதில் ஒருநாள் சற்றும் எதிர்பாராத விதமாய் உங்கள் உணர்வு நிலை இடம்பெயரும், மாற்றங்கள் ஏற்படும். ஒரு துரித மாற்றம் - புறப்பொருளில் இருந்த கவனம் அகவுணர்வில் குவியும். அந்தக் கணத்தில் நீங்கள் அறிவீர்கள். 'உங்களுடைய மனமல்ல நீங்கள்' என்பதை. பதஞ்சலி சொல்கிறார் - என்பதாலல்ல, உங்கள் நம்பிக்கையின் ஆதாரமோ (reason), அறிவோ சொல்கிறது என்கிற காரணத்தால் அல்ல. மெய்ம்மை உங்களிடம் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது.

திடீரென்று மனதில் இருந்து வெகு தொலைவுக்கு நீங்கள் சென்று விடுகிறீர்கள். முதலில் நீங்கள் மனமாயிருந்ததாய் எப்படி நம்பியது.

உடம்பாய் இருந்ததாய் எப்படி நம்ப முடிந்தது என்று எண்ணிச் சிரிப்பீர்கள். அது நகைக்கத்தக்கதுதான். அந்த முட்டாள்தனத்தை எண்ணி நகைப்பீர்கள்.

மனதுடனும் உடம்புடனும் அடையாளப்படுத்திக் கொள்ளாமல் இருப்பது எப்படி - அதை எப்படிச் செய்வதென்று எனக்குத் தெரியவில்லையே. அதை எப்படிச் செய்வதென்று கேட்பவர் யார்? எந்த மனம் திறமையாய் கையாளத் தெரிந்ததோ, எந்த மனம் ஆதிக்கம் செலுத்த விரும்புகிறதோ அந்த மனந்தான் அது. தற்போது அந்த மனம் பதஞ்சலியையும் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறது. தற்போது மனம் சொல்கிறது, 'முழுக்க முழுக்க உண்மை. நீ மனமல்ல என்பதை நான் அறிவேன்' என்று. நீங்கள் மனமல்ல என்பதை அறிந்து கொண்டவுடன் நீங்கள் ஓர் அதிமனம் ஆகிவிடுகிறீர்கள். மனதில் பேராசை எழுகிறது, மனம் சொல்கிறது, 'நான் அதிமனம் ஆகிவிட வேண்டும்' என்று.

மனதில் முடிவான ஒன்றை பரமசுகத்தை அடைகிற பேராசை, சாசுவதமாகி விடுகிற பேராசை, கடவுளாகி விடவேண்டும் என்கிற பேராசை எழுகிறது. 'இந்த முடிவான ஒன்றை அடைகிற வரைக்கும் நான் ஓயமாட்டேன், அது எதுவாக இருந்தாலும் சரி' என்கிற மனம். 'அதை எப்படிச் செய்வது?' என்று கேட்கும் அந்த மனம்.

நினைவில் வையுங்கள். அதை எப்படிச் செய்வது என்று எப்போதுமே கேட்டுக் கொண்டிருக்கிறது மனம். 'எப்படி,' என்பது ஒரு கேள்வி. காரணம் அந்த 'எப்படி' உத்தியை - தேர்ந்த திறனைக் குறிக்கிறது. 'எனக்கு வழியைக் காட்டு நான் ஆதிக்கம் செலுத்து கிறேன், கையாண்டு கொள்கிறேன். அதற்கான உத்தியைக்கொடு' என்பதையே அந்த 'எப்படி' குறிக்கிறது. மனம் ஒரு தொழில் வல்லுநர். 'எனக்கு உத்தியைக் கொடு. நான் அதைத் திறமையாகச் செய்வேன்.

விழிப்புணர்வுக்கு எந்த உத்தியும் இல்லை. நீங்கள் உணர்வோடு இருக்க வேண்டும், உணர்வோடு இருந்தாக வேண்டும். உத்தி என்று அதற்கு எதுவும் இல்லை. காதலுக்கு ஏது உத்தி. நீங்கள் காதலை அறிய விரும்பினால் காதலித்தாக வேண்டும். நீந்துவதற்கு உத்தி உண்டா என்ன? நீங்கள் நீந்த வேண்டும். நீங்கள் நீந்தத் தொடங்குகிறபோது அது எவ்விதத் திட்டமுமின்றி எதிர்பாராமல் நிகழ்வதாகவே இருக்கும். கொஞ்சம் கொஞ்சமாய் நீங்கள் தெரிந்து கொள்கிறீர்கள். ஆனால் நீந்துவதன் மூலமே அதைத் தெரிந்து கொள்வீர்கள். வேறு வழியில்லை. 'சைக்கிள் விடுவதற்கான உத்தி என்ன? என்று யாராவது

உங்களிடம் கேட்டால் - உங்களுக்கு சைக்கிள் விடத் தெரியும் என்றாலும் நீங்கள் தோள்களைக் குலுக்கிக் கொள்கிறீர்கள். 'சொல்வது கடினமாச்சே' என்கிறீர்கள். என்ன உத்தி அது? சைக்கிளில் எப்படிச் சமநிலையைப் பராமரிக்கிறீர்கள்? நீங்கள் ஏதோ ஒன்றைச் செய்திருக்க வேண்டும். நீங்கள் ஏதோ ஒன்றைச் செய்கிறீர்கள், ஆனால் அது உத்தியல்ல, ஒரு திறமை சாமர்த்தியம் (knack) என்று சொல்லலாம். உத்தி என்பது கற்பிக்கப்படக் கூடியது. திறமை நீங்களாகத் தெரிந்து கொள்வது, கற்பிக்கப்படுவதல்ல. எனவே, கொஞ்சம் கொஞ்சமாய் கற்றுக் கொள்ளுங்கள்.

அதிக சிக்கல் இல்லாதவற்றில் இருந்து தொடங்குங்கள். எடுத்ததுமே சிக்கலான விஷயத்தில் இறங்கி விடாதீர்கள். இதுதான் கடைசியான, ரொம்பவும் சிக்கலான விஷயம். மனம் பற்றிய உணர்வுடன் இருப்பது. மனதைப் புரிந்துகொள்வது, மனமல்ல நீங்கள் என்பதைப் புரிந்து கொள்வது. இதற்கு மேலும் நீங்கள் மனமல்ல, இனியும் நீங்கள் உடம்பல்ல என்பதைக் கண்டுகொள்வதே கடைசியான விஷயம். மிகச்சிறியனவற்றில் இருந்து தொடங்குங்கள்.

நீங்கள் பசியோடு இருக்கிறீர்கள். சங்கதியைப் புரிந்து கொள்ளுங்கள். பசி எங்கே இருக்கு? உங்களுக்குள்ளா அல்லது உங்களுக்கு வெளியே வேறு எங்காவதா? கண்களை மூடிக் கொள்ளுங்கள். உங்களுக்குள் இருக்கும் இருட்டில் துளாவி வழி கண்டுபிடியுங்கள். பசி எங்கே இருக்கிறது என்பதை உணரவும், கணக்கிட்டுக் கண்டுபிடிக்கவும் முயலுங்கள்.

உங்களுக்குத் தலைவலி இருக்கிறது. ஆஸ்ப்ரின் எடுத்துக் கொள்வதற்கு முன், சிறிதளவு தியானம் செய்யுங்கள். ஆஸ்ப்ரின் அவசியப்படாமல் போகலாம். கண்களை மூடிக்கொண்டு, தலைவலி மிகச்சரியாக எங்கே இருக்கிறது என்பதை உணருங்கள். அதில் கவனத்தை ஒருமுகப்படுத்துங்கள். நீங்கள் முனபு கற்பனை செய்துகொண்டது போல் அது அத்தனை பெரிய விஷயமில்லை என்பதைக் கண்டு வியப்படைவீர்கள். அது ஒன்றும் தலைமுழுக்கப் பரவியிருக்கவில்லை. அது ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருக்கிறது. அந்த இடத்துக்கு எந்த அளவு நெருக்கமாய் நீங்கள் விரும்புகிறீர்களோ அந்த அளவுக்கு நெருக்கமில்லாதவராகி விடுகிறீர்கள். தலைவலி எந்த அளவு சிதறலாய் பரவியிருக்கிறதோ (diffused) அந்த அளவு அதனுடன் நீங்கள் சம்பந்தப்பட்டவராகி விடுகிறீர்கள். அது எந்த அளவு தெளிவாகவும், குவிந்தும்,

வரையறுக்கக் கூடியதாயும் இருக்கிறதோ அந்த அளவு நீங்கள் அதிலிருந்து விலகியிருக்கிறீர்கள்.

அந்நிலையில் ஊசியின் முனை மாதிரி ஒரு கூரிய முனை வருகிறது. அப்போது சில காட்சிகளை – கணநேரக் காட்சிகளை நீங்கள் பெறுவீர்கள். சில நேரங்களில் அந்த ஊசி முனை மறைந்து விடும், தலைவலி இருக்காது. 'அட, அது எங்கே போச்சு' என்று நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். மீண்டும் அது வரும். மறுபடியும் ஒருமுகப்படுங்கள், திரும்பவும் அது மறைந்து விடும். கவனத்தை முழுமையாய் ஒருமுகப்படுத்தியதில் அந்தத் தலைவலி மறைந்து விடுகிறது. காரணம், முழுமையாய் ஒருமுகப்பட்டதில் நீங்கள் தலைவலியை உணர முடியாத அளவுக்கு உங்கள் தலையிடமிருந்து தொலைவுக்குச் சென்று விடுகிறீர்கள். அதனைச் சோதித்தறியுங்கள். சிறியனவற்றில் இருந்து தொடங்குங்கள், கடைசிச் செயலுக்கு உடனே தாவி விடாதீர்கள்.

விவேகத்தின், விழிப்புணர்வின் சூத்திரங்களை வந்தடைய பதஞ்சலி ஒரு நீண்ட வழியில் பயணித்திருக்கிறார். ரொம்பவும் அவசியமான, அடிப்படைத் தேவைகள், ஆயத்தங்கள் பற்றி அவர் ரொம்பவே விவாதித்திருக்கிறார். மனதுடனும் உடம்புடனும் உங்களை அடையாளப்படுத்திக் கொள்ளாமல் இருக்க வேண்டுமானால் நீங்கள் அவற்றைப் பூர்த்தி செய்தாக வேண்டும்.

எனவே, 'எப்படி?' என்று அதைப்பற்றிக் கேட்காதீர்கள். அது மிக எளிதாய் புரிந்து கொள்ளப்படுவது. நீங்கள் என்னைப் புரிந்துகொண்டால், அந்தப் புரிதலிலேயே அதன் முக்கியக் கருத்தை நீங்கள் கண்டுகொள்ள முடியும். உங்களால் அதைப் புரிந்துகொள்ள முடியாது என்று நான் சொல்லவில்லை. உங்களால் அதைப் புரிந்துகொள்ள முடியும் என்றுதான் சொல்கிறேன். காரணம், 'புரிந்து கொண்டுவிடு' என்று நாம் சொல்கிறபோதே அறிவு அங்கே பிரவேசித்து விடுகிறது. மனம் செயல்படத் தொடங்குகிறது. பார்ப்பது வேறு, மனதுக்கும் அதற்கும் சம்பந்தமில்லை.

சில நேரங்களில் துணையற்று, தனியானதொரு பாதையில் நீங்கள் போய்க் கொண்டிருக்கிறீர்கள், சூரியன் அஸ்தமனமாகி இருள் கவிந்து கொண்டிருக்கிறது. அப்போது திடீரென்று ஒரு பாம்பு அந்தப் பாதையைக் கடந்து செல்கிறது. நீங்கள் என்ன செய்கிறீர்கள்? நீங்கள் அதைப்பற்றிய யோசனையில் ஆழ்ந்து விடுவீர்களா? என்ன செய்வது, எப்படி செய்வது, இதுபற்றி யாரிடம் கேட்பது என்று எண்ணிக்

கொள்வீர்களா? இல்லை, சட்டென்று அந்தப் பாதையில் இருந்து துள்ளிக்குதித்து விலகி விடுவீர்கள். அந்தக் குதித்தலில் ஒரு பார்த்தல் இருக்கிறது. மனம் சார்ந்ததாய் எதுவும் இல்லை. சிந்திப்பதற்கும் அதற்கும் தொடர்பில்லை. பிற்பாடு வேண்டுமானால் அதுபற்றிச் சிந்திப்பீர்கள். தற்போது அது ஒரு பார்த்தலாகவே நின்று விடுகிறது. அங்கே பாம்பு இருக்கிற சங்கதியே போதுமானது. பாம்பிருப்பதை உணர்ந்து நீங்கள் குதித்து விலகிவிடுகிறீர்கள். அது அப்படித்தான் இருக்க வேண்டும். மனம் அவகாசம் எடுத்துக் கொள்ளும். பாம்புக்கு அவகாசம் தேவைப்படாது. மனதைக் கேட்காமலே நீங்கள் குதித்து விலக வேண்டியிருக்கும். மனம் ஒரு செயல்முறையைக் கொண்டது. பாம்புகள் உங்கள் மனதைவிட வேகமானவை. பாம்பு காத்திருக்காது. என்ன செய்வதென்று சிந்திக்க உங்களுக்கு அவகாசம் கொடுக்காது. திடீரென்று மனம் ஒதுக்கி வைக்கப்பட்டு, நீங்கள் மனமற்ற நிலையில் (no-mind) செயல்படுகிறீர்கள். மிகவும் ஆபத்தான நிலைகளில் அப்படித்தான் நடக்க வேண்டியிருக்கிறது.

அதனால்தானோ என்னவோ மக்களுக்கு ஆபத்துகளால் ஈர்க்கப்பட்டு விடுவது. மணிக்கு நூறு மைல் வேகத்தில் அல்லது அதற்கும் கூடுதலான வேகத்தில் காரில் செல்வது எத்தனை சிலிர்ப்பூட்டுவதாயிருக்கிறது. மனமற்ற நிலையில் உண்டாகும் சிலிர்ப்பு இது. நீங்கள் நூறு மைல் வேகத்தில் காரை ஓட்டிச் செல்கிறபோது சிந்தித்துப் பார்க்க ஏது நேரம்.. மனமற்ற நிலையில் இருந்து கொண்டுதான் செயல்படுவீர்கள். ஏதாவதொன்று ஆகிவிட்டால், நீங்கள் அதுபற்றிச் சிந்திக்கத் தொடங்கி விட்டால் தொலைந்தீர்கள். நீங்கள் உடனடியாய் செயல்பட வேண்டியிருக்கும். நொடிப்பொழுதைக் கூட வீணாக்க முடியாது. காரின் வேகத்தை எந்தஅளவு அதிகரிக்கிறீர்களோ அந்த அளவு மனதை ஒருபக்கமாய் ஒதுக்கி வைக்க வேண்டியிருக்கும். மனதை எந்த அளவு ஒதுக்கி வைக்கிறீர்களோ அந்த அளவுக்கு 'திரில்' (thrill)லாகத்தான் இருக்கும். அதுவரை உயிரற்று இருந்தது போலவும், அப்போதுதான் உயிரோட்டம் பெற்றது போலவும் ஒரு மனக்கிளர்ச்சி இருக்கும்.

ஆபத்து வசியப்படுத்தித் தன்பால் ஈர்த்துக் கொள்வது. ஆனால் அந்த ஈர்ப்பு மனமற்ற நிலையில் உண்டாவது. நீங்கள் ஒரு மரத்தின் பக்கமாகவோ ஆற்றங்கரையிலோ அல்லது உங்கள் அறையிலோ இருந்துகொண்டு அதைச் செய்வீர்களாயின் உங்களை ஆபத்துக்குட் படுத்திக் கொள்கிற அவசியம் இருக்காது. அதை எங்கு

வேண்டுமானாலும் செய்ய முடியும். உங்கள் மனதை ஒருபக்கமாய் ஒதுக்கி வைத்தாலே போதும் - அதை எங்கிருந்தாலும் உங்களால் ஒதுககி வைக்க முடியும். மனதின் குறுக்கீடின்றி விஷயங்களைப் புரிந்து கொள்வீர்கள்.

இது நான் கேட்டறிந்தது:

ஜாவாவில் ஒரு மனித நேயர் அதிகம் அறியப்படாத ஒரு பழங்குடியினரின் சவ ஊர்வலத்தை எதிர்பாராது சந்தித்தார். ஒரு மனிதன் செத்துப் போனால் அறுபது நாட்கள் அவனைப் புதைத்து வைத்திருந்து அதன்பிறகு தோண்டியெடுப்பார்கள். அவனை ஓர் இருட்டறையில், குளிர்ச்சியான கற்பலகை மீது வைத்து, அந்தக் குடியினரில் மிக அழகான இருபது பெண்கள் பிணத்தைச் சுற்றி இருந்து, நிர்வாணமாகவே மோகத்தை ஊட்டும் நடனமாடுவார்கள்.

'நீங்கள் ஏன் இப்படிச் செய்வது?' என்று அந்த மனித நேயர் பழங்குடித் தலைவனிடம் கேட்டார். 'அவன் எழுந்து கொள்ளவில்லை என்றால் அவனுடைய சாவை நாங்கள் நிச்சயித்துக் கொள்வோம்' என்றான் தலைவன்.

எது தடை செய்யப்படுகிறதோ அதில் கவர்ச்சி இருக்கிறது. பாலுறவு செயலுக்கு அனுமதி இல்லையென்றால் அது ஆவலை அதிகரிக்கும். காரணம் அனுமதிக்கப்பட்டதெல்லாம் மனதின் பகுதியாகி விடுகிறது. இதனைப் புரிந்துகொள்ள முயலுங்கள்.

அனுமதிக்கப்பட்ட அனைத்தும் மனதின் பகுதியாகி விடும், அதன் செயல்முறை முனபே திட்டமிடப்பட்டு விடுகிறது. உங்கள் மனைவி அல்லது கணவனுடன் உங்களுக்கு நேசம் இருப்பது எதிர்பார்க்கப்படுகிற ஒன்று. ஆனால், உங்கள் மனைவியுடன் சலிப்பு ஏற்பட்டு உங்களுக்கு அடுத்தவன் மனைவி மீது ஆர்வம் வந்து விடுகிறது. அது மனதின் ஒரு பகுதியானது. அந்தச் செயல்முறை திட்டமிடப்பட்டதல்ல.

குறிப்பிட்ட ஓர் ஆண் அல்லது பெண் பற்றியதல்ல பிரச்சினை. எது அனுமதிக்கப்படவில்லையோ, தடை செய்யப்பட்டதோ எது நெறிமுறைக்குப் புறம்பானதோ, எது அடக்கி வைக்கப்படுகிறதோ அது பற்றியதுதான் கேள்வி. அது உங்களுடைய ஏற்கப்பட்ட மனதின் பகுதியல்ல.

மனிதன் மனமற்றிருக்கும் திறமையைப் பெறுகிற வரையில் இந்தக் கவர்ச்சிகள் தொடரும்.

ஒட்டுமொத்த செயலுமே அறிவீனமானதுதான். யார் தங்களை நெறிமுறை சார்ந்தவர், கண்டிப்பானவர், சமய நம்பிக்கை உடையவர் என்று எண்ணிக் கொள்கிறார்களோ அவர்கள்தாம் இந்தக் கவர்ச்சிகளைத் தோற்றுவித்துக் கொள்கிறவர்கள். அவர்கள் எந்த அளவு ஒன்றை ஏற்றுக்கொள்ள மறுக்கிறார்களோ அந்த அளவுக்கு அது கவர்ச்சிகரமானதாகி விடுகிறது. அழைப்பு விடுப்பதாகவும் இருக்கிறது. காரணம் ஓடித் தேய்ந்த சுவட்டில் இருந்து விடுபடுவதற்கான சந்தர்ப்பத்தை அது வழங்குகிறது. உங்களைச் சூழ்ந்து கொண்டு திக்குமுககாடச் செய்யும் சமூகத்திடம் இருந்து நழுவியோட ஒரு வாய்ப்பை அது வழங்குகிறது.

சமுதாயம் உங்கள் தனிமையில் கூட உங்களை ஆக்கிரமித்துக் கொள்ளும். காரணம் சமுதாயம் உங்கள் மனதில் இருக்கிறது. அது உங்கள் மனதின் செயல்முறையிலும் இடம்பெற்று விடுகிறது. அங்கிருந்து கொண்டு தன் வேலையை அது தொடரும். அது ரொம்பவும் தந்திரமானது. சூழ்ச்சித்திறமுடையது.

எல்லாருமே ஏதாவதொரு நேரத்தில் அனுமதிக்கப்படாத ஒன்றைச் செய்கிற எண்ணமுடையவர்தாம். ஒருவருக்கு எதிராகப் போக வேண்டும் என்பதற்காகவே இசைவு தெரிவிக்க வேண்டியதற்கு மறுப்பு தெரிவிப்பார்கள். அந்த ஒருவர் வேறு யாருமல்ல. சமூகம் அவருக்களித்த செயல்முறைதான்.

ஒரு சமூகம் எந்த அளவுக்கு கெடுபிடி செய்கிறதோ அந்த அளவுக்கு சமூகத்துக்கெதிராய் கலகக்காரர்கள் தோன்றுகிற சாத்தியம் இருக்கிறது. ஒரு சமூகம் ரொம்பவும் தடையற்றதாய் கட்டுப்பாடின்றிச் செயலாற்றும் திறனுடையதாயிருந்தால் அங்கே கலகக்காரர்கள் தோன்றுவதற்கான சாத்தியக் குறைவு. கலகக்காரர்கள் இல்லாத சமூகம் மகத்தான மாறுதல்களைப் பெறும். அங்கே அவர்கள் தேவைப்பட மாட்டார்கள். எந்தச் சமுதாயம் எதையும் புறக்கணிப்பு செய்வதில்லையோ, எதையும் ஏற்றுக்கொள்ள மறுப்பதில்லையோ. அதுவே தடையற்ற சமுதாயம். அங்கே கவர்ச்சி நோய் பீடிப்பதில்லை. ஒரு சமூகம் போதை மருந்துக்கு எதிரானதாயிருந்தால், நீங்கள் போதைப்பொருள்களால் ஈர்க்கப்படுவீர்கள். காரணம் உங்கள் மனதை ஒதுக்கி வைப்பதற்கான சந்தர்ப்பத்தை அவை வழங்குகின்றன. உங்களுடைய சுமையும், துயரமும் அதிகரித்து விடுகிறது.

இதனை நினைவில் கொள்ளுங்கள், சமூகம் அனுமதிக்காத ஒன்றைச் செய்கிறபோது ஏற்படும் கிளர்ச்சி மனமற்றவராகும் நிலையில்

இருந்தே அடையப்படுகிறது. ஆனால் அதற்குக் கொடுக்கப்படும் விலையோ ரொம்ப அதிகம். எங்காவது ஒரு சுவருக்குப் பின்னால் மறைந்து நின்றுகொண்டு புகை பிடிக்கும் சிறுவர்களைக் கவனியுங்கள். அவர்களுடைய முகத்தைப் பாருங்கள். எத்தனை சந்தோஷம். அவர்கள் இருமுவார்கள், கண்களில் நீர் வடியும். காரணம் புகையை உள்ளுக்கிழுத்து, வெளியே விடுவது ரொம்ப முட்டாள்தனமான ஒரு செய்கை. அதை பாவகாரியம் என்று நான் கூறமாட்டேன். அதை பாவ காரியம் – குற்றம் என்று நீங்கள் சொல்கிறபோது அது ஈர்ப்புத்தன்மை கொண்டு விடுகிறது. அது முட்டாள்தனமானது, அறிவற்ற செய்கை என்று மட்டுமே நான் சொல்கிறேன். ஆனால், சிகரெட்டைப் பற்ற வைத்து 'குப்குப்'பென்று புகை விடுகிற பையனின் முகத்தைக் கவனியுங்கள். அவன் ஏதோ கடுமையான தொல்லைக்குட் பட்டிருக்கலாம். அவனுடைய சுவாச மண்டலமே இடர்ப்பாட்டை உணர்கிறது. உமட்டுகிற மாதிரி இருக்கிறது, கண்ணீர் வருகிறது. அவன் இறுக்க உணர்வு கொண்டிருக்கிறான். ஆனாலும் தடை செய்யப்பட்ட ஒன்றைச் செய்ய முடிந்ததில் அளவற்ற சந்தோஷம் அவனுக்கு. மனதின் பகுதியல்லாத ஒன்றை அவனால் செய்ய முடிகிறது. அவன் தடையற்றவனாய் உணர்கிறான்.

இந்தச் சவுகரிய உணர்வை தியானத்தின் மூலம் வெகு எளிதாய் அடைய முடியும். தற்கொலைக்கொப்பான வழிகளில் செல்ல வேண்டிய அவசியமில்லை. மனதை எப்படி ஒருபுறமாய் ஒதுக்கி வைப்பது என்பதை நீங்கள் தெரிந்து கொண்டால்...

நீங்கள் பிறந்தபோது மனம் என்கிற ஒன்று உங்களிடம் இருந்திருக்கிறது. மனம் என்பது இல்லாமல்தான் நீங்கள் பிறந்தீர்கள். அதனால்தான் உங்கள் வாழ்க்கையின் ஒருசில ஆண்டுகளை உங்களால் நினைவில் வைக்க முடியவில்லை, நினைவுபடுத்திக் கொள்ளவும் முடியவில்லை. முதல் மூன்று நான்கு ஐந்து ஆண்டுகளை தொடக்க காலமாய் சொல்லலாம். அவை உங்கள் ஞாபகத்தில் இருக்காது. ஏன்? நீங்கள் அப்போது இருந்திருந்தும் அது ஏன் ஞாபகத்தில் இல்லாது போனது? மனம் அதுவரையிலும் தெளிவு பெற்றிருக்காது. நீங்கள் பின்னோக்கிச் சொல்கிறீர்கள். நான்கு வயதுப் பக்கமாய் நடந்தது உங்கள் ஞாபகத்துக்கு வருகிறது. அப்போது திடீரென்று ஒரு வெற்றிடம். அதற்குமேல் ஆழமாய் செல்ல முடிவதில்லை. என்னவாயிற்று? நீங்கள் அப்போது உயிரோட்டத் துடன்தானே இருந்தீர்கள். உண்மையில் வேறு எப்போதையும்விட

அதிக தெரிநிலையோடுதான் அப்போது இருந்திருக்கிறீர்கள். அறிவியல் மேதைகள் சொல்கிறார்கள், 'ஒரு குழந்தை தன்னுடைய நான்கு வயதில் கற்றதும், கேட்டதும், பார்த்ததும் அவனுடைய ஒட்டுமொத்த வாழ்க்கையிலும் பெறுகிற அறிவில் எழுபத்தியைந்து சதவீதமாவது இருக்கும்' என்று.

நான்கு வயதில் எழுபத்தியைந்து சதவீதம். உங்கள் வாழ்க்கையில் எழுபத்தியைந்து சதவீதத்தை நீங்கள் முன்பே வாழ்ந்து விட்டிருக்கிறீர்கள். ஆனால் எதுவும் ஞாபகத்தில் இருக்க மாட்டேன் என்கிறது. காரணம், மனம் அப்போது அத்தனை தெளிவாய் இருந்திருக்கவில்லை. மொழி கற்கப்பட வேண்டியிருந்தது, செயல்கள் வகையினப்படுத்தப்பட வேண்டியிருந்தன, பெயரிடப்பட வேண்டியிருந்தது. பெயரில்லாத ஒன்றை எப்படி உங்களால் நினைவில் வைத்துக்கொள்ள முடியும்? உங்கள் மனதில் அதைத் தொகுக்க முடியாது போவதற்குக் காரணம் அதற்கென்று பெயரில்லாமல் இருந்ததுதான். ஆக, முதலில் பெயர் தெரிந்துகொள்ளப்பட வேண்டும்.

ஒரு குழந்தை மனம் என்பது இல்லாமலே வந்து சேர்கிறது. நான் இதனை எதற்காக அழுத்திக் கூறுகிறேன்? உங்களுடைய இருப்புணர்வு மனம் இல்லாமல் இருக்க முடியும் என்பதை உங்களுக்குச் சொல்வதற்காகத்தான். மனதிற்கான அவசியம் எதுவும் இல்லை. அது சமுதாயத்தில் பயன்படுத்தப்படுகிற ஓர் அமைப்பு. அந்த அமைப்பிலேயே ரொம்பவும் கவனத்தை நிலைத்திருக்கச் செய்ய வேண்டாம். கொஞ்சம் கட்டுத்தளர்வாய் (loose) இருந்தால் அதிலிருந்து நீங்கள் தப்பிவிட முடியும். அது கடினமானதுதான், ஆனாலும் நீங்கள் அதைச் செய்யத் தொடங்கி விட்டால், மெள்ள மெள்ள திறமை பெற்று விடுவீர்கள்.

நீங்கள் அலுவலகத்தில் இருந்து வரும்போது, உங்கள் அலுவலகச் சிந்தனைகளை வழியிலேயே விட்டுவிடுங்கள். மீண்டும் மீண்டும் நினைவில் வையுங்கள். நீங்கள் வீட்டுக்குச் சென்று கொண்டிருக்கிறீர்கள். அலுவலகத்தையும் அங்கே சுமந்து செல்ல வேண்டியதில்லை என்பதை. அலுவலக ஞாபகம் இல்லாதிருக்க முயலுங்கள். மீண்டும் அலுவலகச் சிந்தனை வந்தால் அதைக் கையும் களவுமாய் பிடியுங்கள். அந்தக் கணமே அதை விட்டு விடுங்கள். அதில் இருந்து வெளியேறி விடுங்கள். வீட்டில் இருக்கும்போது வீடு சார்ந்தவராய் இருக்க வேண்டும் என்பதைக் கருத்தில் கொள்ளுங்கள். அலுவலகத்தில் இருக்கும்போது வீட்டை மறந்து விடுங்கள் – மனைவி,

குழந்தைகள் மற்றுமுள்ளவற்றையும். கொஞ்சம் கொஞ்சமாய் மனதை இயக்கி ஆளவும், மனதால் ஆளப்படாதிருக்கவும் கற்றுக் கொள்ளுங்கள்.

நீங்கள் உறங்கச் செல்கிறீர்கள், மனம் தொடர்கிறது. 'நிறுத்து' என்று நீங்கள் மறுபடியும் மறுபடியும் சொல்கிறீர்கள், ஆனால் அது கேட்கிறதில்லை. காரணம், நீங்கள் சொல்வதைக் கேட்டு நடக்கும்படி நீங்கள் அதைப் பயிற்றுவிக்கவில்லை. இல்லையேல், 'நிறுத்து' என்று நீங்கள் சொன்னபோதே அது நிறுத்தியிருக்க வேண்டும். அது ஓர் இயக்க நுட்பம். இயக்க நுட்பம் கூடாது என்று சொல்வதில்லை. நீங்கள் மின்விசிறிக்கான விசையைத் தட்டி விடுகிறீர்கள். அது செயல் படுகிறது. நீங்கள் விசையை நிறுத்தினால் அது நின்று விடுகிறது. நீங்கள் விசிறி சுழல்வதை நிறுத்துகிறபோது, 'இல்லை, நான் இன்னும் கொஞ்ச நேரம் சுற்றுகிறேனே' என்று சொல்ல முடியாது.

உங்கள் மனம் ஒரு வாழும் கணினி. அது மிகவும் பயனுள்ள ஒரு நுட்பமான இயக்க நுட்பத்தைக் கொண்டது. அது ஒரு நல்ல அடிமை. ஆனால் மோசமான எஜமானன்.

எனவே, விஷயங்களை இன்னும் புரிந்துகொள்ள முயலுங்கள். இன்னும் கூடுதல் விழிப்புடன் இருங்கள். தினமும் சில நிமிடங்களாவது முடிந்தால் சில மணி நேரமும் மனம் இல்லாமல் இருக்கப் பாருங்கள். சிலநேரம் ஆற்றில் நீந்தும்போது, கரையில் உடைகளை வைக்கிற மாதிரி மனதையும் கழற்றி வைத்து விடுங்கள். மனதைக் கரையில் வைத்துவிட்டு எப்படி நீந்துவது? ஆற்றில் கவனத்தோடு கைகளை வீசி நீந்துங்கள், எச்சரிக்கை உணர்வோடு செயல்படுங்கள். 'இல்லை, நான் மனமாக இல்லை' என்று நீங்கள் வார்த்தைகளில் சொல்லிக் கொண்டிருக்க வேண்டாம். உங்களுக்கு நீங்களே அதைச் சொல்லிக் கொண்டிருந்தால், அந்நிலையில் அதுவே மனனமாகி விடும். வார்த்தையற்ற, புரிதலே போதுமானது.

உங்கள் தோட்டத்தில் அமர்ந்திருக்கிறீர்கள், புல்வெளிப் பரப்பில் படுத்திருக்கிறீர்கள். அமர்ந்திருந்தாலும் படுத்திருந்தாலும் அதை மறந்திருங்கள். உங்கள் குழந்தைகளிடம் விளையாடிக்கொண்டு அதை மறந்தவராயிருங்கள். அது அவசியமில்லை. சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது மனதையும் சுமந்து கொண்டிருப்பதால் என்ன ஆகிவிடப் போகிறது? அல்லது ஷவருக்கடியில் குளிக்கிறீர்கள், மனதையும் குளியலறைக்கு எடுத்துச்செல்வதில் ஆவதென்ன?

மெள்ள மெள்ள நிதானமாய்... வரம்புமீறிச் செய்ய முயல வேண்டாம். காரணம், அந்நிலையில் நீங்கள் தோற்கும்படி ஆகும். நீங்கள் வரம்புமீறிச் செய்ய முயன்றால், அது கடினமாகி விடும். 'அது சாத்தியமில்லை' என்று நீங்கள் சொல்வீர்கள். இல்லை. அதைத் துண்டு துண்டாய் முயற்சி செய்யுங்கள்.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன், உங்களுக்கு:

கோஹன் என்பவருக்கு மூன்று பெண்கள். அவர்களுக்கு மாப்பிள்ளை கிடைக்க வேண்டுமே என்று, நம்பிக்கையிருந்த மனநிலையில் அவர் எதிர்பார்த்திருந்தார். அவர்களுடைய பகுதியிலேயே ஓர் இளைஞன் கிடைத்தான். கோஹன் அவனைக் கெட்டியாய் பற்றிக்கொண்டார். அருமையான விருந்துக்குப்பிறகு, அவருடைய மூன்று பெண்களும் அந்த இளைஞனின் முன்பாய் கொண்டு நிறுத்தப்பட்டனர். மூத்த பெண் ரேச்சல் பகட்டு இல்லாதவள், நேர்மையானவள் என்றாலும் அழகற்றவள். இரண்டாம் பெண் எஸ்தர் பார்ப்பதற்கு அத்தனை மோசமில்லை, உருண்டு திரண்டு கொழுகொழுவென்று இருந்தாள் எரிச்சலூட்டக் கூடிய அளவுக்கு. மூன்றாம் பெண் சோனியா இனிய அழகுடன் விரும்பி அனுபவிக்கத் தக்கவளாய் இருந்தாள்.

கோஹன் அந்த இளைஞனைத் தனியே அழைத்துச் சென்று, 'நல்லது, அவர்களைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்? கவலையே வேண்டாம், நான் அவர்களுக்கு கணிசமாய் வரதட்சணை தருவேன். ரேச்சலுக்கு ஐநூறு பவுண்டுகள், எஸ்தருக்கு இருநூறு பவுண்டுகள் தருவேன். சோனியாவுக்கு மூவாயிரம் பவுண்டுகள் வரதட்சணை தருவேன்' என்றார்.

அந்த இளைஞன் திகைத்துப் போனான். 'ஆனால் ஏன் இப்படி? ரொம்பவும் அழகான பெண்ணுக்கு எதற்கு அதிக வரதட்சணை கொடுப்பது?

கோஹன் விளக்கினார். 'அது அப்படித்தான். அவள் கொஞ்சம் கர்ப்பமாயிருக்கிறாளே' என்று.

தினமும் கொஞ்சமாய் கருவுற்றிருங்கள் - விழிப்புணர்வுடன். மொத்த விற்பனை முறையில் அப்படியே கர்ப்பமாகி விடாதீர்கள். மெள்ள மெள்ள கொஞ்சம் கொஞ்சமாய் வரம்பு மீறிய அளவில் செயல்படாதீர்கள், காரணம் மறுபடியும் அது மனதின் தந்திரமாகி விடும். ஏதேனும் ஒன்று உங்கள் கவனத்தைக் கவர்ந்து விடுகிறபோதெல்லாம்

மனம் அதனை வரம்புமீறிச் செய்ய முற்பட்டு விடும். உண்மையில் நீங்கள் தோற்கத்தான் செய்கிறீர்கள். நீங்கள் தோற்கிற போதெல்லாம் மனம் சொல்கிறது. 'பார்த்துக்கோ, இதெல்லாம் உனக்கு சாத்தியப்படாதுன்னு நான் முன்னாடியே சொன்னேன்' என்று. குறியீட்டிலக்குகளை (target) மிகச் சிறியதாக்கிக் கொண்டு விடுங்கள். ஒரு நேரத்திற்கு ஓர் அடி எடுத்து வையுங்கள், அங்குலம் அங்குலமாய் சீராக ஒன்றும் அவசரமில்லை. வாழ்க்கை சாசுவதமானது.

ஆனால் இது மனதின் தந்திரம். மனம் சொல்கிறது, 'இப்போ முக்கிய கருத்து உனக்குப் பிடிபட்டதா, உடனே செயல்படு' என்று. உண்மையில் மனம் உங்களுடைய முட்டாள்தனத்தைக் கண்டு நகைக்கவே செய்யும். காலகாலமாய் உங்கள் மனதைப் பழக்கி வந்திருக்கிறீர்கள், உங்களைப் பயிற்றுவித்துக் கொண்டிருக்கிறீர்கள். அடையாளப்படுத்திக் கொண்டீர்கள். அதன்பிறகு திடீரென்று ஒரு கணத்தில் அதிலிருந்து வெளியேற விரும்புகிறீர்கள். அது அத்தனை எளிதாயிருக்காது. துண்டு துண்டாய், அங்குலம் அங்குலமாய் வெகு நிதானமாய் உங்கள் வழியை உணர்ந்தவராய் செல்லுங்கள். அதிகமாய் விவரம் கேட்டுக் கொண்டிருக்காதீர்கள். உங்களுடைய தன்னம் பிக்கையை நீங்கள் இழக்கும்படியாகும். அதை நீங்கள் இழந்தீர்களோ மனம் நிரந்தர எஜமானனாகி விடும்.

மக்கள் இதனைப் பலமுறை முயன்று பார்த்து விட்டனர். ஓர் ஆசாமி முப்பது ஆண்டுகளாய் புகைத்துக் கொண்டிருந்தார். திடீரென்று ஒருநாள், கணநேர ஆர்வத்தில், இனி புகைப்பதில்லை என்று தீர்மானத்துக்கு வந்தார். ஒன்றிரண்டு மணிநேரம் உறுதியாய் இருந்தார். ஆனால் பெரிய அளவில் அந்த ஆசை தோன்றி மிகப் பெரிய வேட்கையாய் உருவெடுத்து விட்டது. அவரது இருப்புணர்வு ஒரேயடியாய் கலக்கமுற்று, பெருங்குழப்பத்துக்குள்ளாயிற்று. கொஞ்சம் கொஞ்சமாய் அது தாங்க முடியாத அளவுக்குப் போய்விட்டது. அவருடைய வேலைகள் நின்றுவிட்டன. அவரால் தொழிலகத்தில் வேலையைக் கவனிக்க முடியவில்லை, அலுவலகத்திலும் எதையும் செய்ய முடியவில்லை. புகைக்க வேண்டும் என்கிற உந்துதல் அவரைச் சுற்றி மேகங்களாய் சூழ்ந்து கொண்டன. ஆக, இன்னோர் ஆர்வமிக்க கணத்தில் அவர் சிகரெட்டைக் கையிலெடுத்தார். புகைக்கத் தொடங்கினார், தணிவாக உணர்ந்தார். ஆனால், அவர் மேற்கொண்டது ரொம்பவும் ஆபத்தான ஒரு சோதனை.

அவர் புகைக்காமல் இருந்த அந்த மூன்று மணி நேரத்தில் தம்மைப் பற்றிய ஒரு விஷயத்தை அவர் தெரிந்து கொண்டார். 'தாம் ஒரு கையாலாகாதவர். தம்மால் எதுவும் செய்ய முடியாது. ஒரு முடிவைப் பின்பற்ற அவரால் முடியாது. அவரிடம் மன உறுதி கிடையாது. கொஞ்சமும் திறனற்றவர்' என்பதை. ஒருமுறை இந்த முடிவுக்கு வந்துவிட்டால் பிறகு எல்லாவற்றிலும் இப்படித்தான்.

ஒருசமயம் புகைப்பதைவிட முயன்றவர், மற்றொரு சமயம் உணவுக் கட்டுப்பாட்டையும், இன்னொரு சமயம் வேறொன்றையும் முயன்று பார்ப்பார். ஒவ்வொன்றிலும் தோல்வியே மிஞ்சும். தோல்வி உங்களுக்குள் நிரந்தரமான ஒன்றாகி விடும். கொஞ்சம் கொஞ்சமாய் நீரின் போக்கில் இழுபடும் மரத்துண்டு போலாகி விடுவீர்கள். 'என்னால் எதுவும் செய்ய முடியாது' என்று சொல்வீர்கள். உங்களால் முடியாது என்கிற எண்ணம் உங்களுக்கு வந்து விட்டால், வேறு யாரால் முடியும்?

இந்த ஒட்டுமொத்த முட்டாள்தனத்துக்கும் காரணம் மனதின் தந்திரம். பெரிய அளவில் பயிற்சியும், ஒழுங்கும் தேவைப்படுகிற ஒன்றை உடனே செய்யும்படி அது வற்புறுத்துகிறது. அத்துடன் பிற்பாடு உங்களைச் செயலிழந்தவராயும் அது உணர வைக்கிறது. நீங்கள் செயலிழந்தவராகிற போது உங்கள் மனம் செயலுடையதாகி விடுகிறது. இது எப்போதுமே சரியான அளவு விகிதத்தைக் கொண்டிருக்கும். நீங்கள் திறமற்றவராய் இருக்கும்போது மனம் திறமுடையதாயிருக்கும். நீங்கள் ஆற்றலுடன் செயல்படுகிறபோது மனம் ஆற்றலற்றதாயிருக்கும். அது உங்களுடைய ஆற்றலைக் கொண்டிருக்கிறது. உங்களுடைய தோல்வியில் ஜீவிக்கிறது. உங்களுடைய தோல்வியுற்ற சுயமும் தோல்வியுற்ற துணிவும் அதற்கு வாழ்வாதாரமாகி விடுகிறது.

எனவே, எதையும் வரம்புமீறிச் செய்யாதீர்கள்.

மென்சியஸ் என்கிற சீன மறைஞானி பற்றி நான் கேட்டறிந்தது. அவர் கன்பூசியஸின் மிகச்சிறந்த சீடர். அபினிப் பழக்கமுடைய ஒருவன் அவரிடம் வந்து, 'நான் எல்லா வழிகளையும், முறைகளையும் முயன்று பார்த்தாயிற்று. எதுவும் நடக்கிற கதையாயில்லை. எல்லாமும் கடைசியில் தோற்று விடுகிறது. நான் படுதோல்வி அடைந்தவன். தாங்கள் எனக்கு உதவ முடியுமா?" என்று கேட்டான்.

மென்சியஸ் அவனுடைய கதையைக் கவனமாய் கேட்டுப் புரிந்துகொள்ள முயன்றார். அவன் வரம்பு மீறிச் செய்கிறவன் என்பதைப் புரிந்து கொண்டார். அவனிடம் ஒரு சாக்குக்கட்டி

(chalk)யைக் கொடுத்து, 'உன்னிடமுள்ள அபினி (opium)யை இந்த சாக்குக்கட்டியை வைத்து எடை போடு. நீ எடை போட்டுப்பார்க்கிற ஒவ்வொரு முறையும் ஒன்று, இரண்டு, மூன்று என சுவரில் குறித்து வைக்க வேண்டும்.

நீ எத்தனை தடவை அபினியை உட்கொண்டாய் என்பதைக் குறித்து வை. நான் ஒரு மாதம் கழித்து வருகிறேன்' என்றார்.

அந்த மனிதன் அவ்வாறே செய்து முடிக்க முயன்றான். அவன் அபினை எடுத்துக்கொள்கிற ஒவ்வொரு முறையும் சாக்குக் கட்டியுடன் அதை எடையிட்டுப் பார்த்தான். சாக்குக்கட்டியில் ஒன்று, இரண்டு, மூன்று என்று எழுதிக் கொண்டு வந்ததில் கொஞ்சம் கொஞ்சமாய் மறையத் தொடங்கியது. ஒவ்வொரு முறையும் அது குறைந்து கொண்டேயிருந்தாலும் நுட்பமாய் குறைந்தது. ஒரு மாதத்தக்குப் பிறகு மென்சியஸ் அவனைக் காணச் சென்றார். அந்த ஆள் சிரித்தபடி சொன்னான். 'நீங்கள் என்னை ஏமாற்றி விட்டீர்கள். அது... வேலை செய்தது. அந்த மாற்றம் கண்ணுக்குப் புலப்படாத அளவில் இருந்தது, ஆனாலும் மாற்றம் நிகழ்ந்தபடி இருக்கிறது. அரைவாசி சாக்குக்கட்டி தீர்ந்து போயிற்று - அரைவாசி சாக்குக்கட்டி தீர்ந்து போயிற்று - அரைவாசி சாக்குக் கட்டியோடு அரைவாசி அபினும் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து விட்டது' என்று.

மென்சியஸ் சொன்னார், 'உன்னுடைய இலக்கை அடைய விரும்பினால் நீ ஓடவேண்டியதில்லை. மெதுவாகச் செல்' என்றார்.

மென்சியஸின் பிரசித்தமான வாசகங்களில் ஒன்று, 'நீ அடைய விரும்பினால் ஓடவேண்டியதில்லை'. நீங்கள் உண்மையிலேயே அடைய விரும்புவீர்களாயின் நடக்கக்கூடத் தேவையில்லை. நீங்கள் உண்மையிலேயே அடைய விரும்பினால் முன்பாகவே அந்த இடத்தை அடைந்து விடுகிறீர்கள். நிதானமாய் செல்லுங்கள். இந்த உலகம் மென்சியஸையும், கன்ஃபூசியஸையும், லாவோட்சுவையும், சுவாங்சுவையும் கவனமாய் கேட்டிருந்தால் முற்றிலும் மாறிவிட்டிருக்கும். நம்முடைய ஒலிம்பிக் போட்டிகளை எப்படி நடத்துவது என்று அவர்களிடம் கேட்டால் அவர்கள் சொல்வார்கள், 'யார் விரைவில் தோற்கடிக்கப்படுகிறாரோ அவருக்குக் கொடுங்கள். யார் ரொம்பவும் மெதுவாக நடக்கிறாரோ அவரே முதல் பரிசுக்குத் தகுதியானவர், வேகமாய் ஓடுகிறவரல்லர்... போட்டி இருக்க வேண்டுந்தான், ஆனால், யார் ரொம்பவும் நிதானமானவரோ அவருக்கே பரிசு கொடுக்க வேண்டும்' என்று.

நீங்கள வாழ்க்கையில் நிதானமாய் செயல்பட்டுக் கொண்டிருந்தால் மிகச்சிறந்தவற்றை, தகுதியானவற்றை, அதிக அளவில் பெறுவீர்கள். வன்முறை வேண்டாம். எந்தவொரு வன்முறையைக் கொண்டும் வாழ்க்கையை மாற்ற முடியாது. கலைத்திறனும், தந்திரமும் கொண்டவராயிருங்கள். புத்தர் அதற்கென்று ஒரு பிரத்தியேக வார்த்தையை வைத்திருக்கிறார். அவர் அதனை 'உபாயம்' என்கிறார். 'திறமை உடையவராயிருங்கள்' அது ஒரு சிக்கலான தோற்ற நிலை. ஒவ்வொரு படியையும் கவனமாய் பார்த்துக்கொண்டு, எச்சரிக்கையோடு நடவுங்கள். இரண்டு சிகரங்களுக்கு இடையே கனமான ஒரு கயிற்றைக் கட்டி, அந்தக் கயிற்றின் மீது நடக்கிற மாதிரி ஆபத்தான இடத்தில் நீங்கள் சென்று கொண்டிருக்கிறீர்கள். ஒவ்வொரு கணத்திலும் சமநிலையைப் பராமரியுங்கள், ஓடாதீர்கள். ஓடினால் தோல்வி நிச்சயம்.

மனதுடனோ, உடம்புடனோ அடையாளப்படுத்திக் கொள்ளக் கூடாது அதை எப்படிச் செய்வதென்று எனக்கு இன்னமும் பிடிபடவில்லை. நான் எனக்குள் சொல்லிக் கொள்கிறேன், 'நீ மனமாக இருக்கவில்லை. உன்னுடைய அச்சத்தைப் பொருட்படத்தாதே. உன்னை நேசித்திடு, மனநிறைவோடு இரு...' என்று இதுபோன்ற பொருளற்ற சொற்களை - முட்டாள்தனமான செய்கைகளை நிறுத்துங்கள், காரணம் இதையெல்லாம் சொல்வது மனம்தானே. அதைவிட எதையும் பேசாமல் அமைதியாய் இருந்து விடலாம். அமைதி நிலையில் - நிசப்தத்தில் இருப்பதில்லை மனம். அது முற்றிலும் மொழி ஆராய்ச்சி பற்றியதாய், மொழியாய் இருக்கிறது. வார்த்தைகளற்றதாயும், மனமற்றதாயும் சில இடைவெளிகள் இருக்கும். அந்த இடைவெளிகளில் மனதைக் கவனியாது கடந்து சென்று விடுங்கள். சில நேரங்களில் சிந்தனையற்ற ஒரு முட்டாளாக உங்களைப் பாருங்கள்.

முட்டாள்களாய் அறியப்படுகிறவர்களையும் கவனித்துப் பாருங்கள். அவர்கள் அப்படியே உட்கார்ந்திருப்பார்கள் - எதையோ கூர்ந்து கவனிப்பது போல் இருக்கும். ஆனால் எதிலும் கவனம் சென்றிருக்காது. முற்றிலும் கண்டிப்பு நீங்கி, தணிவு நிலை அடையப் பெற்றவராய் இருப்பார்கள். அவர்களுடைய முகம் நேர்த்தி யாயிருக்கும். எவ்வித இறுக்கமும் அல்லாமல், எதையும் செய்யாமல் கலக்கமற்ற நிலையில் அவர்கள் இருக்கக் காண்பீர்கள்.

தினமும் ஒரு மணி நேரம் ஒரு முட்டாளைப்போல் உங்களால் அமர்ந்திருக்க முடியுமாயின் நீங்கள் மெய்யுணர்வு பெறுவீர்கள்.

லாவோட்சு சொல்வார், 'என்னைத்தவிர எல்லாருமே திறமை உள்ளவர்களாய் தெரிகிறார்கள். நான் ஒரு முட்டாளைப்போல் காட்சியளிக்கிறேன்' என்று. புகழ்பெற்ற நாவலாசிரியரான ப்யோதர் தாஸ்தாவ்ஸ்கி தன்னுடைய குறிப்பேட்டில் எழுதினார், தாம் இளைஞராயிருந்தபோது காக்கைவலிப்புக்கு உள்ளானதாகவும், அந்த வலிப்புக்குப் பிறகு மெய்ம்மை (reality) என்றால் என்னவென்று தாம் முதல் முறையாய் புரிந்துகொள்ள முடிந்தது' என்று. வலிப்பு வந்ததுமே எல்லாமும் அமைதியுற்று விடுகிறது. எண்ணங்கள் தடைப்பட்டுப் போனது. மற்றவர்கள் மருந்தையும், மருத்துவரையும் கண்டுபிடிக்க முயன்று கொண்டிருந்தனர். அவருக்குப் பெருமளவில் மகிழ்ச்சி உண்டாயிற்று. காக்கைவலிப்பு மனமற்றிருக்கும் காட்சியை - கணநேரமாயினும் அவருக்கு வழங்கியது.

வலிப்பு நோயர்களில் பலர் மறைஞானிகளாகி (mystics) விட்டிருப்பதும், மறைஞானிகளில் பலர் வலிப்பு நோய்க்கு ஆளானவர்கள் என்பதும் உங்களுக்கு வியப்பைத் தரலாம். ராமகிருஷ்ணருக்குக் கூட இருந்திருக்கிறது. ராமகிருஷ்ணருக்கு இருந்தாற் போலிருந்து வலிப்பு வந்துவிடும். இந்தியாவில் அதை வலிப்பு என்று நாம் சொல்வதில்லை, சமாதி நிலை என்கிறோம். இந்தியர்கள் சாமர்த்தியக்காரர்கள். ஒரு பொருளுக்குப் பெயர் சூட்டுகிற போது ஏன் அழகாகப் பெயர் சூட்டி அழைக்கக் கூடாது? நாம், 'மனமற்றிருத்தல்' (No mind) என்று அழைக்கிறபோது அது முற்றிலும் தகுதியாய் தெரிகிறது. ''முட்டாளாயிரு' என்று நான் சொன்னால் நீங்கள் அமைதிக் குறைவாய் உணர்வீர்கள். நான் 'மனமற்றவனாகி விடு' என்று சொன்னால் எல்லாமே சரியாய் படுகிறது. ஆனால், அது மிகச்சரியாக அதே நிலையில்தான் இருக்கிறது.

முட்டாள் என்றால் மனதுக்குத் தகுதியற்றதாயும், தியானிப்பவர் என்றால் மனதைவிட மேலாகவும் இருக்கும். ஆனால் இரண்டுமே எந்தவொரு மனமும் இல்லாமல் இருப்பதுதான். நான் இரண்டையும் ஒன்றுபோல் இருப்பவை என்று சொல்ல மாட்டேன். ஓரளவு ஒப்புடைமை கொண்டவை என்றுதான் சொல்கிறேன். தான் மனமற்றிருப்பதை முட்டாள் உணர்ந்திருக்க மாட்டான். அதே சமயம் மனதை உதறிவிட்ட ஒருவன் தான் மனமற்றவன் என்பதை அறிவான். பித்துக்குளிக்கும் ஞானிக்கும் இடையே குறிப்பிட்ட அளவு ஒப்புடைமை இருக்கிறது. சூஃபி கோட்பாட்டில் அவர்கள் 'வெறி பிடித்தவர்கள்' (mad ones) எனப்படுகிறார்கள். மெய்யுணர்வு

கொண்டவர்கள் எல்லாம் ஒருவகையில் அப்படித்தான். அவர்கள் மனதைக் கைவிட்டதால் மகிழ்ச்சி வெறி கொண்டவர்கள்.

கொஞ்சம் கொஞ்சமாய் அதைத் தெரிந்துகொண்டு விடுங்கள். சில கணங்களே என்றாலும்கூட அந்த முதல் தரமான முட்டாள்தனத்தில் (அறியாமை) இருக்கிறபோது, நீங்கள் எதையுமே சிந்திக்காமல் இருக்கிறபோது, நீங்கள் யாரென்பதை அறிந்திராத போது, எவ்வகையிலும் ஒன்றை நீங்கள் அறிந்திராத போது, ஆழ்ந்த அறியாமையில், அறியாமையின் ஆழ்ந்த அமைதியில் இருக்கும் போது, அந்த அமைதியில் நீங்கள் உடம்பாகவும் இல்லை, மனமாகவும் இல்லை என்பதை அகக்காட்சி (vision)யில் காணத் தொடங்குவீர்கள். நீங்கள் அதைச் சொற்களால் தெரிவிக்க வேண்டும் என்பதில்லை. ஒளிவிட்டுப் பிரகாசிக்கிற சூரியனைப் போல் அந்த உண்மை இருந்து கொண்டிருக்கும். பறவைகள் பாடிக்கொண்டிருக்கின்றன – பறவைகள் பாடுகின்றன என்று சொல்ல வேண்டுமா என்ன? அவை பாடிக் கொண்டிருப்பதை நீங்கள் காதுகொடுத்துக் கேட்டு, உணர்ந்து, தெரிந்து கொண்டாலே போதும். அதைப்பற்றி வாய் வார்த்தையாய் சொல்லத் தேவையில்லை.

மிகச்சரியாக அதே முறையில் உங்களை நிதானமாய் தயார்படுத்திக் கொள்ளுங்கள். நீங்கள் உடம்போ மனமோ அல்ல, ஏன் சுயமும் ஆன்மாவும்கூட அல்ல என்பதைத் தெளிவாக ஒருநாள் புரிந்து கொள்வீர்கள். நீங்கள் மிகப்பெரிய அளவிலான வெற்றிடமாய், இன்மையாய், ஏதுமின்மையாய் இருக்கிறீர்கள். நீங்கள் எல்லையற்ற வராய், கட்டுப்பாடற்றவராய், வரையறையற்றவராய் இருக்கிறீர்கள். அந்த முற்றான நிசப்தத்தில் – ஓசையின்மையில் ஒருவர் முழு நிறைவு காண்கிறார்; வாழ்வின் சிகரத்தை, பிரபஞ்ச இருப்பை அடைகிறார்.

> ***'எனக்கும் உங்களுக்கும் உள்ள தோழமையை நான் உணர்கிற ஒவ்வொரு முறையும், 'ஆகா, நம்முடைய வளர்ச்சி மனநிறைவு கொடுப்பதாயிருக்கிறது' என்று எண்ணியபடி மனம் அகந்தைப் பயணத்தை மேற்கொண்டு விடுகிறது. சீக்கிரமே நான் சகதி (ஒழுங்கீனம்)க்குத் திரும்பி விடுகிறேன். தாங்கள் தயவு செய்து என்னை ஊக்குவிப்பீர்களா?'***

மறுபடியும்? மறுபடியுமா சகதியில் கிடக்கிறீர்கள். உங்களை ஊக்குவிக்க வேண்டும் என்கிறீர்களா? என்னால் உங்களை ஊக்குவிக்க முடியாது. நான் உங்களை முற்றிலுமாய் ஊக்கமிழக்கச் செய்யப் போகிறேன். அப்போதுதான் நீங்கள் மறுபடியும் சகதியில்

விழ மாட்டீர்கள். ஊக்குவிக்கும்படி கேட்பது யார்? அதே அகந்தைதான்.

உங்களுடைய கேள்வி முறையை வேண்டுமானால் நீங்கள் மாற்றிக் கொண்டிருக்கலாம். ஆனால் ஒரு நுட்ப வகையில் அது அப்படியேதான் இருக்கிறது. உண்மையைப் புரிந்து கொள்வதில்லை என்று நீங்கள் தீர்மானித்து விடட்துபோல் தெரிகிறது. தற்போது உண்மையைப் புரிந்து கொண்டாலும், ஏமாற்றும் நோக்கில் அதை மாற்றி அமைக்க முற்படுகிறீர்கள்.

என்னோடும், உங்களுடைய தோழமையோடும் நான் ஒன்றாகி விட்டதாய் உணர்கிற ஒவ்வொரு முறையும், "ஆகா, நாம் எத்தகைய வளர்ச்சி பெற்று விட்டோம்' என்று எண்ணிக்கொள்கிற மனம் அகந்தைப் பயணம் மேற்கொண்டு விடுகிறது. சீக்கிரமே நான் சகதிக்குத் திரும்பி விடுகிறேன்." அகந்தை எழுகிறபோதெல்லாம் சற்று முன் பின்னாகவேனும் நீங்கள் சகதியில் விழவே செய்வீர்கள். உங்களால் அகந்தையைத் தவிர்க்க முடியாவிட்டால் சகதியையும் தவிர்க்க முடியாது போகும்.

பாருங்கள், அறிவியல் மேதைகள் கூட சொல்லும்போது, 'நாளைக் காலையில் மறுபடியும் சூரியன் உதிக்கும்' என்றுதான் சொல்கிறார்கள். அது ஓர் ஊகமாகவே இருக்கிறது. அதில் 'உதயம்' பற்றிய நிச்சயத்தன்மை இருக்கவில்லை. இதுவரைக்கும் அப்படி இருந்திருக்கலாம். ஆனால், நாளைக்காலை சூரியன் உதிப்பதை எப்படி உறுதிப்படுத்த முடியும்? அதைப்பற்றி முழுமையாய் உறுதிப்படுத்துவதற்கில்லை. ஒவ்வொரு நாளும் அது உதித்துக் கொண் டிருந்தது பற்றிய கடந்தகால அனுபவமே அந்த அனுமானத்துக்கு - ஊகத்துக்கு அடிப்படையாகிறது. ஆனால் அது அறிவியல் சார்ந்த வலியுறுத்தல் ஆகாது.

ஆனால், உங்களைப் பொறுத்தவரையில் நீங்கள் பிறவியெடுத்த கணத்திலேயே உங்களுடைய இறப்பும் உறுதி செய்யப்பட்டு விடுகிறது. உறுதியாக நாளையும் சூரியன் உதிக்கும் என்பதைவிட உறுதியாக ஏன். 'நீங்கள் செத்துப் போகலாம் அல்லது சாகாமலும் இருக்கலாம்' என்று விஞ்ஞானிகளும் கூட சொல்ல முடியாது. இல்லை, நீங்கள் இறந்து போவீர்கள். அது நிச்சயம். காரணம், பிறந்ததுமே இறப்பு நிகழ்ந்து விடுகிறது. பிறப்பு முன்பே இறப்பாக இருக்கிறது. அதே நாணயத்தின் ஒருபக்கம் அது. ஆக, நீங்கள் பிறந்தாயிற்று என்பதால் இறக்கப் போகிறீர்கள்.

நீங்கள் ஒரு நிச்சயமான விவரவுரை (statement)யை வழங்க விரும்பினால் இந்த அளவுக்குச் சொல்ல முடியும் என்று அறிவியலார் தெரிவிக்கிறார்கள். 'சந்தர்ப்ப சூழ்நிலைகள் இருக்கிறபடியே இருந்தால் சூரியன் மறுபடியும் நாளை தோன்றும். 'இருக்கிறபடியே எல்லாம் இருக்குமெனில் இது ஒரு நிபந்தனை. ஆனால், இந்த நிபந்தனை மரணத்திற்குப் பொருந்தத் தக்கதாகாது. எல்லாமும் இருந்தபடி இருக்கிறதோ இல்லையோ பிறந்த ஒருவன் இறக்கவே செய்வான். வாழ்வில் மரணம் மட்டுமே நிச்சயத்தன்மை உடையதாய் தெரிகிறது. மற்றவையெல்லாம் அநேகமாய்... இருந்தாலும் இருக்கலாம்.

அகந்தை மற்றும் சகதி சமாசாரத்திலும் அதே உண்மைதான். அகந்தை தோன்றியதுமே நீங்கள் சகதியில் சிக்கிக் கொள்கிறீர்கள். அதற்குக் காரணம் அகந்தையும் சகந்தையும் ஒரே நாணயத்தின் இரண்டு முகங்கள் என்பதுதான். அகந்தையின் அலைகளோடு எழுகிற நீங்கள் சகதியில் விழுவதைத் தவிர்க்க முடியாது. அகந்தையோடு எழுவதை உங்களால் தடுத்துக் கொள்ள முடியும். அதைத் தட்டிக்கழிக்க உங்களால் முடியும். அப்போது சகதியும் தவிர்க்கப்பட்டதாகி விடும். எனவே, தொடக்கத்திலேயே எச்சரிக்கையாய் இருங்கள்.

நீங்கள் என்னிடம் கேட்கிறீர்கள், 'தயவு செய்து என்னை ஊக்குவிப்பீர்களா?' என்று. நான் உங்களை ஊக்குவித்தால் மீண்டும் உயரப் பறக்கத் தொடங்கி விடுவீர்கள். உங்கள் செயல்பாடு நிறைவளிப்பதாய் எண்ணிக் கொள்வீர்கள். இல்லை, உங்களுடைய ஊக்கத்தைக் குறைக்கவே நான் இங்கிருப்பது. உங்களை நிர்மூலப்படுத்தி, சர்வநாசம் செய்யவே நான் இங்கிருக்கிறேன். அவ்விதமாய் உங்களுடைய ஒட்டுமொத்த அகந்தையையும் நான் மறையச் செய்வேன். இல்லையேல் திரும்பத் திரும்ப அதே கேள்வியைக் கேட்டுக் கொண்டிருப்பீர்கள்.

நானும் அதே பதிலைத்தான் கொடுத்துக் கொண்டிருப்பேன். நீங்கள் வெவ்வேறு கேள்விகளைக் கேட்கிற மாதிரி தெரியலாம். ஆனால் உங்கள் கேள்விகளில் எந்த வேறுபாடும் இல்லை. நானும் வெவ்வேறான பதில்களைக் கொடுப்பதாய் தோற்றமளிக்கலாம். அதுவும் உண்மையல்ல. ஒரே கேள்விக்கு வெவ்வேறு வடிவம் கொடுக்கிறீர்கள். நானும் ஒரே பதிலைத்தான் கொடுக்கிறேன். உங்கள் வகைப்படுத்தலுக்கு (formulation) ஏற்ற மாதிரி நானும் வகைப்படுத்து கிறேன்.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு:

அந்நகரத்துக்குப் பார்வையாளராய் வந்திருந்த ஒரு நபரை, கெடுதல் பண்ணும் முரடர்கள் கூட்டம் ஒன்று வளைத்துக் கொண்டது.

'நீ என்ன கத்தோலிக்க பிரிவைச் சேர்ந்தவனா? ப்ராட்டஸ்டெண்டா?' என்று தன் கையிலிருந்த குண்டாந்தடியைச் சுழற்றியபடி கேட்டான் அந்தக் கும்பலின் தலைவன்.

அந்தப் பார்வையாளனுக்கு எது விரும்பத்தக்க பதிலாயிருக்கும் என்று தெரியவில்லை. விரும்பத்தகாத நிலையில் இருந்து தந்திரமாகத்தான் தப்பிக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டான்.

'உண்மையில் நான் ஒரு யூதன்' என்றான் அவன்.

அவனுடைய தந்திரம் கைகொடுக்கவில்லை.

'நீ கத்தோலிக்க யூதனா அல்லது ப்ராட்டஸ்டெண்ட் யூதனா?' அடுத்த கேள்வி வந்தது அவர்களிடம் இருந்து.

உங்களால் தவிர்க்க முடியாது. கேள்வியை எதிர்கொண்டுதான் ஆக வேண்டும். கேள்விக்குப் பதிலளிக்க வேண்டியது நானல்ல, நீங்கள். காரணம், அது உங்களுடையது.

'நான் சரியாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறேன். எல்லாம் நிறைவளிப்பதாகவே இருக்கிறது' என்கிற எண்ணம் தோன்றியதுமே அகந்தை மேலெழுவதை உங்களால் புரிந்துகொள்ள முடிந்தால், அடுத்த முறை அந்த எண்ணம் தோன்றுகிறபோது உரத்துச் சிரிப்பீர்கள். வயிறு குலுங்கச் சிரிப்பீர்கள். உடனடியாய் சிரித்து விடுங்கள். கணப்பொழுதையும் வீணாக்காதீர்கள். அகந்தையை அழிப்பதில் சிரிப்பு பெருமளவில் துணை புரியும். உங்களைப் பார்த்து நீங்கள் சிரித்துக் கொள்ளுங்கள். அதன் முக்கியக் கருத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். மறுபடியுமா? நன்றாகச் சிரியுங்கள். சகதியை உண்டுபண்ணுவது அகந்தை.

தொடர்ந்து கவனித்தபடி இருங்கள். அது எளிதில் செய்ய இயலாததுதான். ஆனால், ஒருமுறை அதன் தந்திரத்தை நீங்கள் தெரிந்து கொண்டுவிட்டால் பிறகு எளிதாகி விடும்.

என்னிடமிருந்து ஒருபோதும் ஊக்குவித்தல் தேவை என்று கேட்காதீர்கள். புரிந்துகொள்ளும் திறனைப் பற்றிக் கேளுங்கள். விழிப்புணர்வை வேண்டுங்கள். ஆனால் ஊக்குவிக்கும்படி வேண்டாதீர்கள்.

ஊக்குவிப்பின் மொழி (கருத்து வெளியிடும் முறை)யும் அகந்தையின் மொழியும் ஒன்றுதான். உங்களுக்கு ஊக்குவிப்பு தேவைப்படுகிறது, உங்களுடைய செயல்பாட்டில் குறையேதுமில்லை, நன்றாக இருக்கிறது என்று கைதட்டி, பாராட்ட யாராவது வேண்டும். நீங்கள் மிகச்சிறந்தவர் என்று கூறி உலகமே வந்து உங்களுக்கு மாலையிட வேண்டும். ஆனால் இதுவெல்லாம் எதற்காக? அடியாழத்தில், நாம் உண்மையிலேயே நன்றாகச் செயல்படுகிறோமா என்பதில் உறுதியில்லாமல் இருக்கிறது. அதை உறுதிப்படுத்திக் கொள்ளவே இது தேவைப்படுகிறது உங்களுக்கு. நீங்கள் உண்மையிலேயே நன்றாகச் செயல்பட்டுக் கொண்டிருந்தால் எந்த ஊக்குவிப்பும் உங்களுக்குத் தேவைப்படாது. உங்கள் செயல்பாடு உண்மையிலேயே தகுதியானதாயிருந்தால் மக்கள் உங்களைப் பாராட்டி கைதட்ட வேண்டும். உங்களுக்கு மாலை அணிவிக்க வேண்டும் என்று நீங்கள் ஆசைப்பட மாடடீர்கள். அதற்கெல்லாம் அவசியம் இல்லை. உள்ளே தெளிவில்லாமல் குழப்பமாய் இருந்தால், உள்ளே ஓர் உறுதியற்ற நிலை இருந்தால் அது அவசியப்படும்.

உங்களைப் பாராட்டுவதற்கு ஒரு கூட்டத்தை உங்களால் திரட்ட முடியும். ஆனால் அது உங்களுக்கு உதவப் போவதில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். அவர்கள் உங்களை ஏமாற்ற முடியாமல் இருக்கலாம். ஆனால் உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்ளும்படி யாகலாம். அதுதான் சூழ்ச்சித்திறம் என்பது. அதுவே ஆட்சியியலும் (politics) ஆகும். ஒட்டுமொத்த அரசியலும் மற்றவர்களுடைய ஊக்குவிப்பையே வேண்டி நிற்கிறது. நீங்கள் ஒரு நாட்டின் அதிபராகிறீர்கள். ரொம்பவும் சாதகமாய், உயர்வாய் உணர்கிறீர்கள். ஆனால் முதலாவதாக தேவைப்படுவதே மற்றவர்களுடைய ஊக்குவிப்புதான். அவர்களுடைய கைத்தட்டல்களை நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள். உங்களுடைய இருப்புணர்வை நீங்கள் மதிப்பீடு செய்யவில்லை, அடியாழத்தில் தாழ்வு மனப்பான்மை கொண்டவராயிருக்கிறீர்கள் என்பதையே அது வெளிக்காட்டுகிறது. அதன் மதிப்பைத் தெரிந்து கொள்வதற்காக அதை சந்தையில் ஏலம் விட விரும்புகிறீர்கள்.

நான் கேட்டறிந்தது. ஒரு சமயம் முல்லா நஸ்ருத்தீன் தம்முடைய கழுதையை ஓட்டிக்கொண்டு சந்தைக்குச் சென்றார். அந்தக் கழுதையின் மீது அவருக்குச் சலிப்பு ஏற்பட்டபடியால் அதை விற்றுவிட விரும்பினார். அது ரொம்ப மோசமான கழுதை. முல்லா

ஒருபக்கம் இழுத்தால், அது வேறுபக்கம் இழுத்துக்கொண்டு போகும். தன் இஷ்டப்படிதான் அது போய்க் கொண்டிருக்கும். அது எப்போது தொல்லை கொடுக்கும், உதைக்கும் என்று சொல்ல முடியாது. எங்கேயாவது கூட்டத்தைக் கண்டுவிட்டால் அது குழப்பத்தை உண்டுபண்ணி விடும். முல்லா அவதிக்குள்ளாவார். அதனால்தான் அன்று சந்தைக்குச் சென்றது. தன்னுடைய கழுதையை வாங்க வந்தவர்களிடமெல்லாம், அது எந்த மாதிரி கழுதை என்பதை, அதன் உண்மைக் கதையை அவர் சொன்னார். கதையைக் கேட்டபிறகு, யாருமே அதை வாங்கத் தயாராயில்லை. அப்படிப்பட்ட கழுதையை யார்தான் வாங்குவார்கள்? மாலைப் பொழுதாகி விட்டது. அன்று முழுக்க வந்தவர்களிடமெல்லாம் கழுதை பற்றிய உண்மையை அவர் சொல்லியபடி இருந்தார்.

அப்போது ஒருவன் வந்து, 'நீ சரியான முட்டாள். இப்படிச் சொல்லிக் கொண்டிருந்தால் யாராவது கழுதையை வாங்குவார்களா? இது சரியான வழியல்ல. எனக்குக் கொஞ்சம் தரகு கொடுத்தால் நான் அதை ஏலம் விடுவேன். எப்படி விற்கறேன்னு பாரு' என்றான்.

முல்லாவும் 'ஆகா, சரி' என்று ஒப்புக்கொண்டார். காரணம் பேசிப்பேசி அவர் ரொம்பவே களைத்துப் போயிருந்தார்.

அந்த மனிதன் ஒரு நாற்காலியில் ஏறி நின்றுகொண்டான். 'இதுபோன்ற ஒரு சிறந்த கழுதை எப்பவும் இருந்ததில்லை. ரொம்ப அழகான கழுதை. உங்களை நேசிக்கும், கீழ்ப்படிந்து நடக்கும் – சமயத்தில் ஈடுபாடுள்ளது' என்று உரத்த குரலில் கூவினான்.

கூட்டம் கூடியது. ஏலம் கேட்டது. விலை தாறுமாறாய் கூடிக் கொண்டே போயிற்று. முல்லா பரவசமானார். 'பொறு, இப்படியோர் அருமையான கழுதையை நான் விற்பதாயில்லை. நான் விற்க மாட்டேன். இதனுடைய குண விசேஷங்கள் இவ்வளவு காலமாய் எனக்குத் தெரியாமல் போச்சே. இந்தா, பிடி உன்னோட தரகுக் கூலியை நான் கழுதையை விற்க விரும்பவில்லை' என்று சொல்லி விட்டார்.

இதுதான் அரசியல். உங்கள் மதிப்பு உங்களுக்குத் தெரிந்திருக்க வில்லை என்பதால் நீங்கள் சந்தைக்குச் செல்கிறீர்கள். உங்களை ஏலம் விடுகிறீர்கள். மக்கள் உங்கள் விளம்பரத்தைக் கண்டு, வந்து உங்களை மதிப்பீடு செய்கிறார்கள். அவர்கள் உங்களுடைய மதிப்பை ஆராயத் தொடங்கவும் நீங்கள் தகுதியாய் உணர்வீர்கள். உங்களுக்கு ஒரு

குறிப்பிட்ட மதிப்பு இருப்பதை நீங்கள் உணரத் தொடங்குகிறீர்கள். இல்லையென்றால் எதற்காக இத்தனை பேர் உங்கள் பின்னால் பைத்தியமாய் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள்?

தன்னுடைய இருப்புணர்வைப் புரிந்துகொண்ட ஒருவனுக்கு எந்தவித ஊக்குவிப்புக்கும் அவசியமில்லை. உங்களை உணர முயலுங்கள். அத்தனை ஊக்குவிப்பும், அகத்தூண்டலும் உங்களைக் கர்வத்தால் இறுமாப்படையச் செய்கிறவையே. அதையெல்லாம் அகந்தை அனுபவித்து மகிழ்கிறது. ஆனால் அந்த அகந்தை உங்களை உபாதைக்குள்ளாக்கும், அது உங்களைப் பீடித்திருக்கிற நோய். உங்களுக்குத் தேவை ஊக்குவிப்பல்ல. உங்களுக்குத் தேவைப்படுவது புரிந்துகொள்ளும் திறன்தான். உங்களுக்குத் தேவை தெளிவு.

நான் சிப்பாய்களை உருவாக்குவதற்காக வரவில்லை. உங்களை ஊக்குவித்து, அகத்தூண்டுதலை வழங்கி நாட்டுக்காகப் போரிடு என்று தயார்படுத்துவது என்னுடைய வேலையல்ல. நான் சிப்பாய்களை உருவாக்கிக் கொண்டிருக்கவில்லை. நான் ஒரு படையை உருவாக்கிக் கொண்டிருக்கவில்லை. நான் தனித்தன்மை கொண்டவர்களை உருவாக்க விரும்புகிறேன். இணையற்ற விதத்தில் உங்களுடன் நீங்கள் இசைவாகி விட வேண்டும் என்றே உங்களுக்கு உதவ முயல்கிறேன். நீங்கள் எங்கிருக்கிறீர்கள், நீங்கள் யார், நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் என்பது தெரிந்து விட்டால் உங்களுடன் நீங்கள் இணக்கம் கொள்ள முடியும். நீங்கள் அதில் மகிழ்ச்சி அடைவீர்கள். உங்களுடைய விதியை நீங்கள் கண்டுபிடிக்கிறீர்கள், மகிழ்ச்சி அடைகிறீர்கள்.

உங்களை இந்துவாகவோ, கிறிஸ்தவராகவோ, முகமதியராகவோ உருவாக்குவதற்கு நான் இங்கே வரவில்லை. அவர்களுக்குத்தான் ஊக்குவிப்பு தேவை, படைகள் தேவை, கோஷங்கள் தேவை. அரசியல் தேவை. ஒரு வகை வன்முறை அவர்களுக்குத் தேவைப்படுகிறது. எனவேதான் அவர்கள் சிறந்த காரியங்களில் ஈடுபட்டிருப்பதாய் அவர்களை நம்ப வைக்க வேண்டியிருக்கிறது.

நீங்கள் சிறந்த காரியங்களைச் செய்யும்படி போதிப்பதற்காக நான் இங்கே வரவில்லை. ஓர் எளிய, சாதாரணமான விஷயத்தை, நீங்கள் யார் என்பதை அறிந்து கொள்ளும்படி சொல்லவே நான் இங்கே வந்திருப்பது. எனக்குத் தெரியும். நீங்கள் முனபே சிறந்தவர்களாய் இருக்கிறீர்கள் என்பது. நீங்கள் முன்பே சிறந்தவர்தான் என்று நான்

சொல்கிறபோது அதில் இருந்த ஊக்குவிப்பு எதையும் நீங்கள் பெற மாட்டீர்கள். காரணம் எல்லாருமே உங்களைப்போல் சிறந்தவர்கள்தாம். உங்களைவிட ஒருசிறிதும் கூடவோ குறையவோ செய்யாமல். இந்த உலகில் உள்ள ஒவ்வொருவரும் இணையற்றவர்தாம். அடுத்தவருடன் ஒப்பிட்டுப் பார்க்க முடியாத அளவு இணையற்றவர்தாம் என்பதை நான் புரிந்து கொண்டிருக்கிறேன். எவருடனும் போட்டி போடத் தேவையில்லை. எதையும் நிரூபிக்கத் தேவையில்லை. நீங்கள் முன்பே நிரூபித்துக் கொண்டாயிற்று. இந்தப் பிரபஞ்சம் உங்களை ஏற்றுக் கொண்டிருக்கிறது. கடவுள் முன்பே ஓர் உறைவிடத்தை உங்களுக்குள் ஏற்படுத்திக் கொண்டு விட்டிருக்கிறார். அதற்குமேல் நீங்கள் என்ன வேண்டும் என்பீர்கள்?

***'ஒவ்வொரு நாள் காலையிலும் சிரிப்பதையே ஒரு தியானமாய் கொள்கிற ஜென் துறவிகளை ஆழ்ந்த உணர்வோடு கவனித்தால், அவர்கள் தங்களுடைய சிரிப்பை ரொம்பவும் கருத்தூன்றிய விதத்தில் (seriously) பயன்படுத்துகிறார்கள் என்று நீங்கள் எண்ணவில்லையா?'***

இல்லை. காரணம் அவர்கள் மறுபடியும் சிரிக்கிறார்கள் - இரண்டாம் சிரிப்பு. முதலாவது, 'நாம் எதற்காகச் சிரிக்கிறோம்? எவ்வளவு முட்டாள்தனமானவர்களாய் இருக்கிறோம்!' என்பது.

நீங்கள் ஒருமுறை மட்டுமே சிரித்தால் அது கருத்தூன்றத் தக்கதாகிவிடும். எனவே, இரண்டாம் முறையும் சிரித்து விடுவது என்று நினைவில் கொள்ளுங்கள். முதலில் அப்படியே சிரித்து விடுங்கள். அதன்பிறகு அந்தச் சிரிப்பைக் குறித்து சிரித்து விடுங்கள். அந்நிலையில் அது கடுமையானதாய் (serious) இருக்காது.

ஜென் வழியைப் பின்பற்றுகிறவர்கள் ஒருவகையில் நீங்கள் கருதிக்கொள்கிற மாதிரி சமய நம்பிக்கை கொண்டவர்களல்லர். ஜென் ஒரு சமயம் அல்ல, அது ஒரு பார்வை. அதற்கென்று மறை நூல்கள் எதுவும் இல்லை. அது எதனுடனும் தன்னைப் பொருத்திக் கொள்வதில்லை, எதிலும் நிலைத்திருப்பதில்லை. அதற்குப் போக்கிடம் இல்லை, குறிக்கோளில்லை. ஜென் ஓர் உபாயமோ, செயல்முறையோ அல்ல. அது எந்தவொரு முடிவையும் நோக்கிச் செல்வதில்லை, அதுவே முடிவாயிருக்கிறது.

ஜென்னை புரிந்து கொள்வது கடினம். நீங்கள் அதைப் புரிந்து கொள்வதாயின், இதுவரை நீங்கள் மேற்கொண்டிருந்த அனைத்தையும் விட வேண்டியிருக்கும். பொருளற்ற உங்கள் சமயத்தை நீங்கள்

விடும்படி ஆகும். ஜென்னைப் புரிந்து கொள்வது கடினம். அது ரொம்பவும் உள்ளார்ந்தது என்பதாலல்ல, உங்களுடைய கட்டுப்பாடு செய்யப்பட்ட மனமே அதற்குக் காரணம். நீங்கள் ஓர் இந்துவாகவோ, கிறிஸ்தவராகவோ தோற்றமளிப்பீர்களாயின் 'ஜென்' என்றால் என்னவென்று உங்களால் புரிந்துகொள்ள முடியாது. ஜென் ரொம்பவும் தூய்மையானது. கொள்கைகளையும், நம்பிக்கைகளையும், போதனைகளையும் தேக்கிக் கொண்டிருக்கும் கண்கள் அதைத் தவற விட்டுவிடும். உங்கள் மனதில் ஒற்றைச் சொல எழுந்தாலும் அதை நீங்கள் தவற விடுவீர்கள் என்கிற அளவுக்கு 'ஜென்' புனிதமானது. ஜென் ஒரு பொதுப்படையான தெரிவிப்பு.

அன்று இரவு நான் வாசித்துக் கொண்டிருந்தேன். சிறந்த ஜென் குருவான சா-ஷூவிடம் கேட்கப்பட்டது. 'எது முக்கியமான மதம்?' என்று. சிடர் சொன்னதே காதில் விழாத மாதிரி அவர் அமைதியாய் இருந்தார். சீடர் மீண்டும் கேட்டார். 'ஐயனே, எது முக்கியமான மதம்?' குரு எங்கே பார்வையைச் செலுத்தியிருந்தாரோ அங்கேயே பார்ப் பதைத் தொடர்ந்தார், தம்முடைய சீடரின் பக்கம் தமது முகத்தைக்கூட அவர் திருப்பவில்லை. சீடர் மறுபடியும் கேட்டார், 'தாங்கள் எங்கே இருக்கிறீர்கள்? நான் சொல்வது கேட்கிறதா, இல்லை?

குரு சொன்னார். 'அதோ முற்றத்தில் உள்ள அந்த *சைப்ரஸ் மரத்தைக் கூர்ந்து கவனி' என்று. தீர்ந்தது. அதுதான் விடை: 'முற்றத்தில் உள்ள சைப்ரஸ் மரத்தைப் பார்.'

புத்தர் ஒரு பூவுடன் ஜென் உலகைத் தொடங்கி வைத்தது போலத்தான் இதுவும். அவர் பூவை உற்று நோக்கிக் கொண்டிருந்தார், அவருடைய உரையைக் கேட்கக் கூடியிருந்த ஆயிரக்கணக்கான பேர்களுக்கும் என்ன நடக்கிறது என்றே புரியவில்லை. அந்நிலையில் மகாகாசியபர் என்கிற துறவி புன்னகைத்தார், வாய்விட்டுச் சிரித்தார். புத்தர் அவரை அழைத்து, அந்தப் பூவை அவரிடம் கொடுத்தார். கூட்டத்தை நோக்கி, 'வார்த்தையால் சொல்லக்கூடியதை எல்லாம் நான் உங்களுக்குக் கொடுத்தேன். வார்த்தையால் சொல்ல முடியாததை காசியபனுக்குக் கொடுத்தேன்' என்றார். அவர் பூவை மகாகாசியபனி டம் கொடுத்தது நிறைவான செயல். காரணம் அந்தச் சீடர் புன்னகைத்த கணத்தில்தான் அவருடைய இருப்புணர்வு மலர்ச்சியுற்றது.

புத்தர் என்ன சொன்னார்? பூவைப் பார்த்தபடி அவர் சொன்னது இதுதான்: 'இந்தக் கணத்தில் இருங்கள். மலரைக் கூர்ந்து நோக்குங்கள்'.

---

* *சைப்ரஸ் (Cypress): ஒருவகை ஊசியிலை மரம்*

அவர்கள் வேறு எதையோ எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் வேறு எதைப் பற்றியோ எண்ணமிட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்கள் வேறு எதையோ கற்பனை செய்து கொண்டிருந்தார்கள்.

சா-சூ சொன்னார், 'முற்றத்தில் இருக்கிற சைப்ரஸ் மரத்தைக் கூர்ந்து கவனித்திடு' என்று. மதம் பற்றிய பொருளற்ற சொற்களையும், எது முக்கியம், எது முக்கியமல்ல என்பதையும் விடுங்கள். இந்தக் கணத்தில் இருங்கள். ஆழ்ந்து சிந்தித்திடுங்கள். இந்தக் கணத்தில் எது வெளிப்பட்டதோ அதுவே சாரமுள்ள மதம்' என்றார் அவர்.

ஜென் முற்றிலும் வேறுபட்டது. அது பெரிய அளவில் இணையற்ற ஒன்று. நீங்கள் கோட்பாடுகளிலும், மத நம்பிக்கைகளிலும் சிக்கிக் கொண்டால், உங்களால் அதைப் புரிந்துகொள்ள முடியாது.

சிறியதோர் கதை:

பதினைந்து வயது இளம் கத்தோலிக்கப் பெண்ணொருத்தி. *மதர் சுப்பீரியர் அவளிடம், 'வாழ்க்கையில் நீ என்னவாக விரும்புகிறாய்?' என்று கேட்டார்.

அவள் சொன்னாள், 'நான் ஒரு **'ப்ராஸ்டிட்யூட்' ஆக விரும்பு கிறேன்' என்று.

'என்னவாக...?' கிறீச்சிட்டாள் அந்த வயதானப் பெண் துறவி.

'ப்ராஸ்டிட்யூட் ஆக...' அந்தப் பெண் மீண்டும் சொன்னாள்.

'ஓ, புனிதர்களுக்கு தோத்திரம். எங்கே 'ப்ராட்டஸ்டெண்ட்'டாக விரும்புகிறாயோ என்று பாத்தேன்' என்றாள் கடவுளிடம் பெரும் பக்தி கொண்ட அந்த முதியவள்.

இவ்வகை மனதால் ஜென் என்றால் என்னவென்று புரிந்து கொள்ள முடியாது. நம்பிக்கைகள், மரபுகள் இவற்றுக்கு அப்பாற்பட்டது அது.

ஜென் வழியைப் பின்பற்றுகிறவர்கள் கடுமையானவர்களல்லர். ஆனால், பாசாங்கற்றவர்கள். இவ்விரண்டுமே முற்றிலும் வேறானவை. அவற்றுக்கிடையே குழம்பி விடாதீர்கள், ஒருபோதும் அவற்றைத் தவறாகப் புரிந்து கொள்ளாதீர்கள். நேர்மையான மனிதன் கடுமையாயிருக்க மாட்டான். அவன் பாசாங்கற்றவன். அவன் சிரித்தால் அதையே குறிக்கிறான். அவன் நேசித்தாலும் அதையே குறிக்கிறான்.

---

* *மதர் சுப்பீரியர் - கன்னிமாடத் தலைவி*

** *ப்ராஸ்டிட்யூட் (Prostitute): பாலியல் தொழிலாளி.*

அவனுக்குக் கோபம் வந்தால் கொட்டி விடுவான். வேறு விதமாய் பாசாங்கு செய்யத் தெரியாது. அவன் உண்மையானவன், நம்பத்தக்கவன். அவன் எப்படிப்பட்டவனாயினும் உங்களிடம் அப்படியே வெளிப்படுத்திக் கொண்டு விடுவான்.

அவன் எளிதில் ஊறுபடத்தக்கவன் (vulnerable). அவன் ஒருபோதும் முகமூடிக்குப் பின்னால் மறைந்து கொள்வதில்லை. அவன் பாசாங்கற்றவன், உண்மையானவன். சில நேரங்களில் அவன் துன்புறுவான், அப்போது துயரமாயிருப்பான். சில சமயம் அவனுக்கு அழப் பிடிக்கும், அழுவான். எதையும் மறைக்க மாட்டான். தன்னுடைய இயல்புக்கு மாறாகத் தோற்றமளிக்க அவன் முயல்வதில்லை. அவன் அவனாகவே இருக்கிறான். அவன் ஒருபோதும் தன்னுடைய இருப்புணர்வில் இருந்து விலகுவதில்லை. யாரும் தனது அமைதியைக் குலைக்க அவன் இடமளிப்பதில்லை.

ஆனால் கடுமையானவன் (serious) அப்படியிருக்க மாட்டான். அவனிடம் உண்மை இருக்காது. அவன் நம்பத்தக்கவன் அல்லன். ஆனால், நம்பத்தக்க விதமாய் பாவனை செய்வான். அவன் ஒரு மோசக்காரன், தன்னை நம்பத்தக்கவனாய், மிகவும் நம்பத்தக்கவனாய் காட்டிக்கொள்ள முயல்வான். அவனால் சிரிக்க முடியாது. எங்கே சிரிக்கிற போது தன்னுடைய உண்மையான முகம் மற்றவர்களுக்குத் தெரிந்து விடுமோ என்கிற அச்சம். காரணம் பல சமயங்களில் நீங்கள் சிரிக்கும்போது அதுவரை நீங்கள் மறைந்து வைத்திருந்தவை வெளிப்பட்டு விடுவதுண்டு.

நீங்கள் சிரித்தால் உங்களுடைய சிரிப்பே நீங்கள் யார் என்பதைக் காட்டிக் கொடுத்துவிடும். காரணம், சிரிக்கிறபோது நீங்கள் தணிவு நிலையில் இருக்கிறீர்கள், இல்லையேல் உங்களால் சிரிக்க முடியாது. சிரிப்பு இறுக்கத்தில் இருந்து விடுபடுதல் - தணிவு நிலை அடைதல். நீங்கள் இறுக்கமாயிருக்க முடியும், ஆனால் அப்போது உங்களால் சிரிக்க முடியாது. நீங்கள் சிரித்தால் இறுக்கம் போய்விடும்.

நீங்கள் கவலை நிறைந்தவராய் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு இருக்க முடியும், அதே நிலையில் தொடர்ந்திருக்கவும் முடியும். ஆனால் நீங்கள் சிரித்தால் உடனே ஒட்டுமொத்த உடம்பும் தணிவு நிலை அடைவதைக் கண்டு கொள்வீர்கள். நீங்கள் தணிவடைகிற அந்தக் கணத்தில் ஏதோவொன்று, நீங்கள் ரொம்ப காலமாய் மறைத்திருந்த ஒன்று குமிழிட்டுக் கொண்டு மேலே வரும். எது மற்றவர்களுக்குத் தெரியக்கூடாது என்று நீங்கள்

நினைக்கிறீர்களோ அது மற்றவர்களுக்குத் தெரிய வந்துவிடும். அதனால்தான் கடுமையானவர்கள் சிரிப்பதில்லை. பாசாங்கற்றவர்கள் சிரிக்கிறார்கள் - பாசாங்கற்றவர்கள் மட்டுமே சிரிக்கிறார்கள். அவர்களுடைய சிரிப்பு கள்ளம் கபடற்றது. குழந்தைகளுடையதைப் போன்றது.

கடுமையானவர்கள் கண்ணீர் விட்டு ஒலியின்றி அழவோ, வாய்விட்டுப் புலம்பவோ மாட்டார்கள். காரணம் அது அவர்களுடைய பலவீனத்தை வெளிக்காட்டி விடும் - தாங்கள் பலத்துடன் மிகுந்த பலத்துடன் இருப்பதாகக் காட்டிக் கொள்ளவே விரும்புவார்கள். பாசாங்கற்ற ஒருவனோ தன்னை உள்ளது உள்ளபடி வெளிப்படுத்திக் கொள்வான். அவன் தன்னுடைய உள்ளார்ந்த இருப்புணர்வுக்குள் பிரவேசிக்க உங்களுக்கு அழைப்பு விடுப்பான்.

'ஜெ'ன்னில் வாழ்பவர்கள் பாசாங்கற்றவர்கள், அவர்கள் கடுமையாயிருப்பதில்லை. சில சமயம் புனித நிலை கெட்டவர் என்கிற அளவிற்கு பாசாங்கற்றவராய் இருப்பார்கள். உங்களால் அதை எண்ணிப் பார்க்கவே முடியாது. சமயப்பற்று இல்லாதவரோ என்று கருதுமளவுக்கு பாசாங்கற்றவராய் இருப்பார்கள். ஆனால் சமயத்துக்கு எதிரானவர்களல்லர். காரணம், பாசாங்கின்றி மனமார்ந்து இருப்பதே மதம்.

என்னுடைய முழுமுயற்சியும் அதே பரிமாணத்தைக் கொண்டதுதான். அது உங்களைப் பாசாங்கற்றவராக்கத் துணைபுரியும். ஆனால், கடுமையானவராக்குவதற்கல்ல. நீங்கள் சிரிக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். நீங்கள் அழ வேண்டும் என்று நான் விரும்புகிறேன். நீங்கள் சில நேரங்களில் துயரத்தோடும், சில நேரங்களில் மகிழ்ச்சியோடும் இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன். நீங்கள் உள்ளே எப்படி இருக்கிறீர்களோ அப்படியே வெளியேயும் இருங்கள். பலவற்றையும் ஒன்றாகக் கொண்ட ஒரே படைப்பு நீங்கள். ஆற்றல் மிக்கவராயும், தங்கு தடையின்றித் தொடர்கிறவராயும், வளர்ச்சி காண்பவராயும், உங்களுடைய நற்பேற்றை அடைகிறவராயும் மலர்ச்சியுற்றவராயும், மனம் திறந்தவராயும் இருங்கள்.

*'பகவானே, நான் தங்களுக்கு அடிமையாகி விட்டதாய் உணர்கிறேன். தாங்களே என்னுடைய இன்பங்களில் செயல்படுகிறவர். தாங்களே எனக்குக் கடைசி ஆதரவு. கடைசி மருந்து. நான் பயணத்தை முன்னிட்டு விட்டகல*

*விரும்புகிறேன். ஆயினும், என்னால் தப்பிச்செல்ல முடியாது. ஒவ்வொரு காலைப் பொழுதிலும் கடிகாரத்தைப் போல் டாணென்று உங்களுடைய உரையைக் கேட்க வந்து விடுகிறேன். உங்களால் வசியம் செய்யப்பட்டது போல் உணர்கிறேன். என்ன செய்ய?'*

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு: அந்தக் கதையின் கடைசி வரிகளில் உங்கள் கேள்விக்கான விடை இருக்கிறது. எனவே, கவனமாய் கேளுங்கள்.

ஜாஸ் இசைக்கலைஞன் ஒருவன். தன்னுடைய வாழ்நாளில் ஒருமுறைகூட அவன் சர்ச்சுக்கு சென்றதில்லை. அன்று ஒரு கிராமப்புற சர்ச் வழியே அவன் சென்றுகொண்டிருந்தபோது அங்கு வழிபாடு தொடங்கியிருந்தது. அங்கே என்ன நடக்கிறது என்பதை அறிந்து கொள்ளும் ஆர்வத்தில், அவன் உள்ளே சென்று பார்க்கத் தீர்மானித்தான்.

இறை வழிபாட்டுக்குப் பிறகு, வட்டாரக்குரு (rector)வை அணுகி, 'புனிதமானவரே, மதிப்பிற்குரியவரே சொல்லுங்கள். உங்களுடைய நல்ல வார்த்தைகளால் என்னை வீழ்த்தி விட்டீர்கள். ஆ, என்ன பயங்கரம். என்னைக் குடைந்து எடுத்து விட்டது உண்மையிலேயே' என்றான்.

அந்தக் குரு புகழ்ச்சியில் நிறைவு கொண்டு விட்டார். ஆனாலும் சொன்னார். 'நல்லது, உமக்கு நன்றி. ஆனாலும் புனித ஆலயத்தின் வாசல்களில் இத்தகைய அற்பமான வார்த்தைகளைப் பயன்படுத்தக் கூடாது' என்று.

ஆனால், அந்த இசைக்கலைஞன் தொடர்ந்தான், 'நான் உங்களுக்கு வேறொன்றைச் சொல்கிறேன். மதிப்பிற்குரியவரே, அந்தப் பூனை ரொட்டி இருந்த தட்டைச் சுற்றி வந்தபோது நான் இன்பச்சூழ்நிலையில் இருப்பது போல் உணர்ந்தேன்.'

'பைத்தியம், பைத்தியம்' என்றார் குரு.

*சூத்திரம் – 39 'பந்தகாரண சைதில்யாத் பிரசாரஸம்*
*வேதனாச்ச*
*சித்தஸ்ய பரசரீராவேச'*

சித்தத்தின் தளைகளுக்கான காரணங்கள் தளர்ந்து, சித்தத்தின் செயலுக்கான பாதைகளை (நாடிகள்)ப் பற்றி அறியும் போது அவன் பிற சரீரத்தில் புக முடியும்.

*சூத்திரம் – 40 'உதான ஜயாஜ்ஜல பங்க கண்டகாதிஷ்வ*
*சங்க உத்க்ராந்திஸ்ச'*

உதானன் என்னும் நாடியை வெல்வதால் யோகி நீரின் மேலும், சேற்றின் மேலும், முள்ளின் மேலேயும் நடக்க முடியும். தாம் விரும்பியது போல் மரணத்தை ஏற்க முடியும்.

*சூத்திரம் – 41 'சமான ஜயாத் ப்ரஜ்ஜவலனம்'*

சமானன் என்கிற நாடியை வசப்படுத்துவதால் யோகியின் உடலைச் சுற்றி ஓர் ஒளி வீசுகிறது.

*சூத்திரம் – 42 'ச்ரோத்ரா காசயோ ஸம்பந்த ஸம்யமா*
*திவ்யம் ச்ரோத்ரம்'*

காதுக்கும், ஆகாயத்துக்கும் உள்ள தொடர்பில் சம்யமம் செய்வதால் அமானுஷ்ய ஒலிகளைக் கேட்கும் ஆற்றல் வருகிறது.

*சூத்திரம் – 43 'காயா கசயோ: ஸம்பந்த ஸம்யமால்லகுதூல*
*ஸமாபத்தேச் சாகாச கமனம்'*

ஆகாயத்துக்கும் உடலுக்கும் உள்ள தொடர்பின் மீது சம்யமம் செய்வதால் உடம்பு பஞ்சு போல் இலேசாகி விடுகிறது. இதைக் குறித்து தியானம் செய்யும் யோகிக்கு வான் வழி செல்லும் ஆற்றல் கிடைக்கிறது.

ஒரு நூறு ஆண்டுகளுக்கு முன்னால், உலகின் மிகச்சிறந்த சிந்தனையாளர்களுள் ஒருவரான ஃப்ரடெரிக் நீட்சே அறிவித்தார், 'கடவுள் செத்து விட்டார்' என்று. எல்லோருக்கும் தெளிவாகிற விதத்தில்தான் அவர் அதனை அறிவித்தது. உலக சிந்தனையாளர் களின் உணர்வையே அவர் பிரதிபலித்தார். குறிப்பாக அறிவியல் துறையைச் சார்ந்தவர்களின் உணர்வு அது எனலாம். அறிவியல் ஒவ்வொரு நாளும் மதத்துக்கெதிராய், மூட நம்பிக்கைக்கு எதிராய் வெற்றி பெற்றுக் கொண்டிருக்கிறது. எதிர்காலத்தில் மதம் இருக்க முடியாது, கடவுளே இருக்க முடியாது என்கிற அளவுக்கு அது வெற்றி பெற்றிருந்தது. கடவுள் வரலாற்றில் ஒரு பகுதியாகி விட்டார். இனி கடவுள் அருங்காட்சியகத்தில் மட்டுமே இருப்பார். நூலகங்களில் உள்ள புத்தகங்களில்தான் அவருக்கு இடம், மனிதர்களின் உணர்வு நிலையில் அல்ல என்கிற அளவுக்கு உலகெங்கிலும் அது உணரப்பட்டது. கடவுளுடனான இறுதிப்போரில் பருப்பொருள் (matter) வென்றதாய் உணரப்பட்டது.

கடவுள் செத்துவிடட்தாக நீட்சே அறிவித்தபோது, வாழ்க்கை விதியின் பாற்பட்டதல்ல என்பதையே அவர் கருத்தில் கொண்டார். அது தற்செயலான ஒன்று, காரணம் கடவுள் என்பவர் வாழ்க்கையின் ஒருங்கிணைக்கும் நியதியன்றி வேறில்லை. எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்க்கிற ஆற்றலே கடவுள். பெருங்குழப்பத்தில் இருந்து ஒரு பிரபஞ்சத்தை உருவாக்கிய விதிதான் (rule) கடவுள்.

கடவுள் இல்லையென்றதுமே, ஒருங்கிணைக்கிற விதியும் இல்லையென்றாகி விடுகிறது. உலகம் மறுபடியும் குழப்பத்திலாந்து விடும். எல்லா ஒழுங்கும் கடவுளோடு மறைந்து விடுகிறது. எல்லாக் கொள்கையும் – அடிப்படை மூலமும் கடவுளோடு மறைந்து விடுகிறது. வாழ்க்கையைப் புரிந்து கொள்வதற்கான அத்தனை சாத்தியமும் கடவுளோடு மறைந்து விடுகிறது. அத்துடன், மனிதனும் கடவுளோடு மறைந்து விடுகிறான்.

கடவுள் செத்து விட்டதால் மனிதன் தடையற்றவனானான் என்று நீட்சே அறிவித்தார். ஆனால் உண்மையில் கடவுள் செத்து விட்டால்

மனிதன் இருக்க மாட்டான். அந்நிலையில் மனிதன் ஒரு சடப் பொருளாகி விடுகிறான். அதற்குமேல் விளக்கும்படியாய் எதுவும் இருக்காது. மறைபொருளாய், ஆராய்ந்து கொள்ளும்படியாய் எதுவும் இருக்காது. அர்த்தமோ, தனிச்சிறப்போ இருக்காது. தற்செயலாய் தோன்றி தற்செயலாகாகவே போல் மறையும்.

ஆனால் நீட்சே தவறாகவே முடிவு செய்திருக்க வேண்டும். அது அறிவியலின் தொடக்க காலம் என்றே தோன்றுகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டு அறிவியலின் தொடக்க காலமாகவே இருந்திருக்கிறது. ஒவ்வோர் இளைஞனும் தன்னம்பிக்கை உடையவனாய், எதிலும் நல்லதையே காண்பவனாய் இருப்பது போலவே அறிவியலும் இருந்திருக்கும். திபெத்தில் கிழவர்கள் என்றாலே முட்டாள்கள் என்று ஒவ்வோர் இளைஞனும் நினைத்துக் கொள்வானாம். ஆனால் ஒவ்வொரு முதியவரும், இந்த இளைஞர்களே முட்டாள்கள் என்று தெரிந்து கொண்டிருப்பாராம். இளைஞர்கள் எண்ணிக் கொள்வார்கள், முதியவர்களோ தெரிந்து வைத்திருப்பார்கள்.

மனித உணர்விலேயே மிகவும் சமீபத்திய வளர்ச்சி அறிவியல் ஆகும். ஆனாலும் அது ரொம்பவும் தன்னம்பிக்கை உடையதாய் இருந்தது. கடவுள் செத்துவிட்டார், மதம் இனிமேல் கொண்டும் இசைவாயிருக்காது என்று அறிவிக்குமளவு தன்னம்பிக்கை அதற்கு. மனித இனத்தின் குழந்தைப் பருவத்தில் ஒரு பகுதியே மதம் என்று அவர்கள் அறிவித்தார்கள். மதத்தைப் பற்றி 'மாயையின் எதிர்காலம்' (Future of illusion) என்றொரு நூலை ஃப்ராய்டு எழுதினார். அது ஒரு மாயை உண்மையில் அதற்கு எதிர்காலமே இல்லை என்று அவர் எழுதினார்.

ஆனாலும் கடவுள் தப்பிப் பிழைத்துக் கொண்டு விட்டார். இந்த நூறு ஆண்டுகளில் ஓர் அற்புதம் நிகழ்ந்திருக்கிறது. நீட்சே திரும்பவும் வந்தால் என்ன நிகழ்ந்திருக்கிறது என்பதை அவரால் நம்ப முடியாது. பருப்பொருளில் எந்த அளவுக்கு அறிவியல் ஊடுருவி நுழைகிறதோ அந்த அளவுக்குப் பொருளானது உளதாய் இருக்கவில்லை என்பதை அது புரிந்து கொள்கிறது. கடவுள் பிழைத்துக் கொண்டார், சடப்பொருள் செத்துப் போயிற்று. சடப்பொருள் என்கிற வார்த்தை அறிவியலின் சொல் தொகுதியில் (vocabulary) இருந்து கிட்டத்தட்ட மறைந்து விட்டது என்றே சொல்ல வேண்டும். அறிவியல் எத்தனை ஆழம் ஊடுருவிச் சென்றதோ அத்தனைக்கு அது புரிந்து கொண்டது. இருப்பது ஆற்றல் ஒன்றே, பொருளல்ல என்பதை. சடப்பொருள் ஒரு தவறான

புரிதலாகவே இருந்தது. ஆற்றல் அதிவேகத்தில் செல்வது, அந்தப் பயங்கர வேகத்தில் அது திடமாய் இருப்பது போன்ற ஒரு மாயையைத் தோற்றுவித்து விடுகிறது.

கடவுள் மாயை சாஅந்தவரல்லர். இந்த உலகின் திடநிலை (solidity)யே மாயை. இந்த சுவர்களின் திட்பம் மாயை. அவை திடமாய் தெரிவதற்குக் காரணம் ஆற்றலின் அணுக்கூறுகளும் (particles), மின்னியக்க அணுத்துகள் (electrons)களும் அப்படியொரு வேகத்தில், உங்கள் கண்ணுக்குப் புலப்படாத வேகத்தில் செல்லும்.

சிலசமயம் மின் விசிறி வேகமாய் சுற்றுவதை நீங்கள் கவனித்ததுண்டா? அந்நிலையில் அதன் இறக்குகளை - இலகுகளை உங்களால் காண முடியாது. அந்த மின்விசிறி அப்படியொரு வேகத்தில் சுற்றும்போது நீங்கள் அதன்மீது அமர்ந்திருக்க முடியும், விழ மாட்டீர்கள், அதன் அசைவை நீங்கள் உணர மாட்டீர்கள். நீங்கள் துப்பாக்கி ரவை (bullet)யால் அதில் மோத முடியும், ஆனால் அந்தத் துப்பாக்கிக் குண்டு அதன் இடைவெளிகளுக்கிடையே செல்வ தில்லை. காரணம் மின்விசிறி அலகுகளின் வேகத்தைவிட, துப்பாக்கிக் குண்டின் வேகம் குறைவாக இருப்பதுதான்.

அதுதான் நடந்து கொண்டிருக்கிறது. சடப்பொருள் அதற்கு மேலும் செல்லுபடித்தன்மை (validity) இல்லாமல் மறைந்து விடும்.

ஆனால், அறிவியல் எதைக் கண்டுபிடித்ததோ, அது உண்மையில் கண்டுபிடிப்பு அல்ல, அதனை மறு கண்டுபிடிப்பு (rediscovery) என்றே சொல்ல வேண்டும். குறைந்தபட்சம் - ஐயாயிரம் ஆண்டுகளாய் யோகா அதுபற்றிப் பேசிக் கொண்டிருக்கிறது. யோகா அதனை, 'பிராண சக்தி' என்று அழைக்கிறது. 'பிராணன்' என்கிற சொல் தனிச்சிறப்பு வாய்ந்தது, பொருட் செறிவுடையது, அது வடமொழியின் இரண்டு வேர்ச்சொல்லில் உருவானது. ஒன்று 'ப்ர'. 'ப்ர' என்றால் ஆற்றலின் அடிப்படையான ஒன்று. 'ண' என்றால் ஆற்றல். 'ப்ராண' என்பதன் பொருள், 'அடிப்படையான, தன்னளவில் முழுமையான சக்தி' ஆகும். சடப்பொருள் என்பது வெறும் மேற்பரப்பு. 'ப்ராண' என்பது உண்மையில் இருக்கிற ஒன்று, ஆனால் பொருளல்ல அது. அதனை இன்மை எனலாம். ஏதும் இன்மை என்றாலே பொருள் அல்ல (nothing) என்பதுதான். அது திடமாக இல்லை, அது நிலையாக இருக்கவில்லை. அது காணக்கூடியதல்ல, அது தொட்டறியக் கூடியதல்ல. அது இருக்கிறது, ஆனால், அதை நீங்கள் தொட முடியாது. ஒவ்வொரு நடப்புக்கு அப்பாலும், அடியிலும்

அது இருக்கிறது. ஆனால் அது பெருமளவில் அடிப்படையான ஒன்றாகவே இருக்கிறது. நீங்கள் அதைக் கடந்து செல்ல முடியாது.

உயிர் வாழ்தலின் அடிப்படையாய் பிராணன் இருக்கிறது. பாறைகள், மரங்கள், பறவைகள், மனிதன், கடவுள் என்று ஒவ்வொன்றும் பிராணனின் வெளிப்பாடாகவே இருக்கின்றன. அவை வெவ்வேறு நிலைகளை, வெவ்வேறு புரிதல்களை, முழுமையாக ஒன்று சேரும் வெவ்வேறு பகுதிகளைக் கொண்டவை. ஒரே பிராணன்தான் இலட்சக்கணக்கானவற்றில் வெளிப்படுகின்றன. ஒன்றே பலவாய் வெளிப்படுத்திக் கொண்டாலும் அடிப்படையாய் இருப்பது என்னவோ ஒன்றுதான்.

உங்களுக்குள் இருக்கும் பிராணனை நீங்கள் அறிந்து கொண்டு விட்டால் என்றால், கடவுள் எப்படியானவர் என்பதை உங்களால் அறிந்து கொள்ள முடியும். அத்துடன் அதை உங்களுக்குள் நீங்கள் அறியவில்லை என்றால் புறத்தேயும் உங்களால் அறிய முடியாது. காரணம் உங்களுக்குள் அது நெருக்கமாய் இருக்கிறது. அதனால் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் குழுவினருக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே பதஞ்சலி அதனை அறிய முடிந்தது.

விஞ்ஞானம் அதைப் புரிந்துகொள்ள ஐயாயிரம் ஆண்டுகள் ஆயிற்று என்றால் அது ரொம்பவும் நீண்ட காலந்தான். ஆனால், அவர்கள் வெளிப்புறத்தில் இருந்தபடி முயன்று கொண்டிருந்தனர். பதஞ்சலி தனது இருப்புணர்வின் அடியாழத்தில் அதைப் பகுப்பு செய்தார். அது அகவுணர்வு சார்ந்த அனுபவமாயிருந்தது. அறிவியலோ அதை புறநோக்குடன் அறிய முற்பட்டது. நீங்கள் ஒன்றை வெளிப்புறத்தில் இருந்து கொண்டு அறிய விரும்பினால் நீண்ட வழியில் செல்ல வேண்டியிருக்கும். அதனால்தான் அதிக அளவில் தாமதம் ஏற்படுகிறது. நீங்கள் உள்ளே செல்வீர்களாயின் அதை அறிதற்கான குறுக்கு வழியைக் கண்டுகொள்வீர்கள்.

நீங்கள் யாரென்பதை சாதாரணமாக நீங்கள் அறிந்திருக்க மாட்டீர்கள், எங்கிருக்கிறீர்கள் என்பதும் உங்களுக்குத் தெரியாது. இங்கே நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? மக்கள் என்னிடம் வந்து, ‘நாங்கள் இங்கே என்ன செய்து கொண்டிருக் கிறோம், எதற்காக இங்கே இருக்கிறோம்’ என்று கேட்கிறார்கள். அவர்களுடைய குழப்பத்தை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் நீங்கள் எங்கிருந்தாலும், எதைச் செய்து கொண்டிருந்தாலும் பிரச்சினை அப்படியேதான் இருக்கிறது. உங்களுடைய மூலத்தை

(source)யும், உங்கள் இருப்புணர்வின் அடிப்படை அமைப்பையும் நீங்கள் அறிந்து கொள்ளாவிடில் அது அப்படியேதான் இருக்கும். உங்களுடைய பிராணனையும், உங்களுடைய ஆற்றலையும் நீங்கள் அறிந்து கொள்ளாதவரை அது அப்படியேதான் இருக்கும்.

நான் கேட்டறிந்தது:

முல்லா நஸ்ருத்தீன் ஒரு வயலுக்குச் சென்று தன்னுடைய கோணிப்பை நிறைய முலாம் பழங்களால் நிரப்பிக் கொண்டார். அவர் அங்கிருந்து கிளம்பும் போது வயலுக்குச் சொந்தக்காரன் அங்கே வந்து விட்டான்.

'நான் இப்படிப் பக்கமாய் போய்க் கொண்டிருந்தேனா, ஒரு புயற்காற்று அடித்து என்னை வேலிக்கு மேலாக தூக்கியெறிந்து, உன்னுடைய வயலில் போட்டுவிட்டது' என்று முல்லா விளக்கத் தொடங்கினார்.

'சரி, முலாம் பழங்களுக்கு என்ன ஆச்சு?'

'ஐயா, காற்று கனவேகமாய் அடிக்கவும், நான் எதையாவது பற்றிக்கொள்ள வேண்டியிருந்தது. நான் முலாம் பழங்களைப் பற்றிக்கொள்ளவும் அவை கையோடு வந்து விட்டன.

'ஆனால் அவை உம்முடைய கோணிப்பைக்கு எப்படி வந்தது?'

முல்லா பதிலளித்தார், உண்மையைச் சொல்வதாயின் எனக்கும் அது ஆச்சரியமாத்தான் இருக்கு' என்று.

இதுதான் நிலை. நீங்கள் எப்படி இங்கே இருக்கிறீர்கள்? நீங்கள் இங்கே எதற்காக இருக்கிறீர்கள்? உங்களை இந்தப் பையினுள் வைத்தது யார்? எல்லோரும் ஆச்சரியப்படுகின்றனர்.

உங்களை ஆச்சரியப்படுத்துகிற, வியப்புண்டாக்குகிற ஒன்றில் இருந்து வெளிப்படுகிறது தத்துவம். ஆனால் தொடர்ந்து ஆச்சரியப்பட்டுக் கொண்டே இருக்காதீர்கள். இல்லையேல், ஆச்சரியப்படுதல் ஒருவகையில் அலைந்து திரிதலாகி விடும். அந்நிலையில் நீங்கள் சென்றடைவதில்லை. சும்மா ஆச்சரியப்பட்டுக் கொண்டிருப்பதைவிட எதையாவது செய்யப் பாருங்கள். நீங்கள் இங்கிருக்கிறீர்கள், அது உறுதி. உங்கள் இருப்பு குறித்த கவனத்தோடு நீங்கள் இருக்கிறீர்கள்.

யோகாவில் சோதித்தறிவதற்கு இவ்விரண்டு கூறுகளே போதுமானவை. நீங்கள் இருக்கிறீர்கள், இருப்புணர்வு இருக்கிறது.

நீங்கள் இருக்கிறீர்கள் என்பதை நீங்கள் உணர்ந்திருக்கிறீர்கள். அதில் உணர்வு இருக்கிறது. யோகாவில் சோதித்தறிய உங்கள் இருப்புணர்வில் இருந்து ஓர் ஆய்வுக்கூடத்தை உருவாக்க இவ்விரண்டுமே போதுமானவை. யோகா செயல்பட கல்வியால் பெறப் பெற்ற அறிவோ, சிக்கலான விஷயங்களோ தேவையில்லை. அது எளிமையானது.

இரண்டு விஷயங்கள்: நீங்களும், நீங்கள் இருக்கிறீர்கள் என்கிற விழிப்புணர்வும். இவை போதும். இவை உங்களிடம் இருக்கின்றன, எல்லோரிடமும் இருக்கின்றன. இந்த இரண்டும் இல்லாதவர் எவருமில்லை. நீங்கள் இருக்கிறீர்கள் என்பது பற்றிய உணர்வு உங்களுக்குள் இருக்கிறது. உண்மையிலேயே அந்த உணர்வை நீங்கள் உணர்ந்திருக்கிறீர்கள். இவ்விரண்டுமே போதுமானவை. அதனால்தான் யோகிகள் ஆய்வுக்கூடங்களை வைத்துக்கொள்ள வில்லை. உலகியலுக்குத் தக்கவாறான கருவிகளை - முறை யாவணங்களை வைத்துக் கொள்ளவில்லை.

ராக்பெல்லர் அல்லது ஃபோர்டு போன்றவர்களிடம் இருந்து மானியம் எதையும் பெறவில்லை. அவர்களுக்குக் கொஞ்சம் உணவும், தண்ணீருமே தேவைப்பட்டது. அவர்கள் ஊருக்குள் வந்து அவற்றை யாசித்துப் பெற்றுக் கொள்வார்கள், சில நாட்களுக்குக் காணாமல் போய்விடுவார்கள். ஓரிரு வாரங்களுக்குப் பிறகு மறுபடியும் வந்து, மறுபடியும் யாசிப்பார்கள். மறுபடியும் மறைந்து விடுவார்கள்.

அவர்கள் செய்தது மிகச்சிறந்த சோதனை. மனிதனின் மெய்ம்மை (reality) குறித்த பரிசோதனை அது. இரண்டு சிறிய பொருள்களை வைத்துக்கொண்டு... ஆனால் அந்தச் சிறியவை எல்லாம் சிறியவை அல்ல. அவற்றை நீங்கள் தெரிந்து கொண்டதும் அவையே மிகப்பெரிய தோற்ற நிலைகள் ஆகிவிடும் எப்போதைக்குமாய்.

ஆக, இன்றைய சூத்திரங்களில் முதலாவது பிராணனைக் கண்டறிவதாகும். அதுவே யோகா என்கிற ஆலயத்துக்கு அடித்தளம். நீங்கள் மூச்சு விடுகிறீர்கள். யோகா சொல்கிறது நீங்கள் உள்ளிழுப்பது காற்றை மட்டுமல்ல, உயிர்ச் சக்தியையுந்தான் என்று. உண்மையில் காற்று பிராணனுக்கான சாதனம், ஊடகம் எனலாம். நீங்கள் மூச்சு விடுவதால் உயிரோடு இருக்கவில்லை. மூச்சு ஒரு குதிரையைப் போன்றது. அதன் மீது சவாரி செய்பவரை நீங்கள் இன்னமும் பார்க்கவில்லை. அதன்மீது சவாரி செய்வது பிராணனேயாகும்.

தற்போது உளப்பகுப்பாய்வாளர்கள் பலரும் இந்தப் புதிரான விஷயத்தை எதிர்கொண்டிருக்கிறார்கள். அந்தச் சவாரிக்காரன் மூச்சுக் காற்றிலேறி வந்து கொண்டும் போய்க்கொண்டும் இருக்கிறான், உள்ளேயும் வெளியேயுமாய். ஆனால் மேற்கத்திய உலகில் அது இன்னமும் ஓர் அறிவியல் சார்ந்த உண்மையாய் அடையாளம் காணப்படவில்லை. அதன் தகுதி ஒப்புக்கொள்ளப்பட்டிருக்க வேண்டும். காரணம், சடப்பொருள் (matter) என்பது இல்லை.

ஒவ்வொன்றும் ஆற்றலாகவே இருக்கிறது என்று அறிவியல் கூறுகிறது. பாறை, கல், நீங்கள் என்று எல்லாமும் ஆற்றலின் வடிவந்தான். உங்களுக்குள் ஆற்றலுடன் கூடிய பல ஆட்டங்கள் நடக்கின்றன.

ஃப்ராய்டு இந்தச் சங்கதியில் தடுக்குறுகிறார். அவர் தடுக்குறுகிறார் (stumble) என்று நான் சொல்வதற்குக் காரணம் அவருடைய கண்கள் திறந்திருக்கவில்லை. அவை இறுக்கமாய் மூடப்பட்டிருக்கின்றன. அவர் ஒரு யோகியல்ல. எல்லாவற்றையும் புறநோக்குடன் ஆராயும் அறிவியல் மனோபாவத்தில் சிக்கியிருந்தவர் அவர். அதனை 'புலனுணர்வு நிறைவடைதல்' (libido) என்பார் அவர். யோகிகளிடம் கேட்டால் அது பாலுணர்வின் இன்புறுதல் ஆகாது, பிராணனைப் பிடிக்கிற பிணி என்பார்கள். பிராணன் ஆற்றலுடன் இல்லாதபோது, பிராண சக்தி தடைப்பட்டு விடும் ஃப்ராய்டு அதைத்தான் அறிந்து கொண்டிருந்திருப்பார். அவர் நோயுற்றவர்களிடமும், மன உபாதைக்குள்ளானவர்களிடமும் ஆராய்ச்சி மேற்கொண்டிருந்தார். அவர்களுடைய உடம்பில் ஆற்றல் தடைபட்டிருந்ததும், அந்த ஆற்றல் விடுவிக்கப்படாவிடில் அவர்களால் மறுபடியும் ஆரோக்கியமாய் இருக்க முடியாது என்பதும் அவருக்குத் தெரிய வந்தது. யோகிகள் சொல்வார்கள் அது பாலுணர்ச்சியின் உந்துதல் அல்ல, தவறாகிப் போன பிராண சக்தி என்று. அது பிணியுற்ற பிராணன். ஆனால் ஃப்ராய்டு பின்பொரு சமயம் சிறப்படையக்கூடிய ஏதோ ஒன்றின்மீது தடுக்குறும்படியாயிற்று.

அவருடைய சீடர்களில் ஒருவரான வில்ஹெம் ரெய்ச் என்பவர் இன்னும் அதன் அடியாழத்துக்குச் சென்றார். ஆனால் அவரால் அறிவியல்பூர்வமாய் எதையும் நிரூபிக்க முடியவில்லை. அவருடைய ஆய்வு புறத்திலேயே இருந்தது என்று அமெரிக்க அரசு அவரைப் பிடித்து வைத்தது. அவர் பைத்தியக்காரர் என்று சான்றிதழ் அளிக்கப்பட்டு, பைத்தியக்காரராகவே சிறையில் செத்துப் போனார்.

மேலை நாடுகளில் எக்காலத்துக்கும் உரியவராய் கருதப்பட்ட சிறந்த மனிதர்களுள் அவரும் ஒருவர். ஆனால், கண்ணை மூடிக்கொண்டு தான் அவரும் செயல்பட்டிருக்கிறார்.

யோகிகள் பிராணன் என்று சொல்கிற சக்தியுடன் தொடர்பு கொள்ளவே ரெய்ச்சும் முயன்றிருக்கிறார். அதனை 'ஆர்கோன்' (orgone) என்று அழைத்தார் அவர். ஆர்கோன் என்கிற வார்த்தை 'லிபிடோ' (Libido)வைவிட பரவாயில்லை. எல்லாமே பால்சார்ந்த சக்தி என்கிற உணர்வைக் கொடுக்கிறது. ஃப்ராய்டின் 'லிபிடோ' என்கிற வார்த்தை. 'ஆர்கோன்' ஒரு சிறந்த வார்த்தையாய், கூடுதலாய் பலவற்றை உட்கொண்டிருப்பதாய், எளிதில் புரிந்து கொள்ளக் கூடியதாய் இருக்கிறது.

பாலுணர்வுக்கு அப்பால் செல்கிற சாத்தியத்தை அது கொண்டிருக்கிறது. பால் சார்ந்ததல்லாத உயர் எல்லைகளையும் அது தொடுகிறது. ஆனால், ஆர்கோனை - பிராண சக்தியைப் பெட்டிகளில் அடைக்க முடியும் என்று அவர் கூறிக் கொண்டிருந்ததுதான் அளவு மீறியது. அவர் அப்படிக் கூறியதோடு நிற்கவில்லை. ஆர்கோன் பெட்டிகளையும் தயார் செய்தார். அதில் தவறேதுமில்லை. யோகிகள் பல நூறு ஆண்டுகளாய் அந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள். அதனால்தான், யோகிகள் சிறிய நுழைவாயிலுடன் கூடிய பெட்டி போன்ற குகைகளில் வசித்தார்களோ என்னவோ.

தற்போது அந்தக் குகைகள் பார்ப்பதற்கு சுகாதாரமற்றவையாய் தெரிகின்றன. அவர்கள் எப்படி அங்கே ஆண்டுக்கணக்கில் வசித்திருப்பார்கள்? காற்று புகவே வழியில்லை. அத்தனை இருட்டான எந்த வசதியும் இல்லாத இடத்தில் அவர்கள் நிறைவாக, ஆரோக்கியத்துடன் வசித்திருக்கிறார்கள் என்றால் அதுவே அற்புதந்தான். அங்கே அவர்கள் என்ன செய்து கொண்டிருந்தார்கள். அவர்களால் அங்கே எப்படி வாழ முடிந்தது.

நவீன விஞ்ஞானக் கருத்தியலின்படி அவர்கள் செத்துப் போயிருக்க வேண்டும் அல்லது நோயுற்றவர்களாகவே மனச் சோர்வுடன் வாழ்ந்திருக்க வேண்டும். ஆனால் யோகிகள் சோர்வடைந்திருக்கவில்லை. அவர்கள் ஆற்றல் மிக்கவர்களாய், உயிர்த்துடிப்போடு வாழ்ந்திருக்கிறார்கள். அவர்கள் என்ன செய்து கொண்டிருந்தனர்? என்ன நடந்திருந்தது? அவர்கள் ஆர்கோனை - பிராண சக்தியை தோற்றுவித்துக் கொண்டிருந்தார்கள். ஆர்கோன் ஒரு சவாரி செய்கிறவர். அது மூச்சுக்காற்றில் குதியாட்டம் போடுகிறது.

அதற்குச் செல்வழி தேவைப்படாது. ஆர்கோன் சக்தி அடுக்குகளின் மீது அடுக்குகளாய் (layers) குவிகின்றன. ஒருவர் அதைக்கொண்டு ஊக்க வளர்ச்சி பெறவும், உயிர் வாழவும் முடியும்.

வில்ஹெம் ரெய்ச் சிறிய ஆர்கோன் பெட்டிகளைத் தயார் செய்தார், பல நோயாளிகளுக்கு அதைக்கொண்டு உதவியிருக்கிறார். அவர் ஆர்கோன் பெட்டியில் நோயாளியைப் படுத்துக் கொள்ளும்படிக் கூறுவார். பெட்டியை மூடி, நோயாளியை ஓய்வெடுக்கும்படிக் கூறுவார். ஒரு மணி நேரம் கழித்து, நோயாளியை வெளியில் கொண்டு வருவார். நோயாளி ரொம்ப வலிமையாகவும், உயிரோட்டத்துடனும் இருப்பதாய் உணர்வார். தங்களுடைய நோய்கள் மறைந்து விட்டதாக ரொம்பப் பேர் தெரிவித்தனர்.

நாட்டின் சட்டதிட்டங்களை அறியாமல், அவற்றைப் பற்றிக் கவலைப்படாமல் ரெய்ச் ஆர்கோன் பெட்டிகளைத் தயார் செய்திருந்தார். மக்கள் கூட்டத்தைக் கணக்கில் கொண்டே, விற்பனைக்காக அந்தப் பெட்டிகளை அவர் தயார் செய்தார். அப்போதுதான் உணவு மற்றும் மருந்து நிர்வாக அமைப்பு அவரைக் கைது செய்தது. அவரை நிரூபித்துக் காட்டும்படி கேட்டது. தொட்டுணர முடியாத சக்தியை எப்படி நிரூபிப்பது? நீங்கள் எவருக்கும் அதைக் காண்பிக்க முடியாது. அது ஓர் அனுபவம், உள்ளார்ந்த அனுபவம்.

மின்னணுத்துகள்களை (electron)க் காட்டும்படி நீங்கள் ஆல்பாட் ஐன்ஸ்டீனிடம் கேட்பதற்கில்லை. ஆனால், அவரிடம் உங்களுக்கு நம்பிக்கை ஏற்படுகிறது. காரணம், நாகசாகியிலும், ஹிரோஷிமாவிலும் என்பதை உங்களால் புரிந்துகொள்ள முடிகிறது. வினைமுதலை (cause) உங்களால் காண முடியாது. ஆனால் விளைவை (effect) நீங்கள் காண முடியும். அணுவை யாரும் பார்த்ததில்லை. ஆனால் அணு இருக்கிறது. காரணம், அது விளைவுகளை ஏற்படுத்தக்கூடியது.

உண்மை-விளைவுகள் கொண்டது என்பதை புத்தர் விளக்கியிருக்கிறார். புத்தருடைய விளக்கம் நேர்த்தியானது. அதற்கு முன்போ அதற்குப் பின்போ ஒருபோதும் அப்படி அருமையான விளக்கம் சொல்லப்பட்டிருக்கவில்லை.

எவரும் அணுவைப் பார்த்திராவிட்டாலும், நாகசாகி, ஹிரோஷிமா இவற்றின் காரணமாய் நாம் அணுவை நம்புகிறோம். ஆனால் யாரும் வில்ஹெம் ரெய்ச்சின் வார்த்தைகளையோ, அவருடைய நோயாளிகள் சொன்னதையே காதில் போட்டுக் கொள்வதாயில்லை. 'நாங்கள்

குணமடைந்து விட்டோம்' என்று சான்றளிக்கப் பலரும் தயாராயிருந்தனர். ஆனால் இது எப்படி இருக்கிறது என்றால் பொதுப்படையாய் ஏற்கப்பட்டுவிட்ட ஒரு மனோபாவம் - மக்களின் கண்களைக் குருடாக்கி விடுவதுபோல. இப்படித்தான் அரசு கருதியது. நிர்வாகத்தினர் சொன்னார்கள், 'இவர்கள் எல்லாருமே வசியம் செய்யப்பட்டவர்கள். முதலாவது - இவர்கள் நோய்வாய்ப்பட்டிருக்க மாட்டார்கள். அல்லது, தாங்கள் குணப்படுத்தப்பட்டதாய் இவர்கள் கற்பனை செய்து கொண்டிருக்க வேண்டும். அல்லது கருத்துத் தூண்டுதல் உண்டாகும்படி கூறப்பட்டதன்றி வேறில்லை' என்று.

ஹிரோஷிமாவில் செத்துப் போனவர்களிடம் தற்போது நீங்கள் சென்று, 'நீங்களெல்லாம் செத்துவிட்டதாய் கற்பனை செய்து கொண்டிருக்கிறீர்கள்' என்று சொல்ல முடியாது.

விஷயத்தைக் கவனியுங்கள்: மரணம் வாழ்க்கையைவிட நம்பக்கூடியதாய் இருக்கிறது.

நவீன உலகம் வாழ்க்கைக்குத் தகவாயிருப்பதைவிட மரணத்துக்குத் தகவாகவே (death oriented) இருக்கிறது. நீங்கள் ஒருவரைக் கொன்று போட்டால் எல்லாப் பத்திரிகைகளும் உங்களைப் பற்றி தலைப்புச் செய்தி போடும். ஆனால் நீங்கள் ஒருவருக்குப் புத்துயிர் ஊட்டினால் யாரும் அதைப்பற்றித் தெரிந்து கொண்டிருக்க மாட்டார்கள்.

நீங்கள் கொலை செய்தால் உங்களுடைய பெயர் பிரபலமாகி விடுகிறது. ஆனால் யாருக்கேனும் வாழ்வு கொடுத்தால் அதை யாரும் நம்ப மாட்டேன் என்கிறார்கள். அவர்கள் உங்களை அதிகம் தெரிந்தது போல நடிப்பவன் அல்லது ஏமாற்றுக்காரன் என்றுதான் சொல்வார்கள்.

எப்போதுமே அப்படித்தான் இருந்திருக்கிறது. இயேசுவை யாரும் நம்பவில்லை, அவரைக் கொன்று போட்டார்கள். சாக்ரட்டீஸை யாரும் நம்பவில்லை, கொன்று தீர்த்தார்கள். ஈசாப் மாதிரி (புகழ்பெற்ற கதைசொல்லி) அப்பாவிகளைக் கூட அவர்கள் கொல்லவே செய்தார்கள். அந்த ஆள் ஒன்றுமே செய்யவில்லை. ஒரு மதத்தையோ, தத்துவக் கோட்பாட்டையோ அவர் தோற்றுவிக்கவில்லை. யாருக்கெதிராகவும் அவர் எதையும் சொன்னதில்லை. சில அருமையான நீதிக்கதைகளைத்தான் படைத்தார். ஆனால், அந்தக் கதைகளில் சொல்லப்பட்ட உண்மைகள் தங்களுடைய உள்ளத்தைப் புண்படுத்தியதாகக் குற்றம் சாட்டிய சிலர், அவரைக் கொன்று விட்டார்கள்.

வலியுறுத்திக் கூறவும், வாழ்க்கையை மேம்படுத்தவும் வந்தவர்களை நீங்கள் கொன்று போட்டீர்கள். உங்களுக்கு நிரூபணம் வேண்டியிருந்தது.

என்னிடம் யாரேனும் வந்து, நான் என்ன செய்கிறேன் என்று கேட்டால் அது சங்கடமாகி விடும். நீங்கள் சான்றளித்தால், உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதாய் அவர்கள் சொல்வார்கள். எனக்கெதிராக யாரேனும் இருந்து ஏதேனும் சொன்னால் அவர்கள் அவரை நம்புவார்கள், எனக்காக யாராவது பேசினால் அவரை அவர்கள் நம்ப மாட்டார்கள். எதிராக இருப்பவர் எத்தனை முட்டாளாக இருந்தாலும் அவருடன் அவர்கள் வாதிட மாட்டார்கள். என் சார்பாகப் பேசுகிறவர் எவ்வளவு அறிவுடையவராயிருந்தாலும் அவர்கள் நகைக்கவே செய்வார்கள். 'எனக்குத் தெரியும்யா, உன்னை வசியம் செய்திருக்கிறார்கள்' என்று வேண்டுமென்றே சொல்வார்கள். டாக்டர் பட்னீஸ் பற்றி கேளுங்கள். அவர் வசியம் செய்யப்பட்டவர் என்றுதான் மக்கள் சொல்வார்கள்.

இது ஒழுக்கமற்ற முறையில் வாதம் பண்ணுகிற ஒரு கூட்டம். நான் உங்களுக்கு நம்பிக்கையூட்டினால் அது வசியம். உங்களுக்கு நம்பிக்கையூட்ட முடியாது போனால் நான் ஒரு தவறான ஆள். ஆக, எந்த வழியிலும் நான் தவறிழைப்பவன்.

இது நடந்தது. இங்கிருக்கிற ஸ்வாபவ், சில ஆண்டுகளுக்கு முன்னால், தனது சகோதரர்கள் இருவருடன் இங்கே வந்தான். அவர்கள் மூவரும் என்னுடன் வாதம் பண்ணிக் கொண்டிருப்பார்கள். அவர்களுள் ஸ்வாபவ் தான் ரொம்பவும் வாதம் பண்ணுகிறவன், ஆனால், அவன் பாசாங்கற்றவன், எளிமையானவனும் கூட. அவன் கொஞ்சம் கொஞ்சமாய் நம்பிக்கையூட்டப் பெற்றான். இரண்டு சகோதரர்களுக்கும் அவன் தலைவனைப் போல் இருந்தான். ஆனால் அவன் நம்பிக்கையுற்ற பின் அவர்கள் அவனுக்கு எதிராகி விட்டார்கள். அவன் வசியம் செய்யப்பட்டதாய் அவர்கள் சொன்னார்கள். அவர்கள் இங்கே வருவதை நிறுத்திக்கொண்டு விட்டார்கள்.

என்னுடைய வார்த்தைகளில் கவனம் செலுத்துவதில்லை. அவர்களுக்கு அச்சம் உண்டானது. ஸ்வாபவ்வை வசியம் செய்ய முடிகிறபோது, அவர்களையும் வசியம் செய்துவிட முடியுந்தானே. அவர்கள் வருவதை நிறுத்திக் கொண்டார்கள், தங்களைச் சுற்றி ஒரு தற்பாதுகாப்பு இயக்க நுட்பத்தை உருவாக்கிக் கொண்டார்கள். நான்

இன்னொரு சகோதரனுக்கும் நம்பிக்கையூட்டி விட்டால், எஞ்சியிருப்பவன் தன்னை ரொம்பவே தற்காத்துக் கொள்கிறவனாகி விடுவான். 'ரெண்டு சகோதரனுக போயாச்சு' என்று அவன் சொல்லிக் கொள்வான். எஞ்சியிருக்கிற அவனும் நல்லிதயம் கொண்டவன், அவனும் வசியப்பட்டுவிட சாத்தியம் இருக்கிறது. பிறகு அந்தக் குடும்பம் நினைத்துக் கொள்ளும், மூன்று பேர்களுக்கும் பைத்தியம் பிடித்துவிட்டது என்று.

இப்படித்தான் ஆகிவிடுகிறது. உங்களால் நம்பிக்கையூட்ட முடியாவிட்டால் நீங்கள் தவறான ஆள். நீங்கள் நம்பிக்கையூட்டக் கூடியவராயிருந்து விட்டால் அப்போதும் தவறானவராகி விடுவீர்கள்.

அறிவுத்திறன் மிக்கவர்கள், பி.எச்.டி.க்கள், பேராசிரியர்கள், உளப்பகுப்பாய்வு செய்பவர்கள் என்று பலரும் சான்றளித்திருந்தார்கள். ஆனால் நீதிமன்றம் அதையெல்லாம் காதில் போட்டுக்கொள்ள வில்லை. அவர்களெல்லாம் ஒரே சதியாலோசனைக் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் என்று அது சொல்லிவிட்டது. 'ஆர்கோன் (Orgone) சக்தி எங்கிருக்கிறது என்பதை எங்களுக்குக் காட்டுங்கள். பெட்டியைத் திறந்து, அது எங்கேயிருக்கிறது என்று எங்களுக்குக் காண்பியுங்கள். அது சாதாரண பெட்டி. அதில் ஒன்றுமேயில்லை. அதை விற்கிற நீங்கள் மோசடிக்காரர்கள். இது ஏமாற்று வேலை' என்று நிர்வாகத்தில் உள்ளவர்கள் சொல்லி விட்டார்கள்.

வில்ஹெம் ரெய்ச் சிறையிலேயே செத்துப் போனார். வரலாற்றில் இருந்து மனிதகுலம் எதையும் கற்றுக்கொள்ளவில்லை என்றே தோன்றுகிறது. திரும்பத்திரும்ப அப்படித்தான் ஆகிறது.

நீங்கள் ரொம்பவே அன்புக்கு எதிராய் இருக்கிறீர்களே; காரணம், அன்பின் சக்தி ஆர்கோன் சக்தி என்பதற்காகவா? நீங்கள் மிகுதியான அளவில் வாழ்க்கைக்கு எதிராகவும், மரணத்துக்கு சார்பாகவும் இருப்பது ஏன்? உங்களுக்குள் எதுவும் இதழ் விரிக்கவில்லை. வாழ்க்கை உன்னதமான பல சாத்தியங்கள் கொண்டிருப்பதை நம்ப முடியாதபடிக்கு நீங்கள் உணரும் தன்மையற்றவராய் இருக்கிறீர்கள். உயரமான மலைச்சிகரமொன்றை ஒருவர் தொட்டு விட்டார் என்பதை உங்களால் நம்ப முடிவதில்லை. 'அது சாத்தியமற்றது' என்று மறுக்கத் தொடங்குகிறீர்கள். அது என்னவோ ஒரு குற்றம் போல் தெரிகிறது உங்களுக்கு.

'நான் கடவுள்' என்று சொல்லிக் கொண்டால் அது ஒரு குற்றமாகி விடுகிறது. 'நீங்களும் கடவுளாகிவிட முடியும், அதற்குக் குறைவான

எதிலும் அமைவுற்று விடாதீர்கள்' என்று நான் சொல்லிக் கொண்டிருக்கிறேன். ஆனால், நீங்களோ புண்படுத்தப்பட்டதாய் உணர்கிறீர்கள். உங்களுடைய நிகழ்த்தும் தன்மைகளில் (possibilities) இரண்டு சதவீதத்தை மட்டுமே பயன்படுத்தி, நீங்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். எஞ்சிய தொண்ணூற்றியெட்டு சதவீத சாத்தியங்களும் வீணடிக்கப்பட்டு விடுகிறது இல்லையா. நீங்கள் உயிரோடிருக்க நூறு நாட்கள் வழங்கப்பட்டு, அதில் இரண்டு நாட்கள் மட்டுமே வாழ்ந்து மடிவது போலத்தான் இதுவும். உங்களுடைய சிந்தனையாளர்களும், ஓவியர்களும், இசைக்கலைஞர்களும், மேதைகளும் தங்களுடைய சாத்தியங்களில் பதினைந்து சதவீதத்தை மட்டுமே பயன்படுத்துகிறார்கள்.

உங்களுடைய அதியுச்ச அளவில் நீங்கள் சுடர்விட்டுப் பிரகாசித்தால், நீங்கள் கடவுளாகி விடுவீர்கள்.

ஒரு கதை மூலம் அதனை விளக்குகிறேன்:

ரொம்பவும் மனச்சோர்வாய் தெரிந்த லெவி ஐஸக்கிடம் கோஹன் கேட்டான், 'என்ன விஷயம்?' என்று.

'என்னுடைய வியாபாரத்தில் இழப்பு. நான் கடனாளியாகி விட்டேன்' என்றான் ஐஸக்.

'ஓ, அப்படியா. உன் பெண்டாட்டி பேர்ல இருந்த சொத்து என்ன ஆச்சு?' கோஹன் கேட்டான்.

'பெண்டாட்டி பேர்ல சொத்து எதுவும் இல்லை.'

'சரி, குழந்தைங்க பேர்ல சொத்து இருக்கா?'

'குழந்தைங்க பேர்லயும் சொத்து கிடையாது.'

கோஹன் லெவியினுடைய தோளில் கை போட்டுக்கொண்டு சொன்னான், 'லெவி, நீ தவறா புரிஞ்சிட்டிருக்கே. நீ கடன் தீர்க்க முடியாதவனல்ல. ஒரேயடியா அழிஞ்சு போனவன்' என்று.

நீங்கள் இந்த நிலையில்தான் இருக்கிறீர்கள். கடன் தீர்க்க முடியாதவராக மட்டுமல்ல, முற்றிலும் அழிந்து விட்டவராக. நீங்கள் உயிரோட்டத்துடன், உங்களுடைய ஆற்றலைப் புதுப்பித்துக் கொள்ளா விட்டால் அழிந்து பட்டவர்தான். நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என்ற தவறான கருத்துடன் இருந்து கொண்டிருப்பீர்கள். உங்களைச் சுற்றியிருக்கிற மக்கள் கூட்டமும் உங்களைத் தாங்கிக் கொண்டிருக்கும். காரணம் அவர்களும்

உங்களைப் போலவே கிட்டத்தட்ட மரித்து விட்டவர்கள்தாம். ஆக இதுதான் விதி (rule) என்று நீங்கள் எண்ணிக் கொள்கிறீர்கள். இதுவல்ல விதி.

இதனை - இந்தச் சூத்திரத்தை நீங்கள் விளங்கிக் கொள்கிற போதுதான் மதம் தொடர்பான முயற்சி தொடங்குகிறது. அதுவன்றி நீங்கள் வேறு எதைச் செய்தாலும் அது பயனற்றதுதான். ஒரு சிறந்த வாய்ப்பை நீங்கள் வீணடிக்கிறீர்கள். கடவுளை உங்களுக்குள் உணரத் தொடங்காமல் வேறு எதிலும் அமைவுற்று விடாதீர்கள்.

ஒரு ராத்தங்கலுக்காக நீங்கள் நின்று விட்டிருந்தால் அது ரொம்ப சரி. ஆனால், காலையில் நடையைக் கட்டப் பாருங்கள். உங்களுடைய மனநிறைவே உங்கள் தெய்வ நிலை என்கிற கோட்பாட்டை, அடிப்படையை மறந்து விடாதீர்கள். -

உங்களுடைய பிராணன் மலர்ச்சியடைகிறபோது நீங்கள் கடவுளாகி விடுகிறீர்கள். தற்போது உங்களுடைய பிராணன் மண்மீது ஊர்ந்து கொண்டிருக்கிறது. அது நடக்கவோ, நிற்கவோகூட செய்யவில்லை.

ஒரு பெரிய வீட்டின் கதவை பிச்சைக்காரனொருவன் தட்டினான். அந்த வீட்டம்மாள் கதவைத் திறந்து கொண்டு வந்தாள். அந்த மனிதன் தன்னுடைய ஒட்டுமொத்த உடம்பும் நிலத்தில் தோய - சாஷ்டாங்கமாய் விழுந்து வணங்கினான். அவளுடைய பாதங்களில் ஊர்ந்தான். ரொம்பவும் பலசாலியான அந்த இளைஞன் முழு ஆரோக்கியத்துடன் இருந்தான். அந்தப் பெண்மணி கேட்டாள், ‘நீ என்ன பண்றே? எதற்காக மக்கள் காலில் விழுந்து உன்னோட சக்தியை வீணடிக்கணும்?’ என்று. ‘எதுக்காக பிச்சை எடுக்கறதும், காலில் விழறதும். நீ ஏன் வேலை செய்யக்கூடாது?’ என்று சீறினாள்.

அந்த மனிதன் நிமிர்ந்து நோக்கிவிட்டு சொன்னான், ‘அம்மணி, நான் ரொம்பவும் விஞ்ஞானப்பூர்வமானவன். எல்லாவற்றையும் நான் அகரவரிசைப்படி செய்கிறவன்’ என்று.

பெண்மணி கேட்டாள், ‘நீ என்ன சொல்றே? அகர வரிசைப்படியா?’

அவன் சொன்னான். அ - கேட்பது. ஆ - யாசிப்பது. இ - காலில் விழுவது. வேலை ரொம்ப தூரம்...’

அகரவரிசைப்படி! ரொம்பவே அகர வரிசைப்படி செய்பவராகி விடாதீர்கள்.

உங்களுடைய பிராண சக்தியை நீங்கள் பால்சார்ந்த நோக்கங் களுக்கு மட்டுமே செலவு செய்து கொண்டிருந்தால் நீங்கள் ஊர்ந்து கொண்டிருக்க வேண்டியதுதான். அந்த சக்தி சஹஸ்ர தளத்துக்குச் செல்லாதவரை, பிராணன் உங்களுடைய உச்சந்தலையைச் சென்றடையாத வரை உங்களால் வானவெளியில் பறக்க முடியாது. நீங்கள் சிறைபட்டவராகவும், துயருற்றவராகவுமே இருப்பீர்கள். நீங்கள் பறக்கிற போதுதான் மகிழ்ச்சியடைய முடியும். எல்லையற்ற, அகன்ற வானில் இருக்கிறது மகிழ்ச்சி. உங்கள் இருப்புணர்வின் படிப்படியான (இசை) ஒலியேற்றத்தையும், உச்ச நிலையையும் தெரிந்துகொண்டு, மிக உயர்ந்த சிகரத்தை நீங்கள் தொடுகிறபோதுதான் மகிழ்ச்சி கிட்டும்.

*'அடிமைத்தளைக்கான முடிச்சை தளர்த்திக் கொள்வதும், விடுபடும் நுட்பத்தை அறிந்திருப்பதும் மனமானது இன்னொரு தேகத்தில் பிரவேசிக்க இடமளிக்கும்'*

பந்தப்படுவதற்கு என்ன காரணம்? அடையாளப்படுத்திக் கொள்வதுதான். நீங்கள் உடம்போடு உங்களை அடையாளப்படுத்திக் கொண்டால் உங்களால் அதற்கும் அப்பால் செல்ல முடியாது. உங்களுடைய அடையாளப்படுத்துதல் (identification) எங்கிருந்தாலும் அதுவே உங்கள் சிறைவாசம் ஆகும். 'நான் இந்த உடம்பல்ல' என்பதை அறிந்திருக்கும் போது செய்யக்கூடிய காரியங்களை, உடம்புடன் அடையாளப்படுத்திக் கொண்டு செய்ய முடியாது. சிந்தனை அதற்கு இடமளிக்காது. நீங்கள் 'மனமே நான்' என்று எண்ணிக்கொண்டு விட்டால், 'மனம்' என்கிற வார்த்தையைக் கடந்து உங்களால் செல்ல முடியாது.

குறிப்பிட்டவொரு மொழியை நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். உங்களுடைய அனுபவங்களை அந்த மொழியின் வாயிலாகவே விளக்கிக் கூறுவீர்கள். தன் உடம்புக்கு அப்பால் தன்னை அடையாளப்படுத்திக கொள்ள முடிந்த ஒருவரின் அனுபவங்களை உங்களுடைய சொந்த அனுபவங்களுக்கு அதன் தன்மையைத் தாழ்த்திக்கொண்டு விடுவீர்கள். நீங்கள் ஒரு புத்தரை எதிர்கொள்கிற போது அவருடைய புத்தப் பிராயத்தை நீங்கள் பார்க்க மாட்டீர்கள். அவருடைய உடம்பை மட்டுமே பார்ப்பீர்கள். காரணம், உங்கள் அளவில் வைத்துதான் உங்களால் எதையும் புரிந்துகொள்ள முடிகிறது. அதற்குமேல் உங்களால் புரிந்துகொள்ள முடிவதில்லை. நீங்களே உங்களுக்குக் கட்டுப்பாடு, உங்களை ஓர் எல்லைக்குட்படுத்திக் கொண்டு விடுகிறீர்கள்.

கீழானவற்றுடன் உங்களை அடையாளப்படுத்திக் கொள்ளக் கூடாது என்பதை நினைவில் வையுங்கள்.

உண்பதற்காகவே வாழ்பவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் வாழ்வதற்காக உண்பதில்லை, உண்பதற்காகவே வாழ்வது. அவர்கள் தொடர்ந்து எதையாவது திணித்தபடி' இருப்பார்கள். அவர்கள் சோற்றுப் பிண்டமாகி விடுகிறார்கள். வேறேயென்ன. ஒரு குளிர்பதனப் பெட்டியை நிரப்பி வைத்தமாதிரி, அவர்கள் தொடர்ந்து தங்களை நிரப்பிக் கொண்டேயிருக்கிறார்கள். 'அடேய், நீ என்ன செஞ் சிட்டிருக்கே, இதுதானா வாழ்க்கை' என்று அவர்கள் ஒரு கணம்கூட சிந்திப்பதில்லை - அந்நிலையில் வாழ்க்கை செடிகொடிகளு டையதைப் போன்று கிளர்ச்சியற்றதாகத்தானே இருக்கும்.

முல்லா நஸ்ருத்தின் நோய்வாய்ப்பட்டிருந்தார். அவருடைய மனைவி கேட்டாள், 'நான் மருத்துவரை அழைக்கட்டுமா?' என்று.

அவர் சொன்னார், 'வேண்டாம், கால்நடை மருத்துவரை வரச்சொல்.'

அவள் சொன்னாள், 'என்ன அர்த்தத்துல பேசறீங்க? உங்களுக்கென்ன பைத்தியமா. இல்லை, காய்ச்சல் கடுமையாயிருச்சா? எதற்காக கால்நடை மருத்துவர்?' என்று.

அவர் சொன்னார். 'நான் ஒரு தாவரத்தைப் போல் இருக்கேன், ஒரு கோவேறு கழுதை மாதிரி உழைக்கறேன். ஒரு கழுதை மாதிரி என்னை நெனச்சுக்கறேன். ஒரு பசுமாட்டோடு படுத்துத் தூங்கறேன். நீ கால்நடை மருத்துவரைக் கூப்பிடு. நான் மனுசனில்லை. ஒரு கால்நடை மருத்துவராலத்தான் என்னைப் புரிஞ்சிக்க முடியும்' என்று.

கவனியுங்கள், உங்களுடன் நீங்கள் எப்படி செயல்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள் என்பதைக் கருத்தூன்றிக் கவனியுங்கள். செடிகொடிகளைப் போன்று கிளர்ச்சியற்ற வாழ்க்கை வாழ்கிறீர்களா? சாப்பாட்டைத் திணித்தபடி இருக்கிறீர்களா? அல்லது, ஆணையோ பெண்ணையோ துரத்திக்கொண்டு, உடலுறவில் அதிக நாட்டம் கொண்டவரராய் மனம் போன போக்கில் போகிறீர்களா?

மிகவும் இனிமையான பெண்ணொருத்தி என்னிடம் கேட்டாள். 'பகவானே, நான் தனியாகவே இருந்துவிடவா அல்லது ஆண்களைத் துரத்திச் செல்லவா?' என்று. தன்னுடைய முக்கியமான காலப்பகுதியை - துடிப்புமிக்க இளம் பருவத்தை அவள் கடந்து விட்டிருந்தாள். தற்போது பிறவற்றை ஒதுக்கி தனிமையில் இருப்பதே மகிழ்சசி தரும்.

வேட்டையாட நினைப்பது முட்டாள்தனம். எனவே, நான் அவளிடம் சொன்னேன். 'தற்போது அதற்கெல்லாம் அவசியம் இல்லை' என்று. ஆனால், மேலைநாடுகளில் ஒரு பிரச்சினை இருக்கிறது. அங்குள்ள வயதான பெண்களும் தங்களை இளமையாய் காட்டிக்கொள்ள வேண்டியிருக்கிறது. துரத்திச்சென்று வேட்டையாடுவது மட்டுமே அவர்களுக்கு வாழ்க்கையாகி விட்டது. பாலுறவு போனால் வாழ்க்கையே போச்சு அவர்களுக்கு. அதன்பிறகு என்ன வாழ்க்கை வேண்டிக் கிடக்கிறது? அதுதான் அவர்களுடைய ஒட்டுமொத்த கருத்து.

அந்தப் பெண் புரிந்து கொண்டாள். என் அருகில் இருக்கும்போது ஒன்றைப் புரிந்து கொள்வது எளிதாயிருக்கும். ஆனால் நீங்கள் இங்கிருந்து சென்றதுமே அந்தப் பிரச்சினை திரும்பவும் வந்துவிடும். ஏனெனில் அந்தப் புரிதலுக்குக் காரணம் நான். உங்கள் மனதை என்னுடைய பிடியில் நான் வைத்திருந்தேன். கிட்டத்தட்ட அது ஓர் ஆளுகை. அந்த ஒளிக்கீற்றினைக் கொண்டு உங்களால் பலவற்றை எளிதாய் புரிந்துகொள்ள முடிந்தது. அடுத்த நாள் அவள் ஒரு கடிதம் எழுதினாள். 'பகவானே, நீங்கள் சொன்னது சரிதான். நான் வேட்டையில் இறங்க வேண்டியதில்லை. ஆனால், தற்செயலாகக் கிடைக்கிற இன்ப நட்புகளைப் பயன்படுத்திக் கொள்ளலாமா?' என்று. மறுபடியும் அங்கேதான் போகிறீர்கள்.

எழுந்து நில்லுங்கள், ஊர்ந்து செல்ல வேண்டியதில்லை. உபநிடதம் சொல்கிறது. 'எழுந்து நில், உணர்வோடு இரு' என்று. காரணம், உணர்வோடு இருந்தால்தான் எழுந்து நிற்கவும், மேலெழவும், உயரப் பறக்கவும் முடியும்.

பிணைப்பு (அடிமைத்தளைக்குக் காரணம் அடையாளப்படுத்திக் கொள்ளுதல். சூத்திரம் சொல்கிறது. 'அடிமைத்தளையின் (பிணைப்பு) முடிச்சைத் தளர்த்துங்கள்...' உங்களால் சிறிதேனும் தளர்த்த முடிந்தால், உங்களுடைய உடம்பில் இருந்தும் மனதில் இருந்தும் உங்களை முழுதுமாய் நீக்கிக்கொள்ள முடிந்தால், மிகச் சிறந்த ஓர் அனுபவத்தை நீங்கள் பெறுவீர்கள். உங்களால் இன்னொருவர் உடம்பில் பிரவேசிக்க முடியும் என்பதுதான் அந்த அனுபவம்.

ஆனால், அதைச் சிறந்த அனுபவம் என்று சொல்வது ஏன்? அடுத்தவர் உடம்பில் உங்களால் பிரவேசிக்க முடிந்ததும் உடம்புடன் அடையாளப்படுத்திக் கொள்ளல் விடப்பட்டு விடுகிறது எப்போதைக்குமாய். அந்நிலையில் நீங்கள் அறிவீர்கள் அதற்குமுன்

பல உடம்புகளில் நீங்கள் பிரவேசித்திருக்கிறீர்கள் என்பதை. நீங்கள் லட்சோபலட்சம் உடம்புகளில் பிரவேசித்து. இருந்து. உறவுகொண்டு. துன்புற்று, இந்த உடம்பே நீங்கள் என்று எண்ணியிருந்திருப்பீர்கள்.

உடம்புடன் நீங்கள் வெகுவாய் சம்பந்தப்படாவிடில், பிணைப்பு தளர்ந்து விடும். அதை நீங்கள் சோதித்தறிய முடியும்.

இறந்துபோன ஒருவனின் உடலில் நீங்கள் பிரவேசிக்க முடியும். தமது சீடர்களை இடுகாட்டுக்கு அனுப்பி வைப்பார் புத்தர். சூஃபிகள் இந்த வழியில் அதிக அளவில் செயல்பட்டிருக்கிறார்கள். இறந்தவர்கள் இருக்கும் இடுகாடுகளில் அவர்கள் வசிப்பார்கள். புதிதாய் புதைக்கப்படுகிற ஓர் உடலில் அவர்கள் பிரவேசிக்க முயல்வார்கள். அடுத்தவர் உடம்பில் உங்களால் பிரவேசிக்க முடிகிற போது உங்களுடைய பார்வை தெளிவாகி விடுகிறது. இந்த உடம்பு நீங்கள் குடியிருக்கிற ஒரு வீடு என்பதை உணர்ந்து தெளிவீர்கள். உங்களுடைய சொந்த வீட்டிலேயே நீங்கள் எப்போதும் சிறை பட்டிருந்தால் காலப்போக்கில் அந்த வீட்டோடு அடையாளப் படுத்தப்பட்டு விடுவீர்கள். 'நான் வீடாகி விட்டேன்' என்று எண்ணத் தொடங்குவீர்கள். ஆனால், ஒரு நண்பனின் வீட்டுக்குச் சென்று தங்குகிறபோது நீங்கள் வீடல்ல என்பதைத் திடீரென்று புரிந்து கொள்வீர்கள். அந்த வீடு இருந்த இடத்தை விட்டு வந்து விட்டோம். இன்னாரு வீட்டில் இருக்கிறோம் என்பது புரியும். அப்போது உங்களுடைய பார்வை தெளிவாகும்.

அடையாளப்படுத்தலை விடுவது அதிக அளவில் துணை செய்வதாயிருக்கும். உங்கள் கட்டுகளில் இருந்து உங்களால் விடுபட முடிந்தால் யாருக்கேனும் நீங்கள் மிகுதியாய் உதவ முடியும். இது சக்தி வழியின் ஒரு செய்முறை. ஒரு குருவானவர் உங்களுக்கு உதவ விரும்புகிறார், உங்களைத் தூய்மைப்படுத்தி உங்களுடைய சக்தி செல்வழி (channel) அடைப்புகளை நீக்கி உதவுகிறார். அவர் உங்களைத் தன்னுடைய ஆளுகைக்கு உட்படுத்திக் கொள்கிறார். அவர் வெகு எளிதாய் உங்களுக்குள் இறங்கி உங்களுடைய சக்தி இணைப்பில் தன்னுடைய தூய்மையான, உயர்தரமான எல்லையற்ற சக்தியைச் செலுத்தி, இயங்கச் செய்கிறார். அதன்பிறகு உங்களுடைய சக்தி எளிதாய் செயல்படுகிறது. இதுவே சக்தி வழியின் முழுமையான திறன். ஒரு சீடன் தன்னை உண்மையிலேயே ஒப்புவித்துக் கொண்டால், குருவால் உடனே அவனை ஆட்கொள்ள முடியும்.

உங்களுடைய குருவின் சக்தியால் நீங்கள் ஆட்கொள்ளப் பட்டவுடன், அவருடைய பிராணன் உங்களைச் சூழ்ந்து உங்களுக்குள்

பிரவேசித்ததும், ஆண்டாண்டு காலமாய் உங்களால் செய்ய முடியாதவைகளெல்லாம் எளிதாய் செய்யப்பட்டு விடும். உங்களுக்கென்றால் ஆண்டுக்கணக்கில் ஆகும். காரணம், நீங்கள் வேலை வேலையென்று இருப்பீர்கள். கடுமையான வேலை. அடைப்புகள் பாறை மாதிரி இறுகியவை. அவற்றை நீங்கள் பல பிறவிகளாய் குவித்துக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால், உங்களுடைய சக்தியோ மிகச்சிறிய அளவிலானது. துளித்துளியாய் விழுந்து கொண்டிருப்பது. அவை பாலைச் சுடு மணலில் பயனற்று விழுகிற மாதிரி. பாறைக்கெதிராய் அவற்றால் என்ன செய்ய முடியும்? அவை வியர்த்தமாகி விடும். ஆனால் குருவானவர் ஒரு நீர்வீழ்ச்சி மாதிரி உங்களுக்குள் இறங்கியபின் பல விஷயங்கள் வெகு எளிதாய் அடித்துச் செல்லப்பட்டு விடுகின்றன. அந்த குரு உங்களிடமிருந்து வெளியேறியதும், சற்றும் எதிர்பாராத விதத்தில் நீங்கள் முற்றிலும் வேறுபட்டவராகி விடுவீர்கள் – தூய்மையும், இளமையும், ஆற்றலும் கொண்டவராய்... சக்தியின் செல்வழிகள் அனைத்தும் திறந்து கொள்கின்றன. இலேசாக தட்டுங்கள், போய்க்கொண்டே இருங்கள்.

ஒரு சீடனின் உடம்பில் குருவானவர் பிரவேசித்ததும் சில கணங்கள் தாமதிக்கிறார், சீடன் விரும்பினால் அந்த பெரிய வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு - வெகு எளிதாய், அதிக சிரமமில்லாமல் அடையலாம்.

சில சிந்தனாமுறைகள் இருக்கின்றன. அவை சித்தர்களின் சிந்தனா முறை ஆகும். அவர்கள் எந்தவோர் உத்தியுடனும் செயல்பட தங்கள் சீடர்களை அனுமதிப்பதில்லை. சித்தகுரு அவர்களைத் தமது பக்கமாய் அமர்ந்து, காத்திருக்கும்படி சொல்வார். அவர்களுக்கு ஸத் சங்கத்தில் நம்பிக்கை உண்டு. பெரிய ஆற்றல்மிக்க செய்முறை அது. ஆனால் அதற்குச் சிறந்த ஈடுபாடு தேவைப்படும். சின்னதாய் ஒரு சந்தேகம் இருந்தாலும் அது நிகழாது. சிறிதளவு எதிர்ப்பு (resistance) இருந்தாலும் அது நிகழாது. ஒருவர் முற்றிலும் வெளிப்படையாய் ஏற்றுக்கொள்ள இசைவானவராய் இருக்க வேண்டும். ஒருவர் முற்றிலும் ஒரு சந்திரனாகி விடவேண்டும். அப்போதுதான் குரு உங்களைத் தனது ஆளுகைக்குட்படுத்த முடியும்.

'பிணைத்திருக்கும் தளையில் இருந்து விடுபட்டு, செல்வழிகளை அறிந்திருப்பது அடுத்தவர் உடம்பில் பிரவேசிக்க மனதுக்கு இடமளிக்கும்.' இரண்டு விஷயங்கள் தேவைப்படுகின்றன. முதலாவது பிணைப்பில் இருந்து விடுபடுவது, இரண்டாவது விழிப்புணர்வு.

உடம்பில் இருந்து வெளிச்செல்லும் வழிகளையும், அதில் எப்படி மறுபிரவேசம் செய்வது என்பதையும் – அடுத்தவர் உடம்பில் எப்படிப் பிரவேசிப்பது என்பதையும் அறிந்திருக்க வேண்டும். உடம்பை விட்டு வெளியேறுவது எப்படி என்பதை மட்டும் அறிந்து கொண்டால் போதாது, உங்களால் மறுபிரவேசம் செய்ய முடியாமல் போகலாம். எனவே, தலையைச் சிறிதளவு தளர்த்திக் கொண்டால் மட்டும் போதாது. உங்கள் உடம்பினுள் இருக்கும் உலகையும் நீங்கள் வெகு நன்றாய் உணர்ந்திருக்க வேண்டும்.

சாதாரணமாக நம் உடம்பின் வெளிப்பகுதியை, சருமப்பகுதியைத் தான் நாம் அறிந்திருப்போம். அதனால்தான் மக்கள் சருமத்தின் வீச்சத்தைப் போக்கி, சதாவும் பவுடர் பூசிக் கொண்டிருக்கிறார்கள். ம்ம்ம்... அதுதான் தங்களுடைய முழு உடம்பும் என்கிற எண்ணம். உள்ளே மறைந்திருக்கும் மிகச்சிறந்த இயக்கநுட்பத்தை அவர்கள் அறிய மாட்டார்கள். சருமப்பகுதி ஓர் உறை மாதிரி. நீங்கள் தாஜ்மஹாலைப் பார்க்கச் சென்றால் அதன் சுவர்களை மட்டுமே சுற்றிச் சுற்றி வந்து, திரும்பி விடுகிறீர்கள். நிலைக்கண்ணாடியில் உங்களைப் பாருங்கள், கண்ணாடி உங்களுடைய சருமத்தைப் பிரதிபலிக்கும் உங்கள் சரீரத்தின் தோட்டுப்பகுதி (shell)யை, நீங்கள் அதனுடன்தான் உங்கள் அடையாளப்படுத்திக் கொள்கிறீர்கள். 'நான்தான் இந்த ஆள்' என்று நீங்கள் நினைத்துக்கொண்டு விடுகிறீர்கள். நீங்கள் அதுவல்ல. நீங்கள் மிக, மிகச் சிறந்தவர் – ஆனால், உள்ளிருந்து நீங்கள் பார்க்கவில்லை.

உங்களை உடம்புடன் நிரூபிக்க முயலாமல் இருங்கள், அந்நிலையில் கண்களை மூடிக்கொண்டு, உடம்பை உள்ளிருந்து உணரப் பாருங்கள். உடம்பை உள்ளிருந்து தொட முயலுங்கள், அதனை உள்ளிருந்து உணரும்போது எப்படி இருக்கிறது. மையத்தில் இருந்துகொண்டு சுற்றி வரப் பாருங்கள். விளங்காத ரகசியங்கள் பலவும் உங்களுக்கு வெளிப்படையாகும். அப்படித்தான் யோகிகள் எங்கிருந்து இந்த உடலை விடடு வெளியேறவும், மறுபடியும் அதில் பிரவேசிக்கவும், மற்றவர் உடம்பில் பிரவேசிக்கவும் கூடுமோ அந்த செல்வழிகளை, மையங்களை, நாடிகளை, சக்திக்களன்களை, சக்திக் களன்களின் வேலை செய்யும் முறையை அறிந்து கொளகிறார்கள்.

மிகப்பெரிய அளவிலான அறிவு, தெளிவான விளக்கம் தேவைப்படுகிறது. ஒருவர் அதை அறிந்திருக்க வேண்டும். இல்லையேல் அதைத் தவற விடும்படி ஆகும். பலமுறை அப்படி நடந்திருக்கிறது.

பதஞ்சலி சூத்திரங்களை மட்டுமே தந்திருக்கிறார். முழு விளக்கமோ, நுணுக்கமான விவரங்களையோ தரவில்லை. காரணம், விவரங்கள் முழுமையாய் விவரிக்கப்பட்டிருப்பின் அதனை முயன்று பார்க்க முட்டாள்தனமானவர்கள் இருக்கிறார்கள். அதனால்தான் நுணுக்க விவரங்கள் தரப்படவில்லை. இந்தச் சூத்திரங்களைப் படித்துவிட்டு நீங்கள் எதுவும் செய்ய முடியாது. உண்மையில் செயல்முறை விவரங்கள் உங்களுக்கு வெளிப்படுத்தப்படவில்லை. பதஞ்சலி அவற்றை இரகசியமாகவே வைத்திருக்கிறார். அவை ஒரு குருவுடன் செயல்பட்டுக் கொண்டிருக்கும் சீடர்களுக்காகவே வழங்கப்பட்டவை. அவற்றை வெளிப்படையாகச் சொல்ல முடியாது. காரணம், எதையும் அறிந்து கொள்ளும் ஆர்வம் உடையவர்கள் சோதித்தறிய முயல்வார்கள். சில சமயம் தங்கள் உடம்பில் இருந்து வெளியே வந்துவிடக் கூடும். ஆனால் உள்ளே நுழைய முடியாமல் போய்விடலாம். அந்நிலையில் அவர்கள் தங்களுக்கும் மற்றவர்களுக்கும் இடர்ப்பாட்டை உண்டுபண்ணக் கூடும்.

எனவேதான் நுணுக்க விவரங்கள் தரப்படவில்லை. விவரங்கள் எப்போதுமே தனிப்பட்ட நெருக்கத்தில் கையளிக்கப்படுகின்றன. இந்தச் சூத்திரங்கள் கட்டமைப்பை (framework) மட்டுமே தருகிறது.

***'உதானன் என்னும் நாடியை வெல்வதால் யோகி, நீர் மேலும், சேற்றின் மீதும், முள்ளின் மீதும் நடக்க முடியும். தாம் விரும்பியது போல் மரணத்தை ஏற்க முடியும்.'***

எஸ்கிமோக்கள் முதல்முறையாய் கண்டறியப்பட்டபோது, அவர்களிடம் 'பனி' என்ற பொருளில் பன்னிரண்டு வார்த்தைகள் இருந்ததை அறிந்து கண்டுபிடிப்பாளர்கள் ஆச்சரியப்பட்டனர். பன்னிரண்டு வார்த்தைகள் எதற்காகத் தேவைப்பட்டிருக்கும் – அவர்களால் நம்பவே முடியவில்லை 'snow' என்றாலே போதுமானது. அல்லது 'ice' என்ற வார்த்தையும் இருந்துவிட்டுப் போகலாம். ஆனால் எஸ்கிமோக்கள் பனி என்று சொல்ல கிட்டத்தட்ட பன்னிரண்டு வார்த்தைகளையல்லவா வைத்திருந்தனர். அவர்கள் பனியில் வாழ்கின்றனர். பனியின் அத்தனை மனநிலைகளையும் அவர்கள் பார்த்திருக்கின்றனர். பனியைப் பலவிதத்திலும் அவர்கள் அறிவார்கள். வெப்பமண்டல நாட்டில் வசிக்கும் ஒருவரால் அவர்கள் எதற்காகப் பன்னிரண்டு வார்த்தைகளைப் பயன்படுத்துகிறாக்ள் என்பதைக் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாது.

பிராணன் ஐந்து வெவ்வேறு வடிவங்கள் கொண்டது என்று யோகிகள் சொல்கிறார்கள். 'மூச்சு விடுதல்' என்று நீங்கள் எளிதாய்

சொல்லி விடுவீர்கள். வெளிமூச்சு, உள்மூச்சு என்கிற இரண்டு செய்கைகளை மட்டுமே நாம் அறிவோம். ஆனால் யோகிகள் பிராண உலகிலேயே வாழ்கிறவர்கள், பல நுட்பமான வேறுபாடுகளை அவர்கள் அறிவார்கள். அதனால்தான் ஐந்து பிரிவுகளை அவர்கள் ஏற்படுத்தியது. அந்தப் பிரிவுகள் அறிந்து கொள்ளப்பட வேண்டியவை. அவை தனிச்சிறப்பு வாய்ந்தவை. முதலாவது பிராணன், இரண்டாவது அபானன், மூன்றாவது சமானன், நான்காவது உதானன், ஐந்தாவது வியானன். இவை பிராணனின் ஐந்து வெளிப்பாடுகள், இவை உங்களுக்குள் வெவ்வேறு வேலைகளைச் செய்பவை.

பிராணன் முதலாவது, சுவாசித்தலாகும். இரண்டாவது அபானன். இது கழிவை வெளியேற்றுவது, அவ்விதமாய் உடலைச் சுத்தப்படுத்துவது. அபானன் குடலின் இயக்கத்துக்குத் துணைபுரிவது. அதன்பேரில் எப்படிச் செயல்படுவது என்பதை நீங்கள் அறிந்து கொண்டிருந்தால் உங்கள் குடலை சுத்தமாக வைத்துக்கொள்ள முடியும். யோகிகள் தங்கள் குடலைச் சுத்தப்படுத்திக் கொள்வார்கள். உங்கள் குடல் சுத்தமாயிருந்தால் உங்களுடைய ஒட்டுமொத்த இருப்புணர்வு (being)ம் கவலையற்றதாயிருக்கும் - எளிதில் கையாளக்கூடியதாயுமிருக்கும். உங்களால் பறக்கவும் முடியும். உடலின் சுமை மறைந்து விடும்.

வழக்கமாக உங்கள் குடல்கள் அழுகிய கழிவுகளைச் சுமந்திருக்கும் - உங்களுடைய வாழ்க்கை முழுதிலுமானவை அடுக்குகளாய் சேர்ந்திருக்கும். குடலின் உட்புறச் சுவர்களில் கழிவுப்பொருள் குவிந்து வறண்டு, கடினமாகி விடும். அது பல நச்சுத்தன்மைகளை உருவாக்கும். அது உங்களை கனமாய் உணரச்செய்யும். அது உங்களை ரொம்பவுமே ஈர்ப்பு விசைக்கு உட்படுத்தி விடும். வயிற்றைச் சுத்தப்படுத்த வழிகள் பலவற்றை யோகா வலியுறுத்துகிறது, சுத்தப்படுத்தினால்தான் நச்சுத்தன்மைகள் உள்ளே தங்காது, இல்லையேல் அவை இரத்தச் சுற்றோட்டத்தில் கலந்து, மூளைக்கு ஓடி, உங்களைச் சுற்றி கனமான, கருமையான ஒரு சக்திக் களனை உண்டாக்கி விடும்.

குடல்கள் தெளிவாகவும் சுத்தமாகவும் இருந்துவிட்டால் உங்களுடைய தலையைச்சுற்றி ஒரு நறுமண ஒளி வட்டம் பரவியிருக்கும். கண்டுணரும் விழித்திறன் படைத்தவர்களால் அதைக் காண முடியும். ஓர் இறகினைப் போல் இருப்பதை நீங்கள் உணர்வீர்கள்.

இரண்டாவது அபானன். கழிவை வெளியேற்றுதல். மூன்றாவது சமானன் சீரண இயக்கம், உடலின் வெப்பத்தை தருவித்துக் கொடுப்பது.

இம்மூன்றாவதன் இயக்கத்தை நீங்கள் அறிந்திருந்தால், அது எங்கே இருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டால் உங்களுடைய சீரண இயக்கத்தில் எந்தக் குறைபாடும் இருக்காது.

பொதுவாக நீங்கள் நிறையவே உண்டு வைப்பீர்கள். ஆனால் அவற்றை உங்களால் சீரணித்துக் கொள்ள முடிவதில்லை. நீங்கள் தின்று கொண்டே இருப்பீர்கள். ஆனால் அதில் திருப்தியடைந்திருக்க மாட்டீர்கள். சீரணமாகாமலே மேலும் மேலும் உடம்பில் திணித்தபடி இருப்பீர்கள். சமானனை எப்படிப் பயன்படுத்துவது என்பதை ஒருவர் அறிந்து கொண்டால் பெரிய அளவில் சாப்பிட்டு நீங்கள் பெறுகிற சக்தியை சிறிய அளவு உணவில் இருந்தே பெற முடியும்.

அதனால்தான் யோகிகள் தங்களுடைய உடம்புக்கு எவ்விதத் தீங்குமின்றி பலநாள் உண்ணாமையை (fast) மேற்கொள்ள முடிகிறது. சில நாட்களுக்கொரு முறை சிறிய அளவில் உண்டு அதை அவர்கள் முழுமையாய் செரித்துக் கொண்டு விடுவார்கள். உங்களுடைய உணவே முழுமையாய் சீரணிக்கப்படுவதில்லை. அதிக அளவிலான உணவு மதிப்பு அப்படியே இருந்து விடும்.

அந்த மூன்றாவது – உங்கள் உடம்புக்கு வெப்பத்தையும் வழங்குகிறது. திபெத்தியர்கள் உடம்பை வெப்பமாக வைத்துக்கொள்ள சமானனையே கையாள்கிறார்கள். குறிப்பிட்ட முறையில், குறிப்பிட்ட சீர்த்தன்மையுடன் அவர்கள் சுவாசிக்கிறாக்ள். அதனால் உடம்புக்குள் சமான அதிர்வுகள் ஆற்றல்மிக்க விதத்தில் செயல்படும். அவை அதிக அளவில் வெப்பத்தைத் தோற்றுவிக்கும். பனியை உருகச் செய்யுமளவுக்கு அந்த வெப்பம் இருக்கும். திபெத்திய லாமா வெட்டவெளியில் நிர்வாணமாய், வியர்த்து நிற்பான். எங்குமே பனி மூடியிருக்கும். நீங்களானால் உறைந்து போவீர்கள். உங்களால் வீட்டை விட்டு வெளியில் வர முடியாது. அவனோ பனிப்பொழிவில் நிற்பான் வியர்த்தபடி.

ஆய்வுகளில் இதுவும் ஒன்று. திபெத்தில் மருத்துவர் பணியில் ஈடுபடுகிற ஒருவர் தம்முடைய உடம்பில் வெப்பத்தை உண்டு பண்ணும் திறன் உடையவரா என்பதைச் சோதித்து அறிவார்கள். அவரால் உண்டுபண்ண முடியாவிட்டால், அவருக்கு மருத்துவத் தொழில் செய்வதற்கான சான்றிதழ் வழங்கப்பட மாட்டாது. உலகில் வேறெங்குமே மருத்துவராகும் தகுதிக்கு இந்த அளவு வேண்டப் படுவதில்லை. அது ஒன்றும் வாய்மொழியானது (vivavoce) அல்ல. அது ஒன்றும் மனப்பாடம் செய்து தேர்வுக்கான விடைத்தாளில் அப்படியே

வாந்தியெடுத்து வைப்பதல்ல. உங்கள் உடம்பின் வெப்பத்தைப் பராமரிப்பதில் நீங்கள் தேர்ச்சி பெற்றிருக்கிறீர்கள் என்பதை நீங்கள் வெளிக்காட்டியாக வேண்டும். காரணம் உங்கள் வாழ்க்கை நெடுகவும் உங்களுடைய நோயாளிகளின் வெப்ப சக்தியின் பேரில் நீங்கள் வேலை செய்யும்படி இருக்கும். நீங்கள் தேர்ச்சி பெற்றவராக இல்லாவிடில் மற்றவர்களுக்குப் பயனளிக்கும் வகையில் எப்படிச் செயல்பட முடியும்? எனவேதான் தேர்வுக்குட்படுபவர் (examinee) பனிப்பொழிவில் இரவு முழுக்க நிற்க வேண்டியிருப்பது. இரவில் ஒன்பது முறை தேர்வு செய்பவர் (examiner) வந்து, அவருடைய உடம்பைத் தொட்டு வியர்த்திருக்கிறதா என்பதைச் சோதித்தறிவார். அந்த அளவு வெப்பத்தை உங்களால் உருவாக்க முடிந்தால் நீங்கள் சமானனில் கைதேர்ந்தவராவீர்கள். தற்போது நீங்கள் குணமளிப்பவராகி விடுகிறீர்கள். உங்களுடைய தொடுதலே நோயைக் குணப்படுத்துவதாகி விடும்.

திபெத்தில், உங்களுடைய நோயாளியின் கையை அல்லது நாடியை நீங்கள் தொடுகிறபோது ஒரு குறிப்பிட்ட முறையில் நீங்கள் சுவாசிக்க வேண்டியிருக்கும். அப்போது மட்டுமே அந்த நோயாளியின் சுவாச மண்டலத்தை நீங்கள் அறிந்துகொள்ள முடியும். அவருடைய சுவாச முறையை நீங்கள் தெரிந்து கொண்டால் அவரைப்பற்றிய சகலத்தையும் தெரிந்து கொள்வதோடு, செய்யப்பட வேண்டியது என்னவென்பதையும் தெரிந்து கொள்வீர்கள். திபெத்தில் - ஒட்டுமொத்த செயல்முறையும் பதஞ்சலி யோகத்தை அடிப்படையாகக் கொண்டதுதான். மருத்துவர் முதலில், நோயாளிக்கு பிரச்சினை உள்ள இடத்தில் - எங்கே நோயாளியின் பிராணன் அடைபட்டிருக்கிறதோ, இடர்ப்பாட்டில் சிக்கிக் கொண்டிருக்கிறதோ அந்த இடத்தில் உட்புகுவார். எங்கே விளைவுகள் உண்டாகும்படி பாதிப்பு ஏற்படுத்த வேண்டும் என்பதை அவர் அறிவார்.

அக்குபஞ்சரிலும் அதுவேதான் என்பது உண்மை. அது 'தாவோ' (Tao) கோட்பாட்டு யோக முறையில் அபிவிருத்தி செய்யப்பட்டது. உள்ளே பிராண சக்தி எப்படிச் செயல்படுகிறது என்பதைப் புரிந்துகொண்டு உடம்பில் எழுநூறு புள்ளிகள் இருப்பதை, அவை சக்திப் புள்ளிகள் (energy points) என்பதை அவர்கள் தெரிந்து கொண்டனர். அந்தப் புள்ளிகளில் அழுத்தம் கொடுப்பதன் மூலம் உடம்பின் ஒட்டுமொத்த சக்திகளையும் மாற்ற முடியும். உங்களுக்குத் தலைவலி என்று வைத்துக் கொள்வோம். அக்குபஞ்சர்

சிகிச்சையளிப்பவர் உங்களுடைய தலைப்பகுதியைத் தொடமாட்டார். அதற்கு அவசியமில்லை. அவர் வேறெங்காவது தொடுவார். காரணம் உடம்பிலுள்ள சக்தி நேர்மறை, எதிர்மறை என இரண்டு எதிரெதிர் நிலைகளை (polarity)க் கொண்டிருக்கும். உங்களுக்குத் தலைவலி ஏற்பட்டால், அப்போது வேறு எங்காவது - எதிர்முனையில் - ஒரு புள்ளியை அவர் கண்டறிந்து, அதில் ஊசியைச் செலுத்துவார். அதுகூடத் தேவையில்லை. அவருடைய கட்டை விரலால் சின்னதாய் ஓர் அழுத்தம் கொடுத்தாலே போதும், உடனே தலைவலி போய்விடும். அது எப்படி நிகழ்ந்தது என்பதே ஓர் அற்புதம்தான். அவர் உங்களுடைய சக்திக்களனை மாற்றிவிட்டார். அதை எங்கோ தள்ளுவதன் மூலம் களத்தையே அவர் மாற்றி விடுகிறார். நீங்கள் தற்போது மற்றொரு சக்திக்களனை மாறுபட்ட சக்திக்களனைக் கொண்டு விடுகிறீர்கள்.

மேற்கில் அக்குபஞ்சர் (acupuncture) மிகவும் அறிவியல் பூர்வமாகிக் கொண்டிருக்கிறது. குறிப்பாக ரஷ்யாவில் எனலாம். காரணம் ஒருவர் புதுவகை நிழற்படக் கலையை - 'கிர்லியன் போட்டோகிராஃபி' என்பதை அபிவிருத்தி செய்திருக்கிறார். அந்த புகைப்படம் எடுக்கும் முறையைக் கொண்டு அந்த எழுநூறு புள்ளிகளையும் அவர் படமாக்கியிருக்கிறார். தாவோ கோட்பாட்டைச் சேர்ந்த யோகிகள் எவ்வித ஊடகமோ, புகைப்படமோ, புகைப்படம் எடுக்கும் கேமரா (Camera)வோ இல்லாமல் மிகச்சரியாக அந்த எழுநூறு புள்ளிகளையும் அறிந்து வைத்திருந்தனர். அவர்கள் உள்ளார்ந்த விதத்தில் அவற்றை அறிந்தனர்.

நான்காவது உதானன். பேச்சும் தகவல் தொடர்பும். நீங்கள் பேசுகிறபோது நான்காவது வகை பிராணன் பயன்படுத்தப்படுகிறது. அதேவகை பிராணனைப் பயிற்றுவிக்க முடியும். பிராணனை பயிற்று விக்க முடிந்தால் நீங்கள் பேச்சின் மூலம் வசியப்படுத்தக்கூடியவராக அல்லது வசியப்படுத்தக்கூடிய பாடகராகத் திகழ்வீர்கள். உங்களுடைய குரலில் வசியத்தன்மை (hypnotic quality) இருக்கும். அதைக் கவனித்துப் பயன்படுத்தினால் கேட்பவர்கள் உங்களிடம் வெகுவாய் ஈர்க்கப்படுவார்கள்.

அதுவே தகவல் தொடர்புக்கும் பயன்படும். எப்படித் தகவல் தொடர்பை ஏற்படுத்திக் கொள்வது என்று தெரியாமல் பலரும் இடர்ப் பாட்டுக்குள்ளாகி இருக்கிறார்கள். மற்றவர்களுடன் எப்படித் தொடர்பு கொள்வது, எப்படி நேசிப்பது, எப்படி நட்பார்ந்தவராயிருப்பது, எப்படி

வெளிப்படையாயிருப்பது என்றே தெரியாமல் அவதிப்படுகிறார்கள். அவர்களுக்கு உதானனில் ஏதோ இடர்ப்பாடு இருக்க வேண்டும். பிராண சக்தியை எப்படிப் பயன்படுத்துவதென்றே அவர்களுக்குத் தெரியவில்லை. பிராண சக்தியை முறையாகப் பயன்படுத்தினால் அடைப்பு இருக்காது. உங்களால் எதிர்முனையை எளிதில் அடைய முடியும். அது உங்களுக்கு பறப்புத் திறனையும் கொடுக்கும்.

ஐந்தாவதாக வியானன், ஒருங்கிணைப்பது. அது உங்களை முழுமைப்படுத்துகிறது. அந்த ஐந்தாவது சக்தி உங்கள் உடம்பைவிட்டு வெளியேறினால் நீங்கள் இறந்து விடுவீர்கள். அப்போது உங்கள் உடம்பு சிதைந்து பல கூறுகளாய் பிரியும், சீர்கெடும். அந்த ஐந்தாவது சக்தி உங்களுள் இருந்தால், உங்களுடைய மூச்சே முழுமையாய் நின்று விட்டாலும், நீங்கள் உயிரோடு இருப்பீர்கள். அதைத்தான் யோகிகள் செய்து கொண்டிருக்கிறார்கள். தங்களுடைய இருதயத்தை நிறுத்த முடியும் என்று யோகிகள் வெளிக்காண்பிக்கிற போது அவர்கள் முதல் நான்கு சக்திகளையும் நிறுத்துகிறார்கள் - பிறகு ஐந்தாவதைத் தொடர்கிறார்கள்.

ஐந்தாவது சக்தி வெகு நுட்பமானது. அதைக் கண்டறியக் கூடியதாய் எந்தவொரு சாதனமும் இல்லை. ஒரு பத்து நிமிடத்துக்கு, சாத்தியமான ஒவ்வொரு வழியிலும் நீங்கள் கருத்தூன்றிக் கவனிக்கலாம். அந்த யோகி முற்றாக செத்து விட்டார் என்றே முடிவு கட்டுவீர்கள். உங்களுடைய மருத்துவரும் அவர் இறந்து விட்டதாகவே சான்றளிப்பார். அவரோ திரும்பவும் வந்து விடுவார். ஐந்தாவது சக்தி ரொம்ப நுட்பமானது. அதுவே உடம்புடன் உங்களை இணைக்கிற நூலிழையாகும்.

அந்த ஐந்தாவது சக்தியை நீங்கள் அறிந்துகொள்ள முடிந்தால், கடவுளையும் உங்களால் அறிந்துகொள்ள முடியும். அதற்கு முன்பாக அல்ல. காரணம், உங்களுக்குள் அந்த ஐந்தாவது சக்தி செயல்படுவது கடவுள் செயல்படுவதைப் போன்றே இருக்கும். கடவுள் வியானன். அவர் - நட்சத்திரங்களையும், முடிவற்ற அண்டவெளியையும் ஒன்று சேர்க்கிறார். உங்கள் உடம்பு ஒரு குட்டிப்பிரபஞ்சம் (microcosm) - அது பிரபஞ்சத்தை சார்பாற்றம் (represent) செய்கிறது. வடமொழியில் உடம்பை 'பிண்டம்' என்கிறார்கள் - சிற்றண்டம் (microcosm). பிரபஞ்சம் என்பது பேரண்டம் (macrocosm) ஆகும். உங்களுடைய முழு உடம்பும் மற்றொன்றின் (பிரபஞ்சம்) சிறு உருவம். எந்தவொன்றும் குறைவுபடாத பிரபஞ்சத்தைப்போல் அது எல்லாவற்றையும்

கொண்டிருக்கிறது. உங்களுடைய முழுமையை நீங்கள் அறிந்து கொள்ள முடிந்தால் சகலத்தையும் மொத்தமாய் நீங்கள் அறிந்து கொள்வீர்கள்.

நாம் எங்கிருக்கிறோமோ அந்த அளவில்தான் நம்முடைய புரிந்துகொள்ளும் திறனும் இருக்கும். யாரேனும் கடவுள் இல்லை என்று சொல்வாராயின் தம்முடைய இருப்புணர்வில் முழுமையான ஒன்றை அவர் அடைந்திருக்கவில்லை என்றே சொல்ல வேண்டும். அவருடன் சண்டையிடாதீர்கள், தர்க்கம் செய்யாதீர்கள், காரணம், தர்க்கத்தால் வியானன் பற்றிய அறிவை அவருக்குத் கொடுக்க முடியாது. நிரூபணங்களால் வியானன் பற்றிய அறிவை அவருக்கு வழங்க முடியாது. யோகிகள் தர்க்கம் பண்ணுவதில்லை. அவர்கள் சொல்வார்கள். 'வாருங்கள், ஆதாரமாய் கொள்ளப்படும் கருத்துகளுடன் (hypothetically) எங்களைத் தெரிந்துகொள்ளச் சோதனை செய்து பாருங்கள்' என்று. நாம் சொல்வதை நம்ப வேண்டுமென்கிற அவசியம் இல்லை. முயலுங்கள். அது என்னவென்பதைப் புரிந்துகொள்ள முயலுங்கள். உங்களுடைய வியானனை நீங்கள் உணர்ந்தவுடன், சற்றும் எதிர்பாராதவிதமாய் கடவுள் உங்களுக்குக் காட்சியளிப்பார், எங்கும் பரவியிருப்பார்.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு.

தனது விடுதியில் தங்கியிருப்பவரிடம் தனக்காக ஒரு பிரச்சினைக்குத் தீர்வு காணும்படி விடுதித்தலைவி வேண்டிக் கொண்டாள். அவரிடம், 'நான் இரண்டு கிளிகளை ஒரு கூண்டில் வைத்திருக்கிறேன். ஒன்று ஆண் கிளி, மற்றொன்று பெண் கிளி. ஆனால் எது, எந்த ஒன்று என்பது எனக்குத் தெரியவில்லை. தாங்கள் எனக்கு உதவு முடியுமா?' என்று கேட்டாள் அவள்.

விடுதியில் தங்கியிருப்பவர் சொன்னார். 'நல்லது மேடம். எனக்குக் கிளிகள் பற்றி எதுவும் தெரியாது. ஆனால், ஒன்று சொல்வேன் - ஒரு கறுப்புத் துணியைக் கூண்டின் மீது போடுங்கள், ஒரு அரை மணி நேரம் அப்படியே விட்டு வையுங்கள், பிறகு அந்தக் கறுப்புத் துணியை எடுத்துவிட்டுப் பாருங்கள். அந்தப் பறவைகளுள் எது கோபத்துடன் காணப்படுகிறதோ அதுதான் ஆண் கிளியாயிருக்கும்.'

அவளும் அவ்வாறே செய்தாள் - கூண்டின் மீது ஒரு கறுப்புத் துணியைப் போட்டு மூடினாள். ஓர் அரை மணி நேரம் கழித்து அதை

எடுத்து விட்டாள். கிளிகளில் ஒன்று கோபமுற்றிருப்பது உறுதியாய் தெரிந்தது.

அவர் சொன்னார் 'அதுதான் ஆண் கிளி' என்று.

'அட, ஆமாம்... ஆனால் எதிர் வரும் நாட்களில் எப்படி நான் அடையாளம் காண்பது?' அவள் கேட்டாள்.

எனவே, அவர் சொன்னார், 'ஒரு ரிப்பன் துண்டை எடுத்து அதன் கழுத்தில் கட்டிவிடுங்கள். அப்போது உங்களால் தெரிந்து கொள்ள முடியும்' என்று.

விடுதித்தலைவியும் அவ்வாறே செய்தாள்.

அன்று பிற்பகலில் அந்த வட்டார மதகுரு தேநீர் விருந்துக்கு அங்கே வந்தார். அந்தக் கிளி அவருடைய கழுத்துப் பட்டியை (tie)ப் பார்த்துவிட்டுச் சொன்னது. 'ப்ளிமெய் - அவர்கள் உம்மையும் கண்டுபிடித்து கட்டி விட்டார்களா?' என்று.

நம்முடைய அனுபவம் எதுவாயினும், இப்பிரபஞ்சத்துக்கான விளக்கமாகவே அது இருக்கும். நம்முடைய அனுபவத்தின் எல்லைக்குட்படுத்தப்பட்டிருப்பவர்கள் நாம். அதன் வழியே வாழ்கிறோம், அதன் மூலம் புரிந்து கொள்கிறோம். ஆக ஒருவன் கடவுள் இல்லை என்று சொல்கிறபோது அவருக்காக இரக்கப்படுங்கள். கோபப்படாதீர்கள். கடவுள் தொடர்புடையதாய் எதையும் தாம் எதிர்கொள்ளவிலலை என்றே அவர் சொல்லிக் கொண்டிருப்பார். தம்முடைய இருப்புணர்வில் சின்னதாய் ஓர் ஒளிக்கீற்றைக்கூட அவர் கண்டிருக்கவில்லை. அங்கே உயிர்க்குறுதி செய்யும் ஒளி இருப்பதாய் அவரால் எப்படி நம்ப முடியும்? அவரால் நம்ப முடியாது. அவர் முற்றிலும் பார்க்கும் திறனற்றவராயிருக்கிறார். அவருக்காக இரக்கப்படுங்கள், உதவி புரியங்கள். அவருடன் தர்க்கம் வேண்டாம். காரணம், தர்க்கம் எவ்வகையிலும் அவருக்கு உதவப்போகிறதில்லை.

கடவுளைப்பற்றி யாரும் யாரையும் நம்பச் செய்ய முடியாது. அது நம்பிக்கையூட்டுவதுடன் தொடர்புடையதல்ல. அது (மத) மாற்றம் செய்வது.

உதானன் என்கிற மின்னோட்டத்தைத் தன்னுடைய ஆதிக்கத்துக்குக் கொண்டு வருவதன் மூலம் யோகியானவர் காற்றில் மிதக்க முடிவதோடு, நீர் சதுப்பு நிலம், முள் இவற்றின் மீதும் கால் பாவாமல் நடக்கவும் செய்வார். உதானன் என்கிற பிராண சக்தியை அடக்கியாள்வதன் மூலம் நீங்கள் காற்றில் மிதக்க முடியும். காரணம்,

அந்த உதானன் புவியீர்ப்பு விசையுடன் உங்களை தொடர்பு படுத்துகிறது.

நீங்கள் எண்ணற்ற பறவைகள், பெரிய பறவைகள் பறப்பதைப் பார்த்திருப்பீர்கள். அந்த எடையுடன் அவற்றால் எப்படிப் பறக்க முடிகிறது என்பது அறிவியலார்க்கு இன்னமும் ஒரு புதிராகவே இருந்து வருகிறது. இயல்பிலேயே அந்தப் பறவைகள் உதானனைப் பற்றி அறிந்திருக்க வேண்டும். அவற்றைப் பொறுத்தவரை புறத்தூண்டுதலின்றி தானே இயங்குவதாயிருந்திருக்கும். அவை ஒரு குறிப்பிட்ட முறையில் சுவாசிக்கும். நீங்களும் அந்த முறையில் சுவாசிக்க முடிந்தால் ஈர்ப்பு விசையில் இருந்து நீங்கள் துண்டிக்கப்படவதை உடனே உணர்வீர்கள். உங்கள் இருப்புணர்வில் இருந்து புவியீர்ப்பு விசையுடன் ஒரு தொடர்பை நீங்கள் பெற்றிருப்பீர்கள். அது துண்டிக்கப்படக் கூடியது.

தங்களை அறியாமலே பலருக்கு அப்படி நடந்திருக்கிறது. சிலசமயம் சும்மா உட்கார்ந்திருக்கிற போதோ அல்லது தியானிக்கிற போதோ திடீரென்று மிதக்கிற மாதிரி நீங்கள் உணர்கிறீர்கள். கண்களைத் திறந்திருங்கள் - தரை மீது அமர்ந்திருக்கக் காண்பீர்கள். கண்களை மூடியிருங்கள் - மறுபடியும் நீங்கள் மிதக்கிறதாய் உணர்வீர்கள். உங்களுடைய தூல சரீரம் மிதக்காமல் இருக்கலாம், ஆனால் உங்களுக்குள் அடியாழத்தில் ஏதோவொன்று துண்டிக்கப்பட்டதாயும், உங்களுக்கும் புவியீர்ப்பு விசைக்கும் இடையே ஓர் இடைவெளி விழுந்திருப்பதாயும் உணர்வீர்கள். அதனால்தான் மிதக்கிற உணர்வு ஏற்படுகிறது உங்களுக்கு. அது மேலும் மேலும் மிகுதியாகி ஒருநாள் மிதப்பது உங்களுக்குச் சாத்தியமாகி விடும்.

பொலிவியாவில் இருந்த ஒரு பெண்மணி அறிவியல் சார்ந்த தொழில்நுட்பத்தாலும், செய்முறைகளாலும் கருத்தூன்றிக் கவனிக்கப்பட்டாள். அவள் மிதக்கிறவள். தரைக்கு மேல் சுமார் நாலடி உயரத்தில் சில கணங்களுக்கு அவளால் மிதக்க முடியும். அது தியானத்தின் மூலம் அவளுக்குச் சாத்தியமாயிற்று. அவள் அமர்ந்தபடி தியானிப்பாள், அப்படியே மெலெழத் தொடங்கி விடுவாள்.

*'சமானன் என்கிற மின்னோட்டத்தை அடக்கியாள்வதன் மூலம் தனது மூலாக்கினியை மேலெழச் செய்கிறார் யோகி'.*

அந்நிலையில் நீங்கள் எளிதாய், முழுமையாய் சீரணித்துக் கொள்ள முடியும். அதுமட்டுமல்ல, உங்கள் குடல் சார்ந்த அக்கினியை

சுடர் விட்டுப் பிரகாசிக்கச் செய்கிறபோது, உங்களுடைய உடம்பைச் சுற்றிலும் ஒரு குறிப்பிட்ட பிரகாசம் உண்டாகும்.

இந்த அக்கினியை முற்றிலுமாய் எரிக்க முடிகிறபோது உங்கள் மனதையும் அது எரித்து விடும். எண்ணங்களும், ஆசைகளும் அதில் எரிய முடியும்.

குறிப்பிட்ட ஒரு வழியில் சுவாசித்து, ஒரு குறிப்பிட்ட பிராண சக்தியைக் கொண்டு வந்து உங்களுக்குள் குவித்துக் கொள்வதன் மூலம், வாழ்வதற்கான ஆசையை நீங்கள் முற்றிலுமாய் எரித்துவிட முடியும் என்கிறார் பதஞ்சலி - எது ஆசையின் விதையாய் இருக்கிறதோ அதையும் நீங்கள் தீக்கிரையாக்கி விட முடியும். அதன்பிறகு உங்களுக்குப் பிறவி கிடையாது. இதனை 'நிர்பீஜ சமாதி' என்கிறார் அவர். விதையும் எரிக்கப்பட்டு விடுகிறது.

> ***'அண்ட வெளியில் வியாபித்திருக்கும் தூய்மையான ஒரு பொருளுக்கும் (Ether), காதுக்கும் இடையேயுள்ள தொடர்பின் மீது சிந்தனையைச் செயற்படுத்துவதன் மூலம், உடல்திறனை மிஞ்சிய கேட்டலை நீங்கள் பெற முடியும்.'***

வடமொழியில் அது (Ether), 'ஆகாயம்' என்கிற சொல்லைக் கொண்டிருக்கும். 'ஆகாயம்' என்றால் அண்டவெளி, சகலத்தையும் சூழ்ந்திருக்கிற முழுமையான வெற்றிடம். ஆகாயம் என்பதற்குப் பொருள், எல்லாமும் ஏதுமற்ற தன்மையில் (nothingness) இருந்து வருகிறது, அதனிடமே திரும்பிச் செல்கிறது என்பதாகும். எது தொடக்கத்தில் இருந்ததோ எது முடிவிலும் இருக்குமோ அந்த 'இன்மை' முதன்மையானது, அடிப்படையானது. எல்லாமே அதில் இருந்து தோன்றி, அதனுள் மறைந்து விடுகிறது. இந்த 'இன்மை' வெறும் இன்மையல்ல, அது எதிர்மறையானதுமல்ல. அது முற்றிலும் நிகழ்த்தும் தன்மை கொண்டது, நேர்மறையானது. ஆனால், தனக்கென்று ஒரு வடிவம் அற்றது.

ஆகாயத்துடனான தொடர்பின் பேரில் சிந்தனையைச் செலுத்துவதன் மூலம் உடல்திறனை மிஞ்சிய கேட்டலை நீங்கள் பெற முடியும். இது யோகாவின் கண்டுபிடிப்பு. உங்கள் காது ஆகாயத்துடன் இசைவாகி விடுகிறது. அதனால்தான் உங்களால் ஒலிகளைக் கேட்க முடிகிறது. ஒலிகள் ஆகாயத்தில் - தூய வெளியில் தோற்றுவிக்கப் படுகின்றன. உங்கள் காது உங்களுக்குள் இருக்கும் ஆகாயத்துடன் தொடர்பு மேற்கொள்கிறது. உங்களுடைய கண்கள் சூரியனுடன்

தொடர்பு கொள்கின்றன. உங்கள் காதுகள் ஆகாயத்துடன் - உலகத்துக்கு அப்பாற்பட்ட தூய வெளியுடன் தொடர்பு கொள்கின்றன. உங்களுடைய சமாதி (அமைதி நிலை)யை நீங்கள் ஆகாயத்துக்குக் கொண்டு செல்ல முடியுமென்றால் நீங்கள் கேட்க விரும்புவது எதுவாயினும் அதையெல்லாம் கேட்க முடியும்.

இது வியக்கத்தக்கதாயினும் அற்புதமல்ல. அது தொலைக்காட்சி, வானொலிப்பெட்டிகளின் பின்னே இருக்கும் அறிவியல் விதிகளைப் போல் ஏதோ ஒன்றைக் கொண்டிருக்கும். குறிப்பிட்ட ஓர் ஒத்திசைவு தேவைப்படும். உங்கள் காதுகள் ஆகாயத்துடன் ஒத்திசைவாக இருந்தால் சாதாரணமாய் கேட்க முடியாதவற்றையும் நீங்களே கேட்கத் தொடங்குவீர்கள். அடுத்தவர் எண்ண ஓட்டத்தையும் உங்களால் அறிந்துகொள்ள முடியும். அதுமட்டும் அல்ல, ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் வாய்விட்டு உரைக்கப்பட்ட சிந்தனைகளையும் நீங்கள் கேட்க முடியும். நீங்கள் புத்தரின் உரைகளை மறுபடியும் கேட்பீர்கள். கிருஷ்ண பகவான் அர்ஜுனனுக்கு வழங்கிய உபதேசத்தையும் நீங்கள் காது கொடுத்துக் கேட்க முடியும். இயேசுவின் மலைச் சொற்பொழிவையும் நீங்கள் கேட்கலாகும். ஏனெனில் தோற்றுவிக்கப்பட்டது எதுவாயினும் இடம் பெற்றிருக்கிறது ஆகாயத்தில், அது அங்கிருந்து விலகுவதில்லை, ஒரு நுட்பமான வழியில் அது பாதுகாக்கப்படுகிறது.

*வேதாந்தத்தில் இதனை விண்வெளிப் பதிவுகள் என்கிறார்கள். எலலாமும் அங்கே பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. திறவுகோலை நீங்கள் கண்டுபிடிக்க வேண்டும். தூயவெளியுடன் உங்கள் செவியைத் தொடர்புப்படுத்திச் சிந்திக்க அது சாத்தியம்.

உடம்புக்கும், தூயவெளிக்கும் உள்ள தொடர்பின் பேரில் சிந்தனையைச் செயற்படுத்துவதன் மூலமும், அதே சமயத்தில் தன்னை பஞ்சு போன்ற இலேசான பொருள்களுடன் அடையாளப் படுத்தியும் யோகியால் அண்டவெளியில் செல்ல முடியும்.

ஆகாயம் வடிவற்றதாய் இருக்கிறது, முடிவற்ற தன்மைகள் உங்களைச் சுற்றி இருக்கின்றன. ஆகாயம் என்கிற கடலில் உங்கள் சரீரம் ஓர் அலை. அது தோன்றுவதற்கு முன்னால் ஆகாயத்தில் எந்த அறிகுறியும் இல்லாமல் (unmanifested) இருந்தது. உங்கள் இறப்புக்குப்பின் அது மறுபடியும் அந்த ஆகாயத்தில் மறைந்து விடும்.

---

* *வேதாந்தம் (theosophy) - ஆழ்ந்த தியானத்தாலும், மெய்ம்மறந்த மகிழ்ச்சியாலும் கடவுளை நேரடியாக உணரும் அறிவு முறைமை.*

தற்போது அந்த அலை ஆகாயத்துடன் ஒன்று சேர்ந்திருக்கிறது. அது ஒன்றாகக் கட்டப்படாமலில்லை. உங்கள் விழிப்புணர்வை அலையிடம் கொண்டு செல்லுங்கள். அலைக்கும் கடலுக்கும் உள்ள தொடர்பை அறிந்து கொள்ளுங்கள். நீங்கள் தோன்றுவதும், மறைவதும் உங்கள் விருப்பத்தைப் பொறுத்தது.

ஒரு யோகியால் ஏக காலத்தில் பல இடங்களிலும் தன்னை வெளிப்படுத்திக் காட்ட முடியும். நீங்கள் அவற்றை விரும்பினால் அவையே தளைகளாகி விடும். உங்கள் பேராசை இவற்றை இலக்குகளாய் கொண்டு விடக்கூடாது. அவை தாமாக நிகழுமாயின் அவற்றை இறைவனிடம் சமர்ப்பித்து விடுங்கள். 'அவற்றை வைத்துககொண்டு நான் என்ன செய்யட்டும்?' என்று அவனிடம் சொல்லுங்கள். நீங்கள் அடைந்தது எதுவாயினும் அவற்றைத் துறந்தபடி இருங்கள். இன்னும் மிகுதியாக வந்தடையும். அவற்றையும் கொடுத்து விடுங்கள். கடவுளிடமே திருப்பிக் கொடுத்து விடுங்கள். எல்லாவற்றையும் நீங்கள் துறந்தபிறகு ஒரு முனைப்பகுதி வரும், அப்போது கடவுள் தானாகவே உங்களிடம் வருவார்.

ஒட்டுமொத்தமாய் விட்டுக்கொடுக்கிற கணத்தில் கடவுள் வருகிறார்.

எனவே, இவற்றிலெல்லாம் பேராசை கொண்டு விடாதீர்கள். நான் எந்த நுணுக்க விவரங்களையும் உங்களுக்குத் தரவில்லை. ஆக, நீங்கள் பேராசைக்காரராயிருந்தாலும் உங்களால் எதுவும் செய்ய முடியாது. அந்த விவரங்கள் தனித்திருக்கும்போது வழங்கப்பட்டவை. அந்த விவரங்கள் - ஒரு தனி நபரால் இன்னொரு தனி நபருக்குத் தரப்பட்டவை ஆகும். அந்த விவரங்களுக்காக நீங்கள் என்னிடம் வரவேண்டியதில்லை. நீங்கள் தயார் நிலையை அடைந்ததும் நீங்கள் எங்கிருந்தாலும் உங்களுக்குத் தரப்பட்டு விடும். உங்களுடைய தயார் நிலையின் விகிதப்படி தரப்படும். அதன்பின், உங்களுக்கு நீங்களே தீங்கு விளைவித்துக் கொள்ள மாட்டீர்கள், மற்றவர்களுக்கும் தீங்கு செய்ய மாட்டீர்கள்.

அந்த ஆபத்து எப்போதும் நினைவிருக்கட்டும்.

*'நான் வழி தவறியவனாய் உணர்கிறேன் - என்னுடைய பழைய வாழ்க்கைக்குத் திரும்ப வழியில்லை - பாலங்கள் தகர்ந்து விட்டிருக்கின்றன. எனக்கு முன்பாய் ஒரு வழியை நான் காணவில்லை.'*

ஒன்றுமே இல்லை. இல்லாத ஒன்றை வழியாய் கொள்கிறது மனம். தன்னுடைய குறிக்கோள்களையும், ஆசைகளையும் அடைதற்கான வழியைப் பற்றி அந்த மனம் கனவு கண்டபடி இருக்கிறது. பாதை என்பது ஆசை கொண்ட மனதின் நிழலேயன்றி வேறேயென்ன. முதலில் நீங்கள் ஒன்றுக்கு ஆசைப்படுகிறீர்கள். உண்மையில் ஆசை என்பது வருங்காலம் பற்றியது. அந்த எதிர்காலம் இன்னும் வந்தபாடில்லை. இருக்கிற ஒன்றை இல்லாத ஒன்றுடன் எப்படி இணைப்பது? அந்நிலையில் ஒரு வழியை நீங்கள் தோற்றுவிக்கிறீர்கள். அது கற்பனை. இல்லாத ஒன்றை இருப்பதாய் எண்ணிக் கொள்கிற மாயை. ஆனால் அந்த முறையில்தான் இல்லாத ஒன்றுடன் நீங்கள் ஒன்றாகச் சேர வேண்டியிருக்கிறது. அதன்பிறகு பயணத்தை நீங்கள் தொடங்குகிறீர்கள்.

எங்கேயும் போவதற்கில்லை. பிறகெதற்கு வழி தேவைப்படப் போகிறது. நீங்கள் முன்பே அங்கிருக்கிறீர்கள். அது முயன்று அடையப்பட வேண்டிய ஒன்றல்ல. அது முன்பே உங்களுக்குக் கொடுக்கப்பட்டு விட்டது. ஆழ்ந்து நோக்கினால் மதம் ஒரு பாதையல்ல, அது ஒரு மெய்யுணர்தல், வெளிப்படுத்துகை அவ்வளவே. நீங்கள் முன்பே அங்கிருக்கிறீர்கள் என்பதை உணர்த்துதல். உங்களுடைய விருப்பமும் ஆசையும் உங்கள் இருப்புணர்வின் இயல்பை அறிந்துகொள்ள இடமளிப்பதில்லை.

ஆக, சாதகமான பழைய பாலங்கள் தகர்க்கப்பட்டு விட்டன. வழியேதுமில்லை, முன்னோக்கிச் செல்ல வழி ஏதுமில்லை என்றுதான் படுகிறது. அதைத்தான் நான் உங்களுக்குச் செய்ய விரும்புகிறேன். அத்தனை வழிகளையும் நான் இல்லாமல் செய்ய விரும்புகிறேன். வழியற்றவராய், எங்கே போவதென்று தெரியாமல், நீங்கள் உள்ளே

போவீர்கள். உங்களிடமிருந்து தப்பிப்பதற்கான சாத்தியங்களையும், வழிகளையும் நான் எடுத்துக்கொண்டு விட்டேன். நீங்கள் என்ன செய்வீர்கள். நீங்கள் நீங்களாகவே இருப்பீர்கள்.

கொஞ்சம் சிந்தியுங்கள். அதன்பேரில் தியானியுங்கள். அது ஆசை, மற்றவர்களுடனான போட்டி அதுவே ஒட்டுமொத்த மாயையையும் தோற்றுவித்தது. நீங்கள் எப்போதும் போட்டி போட்டுக் கொண்டிருக்கிறீர்கள். வேறொருவர் உங்களுக்கு முன்பாய் இருக்கிறார். நீங்கள் அவரைப் பின்னிடச் செய்ய விரும்புகிறீர்கள், அவரை முந்திச்செல்ல விரும்புகிறீர்கள். நீங்கள் வேகமாய் ஓடுகிறீர்கள். உங்களால் முடிந்ததையெல்லாம் நேர்மையானது, நேர்மையற்றது, சரியானது, தவறானது என்று எல்லாவற்றையும் செய்து வைக்கிறீர்கள். நீங்கள் எல்லாவற்றையும் மறந்து விடுகிறீர்கள். அவரை அழிக்க விரும்புகிறீர்கள். அவர் தோற்றதாய் நிருபிக்க வேண்டும் உங்களுக்கு.

இந்த முறையில் உங்கள் உள்ளார்ந்த மெய்ம்மை (reality)யை நீங்கள் அடைவதற்கில்லை. இந்த முறையில் உங்கள் அகந்தையை வேண்டுமானால் இன்னும் கொஞ்சம் நீங்கள் அலங்கரித்துக் கொள்ள லாம். நீங்கள் ஒன்றைத் தோற்கடித்தீர்கள். ஆயிரக்கணக்கானவற்றைத் தோற்கடித்தீர்கள், நீங்கள் இலட்சக்கணக்கானவற்றைத் தோற்கடித் தீர்கள். நீங்கள் மேலும் மேலும் செயல்பட்டுக் கொண்டேயிருக் கிறீர்கள். மேலும் மேலும் அகந்தை குவிந்தபடி இருக்கிறது. நீங்கள் இன்னும் வழி தவறியவராவீர்கள். நீங்கள் காட்டுக்குள் தொலைந்து விடுவீர்கள்.

உலகில் போட்டி என்பது சமயத்துக்கு எதிரான (irreligious) செய்கைகளில் ஒன்றாகும். ஆனால், அதைத்தான் எல்லோரும் செய்து கொண்டிருக்கிறார்கள். ஒருவருக்கு பெரிய வீடு இருக்கிறது. நீங்கள் உடனே மிகப்பெரிய ஒன்றுக்கு ஆசைப்படுகிறீர்கள். ஒருவரிடம் அழகான கார் இருக்கிறது. நீங்கள் உடனே அதைவிடப் பெரிய அழகான காரை வாங்க ஆசைப்படுகிறீர்கள். ஒருவருக்கு அழகான மனைவி இருக்கிறாள் அல்லது ஒருவருக்கு அழகான முகம் அல்லது அழகான குரல் இருக்கிறது. உடனே ஆசை தோன்றி விடுகிறது.

மற்றவர்களுடன் போட்டி போட வேண்டும் என்கிற எண்ணத்தில் ஆசை உண்டாகிறது. மற்றவர்களுக்கு எதிராக நீங்கள் ஒன்றை நிரூபித்துக்காட்ட வேண்டியிருக்கிறது. அதற்காக நீங்கள் போராடி ஒன்றை முயன்று அடைய வேண்டியதாகிறது. அது என்னவென்று

அறியாமலே ஓர் இருண்ட பள்ளத்தாக்கினுள் நீங்கள் போய்க் கொண்டே இருக்கிறீர்கள். அங்கே ஏதோ ஓர் இடத்தில் குறிக்கோள் இருக்கும் என்று.

பல பிறவிகளாய் நீங்கள் போய்க்கொண்டிருக்கக் கூடும். இதுவரைக்கும் நீங்கள் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் எங்கேயும் போய்ச் சேருவதில்லை. எப்போதும் ஓடிக்கொண்டிருப்பீர்கள், ஒருபோதும் சென்றடைகிறதில்லை. காரணம், அந்தக் குறிக்கோள் உங்களுக்குள் இருக்கிறது. ஆனால், அதைக் காண்பதற்கு எல்லாப் போட்டிகளையும், பேரார்வங்களையும் நீங்கள் விட்டொழிக்க வேண்டும்.

அத்துடன் ஒன்றை நினைவில் வையுங்கள், உங்கள் போட்டியை நீங்கள் ஒரு புதிய போட்டியாய் மாற்றிக்கொள்வது ரொம்ப எளிது. பழையதை விட்டுவிட்டு, புதிய ஒன்றை அதே முறையில், அதே உன்னத நோக்குடன் நீங்கள் பெற முடியும். உலகதகில் பேராவல் கொண்டிருக்கிறீர்கள் நீங்கள். அதனைக் கைவிடுகிறீர்கள். அதன்பிறகு மதத்தின் பெயரால், ஆன்மிகத்தின் பெயரால் பேராவல் கொண்டு விடுகிறீர்கள். அப்போது மறுபடியும் அதே அகந்தை உள் நுழைந்து விடுகிறது.

நான் கேட்டறிந்த ஒரு குட்டிக்கதை. அதைக் கவனத்தோடு கேளுங்கள்.

சகோதரர்கள் இருவர் ஒரே சமயத்தில் இறந்து விட்டனர். விண்ணகத்தின் நுழைவாயிலில், அருட்தொண்டரான பீட்டர் அவர்களை நேர்காண வருகிறார்.

அவர் முதலாம் சகோதரனிடம், ‘மண்ணுலகில் வாழ்ந்தபோது உன்னுடைய நடத்தை தகுதியாய் இருந்ததா?’ என்று கேட்டார்.

அவன் சொன்னான், ‘ஆமாம், புனிதப் பெருந்தகையீர், நான் நேர்மையாகவும், தன்னடக்கத்துடனும், கடினமாய் உழைத்து வாழ்ந்தேன். நான் பெண்களிடம் எந்தக் குளறுபடியும் வைத்துக் கொண்டதில்லை’ என்று.

‘நல்லது இளைஞனே. நீ நல்லவிதமாய் நடந்து கொண்டதால் இந்த வெகுமதி உனக்கு வழங்கப்படுகிறது’ என்று சொல்லி வெண்ணிற ரோல்ஸ்ராய் காரை அவனுக்கு வழங்கினார்.

பிறகு, மற்றொரு சகோதரனை அழைத்து, ‘உன்னைப் பற்றிச் சொல்’ என்றார்.

அவன் பெருமூச்சு விட்டபடி, 'நல்லது, என்னுடைய சகோதரனில் இருந்து முற்றிலும் மாறுபட்டவன் நான். வாழ்க்கை முழுதிலும் நான் வஞ்சகனாய், குடிகாரனாய், சோம்பேறியாய் இருந்தேன். பெண்களிடம் கருணையற்ற குடிகோலனாய் நடந்து கொண்டிருக்கிறேன்' என்றான்.

'நல்லது குழந்தாய். இளைஞர்கள் என்றால் அப்படி இப்படி இருக்கத்தான் செய்வார்கள். உன்னுடைய செயலுக்கேற்ப உனக்குரியதைப் பெற்றுக்கொள்' என்று சொன்ன புனித பீட்டர் அவனுக்கு சின்ன மாரீஸ் மைனர் காரைக் கொடுத்தார்.

சகோதரர்கள் இருவரும் தங்கள் கார்களில் ஏறியமரும்போது, அந்தக் குறும்புக்காரன் சிங்கம் போல் கர்ஜித்து உரக்கச் சிரித்தான்.

'அப்படி என்னத்தைக் கண்டுட்டே' என்று கேட்டான் அடுத்தவன்.

'இப்பத்தான் வட்டார மதகுரு சைக்கிள்ல போறதைப் பார்த்தேன்' என்றான் அவன்.

உங்களுடைய ஒட்டுமொத்த அனுபவமும் எப்போதுமே ஒப்பீட்டுத் தன்மை உடையதாகத்தான் இருக்கிறது. நீங்கள் ரோல்ஸ்ராய்ஸ் கார் வைத்திருப்பவனுக்குப் பின்னாலும், சைக்கிள் வைத்திருப்பவருக்குப் பின்னாலும் இருப்பதாய் ஓர் உணர்வு. நீங்கள் எங்கிருக்கிறீர்கள் என்பது பற்றிய உணர்வை ஒப்பிடுதல் உங்களுக்குத் தருகிறது. நீங்கள் இருக்கும் இடத்தை மிகச்சரியாகவே அது தருகிறது.

வரைபடத்தில் வெகு துல்லியமாகவே உங்களை நீங்கள் சுட்டிக்காட்ட முடியும். ஆனால், நீங்கள் எங்கிருக்கிறீர்கள் என்பதை அறிவதற்கு அது சரியான வழியாகாது. காரணம், வரைபடத்தில் நீங்கள் எங்கேயுமில்லை. வரைபடம் மாயை சார்ந்ததாய் (இல்லாத ஒன்றை இருப்பதாய் காட்டுவது) இருக்கிறது. நீங்கள் வரைபடத்துக்கப்பால் எங்கோ இருக்கிறீர்கள். உங்களுக்கு முன்னால் யாருமில்லை, உங்களுக்குப் பின்னாலும் யாருமில்லை. நீங்கள் தனியாக இருக்கிறீர்கள். மிகப்பெரிய அளவிலான தனிமை. நீங்கள் இணையற்றவராய் இருக்கிறீர்கள். நீங்கள் ஒருவர் மட்டுமே யாருடைய துணையுமில்லாமல் இருக்கிறீர்கள். உங்களோடு ஒப்பிடும்படியாய் அங்கே எவரும் இல்லை.

அதனால்தான் மக்கள் உள்நோக்கிச் செல்வதற்கு அஞ்சு கிறார்கள், காரணம் தங்கள் தனிமைக்குள் அவர்கள் செல்கிறார்கள். அங்கே வழிகள் மறைகின்றன. நீங்கள் இருக்குமிடம் பற்றிய

சாத்தியங்களும் மறைகின்றன. எல்லா வரைபடங்களும் - கற்பனையானது, நற்பண்புகளுக்குரியது, அரசியல் சார்ந்தது, சமுதாயம் சார்ந்தது என்று எல்லாமும் மறைந்து விடுகிறது. திடீரென்று உங்களுடைய இருப்புணர்வு என்கிற வனத்திடை இருக்கிறீர்கள், நீங்கள் எங்கிருக்கிறீர்கள் என்பது உங்களுக்கே தெரியவில்லை. மிகச்சரியாக இதுதான் நடந்தது. 'நான் காணாமல் போனேன் - என்னுடைய பழைய வாழ்க்கைக்குத் திரும்ப வழியே இல்லை - பாலங்கள் தூள் தூளாய் உடைந்து விட்டன. எனக்கு முன்பாய் ஒரு வழியை நான் காணவில்லை.'

நான் இதனையே தியானத்தின் தொடக்கம் என்கிறேன், உங்கள் இருப்புணர்வின் நுழைவாயிலுக்கான தொடக்கம் என்கிறேன். அச்சமுற்று விடாதீர்கள். இல்லையேல், மறுபடியும் நீங்கள் கனவுகளுக்கு இரையாக வேண்டியதுதான். அதனுள் அஞ்சாமல், தைரியமாக, துணிவுடன் பிரவேசியுங்கள். நீங்கள் என்னைப் புரிந்து கொண்டால் அது கடினமாய் இருக்காது. வாய்விட்டுச் சொல்லாத ஒரு புரிதல் தேவை.

உண்மையில் நீங்கள் எங்கிருக்கிறீர்கள் என்பதை இப்போது விட்டால் ஒருபோதுமே முடியாமல் போய்விடும். நீங்கள் யார் என்பதை அறிய உங்களால் முடியும். ஆனால் எங்கிருக்கிறீர்கள் என்பதை ஒருபோதும் அறிய முடியாது. காரணம் 'எங்கு' என்பது எப்போதுமே மற்றவற்றுடன் தொடர்புடையதாய் இருப்பதுதான். 'யார்' என்பது உங்கள் இயல்பு, 'எங்கு' என்பது மற்றொன்றுடன் தொடர்புடைய ஒன்று.

இப்போதிருந்து கடந்த காலத்துடன் எந்த இணைப்பும் இருக்காது. தற்போது எதிர்காலத்துடனான இணைப்புக்கு எந்தவொரு சாத்தியமும் இல்லை என்பதும் உண்மை. கடந்த காலம் போய்விட்டது. எதிர்காலமோ இன்னும் வந்தபாடில்லை. கடந்த காலம் நினைவாகவே இருக்கிறது. எதிர்காலம் நம்பிக்கையன்றி வேறு எதுவாகவும் இல்லை. கடந்த காலம் ஒரு தகவல் குறிப்புரை (reference)யாகவும், எதிர்காலம் ஒரு கனவாகவும் இருக்கிறது. நீங்கள் நிகழ்காலத்தில் வாழ்ந்து கொண்டிருப்பவர்... நிகழ்காலம் மிகப்பரந்தது, கடலில் ஒரு துளி நீர் காணாமல் போகிற மாதிரி காணாமல் போய்விடும் அளவிற்கு.

அதற்குத் தயாராயிருங்கள். கரைந்து விடவும், அடியோடு இல்லாமல் போகவும் தயாராயிருங்கள்.

மனம் கடந்து போனவற்றையும், அடையாளத்தையும், தெளிவையும் பெரிதும் விரும்பி நிற்கும் – நீங்கள் எங்கிருக்கிறீர்கள், நீங்கள் யார் என்பதை. ஆனால், அவை எல்லாமே விளையாட்டுகள், வார்த்தை விளையாட்டுகள்.

நான் கேட்டறிந்த ஒரு குட்டிக்கதை.

அமெரிக்காவிற்குப் பயணம் சென்றிருந்த ஆங்கிலேயன் ஒருவன், அந்த நாட்டுக்காரனிடம் குறிப்பிட்டான். 'சிறப்பான ஒரு நாடு உங்களுடையது. இனிமையான பெண்கள், பெரிய நகரங்கள், ஆனால் சமுதாயத்தில் மிக உயர்ந்தவர்களைத்தான் இங்கே காணோம்' என்று.

அமெரிக்க கேட்டான். 'என்ன இல்லை?' என்று.

'உயர்குடியினரைக் காணோம்.'

'அப்படியென்றால்?' அமெரிக்கன் கேட்டான்.

'ஓ, தெரிஞ்சுக்க. நான் சொல்கிறவர்கள் எதையும் செய்ய மாட்டார்கள். அவர்களுடைய பெற்றோர்களும் எதையும் செய்திருக்க மாட்டார்கள், அவர்களுடைய பாட்டன்களும் ஒன்றும் செய்யாமல் இருந்திருப்பார்கள் – அவர்களுடைய குடும்பத்தினர் எப்போதுமே ஓய்வை அனுபவித்துக் கொண்டிருப்பார்கள்' என்றான் ஆங்கிலேயன்.

'அடடே, அந்த மாதிரி ஆசாமிகளும் இங்கே இருக்காங்க. நாங்க அவங்களை நாடோடிகள்னு சொல்வோம்' என்றான் அமெரிக்கன்.

ஆனால், நீங்கள் ஒருவரை உயர்குடியைச் சேர்ந்தவர் என்று சொல்கிறபோது அது ரொம்பவும் கம்பீரமாய் தெரிகிறது. ஒருவரை நாடோடி என்கிறபோது எவரெஸ்டு சிகரத்தில் இருந்து திடீரென ஓர் ஆழமான பள்ளத்தாக்கில் விழுந்த மாதிரி இருக்கிறது. உயர்குடியினர் நாடோடிகளாய் இருந்திருக்கிறார்கள். நாடோடிகள் தங்களை உயர்வாய் எண்ணிக் கொள்கிறார்கள்.

இரண்டு நாடோடிகள் ஒரு பவுர்ணமி இரவில் ஓய்வாக அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர். முதலாமவன் கேட்டான், 'உங்களுடைய வாழ்க்கையில் நீ என்னவாக வர விரும்புகிறாய்?' என்று. அடுத்தவன் சொன்னான். 'நான் பிரதமராக விரும்புகிறேன்' என்று. முதலாமவன் கேட்டான், 'என்னது, உன்னுடைய வாழ்க்கையில் உன்னத நோக்கம் எதுவும் இல்லையா?' என்று.

ஒரு நாடோடி பிரதமராவதைப் பற்றிச் சிந்திக்கிறான். நாடோடிகளும் தங்களுக்கென்று மதிப்புகள் (values) வைத்திருக்கிறார்கள்.

உங்களுடைய பழைய குறிப்புரைகளை நீங்கள் கூர்ந்து கவனிப்பீர்களாயின், அவையெல்லாம் என்ன? வார்த்தை விளையாட்டுகள் தாம். சிலர் தங்களைப் பிராமணர் என்று சொல்லிக் கொள்கிறார்கள். காரணம், சமூகம் நான்கு வகுப்புகள் இருப்பதாய் ஏற்றுக் கொண்டிருக்கிறது. இந்தியாவில் பிராமணர் உயர்ந்த வகுப்பினராயும், சூத்திரர் தாழ்ந்த வகுப்பினராயும் கருதப்படுகின்றனர். இப்படியொரு சாதிமுறை - செயற்கைச் சமூகப் பிரிவினை உலகத்திலேயே கிடையாது. இந்தியாவில் மட்டுந்தான் உள்ளது. அது கற்பனை என்பதே உண்மை. யார் பிராமணர் என்பதை அவராகச் சொல்லாமல் நீங்கள் எப்படி அறிவீர்கள்? இரத்தம் வெளிக்காட்டுவதில்லை, எலும்புகள் வெளிப்படுத்துவதில்லை - எவ்வித பரிசோதனையும் இல்லை, எக்ஸ்-ரே இல்லை. யார் பிராமணர், யார் சூத்திரர் என்று நிரூபிப்பதற்கு. ஆனால், இந்தியாவில் இந்த ஆட்டம் ரொம்ப காலமாகவே நடந்து வருகிறது.

அது மனதில் ஆழமாய் வேரூன்றி இருக்கிறது. ஒருவர் தம்மை பிராமணர் என்று சொல்கிறபோது அவருடைய கண்களையும், மூக்கையும் கவனியுங்கள் - அகந்தை முகமெங்கும் பிரகாசிக்கும். தம்மை சூத்திரர் என்று ஒருவர் சொல்கிறபோது அவரைக் கவனியுங்கள். அந்த வார்த்தையிலேயே மதிப்பு குறைவாய் தெரிவார். அந்த வார்த்தையே அவருக்குக் குற்ற உணர்வை ஏற்படுத்தி விடுகிறது. இருவருமே மனித இனத்தைச் சேர்ந்தவர்கள்தாம். ஆனால், சமூகம் ஏற்றுக்கொண்ட முத்திரையே மனித இன நலனை அழிக்கப் போதுமானதாய் இருக்கிறது.

உங்களைச் செல்வந்தர் என்று குறிப்பிடுகிறபோது நீங்கள் எதனைக் கருத்தில் கொள்கிறீர்கள்? வங்கியில் ஒரு கணக்கு இருக்கிறது உங்களுக்கு. ஆனால் அதுவும் ஒரு விளையாட்டுதான், பணம் ஒரு விளையாட்டு. காரணம், நம்பக்கூடிய ஒன்றாய் சமூகம் அதனை ஏற்றுக் கொண்டிருக்கிறது, ஆட்டம் தொடர்கிறது.

தன்னுடைய தோட்டத்தில் ஏதோ ஓரிடத்தில் தங்கத்தைப் புதைத்து வைத்த ஒரு கருமியைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். தினமும் அவன் அங்கே சென்று, மண்ணைத் தோண்டி தன்னுடைய தங்கக்கட்டிகளைப் பார்த்தபடி இருப்பான். பிறகு அவற்றை இருந்தபடியே வைத்து மூடி விடுவான். அவன் அங்கிருந்து திரும்பும்போது அவனுடைய முகத்தில் புன்சிரிப்பும், சந்தோஷமும் போட்டியிடும். அடுத்த வீட்டுக்காரனுக்குச் சந்தேகம் - என்ன இந்த

ஆள் தினமும் சொல்லி வைத்த மாதிரி காலையில் அதே நேரத்துக்கு வந்து தியானம் பண்ணுகிற மாதிரி உட்கார்ந்து கொண்டு கொஞ்சம் மண்ணைத் தோண்டுகிறான். என்னவாக இருக்கும் என்று யோசித்தான். அந்தக் கருமி காலைச் சூரிய ஒளியில் பளபளக்கும் தங்கக்கட்டிகளைப் பார்த்துவிட்டுத்தான் நாள் முழுக்க சந்தோஷமாய் இருக்கிறான் என்பதைக் கண்டுகொண்டான்.

ஓர் இரவு நேரத்தில் அண்டை வீட்டானின் தங்கக்கட்டிகளை அப்புறப்படுத்தி விட்டு, வெறும் செங்கற்களை வைத்து மண்ணைப் போட்டு மூடினான். மறுநாள் காலை கருமி வந்தான். தன்னுடைய தங்கக்கட்டிகள் களவு போனதைக் கண்டு அழுது புலம்பினான். கண்ணீர் விட்டுக் கதறினான். பக்கத்து வீடடுக்காரன் தன்னுடைய தோட்டத்தில் நின்றபடி கேட்டான். 'ஏன், எதற்காக அழுகிறாய்?' என்று. அவன் சொன்னான். 'நான் கொள்ளையடிக்கப்பட்டு விட்டேன். என்னுடைய இருபது தங்கக்கட்டிகளும் கொள்ளை போயிற்று' என்று. பக்கத்து வீட்டுக்காரன் சொன்னான். 'வருத்தப்படாதே நீ ஒருபோதும் அவற்றைப் பயன்படுத்தப் போவதில்லை. இந்தச் சாதாரண செங்கற்களையே பார்த்து மகிழ்ந்து கொண்டிரு! காலையில் வந்து மண்ணைத் தோண்டு, அவற்றைப் பார். சந்தோஷப்படு, திரும்பிச்செல். காரணம், நீ ஒருபோதும் அவற்றைப் பயன்படுத்தியதில்லை என்கிறபோது தங்கமாய் இருந்தால் என்ன, களிமண்ணாய் இருந்தால் என்ன, அதிலென்ன வித்தியாசம் இருக்கப் போகிறது?' என்று.

உங்களிடம் பணம் இருக்கலாம். அது எந்தவொரு வித்தியாசத்தையும் ஏற்படுத்தி விடாது. அது இல்லாமலும் நீங்கள் இருக்கலாம். அதுவும் எந்தவொரு வித்தியாசத்தையும் உண்டுபண்ணி விடாது. சமூகத்திடம் இருந்து பல அங்கீகாரங்களையும், பட்டங்களையும், விருதுகளையும் நீங்கள் பெற்றிருக்கலாம். பாராட்டுகளையும், சான்றிதழ்களையும் அது உங்களுக்கு வழங்கியிருக்கலாம். இது எந்த ஒன்றையும் குறிப்பதாகாது – இது ஒரு விளையாட்டு. இந்த ஆட்டத்தை நீங்கள் கூர்ந்து கவனித்தால் புரிய வரும். இந்த ஆட்டத்தில் உங்களை ஒருபோதும் நீங்கள் கண்டுகொள்ள முடியாது என்பதை... சமுதாயம் நீங்கள் யார் என்பதற்கு மாயை சார்ந்த கருத்துகளை வழங்கி உங்களைத் தொடர்ந்து முட்டாளாக்கிக் கொண்டிருக்கும். நீங்களும் அவற்றில் நம்பிக்கை வைத்திருப்பீர்கள். அவற்றை நம்பிக் கொண்டிருப்பீர்கள். உங்களுடைய ஒட்டுமொத்த வாழ்க்கையும் வீணாகிவிடும்.

ஆக, தியானம் முதல்முறையாய் உங்களுக்குள் உண்மையிலேயே வேலை செய்யத் தொடங்கி உங்களை அழித்தொழிக்கத் தொடங்குகிறபோது உங்களுடைய மதம் மறைகிறது. நாட்டுரிமை (nationality) மறைகிறது. உங்களுடைய பெயர் மறைகிறது. உங்களுடைய சாதி மறைகிறது. மெள்ள மெள்ள நீங்கள் நிர்வாணப்பட்டு, உங்களுடைய தூய இருப்புணர்வோடு மட்டுமே இருப்பீர்கள். தொடக்கத்தில் அது அச்சமூட்டுவதாயிருக்கும். காரணம், நீங்கள் காலூன்ற ஓர் இடத்தைக் கண்டுகொண்டிருக்க மாட்டீர்கள். தொடர்ந்து அகந்தையோடு இருப்பதற்கு எந்தவொரு வழிவகையையும் உங்களால் காண முடிந்திருக்காது. எவ்வித உதவியும் இல்லாமல், எல்லா ஆதாரங்களும் பின்னடைய, உங்களுடைய கட்டமைப்பு சரியத் தொடங்குகிறது.

அது சரிந்தால் என்ன. ஒருபக்கமாய் நின்று உரக்கச் சிரித்து விடுங்கள். வாய்விட்டுச் சிரியுங்கள். திரும்பிச் செல்ல் வழியேயில்லை என்பதை அறிகிறபோது.

உண்மையில் திரும்பிச் செல்வதற்கு ஒரு வழி இல்லைதான்; மக்கள் அப்படித்தான் நம்புகிறார்கள். யாருமே திரும்பிச்செல்ல முடியாது. உரிய நேரத்தில் திரும்பிச் செல்ல சாத்தியமேயில்லை. நீங்கள் மீண்டும் ஒரு குழந்தையாக முடியாது. உங்கள் தாயின் கருவறைக்கு உங்களால் திரும்ப முடியாது. முடியும் என்கிற அந்த மாயை உங்களை வளரவிடாது.

தங்கள் காதல் விவரங்களில்கூட தாயைத் தேடுகிறவர்கள் இருக்கிறார்கள். அது எவ்வளவு முட்டாள்தனம். நூற்றுக்குத் தொண்ணூற்றியொன்பது ஆண்கள் தங்கள் தாயை அடையும் எண்ணத்தில் இருக்கிறார்கள். தாயைக் கடந்த காலத்திலேயே இழந்தாயிற்று. தற்போது அவர்கள் தங்களுடைய தாயின் கருவறையில் மீண்டும் நுழைய முடியாது. உங்களை நீங்கள் கவனித்ததுண்டா? உங்கள் பிரியமானவளின் மடியில் படுத்திருக்கிற போது, உங்களுடைய தாயைக் கண்டடைந்து விட்டதாய் உங்களுக்குள் ஒரு கற்பனை எழுகிறது.

பெண்களின் மார்பகத்தில் ஆண்களுக்கு ஏன் இத்தனை ஆர்வம் உண்டாயிற்று? அந்த ஆர்வம் அடிப்படையில் தாயைத் தேடிக் கொண்டிருப்பது, காரணம் குழந்தை தன்னுடைய தாயின் மார்பகத்தைக் கொண்டே தாயை அறிகிறது. அவன் தாயை இன்னமும் விரும்பிக் கொண்டிருக்கிறான். அதனால்தான் பெரிய மார்பகத்துடன்

கூடிய அழகான பெண்ணிடம் ஆண்கள் மிகவும் கவரப்பட்டு விடுகிறார்கள். தட்டையான மார்பகம் உடைய பெண், கவர்ச்சியற்றவளாகி விடுகிறாள். ஏன், எது தவறாகி விட்டது? பெண்ணிடம் எந்தக் கோளாறுமில்லை. மனதில்தான் கோளாறு. நீங்கள் தாயைத் தேடுகிறீர்கள், உங்களுடைய கற்பனைக்கு ஏற்ற மாதிரி அந்தப் பெண் இருக்கவில்லை. அவள் உங்களுடைய மாயைக்குப் பொருந்துகிறவளாயில்லை. அவள் எப்படி உங்களுடைய தாயாக முடியும்? அவளுக்கு எழுச்சியான மார்பகங்கள் இல்லையே. மார்பகங்கள் அடிப்படையில் இன்றியமையாதவை.

கஜுராஹோ அல்லது பூரியில் உள்ள இந்தியக் கோயில்களுக்கு நீங்கள் போகிறீர்கள். சாத்தியப்படவே முடியாத அத்தனை பெரிய மார்பகங்களைப் பார்க்கிறீர்கள். இந்தப் பெண்கள் எப்படி நடக்கிறார்கள்? பாரம் அதிகமாயிருக்கிறதே. ஆனால், அது தேடலையல்லவா வெளிக்காட்டுகிறது, தாயை மறுபடியும் கண்டடைகிற தேடல். அந்நிலையில் உங்கள் காதல் வாழ்ககை ஓர் இடர்ப்பாடாகி விடுகிறது. காரணம், நீங்கள் நேசிக்கிற அந்தப்பெண் ஒரு குழந்தையைத் தேடிக் கொண்டிருப்பதில்லை. அவள் கவனமாய் தேடிக்கொண்டிருப்பது ஒரு நண்பனை, பிரியத்துக்குகந்தவனை, ஒரு காதலனை. அவள் உங்களுடைய தாயாகி விட விரும்பவில்லை. அவள் உங்களுடைய சிநேகிதியாக, உங்கள் வேலைகளிலும் துன்பங்களிலும் பங்கு கொள்கிறவளாக, உங்களுடைய வாழ்க்கைத் துணைவியாகவே விரும்புகிறாள். அவளை உங்களுடைய தாயாகும்படி, தாயைப்போல் உங்களிடம் பரிவாக நடந்துகொள்ளும்படி நீங்கள் வேண்டுகிறீர்கள். ஒரு தாயை நீங்கள் எதிர்பார்த்தபடி இருக்கிறீர்கள், அவளோ உங்களை ஏமாற்றத்துக்குள்ளாக்கிக் கொண்டிருக்கிறாள். மோதல் உருவெடுக்கிறது.

யாரும் திரும்பிச் செல்ல முடிவதில்லை. எது கடந்து போயிற்றோ அது கடந்ததுதான். அதை மீண்டும் பெறுவதற்கில்லை. இந்தப் புரிதல் உங்களை வளர்ச்சியுற்றவராக்குகிறது. அந்நிலையில் நீங்கள் அதைப்பெரிதும் விரும்பி நிற்பதில்லை.

நீங்கள் கடந்த காலத்தை விரும்புபவராயின், எதிர்காலத்தையும் விரும்புகிறவராகவே இருப்பீர்கள். உங்களுடைய எதிர்காலம் என்பது மாற்றியமைத்த, புதுப்பிக்கப்பட்ட கடந்த காலமே ஆகும். கடந்த காலத்தில் உங்கள் மகிழ்ச்சிக்குரியவைகளாய் இருந்ததை மட்டுமே நீங்கள் எதிர்காலத்திலும் பெறுவதற்கு ஆசைப்படுகிறீர்கள். எதிர்காலம்

என்பது, மறுபடியும் வண்ணம் பூசப்பட்ட கடந்த காலமே ஆகும். அது உங்கள் இதயத்தின் ஆசைக்கு நெருக்கமாய் இருப்பது. வேதனையளித்த நிகழ்ச்சிகள் விடப்பட்டன. களிப்பூட்டுகிறவை இயற்கையை மீறி பெரிதாக்க (exaggerate)ப்பட்டன. உங்கள் கடந்த காலத்தை நீங்கள் கைவிட்டதுமே, உங்களுடைய எதிர்காலத்தையும் நீங்கள் கைவிட்டு விடுகிறீர்கள். காரணம், அது சாயம் பூசிக்கொண்ட கடந்த காலமேயாகும். அப்போது நீங்கள் இந்தக் கணத்தில் வாழ்பவராகி விடுவீர்கள்.

அப்போது நான், 'உங்களுடைய முற்றத்தில் இருக்கும் சைப்ரஸைப் பாருங்கள்' என்று சொல்லக்கூடும். அல்லது, என்னுடைய கையில் ஒரு பூவை வைத்துக்கொண்டு, அதைப் பாருங்கள் என்று சொல்வேன். இந்தக் கணத்தில் நீங்கள் அதைப் பார்த்தால், ஒரு இரகசியமான நடப்பு உங்களுக்குள் தொடங்கும். உங்களுக்குள்ளே ஒரு பூ மலரத் தொடங்கும். உங்கள் இருப்புணர்வெங்கும் ஏதோ ஒன்று பரவும் – பிரபஞ்ச இருப்பு சார்ந்த ஒன்று (உளதாய் இருப்பது). அது ஒன்றும் கனவல்ல, உருவெளித் தோற்றம் (hallucinatory) சார்ந்ததல்ல. அது எண்ணங்களையோ, சிந்தனைகளையோ கற்பனைகளையோ கொண்டிருக்கவில்லை. எதிலும் மிகையின்றி எளிமையான ஒரு வெற்றிடம் (austere-emptiness) நேர்த்தியான முற்றிலும் வெறுமையான ஒன்று.

அச்சமுறாதீர்கள். அவ்விதமாகவே ஒருவர் நிகழ்காலத்தை எதிர்கொள்ளவும், ஒருவர் தன்னை எதிர்கொள்ளவும் வேண்டியிருக்கிறது.

***உங்கள் இருவரில் யாரும் சாதனத்துக்கான முக்கியத் திறவுகோலை எங்களுடன் பகிர்ந்துகொள்ளத் தயாராக இல்லை என்கிறபோது, பதஞ்சலி யோக சூத்திரம் எழுதியதும், நீங்கள் அதன்பேரில் உங்கள் கருத்துகளைத் தெரிவிக்க முற்பட்டதும் எதற்காக?***

முக்கியமான திறவுகோல்கள் பகிர்ந்து கொள்ளக் கூடியவை என்றாலும் அதுபற்றிப் பேச முடியாது. பதஞ்சலி இந்தச் சூத்திரங்களை எழுதியிருப்பதால் முக்கியத் திறவுகோல்களை அவர் உங்களுடன் பகிர்ந்து கொள்ள முடியும். ஆனால், அந்தத் திறவுகோல்களை சூத்திரங்களின் அளவுக்கு குறைத்துக்கொண்டு விட முடியாது. சூத்திரங்கள் அறிவுமுகவுரை மாதிரி. உண்மையான விஷயத்துக்கு அது ஒரு முன்னுரை எனலாம். பதஞ்சலியின் யோக சூத்திரங்கள்

அவர் செலுத்த விரும்பியதற்கு ஒரு முன்னுரை, அவ்வளவுதான். அது வெறும் அறிமுகவுரை. ஒன்று சாத்தியப்படுவதற்கான யோசனையை அது வழங்குகிறது. அது உங்களை நம்பிக்கை உடையவராக்குகிறது. அது ஒரு கண நேரத் தோற்றத்தை, நம்பிக்கையுணர்வை (promise) உங்களுக்கு வழங்குகிறது. அந்நிலையில் பதஞ்சலிக்கு நெருக்கமாய் வர நீங்கள் நிறையவே செய்ய வேண்டியிருக்கும்.

ஆழ்ந்த நெருக்கத்தின் பேரிலேயே அந்தத் திறவுகோல்கள் உங்களிடம் ஒப்படைக்கப்படுகின்றன. அதனால்தான் இந்த யோக சூத்திரங்கள் பற்றி சொற்களால் எண்ணங்களைத் தெரிவிக்க முற்பட்டது. அது உங்களை ஈர்த்து, என் பக்கம் கொண்டு வருவதற்காகத்தான், அவ்வாறாக நீங்கள் எனக்கு நெருக்கமாய் வரமுடியும். பல பிறவிகளாய் நீங்கள் சுமந்து வரும் பெரு விருப்பத்துக்கு அது துணை செய்வதாயிருக்கும். அதை எப்படித் தணிவிப்பது என்று அறியாமல் இருந்தீர்கள். அதைப் பற்றி மறந்தே போனீர்கள். உங்களுடைய உணர்வு நிலையில் இருந்தே அதைக் கைகழுவி விட்டீர்கள். அதைத் தொல்லை என்று கருதி உணர்வற்ற இருளில் தள்ளி விட்டீர்கள். உங்களால் தீர்த்துக்கொள்ள முடியாத தாகத்தை - பூர்த்தி செய்து கொள்ள முடியாத விருப்பத்தை உணர்வு நிலையில் அப்படியே இருக்க விட்டால் அது பெரிய சுமையாகி விடும். கலக்கத்தை உண்டுபண்ணும். அது தொடர்ந்து மோதி, தாக்கிக்கொண்டே இருக்கும். உங்களை வேறு எதையும் செய்ய விடாது. எனவே, அதை உணர்வற்ற நிலைக்குள் தள்ளிவிடுங்கள்.

பதஞ்சலி யோக சூத்திரம் தொடர்பான இந்த விளக்க உரைகள் அதுவரை கவனிக்கப்படாதிருந்த தாகத்தை - விருப்பத்தை உங்கள் உணர்வு நிலையில் குவிக்கச் செய்வதற்காகத்தான். இது உண்மையான தொகுப்பு ஆகாது. வெறும் அறிமுகவுரை மட்டுமே. உண்மையான தொகுப்பு தாகத்தை நீங்கள் இனம் காணும்போது, அதை ஏற்கும்போது தொடங்கும் நீங்கள் மாறுவதற்கு, மாற்றம் செய்வதற்கு, புதிதாகி விடுவதற்குத் தயாராகிறபோது - இதுவரை அறிந்திராத அறிய முடியாத ஒரு பயணத்தை நீங்கள் மேற்கொள்ளத் துணிகிறபோது வெளிப்பாடாகும். அது ஒரு தாகத்தை, வேட்கையை உண்டு பண்ணுவதற்காகத்தான்.

யோக சூத்திரங்கள் பசியைத் தூண்டுகிற பொருள் மாதிரி. உண்மையான பொருளை எழுத்திலோ, சொல்லிலோ கொண்டு வர முடியாது. ஆனால், உங்களை உண்மைக்குச் சமீபமாய் கொண்டு

வரக்கூடிய ஒன்றை எழுதவும், சொல்லவும் முடியும். நான் திறவுகோல்களை ஒப்படைக்கத் தயாராக இருக்கிறேன். ஆனால் நீங்கள் தன்னுணர்வின் ஒரு குறிப்பிட்ட நிலைக்குக் கொண்டு வரப்பட வேண்டும், ஒரு குறிப்பிட்ட புரிதல் உங்களிடம் இருக்க வேண்டும். அந்த நிலையில் மட்டுமே நீங்கள் திறவுகோல்களைப் பற்றிப் புரிந்து கொள்ளத் தொடங்குவீர்கள்.

நான் கேட்டறிந்தது:

உண்மையிலேயே மிகவும் கீழ்நிலையில் இருந்த இரண்டு பிச்சைக்காரர்கள் புல் தரையில் படுத்திருந்தனர். மேலே சூரியன் ஒளிவிட்டுப் பிரகாசித்தது, அவர்களுக்கு உட்பக்கமாய் சிற்றலைகளின் ஒலியோடு ஓர் ஆறு ஓடிக் கொண்டிருந்தது. அந்த இடம் ரொம்பவும் அமைதியாய் இருந்தது.

முதலாம் பிச்சைக்காரன் ஆழ்ந்த யோசனையோடு சொன்னான், 'இப்போ ஒரு மில்லியன் பவுண்ட் உள்ளவன் கேட்டாக்கூட நான் இந்த இடத்தை மாற்றிக்கொடுக்க மாட்டேன்' என்று.

அவனுடைய தோழன் கேட்டான். 'ஐந்து மில்லியன் பவுண்ட்கள் என்றால் என்ன சொல்லுவே' என்று.

'ஐந்து மில்லியன் பவுண்டுக்கும் கிடையாதுதான்.'

'நல்லது, பத்து மில்லியன் பவுண்டுன்னா என்னா சொல்றே?'

முதலாம் பிச்சைக்காரன் எழுந்து உட்கார்ந்து கொண்டான். 'அது சரி, நீ உண்மையான பணத்தை பற்றித்தானே பேசிட்டிருக்க' என்றான்.

இது ஒரு கணநேரக் கண்ணோட்டத்தை ஏற்படுத்துவதற்குத்தான். இது உண்மையான பணத்தைக் கொடுப்பதாகாது. இது உண்மையான பணத்தைப் பற்றிய ஒரு கண்ணோட்டத்தைக் கொடுப்பது ஆகும். அவ்விதமாய் நீண்ட காலமாய் மறுக்கப்பட்ட ஆசை, தாகம் உங்களை மறுபடியும் தங்கள் ஆதிக்கத்துக்கு உட்படுத்திக்கொள்ள, நீங்கள் கொழுந்து விட்டெரிகிற தீயாகி விடுவீர்கள். அந்நிலையில் நீங்கள் என்னை நெருங்கி வரக்கூடும்.

***ஆண்டுகள் பலவாய் நேரத்தில் பெரும் பகுதியும் நான் சாட்சி பாவத்தில் இருந்து கொண்டிருக்கிறேன். மேலும், ஒரு நோயுற்றவனைப் போல் உணர்கிறேன். ஆக, சாட்சி பாவத்தில் இரண்டு வகை இருப்பதாய் தெரிகிறது. என்னுடையது தவறானதா? எனக்குச் சொல்லுங்கள்.***

இது தவறு நிறைந்ததாயிருக்க வேண்டும். இல்லையேல் அது ஒரு நோயாய் உணரப்பட்டிருக்காது. தன்னுணர்வு என்பது ஆன்மாவின் உணர்வல்ல, அங்கேதான் பிரச்சினை. ஆன்மாவின் உணர்வு என்பது முற்றிலும் வேறானது. அது எவ்வகையிலும் தன்னுணர்வு ஆகாது. உண்மையில் அது ஆன்மாவின் உணர்விற்கு ஒரு தடையே ஆகும். நீங்கள் கண்காணிக்க முயலுங்கள். தன்னுணர்வுடைய மனத்தோடு கருத்தூன்றிக் கவனியுங்கள். அது விழிப்புணர்வல்ல, அது சாட்சி பாவமாகாது. காரணம், இது உங்களை இறுக்கம்டையச் செய்யும்.

மக்கள் விஷயத்தில் அதுதான் நடக்கிறது. நீங்கள் பேசிக் கொண்டே போகிறீர்கள். தகுதியின்றி விவாதம் செய்கிறவரை நான் ஒருபோதும் எதிர்கொண்டதில்லை. எல்லோருமே நன்றாய் பேசுகிறார்கள். பேச்சு கருணையும், இயல்புத் தன்மையும் கொண்டிருக் கிறது. ஆனால், யாராவது ஒருவர் மேடையேறி மக்களிடம் பேச வேண்டும் என்று சொல்லுங்கள். நானூறு அல்லது ஆயிரம் பேர் கொண்ட சிறு கூட்டமாயினும் ஒருவரை மேடையேற்றுங்கள். அவர் நடுங்குவார், அச்சப்படுவார், தொண்டையில் ஏதோ அடைத்துக் கொண்ட மாதிரி உணர்வார். திடீரென்று வார்த்தைகள் எளிதாய் வெளிவராது. பேச்சு தொடராமல் நின்று விடும். என்ன ஆயிற்று. அவர் எப்போதும் நன்றாகப் பேசக்கூடியவராயிற்றே. பேசிப் பேசியே மனுஷன் சலிப்படையச் செய்து விடுவாரே... திடீரென்று அவரால் ஒரு வார்த்தை பேச முடியாமல் போய்விட்டதே.

அவர் உணர்வு பெறுகிறார். நிறைய பேர் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். தம்முடைய மதிப்பு ஆபத்துக்குள்ளாகி விட்டதாய் அவர் உணர்கிறார். அவர் எதையேனும் தவறாகச் சொல்லி விட்டால் அல்லது அவன், சொன்னது தவறாகி விட்டால் அவரைப்பற்றி அவர்கள் என்ன நினைப்பார்கள்? அவர் ஒருபோதும் அந்த முறையில் எண்ணிப் பார்க்கவேயில்லை. ஆனால், தற்போது பலரும் அவரை எதிர்கொண்டிருக்கிறார்கள். இவர்கள் எல்லாருடனுமே இவர் தனிப்பட்ட முறையில் நன்றாகப் பேசிக் கொண்டிருந்திருக்கலாம். ஆனால், தற்போது மேடையில் நின்று கொண்டு அவர்களைப் பார்த்து எப்படிப் பேசுவது.

நிறைய பேர் கூடி அவரையே பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் - அவர்களுடைய கண்கள் அம்புகளாகி அவரை ஊடுருவிக் கொண்டிருக்கிறது - அவருடைய அகந்தை ஆபத்துக்குள்ளாகி விட்டிருக்கிறது. அதுதான் இறுக்கத்தை உண்டுபண்ணுகிறது.

நினைவில் கொள்ளுங்கள் – சாட்சி பாவத்துடன் இருப்பதென்பது அகந்தை உணர்வுடன் இருப்பதல்ல. அகந்தை விடப்பட வேண்டியது. அது ஆழ்ந்த முறையில் அகற்றப்பட வேண்டியது.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு:

பாதிரியார் ஒருவர் யூத குரு ஒருவரிடம் தம்முடைய சுமையை இறக்கி வைத்துக் கொண்டிருந்தார். 'ஐயா, குருவே, எல்லாம் மோசமாயிட்டிருக்கு. டாக்டர் சொல்றார், நான் ரொம்ப நோய்வாய்ப் பட்டிருக்கிறேன். ரொம்ப கடுமையான ஆபரேஷன் ஒண்ணு செஞ்சாகணும்கறார்.'

'மோசமாத்தான் இருக்கும் போல' என்றார் யூத குரு.

'என்னுடைய பிரசங்கம் சரியில்லாம போயிருச்சின்னு, என்னோட சர்ச்சுக்கு வந்திட்டிருந்த கூட்டம் அடுத்த வட்டாரத்துக்குப் போயிட்டிருக்கு' என்றார் பாதிரியார்.

'அடடே, ரொம்ப மோசந்தான்' என்றார் யூத குரு.

'என்னோட வேலைக்காரி இனிமே வேலைக்கு வரமாட்டாளாம். வாத்தியக்காரரும் வேலையை உதறிட்டார். பலிபீடத்தில் எனக்கு ஒத்தாசை பண்ண பையன்கள் யாரும் கிடையாது' பாதிரியார் தொடர்ந்தார். கண்களில் நீர் முட்டிக் கொண்டிருந்தது.

'நிலைமை மோசந்தான்.'

'வட்டாரக் கருவூல அதிகாரி வசூலான பணத்தோடு ஓட்டம் பிடிச்சிட்டான். தலைமை குரு வந்து பார்வையிடப் போறார். மேரியின் குழந்தைகளுள் ஒருத்தி கர்ப்பமா இருக்கா, கூரை ஒழுகுது, என்னோட கார் வேற திருட்டு போயிருச்சி' புலம்பினார் பாதிரியார்.

'நிலைமை உண்மையிலேயே ரொம்ப மோசந்தான்' என்றார் யூத குரு.

'அது எப்படி மோசமாகும்?' யூத குருவின் குரலில் கொஞ்சமும் பரிவைக் காணாமல் துணுக்குற்ற பாதிரியார் கேட்டார்.

'எனக்கு அப்படி நடந்திச்சின்னா மோசந்தான்' என்றார் யூத குரு.

அகந்தையின் வரையறைகளுடன் (terms) நீங்கள் சிந்தித்துக் கொண்டிருந்தால் உங்களுடைய சாட்சி பாவம் கூட ஒரு நோயாகி விடும், அப்போது உங்களுடைய தியானமும் ஒரு நோயாகி விடும், அந்நிலையில் உங்கள் சமயமும் ஒரு நோயாகி விடும். அகந்தை

கொண்டு விட்டால் ஒவ்வொன்றும் நோயாகத்தான் செய்யும். அகந்தை உங்களுடைய இருப்புணர்வில் (being) இக்கட்டை ஏற்படுத்தும். அது உடம்பில் குத்திய முள் மாதிரி வலித்தபடி இருக்கும். அது ஒரு புண் மாதிரி.

அதற்கு என்ன செய்யட்டும்? நீங்கள் கண்காணிக்க முயல்கிறபோது, முதலாவதாய் கருத்தில் கொள்ள வேண்டியதை பதஞ்சலி சொல்கிறார். இலக்கில் கவனம் வையுங்கள், உங்களில் (செயலை விளைவிப்பவர்) கவனம் வைக்காதீர்கள் என்று. இலக்கில் இருந்து தொடங்க வேண்டும். கவனத்தை ஒருமுனைப்படுத்துங்கள். மரத்தைக் கூர்ந்து கவனியுங்கள். உங்களை மறந்து விடுங்கள். நீங்கள் வேண்டப்படவில்லை. மரம், ரோஜா பற்றிய அனுபவத்தை அடைவதில் உங்கள் இருப்புணர்வு இடைஞ்சலாகி விடும். ரோஜாதான் உங்கள் கவனத்தில் இருக்க வேண்டும். செயலை விளைவிப்பவரல்லர், இலக்கு. உங்களை நீங்கள் முற்றாக மறந்துவிட வேண்டும். இதுதான் தியானத்துக்கு முதற்படி.

அடுத்து இரண்டாவது படி. ரோஜாவை விட்டு விடுங்கள். ரோஜாவிற்குக் கொடுத்த முக்கியத்துவத்தை விடடுவிடுங்கள். தற்போது ரோஜாவைப் பற்றிய உணர்வுக்கு அழுத்தி முக்கியத்துவம் கொடுங்கள் - ஆனால் இன்னமும் நீங்கள் தேவைப்படுவதில்லை. நீங்கள் கவனித்துக் கொண்டிருக்கிற உணர்வே போதுமானது.

அதன்பிறகே மூன்றாம் நடவடிக்கைக்குச் செல்ல வேண்டும். அது குருட்ஜீவ் சொல்கிற தன்னை நினைவுபடுத்திக் கொள்ளும் நிலை (self-remembering)க்கு உங்களைக் கொண்டு சேர்க்கும். கிருஷ்ணமூர்த்தி அதனை விழிப்புணர்வு என்பார், உபநிடதங்கள் அதனை சாட்சிபாவம் என்று சொல்லும். ஆனால், முதல் இரண்டு நடவடிக்கைகளைச் செய்து முடித்தால்தான் மூன்றாம் நடவடிக்கை எளிதாய் அமையும். மூன்றாம் நடவடிக்கையை உடனே தொடங்கி விடாதீர்கள். முதலில் இலக்கு, அடுத்தது தன்னுணர்வு, அதற்கடுத்தது செயலை விளைவிப்பவர்.

நீங்கள் அங்கே இருக்கிறீர்கள். ஆனால் 'நான்' என்கிற எல்லைக் குட்படுத்தல் (confinement) மறைந்து விடுகிறது. ஒருமை வடிவம் (amness) மட்டுமே இருக்கிறது. அந்த ஒருமை வடிவமே கடவுள் தன்மை. நானை (I) விடுங்கள். ஒருமைத்தன்மையைப் பெறுங்கள்.

நீங்கள் நீண்டகாலம் சாட்சி பாவத்தில் இருந்திருந்தால், குறைந்தது மூன்று மாதத்துக்கேனும் அதை முற்றாய் விட்டுவிடுங்கள்.

அது தொடர்பாய் எதையுமே செய்யாதீர்கள். இல்லையேல், பழைய அமைப்பே (pattern) தொடர்வதோடு, புது விழிப்புணர்வையும் மாசுபடுத்தி விடும். நீங்கள் மூன்று மாதத்துக்கேனும் இடைவெளி விடுங்கள். மூன்று மாதங்களுக்கு உணர்ச்சித் தூய்மை செய்யும் செய்முறைகளை – ஆற்றல் தியானம், குண்டலினி, நடராஜ தியானம் இவற்றை மேற்கொள்ளுங்கள். நீங்கள் எதைச் செய்தாலும் அது முக்கியமாகி விட வேண்டும். நடனமாடினால் நடனம் முக்கியத்துவம் பெற வேண்டும், நடனமாடுபவரல்லர். நடனமாடுபவர் நடனத்தில் தன்னை முற்றாய் இழந்து விட வேண்டும். ஆக மூன்று மாதத்துககு சாட்சிபாவத்தை விட்டுவிட்டு, தியானத்தில் கவனம் செலுத்துங்கள். இது முற்றிலும் மாறுபட்டது. ஏதோவொன்றில் ஈடுபடுவதன் மூலம் உங்களை முழுமையாய் மறந்து விடுகிறீர்கள். நீங்கள் நடனம் அல்லது பாட்டில் உங்களை மறந்து விடுங்கள். நடனமாடுவதும், பாடுவதும் விரும்பத்தக்கவையாகும். விலகியிருக்காதீர்கள், உடன்பாடற்றவராகி விடாதீர்கள்.

நடனமாடுபவர் மறைந்து நடனம் மட்டுமே இருக்கும் விதத்தில் உங்களால் ஆட முடிந்தால், ஒருநாள் நடனமும் மறைந்து விடுவதை நீங்கள் காண்பீர்கள். அதன்பிறகு வருகிற விழிப்புணர்வு மனம் சார்ந்ததாகவோ, அகந்தைக்குரியதாகவோ இருக்காது. உண்மையில் அந்த விழிப்புணர்வை நடைமுறை வழக்கமாக்க (practice) முடியாது. ஆயத்தப்படுத்திக் கொள்ள வேறு எதையாவது செய்து கொள்ள வேண்டும்.

> *'இத்தகைய செய்கைகளை குரு, சீடனுக்கிடையேயான நெருங்கிய, தனிப்பட்ட தொடர்பில் மாற்றிக் கொடுக்கப்பட வேண்டியது. நல்லது, நாங்கள் இங்கே எதைப் பெற்றிருக் கிறோம்? நான் தங்களுடன் தொடர்புடையவனாய் இருந்தும் இவை மாற்றிக் கொடுக்கப்படாமல் இருக்கின்றன.'*

என்னுடன் உங்களுக்குத் தொடர்பு இருக்கிறதா, இல்லையா என்பதை உங்களால் தீர்மானிக்க முடியாது. நான் மட்டுமே அதைத் தீர்மானிக்க முடியும். உங்களுடைய பேராசை வேண்டுமானால் அந்தத் தொடர்பை நீங்கள் பெற்றிருப்பதாகத் தெரிவிக்கலாம். அதை அடைதற்கான உங்களுடைய ஆசை வேண்டுமானால் நீங்கள் தயாராயிருப்பதாய் தெரிவிக்கலாம். ஆனால், தயாராக இருப்பதாய் சொல்வதே தயார் நிலையாகி விட முடியாது. நான் அதைக் கண்டுகொண்டாலன்றி அது மாற்றிக்கொடுக்கப் படாது.

நீங்கள் வெறுப்புற்றிருந்தாலும் நீங்கள் தயார் நிலையில் இல்லையென்பதை உங்களாலும் புரிந்துகொள்ள முடியும். இங்கே இருப்பது மட்டுமே போதுமானதாகி விடாது. ஒரு சந்நியாசி விட்டால் மட்டும் போதாது – அது அவசியந்தான். ஆனால் அதுவே போதுமானதாகி விடாது. இன்னும் அதிகமாய், பெருமளவில் விட்டுக்கொடுத்தல் (sacrifice) தேவைப்படும். அதில் நீங்கள் மறைந்து விடுவீர்கள். நீங்கள் இல்லையென்றாகிற போது அந்தத் திறவுகோல்கள் ஒப்படைக்கப்படும். நீங்கள் கண்காணித்தபடி, காத்துக் கொண்டிருந்தால் அந்தக் கண்காணிப்பும், காத்திருத்தலுமே ஒரு தடுப்புச் சுவராகி விடும்.

சின்னதாய் ஒரு கதை:

முன் அனுபவமில்லாத மூன்று பேர் மடாலயத்தில் சேர்ந்தனர். ஓராண்டுக்குப் பிறகு, ஒருநாள் அவர்கள் காலைச் சிற்றுண்டிக்காக அமர்ந்திருந்தபோது, மடாதிபதி மூவரில் ஒருவரிடம் கேட்டார். ‘சகோதரர் பால் அவர்களே, முழுசாக ஓராண்டு ஆகிறது. நீங்கள் இங்கே எங்களுடன் சேர்ந்து. இன்னும் மவுனத்தைக் கடைப்பிடித்துக் கொண்டிருக்கிறீர். நீங்கள் விரும்பினால் தற்போது பேசலாம். நீங்கள் சொல்வதற்கு ஏதாவது உண்டா?’

‘ஆம், தலைவரே. எனக்குக் காலைச் சிற்றுண்டி பிடிக்கவில்லை.’

‘நல்லது. அதுபற்றி நாம் ஏதாவது செய்யத்தான் வேண்டும்.’

எதுவும் செய்யப்படவில்லை, இன்னொரு வருடமும் மவுனமாகவே கடந்து சென்றது. மறுபடியும் அவர்கள் காலைச் சிற்றுண்டிக்கு அமர்ந்திருந்த போது, மடத்துத்தலைவர் அங்கே வந்தார். அந்த மூவரில் மற்றோர் இளைஞரிடம் அவர் கேட்டார், ‘சகோதரர் பீட்டர் அவர்களே, நீர் இரண்டு வருடங்களாய் மவுனத்தைக் கடைப்பிடித்து வருவதற்காகப் பாராட்டுகிறேன். நீர் விரும்பினால் தற்போது பேசலாம். நீர் ஏதாவது சொல்ல வேண்டியிருக்கிறதா?’

‘ஆம் தலைவரே, எனக்குக் காலைச் சிற்றுண்டியில் எதுவும் தவறாகி விட்டதாய் தெரியவில்லை.’

மூன்றாவது ஆண்டும் கடந்தது. மறுபடியும் அந்த மடத்துத் தலைவர், அந்த மூவருள் கடைசி நபரிடம், ‘சகோதரர் ஸ்டீபன் அவர்களே, நீர் முழுசாக மூன்று ஆண்டுகள் மவுனமாய் இருந்து விட்டீர். நீர் விரும்பினால் தற்போது பேசலாம். நீர் ஏதாவது சொல்ல வேண்டியிருக்கிறதா?’

'ஆம் தலைவரே, நான் சொல்கிறேன். என்னால் இந்த மாதிரி ஆரவாரச் சண்டையைச் சகித்துக்கொள்ள முடியாது.'

சிற்றுண்டி பற்றிய உரையாடலிலேயே அந்த மூன்று ஆண்டுகளும் இழக்கப்பட்டு விட்டன. மனதில் அடியாழத்தில் அது ஒரு பிரச்சினையாகவே தொடர்ந்திருக்கிறது. மூன்று பேரும் வெவ்வேறு விதமாய் பதிலளித்திருந்தாலும் எல்லாருமே அதில் அக்கறை கொண்டிருந்திருக்கிறார்கள். பதில்களில் காணப்பட்ட வேறுபாடுகள் மேற்பரப்பில் மட்டுமே இருந்தவை. அடியாழத்தில் அதுபற்றிய ஆசையும், எண்ணமும், உணர்வும் அவர்களை ஆட்டிப் படைத்திருக்கிறது.

அத்தகைய கருத்தாகவேசங்கள் (obsessions) மறைந்தால்தான் நீங்கள் தயாராக முடியும். மவுனமாய் இருப்பது எளிது. ஆனால் உள்ளார்ந்த வம்பளப்புகள் தொடரத்தானே செய்கிறது. அப்போது அது மவுனமாகாது. அது மவுனத்துக்கான வெளிக்காட்டுதலாகவே இருக்கும். உண்மையில் மவுன விரதம் எடுக்கிறவர்களின் மனங்கள் வழக்கத்துக்கதிகமாகவே வம்பளந்தபடி இருக்கும். சாதாரணமாக அவர்கள் மற்றவர்களிடம் வீண் பேச்சு பேசுகிறவர்கள். மவுனத்தின் போது யாரிடமும் பேசாமல் இருப்பதால், வெளியேற்றப்படாத நீராவி உள்ளாகவே சுற்றிக் கொண்டிருப்பது போல், பேச்சு உள்ளாகவே நிகழத் தொடங்கி விடும்.

இந்த மூன்று ஆண்டுகளாகவே அந்த மூன்று பேர்களும் உள்ளாகவே வம்பளந்தபடி இருந்திருக்கிறார்கள். மேற்பரப்பில் எல்லாமும் அமைதியாக இருந்திருக்கின்றன. ஆனால் அடியாழத்தில் அப்படியில்லை.

ஆக, நீங்கள் எப்போது தயாராக இருந்தாலும்... உங்களால் தீர்மானிக்க முடியாது. அது நீங்கள் தீர்மானிக்கும்படியாய் இல்லை. யார் தயாராக இருக்கிறார்களோ அவர்களுக்கெல்லாம் திறவுகோல்கள் முன்பே ஒப்படைக்கப்பட்டு விடட்து. இனி தயாராகிறவர்களிடம் கொடுப்பதற்கும் திறவுகோல்கள் தயாராகவே உள்ளன. உண்மையில் ஒரு கணப்பொழுதும் வீணடிக்கப்படவில்லை. நீங்கள் தயாரானவுடனேயே உடனடியாய் திறவுகோல்கள் உங்களிடம் ஒப்படைக்கப்பட்டு விடுகின்றன. அந்தத் திறவுகோல் ஒன்றும் தூல வடிவில் இல்லை, உங்களை அழைத்து உங்கள் கையில் கொடுப்பதற்கு. அது மாற்றிக் கொடுத்தல் (transmission) ஆகும்... நீங்கள் என்னுடன் ஒத்திசைவு கொண்டு விட்டால் அப்போதே முழு விவகாரத்தையும் நீங்கள் என்னிடம் ஒப்படைத்து விடுகிறீர்கள். எனவே, திறவுகோல்கள் பற்றி

நீங்கள் கவலைப்படுவதில்லை. அதுதான் சரணாகதி - ஒப்புவித்துக் கொள்ளல். 'நீங்கள் எப்போது உகந்ததாய் கருதினாலும் அப்போது நான் தயார்தான்' என்று நீங்கள் சொல்கிறீர்கள். அது உடனடியாய் நிகழ்வதற்கில்லை என்று நீங்கள் கருதினால் நான் எப்போதைக்கும் காத்திருக்கத் தயார். அது நிகழா மலே போய்விட்டாலும் அது இடர்ப்பாடாகி விடாது' என்கிறீர்கள்.

அந்நிலையில், கொடுக்கப்பட்டதை ஏற்றுக்கொள்ளுவதற்கு மட்டுமே நீங்கள் இசைவாய் இருக்கிறீர்கள். இல்லையேல் நீங்கள் என்னைப் பயன்படுத்திக் கொள்ள முயன்றவராவீர்கள். நீங்கள் என்னைப் பயன்படுத்திக் கொள்ள முடியாது.

நான் கிடைக்கக்கூடியவனாய் இருக்கிறேன். ஆனால், நீங்கள் என்னைப் பயன்படுத்திக் கொள்வது முடியாத காரியம். நீங்கள் எளிதில் ஊறுபடுகிறவர், என்னால் எளிதில் தாக்கப்படுகிறவராகி விடுவீர்கள் - மனநிறைவு தரக்கூடிய அனைத்துக்குமப்பால் ஒரு மனநிறைவை நீங்கள் பெறுவீர்கள். ஆனால் அதற்கு எல்லையற்ற பொறுமையும், வெற்றிடமும் தேவைப்படும்.

அதே வகையிலான மற்றொரு கேள்வி:

***'பகவானே, தங்களுடைய முந்தைய உரைகளுள் ஒன்றில் சதாகாலை ஆன்மாவின் அறிந்திராத உச்சத்துக்கு உந்திச் செல்ல தாங்கள் முற்றிலும் தயாராயிருப்பதாக ஒப்புக் கொண்டிருக்கிறீர்கள். தாங்கள் மேலும் சொன்னீர்கள், 'ஆன்மாவின் அறிந்திராத உச்சத்தை அடைவதற்கு, தங்களை எந்தவொரு சோதனைக்கும் உட்படுத்திக் கொள்ளத் தயாராயிருக்கும் அத்தகையவர்களுக்காக நான் காத்திருக்கிறேன்' என்று. அந்த விவரவுரை (statement)யைக் கேட்டதிலிருந்து, தங்களுடைய சவாலை எதிர்கொள்ள என்னை நான் தயார்படுத்திக் கொண்டிருக்கிறேன். தங்களுடனான என்னுடைய தனிப்பட்ட நேர்காணல்களில், தாங்கள் அப்போது தயாராக இல்லை என்பதை ஒத்துக் கொண்டீர்கள். தங்களுடைய விவரவுரையில் ஏன் இந்த இரட்டைத்தன்மை? தயவு செய்து என்னுடைய சந்தேகங்களை தெளிவுபடுத்துங்கள்.***

இதில் இரட்டைத்தன்மை கிடையாது - இது சமுதாயக் கட்டுப் பாட்டு ஒழுங்குமுறை மட்டுமே. நீங்கள் தயாராக இல்லை. ஆனால், உங்களுடைய மனதைக் காயப்படுத்துவதை நான் விரும்பவில்லை. எனவேதான் சொன்னேன், நான் தயாராக இருக்கவில்லை என்று.

உணர்ச்சி மேலீடு (tense)ம், ஆவலும், பேராசையும் ஓர் இடர்ப்பாட்டைத் தோற்றுவித்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் தயாராக இருந்து, நான் 'பொறு' என்று உங்களிடம் சொன்னால் நீங்கள் கேட்டுக் கொள்வீர்கள். இந்தக் கேள்வி ஆனந்த் சமர்த்திடம் இருந்து வந்தது. சில நாட்களுக்கு முன் என்னிடம் அவர் கேட்டார், நான் திரும்பத் திரும்பச் சொன்னேன். 'பொறுத்திரு' என்று. அவர் சொன்னார். 'இதற்கு மேலும் என்னால் பொறுக்க முடியாது. தாங்கள் முன்பே என்னிடம் சொன்னீர்கள். 'எந்த ஒருவர் எப்போது தயாராயிருந்தாலும், நான் அவரிடம் மாற்றிக் கொடுக்கத் தயாராக இருக்கிறேன்' என்று. நான் தற்போது தயார். அப்படியிருக்க தாங்கள் எதற்காக 'பொறு' என்று சொல்வது? திரும்பவும் அவரிடம் சொன்னேன். 'பொறுத்திரு' என்று. ஆனால் அவர் கேட்கவில்லை. நான் சொல்வதைக் கேட்பதற்குக் கூட நீங்கள் இன்னும் தயாராகவில்லை. இது எத்தகைய சரணாகதியாகும்? நீங்கள் முற்றிலும் கேட்கும் திறனற்றவராய் இருந்து கொண்டு நீங்கள் தயாராயிருப்பதாக இன்னமும் எண்ணிக் கொள்கிறீர்கள்.

உங்களுடைய பேராசையை நான் புரிந்து வைத்திருக்கிறேன். உங்களுடைய அகந்தை எனக்குப் புரிந்ததுதான். உங்கள் அவசரத்தையும் நான் புரிந்து கொண்டிருக்கிறேன். நீங்கள் மலிவாகப் பெற்றுவிட முயல்கிறீர்கள். அதையும் நான் அறிவேன். ஆனால் நீங்கள் தயார் நிலையை அடைந்துவிடவில்லை.

சின்னதாய் ஒரு கதை:

இரண்டு பெண் துறவிகள் நாட்டுப்புறத்தில் காரைச் செலுத்திக் கொண்டிருந்தபோது காரில் பெட்ரோல் தீர்ந்து விட்டது. அவர்கள் இரண்டு மைல் தூரம் நடந்து சென்று ஒரு பண்ணை வீட்டை அடைந்தனர். அங்குள்ளவர்களிடம் தங்கள் பிரச்சினையை அவர்கள் தெரிவித்தனர்.

'நீங்கள் வடிகுழாய் (siphon) மூலம் என்னுடைய ட்ராக்டரில் இருந்து கொஞ்சம் பெட்ரோலை எடுத்துக் கொள்ளலாம். ஆனால் என்னிடம் ஏற்றதாய் எதுவும் இல்லையே' என்றார் விவசாயி.

கொஞ்சம் யோசித்துவிட்டு, ஒரு பானையை எடுத்து வந்தார். பெட்ரோல் நிரப்பப்பட்ட பானையை எடுத்துக்கொண்டு அந்தப் பெண் துறவிகள் காருக்குத் திரும்பி வந்து பெட்ரோலை 'டேங்க்'கில் ஊற்றினர்.

அந்த வழியே காரில் போய்க் கொண்டிருந்த பூத குரு ஒருவர் வழக்கத்துக்குப் புறம்பான அக்காட்சியைக் கண்டு, காரை நிறுத்தினார்.

'கன்னித்துறவிகளே! உங்கள் மதத்தில் எனக்கு உடன்பாடு இல்லையென்றாலும், உங்களுடைய நம்பிக்கையை நான் வியந்து பாராட்டுகிறேன்' என்றார்.

நான்கூட உங்கள் தயார்நிலையை ஒத்துக்கொள்ளா விட்டாலும், உங்களுடைய நம்பிக்கையை மெச்சுகிறேன். தாகம் உண்டாகி யிருப்பதைக் கண்டு நான் வியந்து பாராட்டுகிறேன். நல்லது. ஆனால், தன்னளவில் கொண்டிருக்கிற தாகம் தயார் நிலைக்குப் போதாது. இது ஒரு தொடக்கம். இதுவே முடிவாகி விடாது. அது மவுனத்தில் மலரட்டும். அது பொறுமையில் பூக்கட்டும். அது கைநழுவிப் போவதில் இதழ் விரிக்கட்டும். அவசரப்படாதீர்கள். நிதானமாய் செல் லுங்கள், கிட்டத்தட்ட என்னுடன் இழைந்தியங்க (float) முயலுங்கள். என்னை முந்திச்செல்ல முயலாதீர்கள் – அது சாத்தியமில்லை.

*'அன்பிற்குரிய பகவானே, உங்களுடன் இருக்கும்போது அமைதியாயிருக்கிறது. ஆனால், இந்தக் குரங்கு மனத்தை எப்படி நான் பழையதிடமிருந்து தனியாக்கி, புதியதுடன் இணைந்து செயல்படுமாறு செய்வது?'*

– மைக்கேல் ஸ்டுபிட்

நன்று. மிக நன்று. மதிநுட்பமுடைய மைக்கேலை (michael wise) விட சிறப்பாகவே உள்ளது. நீங்கள் அறிவுடையவராகிக் கொண்டிருக் கிறீர்கள். தம்முடைய முட்டாள்தனத்தை ஒருவர் ஒப்புக்கொள்வதே ஞானத்தை நோக்கி எடுத்து வைக்கிற அடியாகும். ஆனால், அறிவுடையவராய் காட்டிக்கொள்ள முயலாதீர்கள். நீங்கள் என்னை ஏமாற்றிவிட முடியாது. காரணம் அடுத்த கேள்வி மைக்கேல் வைஸ் (wise) என்பவரிடமிருந்து.

அடுத்த கேள்வியை நான் வாசிக்கிறேன்.

*பகவானே உங்களுடன் இருக்கும்போது அமைதியாய் இருக்கிறது. யாரேனும் லாவோட்சுவிடம், அவர் சந்நியாசம் மேற்கொள்ள வேண்டுமா என்று கேட்டால், 'என்னது, உலகைப் பிரித்தறிவதா? பூக்கள் எந்தச் சீர்மையை அறிந்திருக்கிறது? சூரிய உதயம் அழகாயில்லையா?' என்று பதில் சொல்வாரா?*

(அல்லது)

*'உங்களுடைய மனதை எடுத்துக்கொள்ள வேண்டும் என்கிற அளவுக்கு ஒருவர் கிறுக்காயிருந்தால், அதை அவரிடம் கொடுத்து விடுங்கள்.'*

(அல்லது)

*'பூக்கள் முன்பே பதிலளித்தாயிற்று எனக்கு அவசியப் படாது.'*

– மைக்கேல் வைஸ் (ஸ்டுபிட்)

மறுபடியும் மைக்கேல் வைஸ் ஸ்டுபிட் அடைப்புக்குறிகளுள். முன்பே உங்களுடைய அறிவுநுட்பத்தில் இருந்து நீங்கள் வீழ்ச்சியடைந்து விட்டேன்.

அத்துடன் நீங்கள் லாவோட்சு அல்ல. அப்படியிருந்திருந்தால் இங்கே முதலாளாய் வந்திருக்க மாட்டீர்கள். நீங்கள் எதற்காக இங்கிருக்கிறீர்கள்?

நான் ஒன்று சொல்வேன் உங்களுக்கு: நான் அதை லாவோட்சு விடம் சொல்லியிருந்தால், அவர் சந்நியாசம் மேற்கொண்டு விடுவார். ஆனால் நான் அவரிடம் சொல்ல மாட்டேன். சொல்லி என்ன ஆகப் போகிறது. அந்தப் பெரியவரை எதற்காகத் தொல்லைப்படுத்துவது?

*'நீங்கள் என்னுடைய குருவல்ல, நம்பிக்கையான அறிவுரையாளர்.*

*நீங்களும் நானும் சிந்திப்பதில் உணர்வதில் ஒரே மாதிரி.*

*நீங்கள் எதைச் சொன்னாலும் அது முன்பே நான் அறிந்ததாயிருக்கும்.*

*நான் ஆண்டுகள் பலவாய் நீங்கள் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன்.*

*உங்கள் உள்ளத்தில் புகுந்து உள்ளிருப்பதை நான் அறிகிறேன்.*

*இதுதான் நிலை என்கிறபோது உங்களிடம் எனக்கிருக்கும் தொடர்பு மிகச்சரியாக எத்தகையது?*

நீங்கள் என்னுடைய குருவாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறேன்.

*பகவானே! தாங்கள் அடிக்கடி தங்களுடைய உரைகளில் 'உங்களுடைய சொந்த முறையில் நீங்களாக வந்து விட்டிருப்பதாய் எண்ணிக் கொள்ளாதீர்கள். உங்களைத் தேர்வு செய்து நான் வலையை வீசுகிறேன்' என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். அது உண்மை என்பதை நான் அறிவேன். ஆனால் நீங்கள் பரிவுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகிற ஒன்றை ஏற்பதற்கு ஒருவர் தயாராயிருப்பதை நீங்கள் எப்படி அறிந்து கொள்கிறீர்கள்?*

*நான் ஆன்மாவை உணர்ந்து கொள்வதற்காகவும், ஒரு குருவைத் தேடியடையவும் பதினைந்து வயதில் இருந்தே ஏங்கியிளைத்தேன். அதன் விளைவாக தெய்விக வாழ்க்கைச் சங்கத்தின் சுவாமி சிவானந்தாவிடம் போய்ச் சேர்ந்தேன். சந்த் லீலாஷா, சாது வாஸ்வானி இவர்களிட மிருந்து சில உயர் மதிப்புடைய இரத்தினங்களைப் பெற்றேன். ஆனால், ஆன்மாவை உணர்தல் என்கிற கோஹினூர் வைரம் அங்கே இருக்கவில்லை. நான் ராதாஸ்வாமி, சின்மயானந்தா, டோங்ரி மகராஜ், ஸ்வாமி அகண்டானந்தா முதலியவர்களிடமும் கேட்டறிந்தேன். ஆனால், அந்த மெய்யறிவு அங்கெல்லாம் கிடைக்க வில்லை.*

*நான் மும்பையில் நான்கைந்து ஆண்டுகளுக்கு முன் சிலமுறை தங்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தேன். ஜுகு கடற்கரையில் தங்களுடைய சீடர்கள் சிலருடன் தியானம் புரிந்திருக்கிறேன். அவர்களைப் பாராட்டியிருக் கிறேன். ஆனால், தங்களிடம் முழுமையாய் ஈர்க்கப்பட்டு விடவில்லை, கடந்த ஆண்டில் அது நிகழும் வரை. நான் ஒரு திறனாய்வாளராக இருந்தேன். ஆனால், சில தியானங்களும் இரண்டு மூன்று உரைகளும் எனக்கு நம்பிக்கையூட்டி, என்னை மாற்றிவிட்டன. அது நிகழ்ந்து விட்டது. நான் சரணடைந்து விட்டேன்.*

*குருவின் பாதுகாப்பான கைகளில் நான் இருப்பதாக முற்றிலும் நம்புகிறேன். அவரே ஒவ்வொரு கணத்திலும் முறையாகப் பாதுகாத்துக் கொண்டிருக்கிறார்.*

*நான் பரவசத்தை - உண்மையான மகிழ்ச்சியை அனுபவிக் கிறேன், ஆனால் ஞானத்தின் இறுதி நிலையை அல்ல. நான் கடந்த காலத்தை அல்லது எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கவில்லை, இந்தக் கணத்தில் வாழ்கிறேன்.*

*நான் சரியான தடத்தில் இருக்கிறேனா? தயவு செய்து அறியாமையை அகற்றி அறிவூட்டுங்கள்.*

நீங்கள் சரியான பாதையில் தான் இருக்கிறீர்கள். ஆனால், அந்தப் பாதையும் கைவிடப்பட்ட வேண்டியதுதான். காரணம் முடிவான குறிக் கோளாக அமைகிற உலகில் எல்லாப் பாதைகளும் தவறானவையே. எந்தவொரு பாதையும் அதை நோக்கி இட்டுச் செல்வதில்லை. எல்லாப் பாதைகளும் நீங்கள் திரிந்தலைவதற்கே துணை புரியும். கடவுளை அடைதற்கான யோசனையே தவறானது. கடவுள் உங்களை முன்பே

வந்தடைந்திருக்கிறார். நீங்கள் அனுபவத்தில் அதை வாழ்ந்து பார்க்க வேண்டும். ஆக, அந்த வகையில் மேற்கொள்ளப்படுகிற ஒட்டுமொத்த முயற்சியும் பயனற்றதுதான்.

இங்கே என்னுடன் நீங்கள் இருக்கிறீர்கள். உங்களிடம் இருந்து எல்லாப் பாதைகளையும் நான் எடுத்துவிட இடமளியுங்கள். இரத்தினக் கற்களை மட்டுமல்ல, அந்தக் கோஹினூர் வைரத்தையும் நான் அகற்றிவிட இடமளியுங்கள். உங்களை நான் வெறுமையாக்கிவிட இடமளியுங்கள். என்னைக் கொண்டு உங்களை நிரப்பிக்கொள்ள முயலாதீர்கள். காரணம் அந்நிலையில் நானே தடையாகி விடுவேன். என்னிடம் எச்சரிக்கையாயிருங்கள். என்னைப் பற்றிக்கொள்ளத் தேவையில்லை. பற்றிக்கொள்கிற அனைத்துமே ஆபத்தானவைதாம். பற்றிக்கொள்ளும் தன்மை இல்லாத மனநிலையை நீங்கள் பெற வேண்டும். என்னுடன் இருங்கள். ஆனால், என்னைப் பற்றிக் கொள்ளாதீர்கள். நான் சொல்வதைக் கேளுங்கள். அதில் இருந்து உண்மையைத் தெரிந்துகொள்கிற முயற்சி வேண்டாம். என்னுடைய வம்பளப்புகளைக் கேளுங்கள். ஆனால் அதில் இருந்து அறிவுரைகளை உருவாக்க வேண்டாம். என்னோடு இருப்பதில் மகிழ்ச்சி காணுங்கள். ஆனால், என்னையே சார்ந்திராதீர்கள். அதையே ஓர் ஆதரவாக (dependence)க் கொண்டு விடாதீர்கள். இல்லையேல் நான் உங்களுடைய நண்பனாக இருக்க மாட்டேன். முன்பே பகைவனாகி விட்டிருப்பேன்.

ஆக, நீங்கள் செய்ய வேண்டியது என்ன? நீங்கள் சந்த் லீலாஷா, சுவாமி சிவானந்தா, சுவாமி அகண்டானந்தாவிடம் இருந்திருக்கிறீர்கள். அவர்களையெல்லாம் விட்டு வந்து விட்டீர்கள். என்னையும் விடும்படியாயிருக்கும். நான அந்த வகையில் உங்களுக்கு உதவாவிடில், நானே உங்கள் பாதையில் தடையாகி விடுவேன்.

எனவே என்னை நேசியுங்கள், என்னிடம் நெருக்கமானவராய் இருங்கள். என்னுடைய இருப்பை உணருங்கள். ஆனால் அதையே நம்பியிராதீர்கள்.

நீங்கள் சரியான பாதையில் இருக்கிறீர்களா, இல்லையா எதற்குக் கேட்கிறீர்கள்? மனம் பற்றிக்கொள்ள விரும்பும். ஆக, எல்லாம் உறுதியாக இருந்து, பாதையும் சரியாக இருந்து விட்டால், 'ரொம்பச் சரி. என்னுடைய கண்களை நான் மூடிக்கொண்டு விடுகிறேன். தற்போது எங்கேயும் போகிற அவசியமில்லை' என்று சொல்வீர்கள். எங்கேயும் போகத் தேவையில்லைதான் – ஆனால் என்னை நீங்கள் பற்றிக்

கொண்டு விட்டதால் அல்ல. எங்கேயும் போக வேண்டியதில்லை என்பதற்குக் காரணம் நீங்க போக விரும்பிய இடத்தில்தான் முன்பே இருந்து கொண்டிருக்கிறீர்கள். நான் உங்களை அறிந்து கொள்வதில் உங்களுக்குத் துணை புரிகிறேன்.

அது மென்மையானது, அது நுட்பமானது மிகவும் நுட்பமானது, காரணம், நான் சொல்வது உங்கள் உணர்வைக் கிளறி விடும் ஆற்றல் உடையதாய் இருந்தால், நீங்கள் அதில் இருந்து ஒரு கோட்பாட்டை உருவாக்கிக் கொள்ள சாத்தியம் இருக்கிறது. நான் உங்களுடன் வாக்குவாதம் செய்து கொண்டிருக்கவில்லை. என்னுடைய வாதங்களை உங்களிடம் முன்வைக்கவில்லை. நான் ஏற்புடைமையற்றவன், பகுத்தறிவுக்குப் புறம்பானவன். உங்களுடைய மனத்தில் இருந்து விவாதம் (argumentation) விடப்பட வேண்டும் என்பதற்காகவே நான் முயல்கிறேன். அப்போதுதான் நீங்கள் தூய்மையாகவும், மாசுபடாமலும், வார்த்தைகளால் அசுத்தப்படாமலும், கொள்கைகள், கோட்பாடுகள், மறைநூல்கள் இவற்றால் கெடுக்கப்படாமலும் இருப்பீர்கள். உங்களுடைய புனிதத்தன்மையை நீங்கள் அடையவும், பளிங்கு போன்ற தெளிவான தன்னுணர்வை (consciousness)ப் பெறவும், உங்களுடைய சூன்யத்தை பேரண்டத்தை நீங்கள் அடைய வேண்டும் என்பதற்காகவுமே நான் முயல்கிறேன்.

உங்களுக்கு நான் வழங்க முயல்வது குறிக்கோளேயன்றி பாதையை அல்ல. பரிபூரணமான ஒன்றை உங்களிடம் ஒப்படைக்கவே நான் முயல்கிறேன். நான் உங்களிடம் உபாயங்களைத் தரவில்லை. நான் உங்களிடம் தந்து கொண்டிருப்பது உங்களுடைய குறிக்கோளை, கடைசி எல்லையை. அங்கேதான் மனம் தயக்கமாய் உணர்கிறது. குறிக்கோளை அடைதற்கான உபாயங்களை அறியவே மனம் விரும்புகிறது. மனம் செய்முறையை (method) அறிய விரும்புகிறது. மனம் பாதையை அறிய விரும்புகிறது. தான் நம்பிக்கையூட்டப்பட வேண்டும், மாற வேண்டும் என்றே மனம் விருபுகிறது. நான் அதனை நம்ப வைக்க விரும்பவில்லை. நாசப்படுத்தவே விரும்புகிறேன். எனவே, நீங்கள் என்னால் நம்பிக்கையூட்டப்பட்டவர் என்றால் மனதைக் கைவிடுங்கள். நீங்கள் என்னைப் பார்த்துப் புரிந்து கொண்டதோடு நேசிக்கவும் செய்தால் என்னுடன் கருத்தியல் சார்ந்த (ideological) தொடர்புக்கு இடமளிக்காதீர்கள். அது எவ்வித கொள்கையும் இல்லாமல் தூய அன்பாகவே இருக்கட்டும். நீங்கள் என்னை நேசியுங்கள், நான் உங்களை நேசிக்க விடுங்கள். இந்த அன்பும் நேசமும் நிபந்தனையற்றதாயிருக்கட்டும்.

நீங்கள் என்னை நேசிப்பதற்குக் காரணம் நான் சொல்வது உங்களுக்கு உண்மையாய் தோன்றியிருக்கும். அந்நிலையில் இந்த நேசம் நீண்ட நாள் நிலைத்திருப்பதற்கில்லை. அப்படியே அது நிலைத்திருந்தாலும் அது தெய்விகமாய் இருக்கப் போவதில்லை. அது ஒரு நம்பிக்கையாய், விவாதமாய் மனதில் இருக்கும். அத்துடன், அந்த வகையில் நான் ஆபத்தானவன், காரணம் இன்று நான் ஒன்றைச் சொல்வேன் நீங்கள் நம்பி விடுவீர்கள். நாளையே அதற்கு எதிரிடையான ஒன்றை நான் சொல்வேன். அப்போது என்ன செய்வீர்கள்? அந்நிலையில் குழம்பித்தான் போவீர்கள்.

உங்கள் மனதை நீங்கள் நம்ப வைக்கிற முயற்சியில் இல்லா விட்டால் மட்டுமே நீங்கள் என்னுடன் இருக்க முடியும். பிறகு உங்களை நான் குழப்ப முடியாது. காரணம், நீங்கள் எந்தவொரு கருத்தையும் பற்றிக் கொண்டிருப்பதில்லை. நான் அப்படி, இப்படியென்று ஆயிரத்தியொரு விஷயங்களை உங்களிடம் சொல்லிக் கொண்டிருப்பேன். இவையெல்லாம் மனதை நாசம் செய்கிற கருவிகள்.

இந்த வேறுபாட்டை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். ஒரு குருவிடம் நீங்கள் சென்றால் குறிப்பிட்ட ஒழுங்குமுறை, புனித நூல், கருத்தியல் என்று வைத்திருப்பார். சில குருமார்கள் எவ்வித கோட்பாடும் இல்லாமல் இருப்பதையே தங்கள் கோட்பாடாக வைத்திருப்பார்கள். அதுவே அவர்களுடைய புனித நூலுமாகும். நான் எந்தக் கோட்பாடும் வைத்திருக்கவில்லை. கோட்பாடற்றிருப்பதே எனது கோட்பாடு என்றும் கொள்ளவில்லை.

நீங்கள் மனதின் மூலம் என்னைப் புரிந்து கொள்ள முயன்றால் நான் உங்களைக் குழப்பி விடுவேன், நீங்கள் மேலும் மேலும் குழப்பத்துக்குள்ளாகி விடுவீர்கள். நான் சொல்வதைக் கவனமாய் கேட்டாலே போதும். ஆனால் அத்தோடு மறந்து விடுங்கள். அதைச் சேர்க்கவும் வேண்டாம், குவிக்கவும் வேண்டாம். மனதின் சுபாவம் குவித்துக் கொண்டேயிருப்பது. நீங்கள் குவிக்காவிட்டால் மனம் கொஞ்சம் கொஞ்சமாய் விட்டுவிடும். பல்வேறு நோக்கு முறைகளில் இருந்து என்னைக் கவனித்திருங்கள். எல்லா நோக்கு முறைகளும் வெறும் விளையாட்டுகளே என்பதைக் காலப்போக்கில் புரிந்து கொள்வீர்கள்.

எந்தவொரு நோக்கு முறையும் உங்களை உண்மையிடம் அழைத்துச் செல்வதில்லை. உங்களுடைய எல்லா நோக்கு

முறைகளையும் நீங்கள் விடுகிறபோது, உண்மையை அங்கே கண்டு கொள்வீர்கள். நோக்கு முறைகளைப் பற்றியே நீங்கள் கவலைப்பட்டுக் கொண்டிருந்தீர்கள். அதனால்தான் உங்களால் அதைக் காண முடியவில்லை. புத்தர் அதனை 'ததாஹத' என்பார். அதன் பொருள் 'அடிப்படைப் பண்பு' (suchness) ஆகும் – அது முன்பே இருக்கிறது.

ஆக, நீங்கள் வருகிறபொழுது இந்த வாய்ப்பை, இந்த வாசலைத் தவற விடாதீர்கள்.

'தாங்கள் பரிவுடன் பகிர்ந்து கொள்ள முன்வருகிற போது, ஒருவர் அதை ஏற்பதற்கான தயார் நிலையில் இருக்கிறார் என்பதை உங்களால் எப்படி அறிந்துகொள்ள முடிகிறது – அதை எப்படிக் கையாள் கிறீர்கள்?' என்று நீங்கள் கேட்டீர்கள். இவையெல்லாம் கையாளப் படுகிறதில்லை, நிகழ்கிறவை. உங்களுக்குத் தாகமெடுத்தால் தண்ணீர் இருக்குமிடத்தைத் தேடிச் செல்வீர்கள். தண்ணீருக்கு மூலாதாரம் (source) இருந்தால், அந்த மூலாதாரம் உங்களுக்குத் தகவல்களை அனுப்பும். காற்றின் மூலமாகவோ, குளிர்ச்சியின் மூலமாகவோ அது உங்களை வந்தடையும் ம்ம்ம்...? சிற்றாறு ஓடிக்கொண்டிருக்கும் செய்தி காற்று வாக்கில் எங்கும் பரவும். நீர் வேட்கை கொண்ட, களைத்துப் போன பயணி ஒருவன் மென்காற்றை எதிர்கொள்கிற போது தண்ணீரின் மூலாதாரத்தை அறிகிறான். இதுதான் செயலின் போககு (direction). அந்தப் பயணியைப் பற்றி ஆறு அறிந்திருக்காது. அவன் எங்கிருக்கிறான் என்றுகூட அதற்குத் தெரியாது. அதேபோன்று பயணியும் அறிய மாட்டான். உறுதியாக அங்கே ஆறு இருக்கிறதா, இல்லையா என்பதை. ஆனால், அது நிகழ்கிறது. அந்தச் செய்தி பெறப்படுகிறது. ரொம்பவும் தெளிவற்ற முறையில்தான் என்றாலும் இந்தக் குளிர்ந்த காற்று எங்கிருந்து வருகிறது என்பதைப் பயணி கண்டுபிடிக்கத் தொடங்குகிறான். சிலசமயம் தவறானவற்றில் அவன் தடுக்குறுகிறான். அங்கே குளிர்ந்த காற்று இருக்காது. அந்நிலையில் அவன் மறுபடியும் முயல்கிறான். சோதித்துப் பிழையறியும் முறை (trial and error-method)யைக் கொண்டு ஒரு குறிப்பிட்ட பக்கம் சென்றால் காற்று மிகவும் குளிர்ந்திருக்கிறது என்பதை அவன் கண்டுபிடிக்கிறான். தன்னுடைய முகவரியில்லாது தகவல் அனுப்புகிறது சிற்றாறு. அது குறிப்பாக யாருக்கென்றும் தகவலைத் தாங்கி வருவதில்லை. தாகமுற்ற எந்தவொரு பயணியையும் அது சென்றடைகிறது.

நிகழ்ச்சிகள் அந்த முறையில்தான் நடக்கின்றன. அது என்னால் நிர்வகிக்கப்படுவதல்ல. அப்படியானால் அது பைத்தியக்காரத்தனம்.

நான் எப்படி நிர்வகிக்க முடியும்? அது காரணகாரிய விதியாகாது. அது சமகால நிகழ்வு விதி (Law of Synchronicity) ஆகும். நான் இங்கிருக்கிறேன். குளிர்ச்சி பொருந்திய மென்காற்று உலகெங்கும் பரவிக் கொண்டிருக்கிறது. நீர் வேட்கை கொண்டவர் எங்கிருந்தாலும் என்னை நோக்கி வரவேண்டும் என்கிற உணர்வைப் பெறத் தொடங்குகிறார். அப்படித்தான் நீங்கள் எல்லாரும் வந்திருக்கிறீர்கள்.

இங்கே வந்ததும் பருகுவதா அல்லது பருகாமல் இருப்பதா என்பது உங்களைப் பொறுத்தது. மனம் உங்களைத் தொல்லைப் படுத்தும் காரணம், நீங்கள் பருக விரும்பினால் சார்ந்திருக்கவும், சரணடையவும், கீழ்ப்படியவும் வேண்டியிருக்கும். நீங்கள் கைகளைக் குவித்துக் கிண்ணம் போலாக்கிக் கொண்டு நதியிடம் குனிந்து செல்ல வேண்டும். அந்நிலையில் மட்டுமே நீர் உங்களுக்குக் கிடைக்கும். இல்லையேல் கரையில்தான் நிற்க வேண்டும். உங்களுள் புதிதாக வந்த பலரும் மாதக்கணக்காக கரையில் நின்று கொண்டிருக்கிறார்கள் - தாகத்துடன், ஜன்னிக் காய்ச்சல் தாகத்துடன். ஆனாலும், அகந்தை சொல்கிறது 'பணியாதே, கொஞ்சமும் பணியாதே. உன்னை விட்டுக் கொடுக்காதே' என்று. அந்நிலையில் ஆறு உங்கள் பக்கமாய் ஓடிக் கொண்டிருந்தும் நீங்கள் தாகத்துடன் இருப்பீர்கள். அது உங்களைப் பொறுத்தது.

அதுபற்றிக் கையாளப்படுவதாய் எதுவும் இல்லை. நான் ஏதோ விண்மீன்கள் மூலம் செய்தி அனுப்பி நீங்கள் இங்கே வந்திருப்பதாய் மக்களில் பலரும் எண்ணிக் கொள்கிறார்கள். இல்லை, செய்தி போய்க் கொண்டிருக்கிறது, எந்த முகவரியும் இல்லாமல். ஆனால் தயார் நிலையில் உள்ளவர் எவராயினும் உலகின் எந்த மூலையில் இருந்தாலும் மெள்ள மெள்ள வந்து சேருகிறார்கள்.

***'அன்பிற்குரிய பகவானே, தற்போது உங்களுடைய ஆசிரம விவகாரங்களை மூன்று புதிய வஞ்சகர்கள் நடத்திச் செல்கிறார்கள் என்பதை உங்கள் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறேன். அவர்கள் அழகான, எளிமையான பெண்கள் என்கிற பாவனையில் பாசாங்கு செய்து, பொய்யாக நடித்துக் கொண்டிருக்கிறார்கள்.'***

***இந்தக் கேள்வி உங்களைக் கோபத்துக்குள்ளாக்கக் கூடும்.***

***- யாரோ***

என்னை எதுவும் கோபப்படுத்தாது, என் உள்ளத்தை எதுவும் காயப்படுத்தாது. இதனை நினைவில் கொள்ளுங்கள். உலக விவகாரங்களை நடத்துவதில் சைத்தானின் உதவியையும் கடவுள் பெற்றுக் கொள்கிறார். சைத்தான் இல்லாமல் அவரும்கூட விவகாரங்களை நடத்திச்செல்ல முடியாது. எனவே, சைத்தான் களையும் நான் தேர்ந்து கொள்ள வேண்டியிருந்தது. அப்போது நான் எண்ணிக் கொண்டேன் – அவர்கள் பெண்களாயிருக்கட்டுமே என்று. என் ரசனையோடு இருக்கக்கூடாது? நான் பெண்களுக்குச் சாதகமாய் தீர்மானித்து விட்டேன்.

நீங்கள் எதற்காகப் பெயரை வெளிப்படுத்தாமல் இருப்பது. நீங்கள் யார் என்று சொல்லுங்கள். பெயரை மறைக்கத் தேவையில்லை.

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன் உங்களுக்கு:

ஒரு பாதிரியாரம், யூத குருவும் தங்களுடைய சமய வட்டாரப் பகுதி நிதிகள் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தனர்.

‘கவர்கள் மூலம் எங்களுக்கு நல்ல வசூல்’ என்றார் பாதிரியார்.

‘கவர்கள் மூலம் வசூலா – எப்படி?’ யூத குரு கேட்டார்.

‘சின்ன உறைகளை ஒவ்வொரு வீட்டுக்கும் கொடுத்து விடுவோம். குடும்ப உறுப்பினர்கள் சில நாணயங்களைத் தினமும் அதில் போட்டு வைப்பார்கள். பிறகு ஞாயிற்றுக்கிழமையன்று காணிக்கைத் தட்டில் அதைக் கொண்டுவந்து வைத்து விடுவார்கள். உறைகள் எவ்வகையி லும் அடையாளமோ அல்லது எண்ணோ கொண்டிருக்காது. அவை முற்றிலும் பெயரற்றதாக (anonymous)வே இருக்கும்.

‘அருமையான யோசனை’ ஆச்சரியப்பட்டார் யூத குரு. நானும் அதைச் செய்து பார்க்கிறேன்.’

ஒரு வாரம் கழித்து பாதிரியார் யூத குருவின் வீட்டுக்கதவைத் தட்டினார். ‘கவர் திட்டம் எந்த அளவில் இருக்கிறது’ என்று கேட்டார்.

‘செழிப்பா இருக்கு. நான் அறுநூறு பவுண்டுகள் வசூல் பண்ணிட்டேன் – எல்லாம் பெயரிடப்படாத காசோலைகள்’ என்றார் யூத குரு.

‘பெயரில்லாத காசோலைகளா?’ பாதிரியார் கேட்டார்.

‘ஆமாம், கையெழுத்திடாதவை.’

யூதர்கள் யூதர்கள்தாம். என்னிடம் யூதராக நடந்து கொள்ளாதீர்கள். உங்களால் கையெழுத்திட முடியும் - ஒன்றை நினைவில் கொள்ளுங்கள். நிறைய சைத்தான்கள் தேவைப்படுகின்றன. அழகான பாவனையில் பாசாங்கு செய்து நடிக்கிற பெண்களை நீங்கள் கண்டால், உடனே கொண்டு வாருங்கள். இன்னும் நிறைய பேர் இங்கு தேவைப்படுகிறார்கள்.

மேற்கத்திய மனதில் கடவுளுக்கும் சாத்தானுக்கும் இடையே (பிரித்தல்-division) இருக்கிறது, கிழக்கில் இல்லை. எதிரெதிர் கொள்கை நிலை ஒன்றாகவே இருக்கிறது. எனவே, கிழக்கத்திய கடவுளரின் வாழ்க்கைகளை நீங்கள் உற்றுக் கவனித்தால் நீங்கள் குழப்பமடைவீர்கள். அவர்களிடம் தெய்வத்தன்மையும், பிசாசுத்தன்மையும் சேர்ந்தே காணப்படும். அவர்கள் ரொம்பவும் முழுமையாய், புனிதமாய் இருப்பவர்கள். மேற்கத்திய கடவுளோ உயிரற்று காணப்படுவார். 'மொத்த ஊக்கமும், ஆர்வமும் சாத்தானைச் சென்றடைந்து விட்டது. மேற்கத்திய கடவுள் இறுக்கமாய், விறைப்பாய் ஒரு கனவானைப் போல் தெரிவார்.

அவரை ஓர் ஆங்கிலேயக் கனவான் என்றே நீங்கள் சொல்லலாம் - உளப்பகுப்பாய்வு செய்ய வேண்டிய அளவு இறுக்கமாய், விறைப்பாய். சாத்தானிடம் அதிக அளவில் உயிரோட்டம் இருக்கும். அதுவும் ஆபத்தானதே.

எல்லாப் பகுப்புகளும் பிரித்தல்களும் அபாயகரமானவைதாம். அவர்கள் சந்திக்கட்டும், ஒன்று சேரட்டும். என்னுடைய ஆசிரமம் கடவுளுக்கும் சாத்தானுக்கும் இடையே எந்த வேறுபாட்டையும் உண்டாக்குவதில்லை. நான் எல்லாவற்றையும் எதிர்த்தாக்கின்றி ஏற்றுக் கொள்கிறேன். எனவே, நீங்கள் யாராயிருப்பினும் எவ்விதப் பிரதி பலிப்புமின்றி ஏற்றுக் கொள்கிறேன். நான் அத்தனை வகை ஆற்றல்களையும் பயன்படுத்துகிறேன். தீயசக்தி தெய்வ சக்தியாய் மாற்றப்படுமாயின் அது பெரிய அளவில் பலனளிப்பதாயிருக்கும். நான் எதையும் ஏற்றுக்கொள்ள மறுப்பதில்லை, இதுபோன்ற ஓர் ஆசிரமத்தை இந்த பூமிப் பரப்பெங்கும் நீங்கள் தேடினாலும் காண முடியாது. இது வெறும் தொடக்கம் மட்டுமே. மிகுதியான அளவில் சாத்தான்கள் வரும்போது நீங்கள் புரிந்து கொள்வீர்கள்.

